## படலஅட்டவணை.

ஸ்ரீ

# பிரகடனம்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீ மஹாபாகவத புராணம் முதற்புத்தகம். | தபாற்கூலியுட்பட | ரூ. அ. 2 - 4 - |
| காஞ்சிப்புராணம். | | 2 - 0 - 0 |
| திருக்கழுக்குன்றப்புராணம் உரையுடன். | | 0 - 12 - 0 |
| திருவிரிஞ்சைப்புராணம் உரையுடன். | | 0 - 8 - 0 |
| வள்ளலார்சாத்திரம். | | 1 - 4 - 0 |
| சுந்தரமூர்த்திசுவாமிகள்தேவாரம். | | 0 - 12 - 0 |
| தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையருரை. | | 0 - 12 - 0 |
| கொலைமறுத்தல் உரையுடன். | | 0 - 4 - 0 |
| திருமுருகாற்றுப்படை உரையுடன். | | 0 - 3 - 0 |
| கல்லாடமூலம். | | 0 - 2 - 0 |
| இலக்கணச் சுருக்கம் To Middle School Examination. | | 0 - 5 - 0 |
| கந்தரனுபூதிஅலங்காரம். | | 0 - 1 - 6 |
| சித்தாந்தக்கட்டளை. | | 0 - 1 - 6 |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ். | | 0 - 1 - 6 |
| திருப்பேரையூர் பச்சைநாயகன் பந்தடி | | 0 - 1 - 0 |
| சச்சிதானந்தமாலை. | | 0 - 1 - 0 |
| கந்தரந்தாதி மூலம். | | 0 - 1 - 0 |
| சிவஞானபோதம் உரையுடன். | | 1 - 0 - 0 |
| வடதிருமுல்லைவாயிலந்தாதி. | | 0 - 1 |
| இடும்பன்கவசம் கடம்பன்கவசம். | | 0 - 1 - 6 |

ஐந்துபுத்தக மேககாலத்தில்வாங்கினால் ஒரு புத்தகம் அதிகம் கொடுக்கப்படும்.

இவை சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை சுப்பிரமணியமுதலி வீதி - 33 - வது வீட்டில் புஸ்தகத்தார் கந்தசாமிமுதலியாரிடத்தும் தஞ்சாவூரில் புத்தகஷாப்பு த - நா - திருவேங்கடம்பிள்ளையிடத்தும் திருச்சிறாப்பள்ளி புத்தகக்கடை நாராயணசாமி பிள்ளையிடத்தும் மதுரை புத்தகக்கடை முத்தையப்பிள்ளையிடத்தும் பெற்றுக்கொள்ளலாம்.





விஷ்ணுமயம்.

# ஸ்ரீமஹாபாகவதம்.

## கடவுள்வாழ்த்து.

பொன்னிறமாமெனப்புவனம்படைத்துக்காத்துப்
புயனிறமாய்த்தழனிறமாய்த்துடைத்துப்போந்து
முன்னிறமாய்த்திரித்துயர்ந்துமுழங்குநார
மூடிடவேநீண்டவடவிலைமேன்முந்தித்
தொன்னிறமாமண்டாண்டமெண்ணில்கோடி
துலங்கிடவேவயிற்றமைத்துத்தூயதாய
தன்னிறமாங்குழவியெனப்பொலிந்துதோன்றுந்
தலைவனிருதாளிணையெந்தலைமேல்வைப்பாம். (௧)



வேறு. வானாசுகன்பாவகனீர்நிலமற்றுமாகி
உ ஊனாருடலாயுயிராயுயிர்தோறுமேவுங்
கோனாகிமூவர்செயலாயக்குணங்கள்யாவுந்
தானாகிநின்றதலைவன்றிருத்தாடொழுப்பாம். (௨)

வேறு. காமதனுற்கடல்கடைந்தமுதளித்துங்கனகனுர
முரவுகிரால்வகிர்ந்தளைந்துமுலகிடந்துண்டுமிழ்ந்தாண்டுஞ்
சரமதனாற்றசமுகனொருபதுகமறத்தடிந்தும்
பரமபதத்தொளிகொளரிபதுமமலரடிபணிவாம். (௩)

வேறு. சசரதவசரபக்கற்கருள்செய்துசுரர்கோனிந்த
வசரதயிசையினெறியிராவணன்மாளவெய்திக்
கசரதவாளியேவிக்கமலஞேடிமையோர்போற்றத்
தெசரதனடியில்வீழ்ந்தசெம்மலுர்சென்னிவைப்பாம். (௪)

# ஸ்ரீமஹாபாகவதம்.

ஆழிமாமிரதஞ்சிலைதாளிற
வாளினாயிராவணைவஞ்சக
நாளிவாவென்றருள்செய்தாரணை
வாளும்வாழிமலர்க்கையும்வாழியே

சண்டகக்கும்பகன்னன்கைகால்சிரந்
துண்டகண்டங்களாகத்துணித்தபி
னண்டர்பிண்டவன்றுன்னைமெய்த்தவன்
றண்டும்வாழிதடக்கையும்வாழியே.

வேறு. வெந்திறலவுணன்சேயைவெருண்டெழுந்தடர்த்ததூணின்
வந்தெழுகனகன்மார்பைப்பிளந்தவன்மடங்கன்மூர்த்தி
சிந்தையிற்கதங்கணோவித்திருவருள்புரியச்சேர்ந்த
கந்தொளிர்கரச்சீரங்கநாயகிமலர்த்தாள்வாழி

வேறு. முரணிழந்துபொற்கணன்முடியவேனமாருவான்
சரணடைந்தருகவின்றுறச்சதுமறைத்தியல்வதாம்
பொருணயந்தசரிதைமால்பகவேமகிழ்ந்தரு
டரணிமங்கைமனைமலர்த்தாள்கள்வாழிவாழியே.

வேறு. பாண்டுமைந்தர்களுய்யவேபடவாவுயர்த்தோன்
மாண்டுவீழ்ந்திடமகபதிசுதனுக்குமணித்தேர்
தூண்டுசாரதியாகியசோதிதன்றேவி
நீண்டகன்றகண்ணீளையார்மலர்ப்பதம்வாழி.

வேறு. போதநுண்டமராகிப்புனலணிசடையனுகி
வேதமாயகண்டமாகிவிண்ணுமாய்முனிவரோத்து
மாதியாமரங்கராசரணைத்தருடேவியான
கோதையாய்க்கோதைசூடிக்கொடுத்தவள்வாழிவாழி.

இரணியன்சிறுவன்றன்னையெரியினிட்டப்பினுய்த்து
முரணியகரிமுன்விட்டுமுகடுறுஞ்சிகரமேற்றித்
தரணியிற்றள்ளும்போதுந்தாளினைத்தோதுநாமப்
பிரணவவடிவமானபேரொழில்விமானம்வாழி.

மாயையில்வந்தமானைவடித்தகோற்கிலக்கணுக்கிப்
பேயுயிருண்டகண்ணன்பின்னவனுகமுந்தித்
ஆயதென்னரங்கராசர்துயில்கொளவணையாத்தோன்றி
யாயிரஞ்சுடிகையோங்கியமர்திருவனந்தன்வாழி.

வேறு. திருடிவெண்ணெயயின்றுசெயிருரு
முருடொடுங்குமரனைமுனிந்தவன்
பருடவத்தமன்பொற்பதமேத்துநைக்
கருடராசன்கழலினைவாழியே.

வேறு. வானோர்பதிமாமலரோனைகர்மற்றுமற்றும்
போனாழியாப்பதயிதுபொலிந்துதோன்றிக்
கானூடந்தருள்கண்ணனைக்காட்டியாட்கொள்
சேனைபதிவாழியச்சேனையும்வாழிவாழி. (௨௫)

வேறு. வஞ்சகரிலங்கைமேவிமைதிலிசரணம்வாழ்த்தி
யஞ்சியவரக்கரோடவக்கனையனைத்திட்டவ்வூர்
அஞ்சவல்லெரிமடுத்துச்சூடாமணிகொண்டுமீண்ட
வஞ்சனைசிறுவனானவரிகுலவீரன்வாழி. (௨௬)

வேறு. தயிருவெண்ணெய்களவினுண்டுதாயுமாகிவந்தபே
யுயிருமுண்டெவ்வுலகுமுண்டகண்டராரணத்துளார்
வயிரமாரமாகிகண்மின்னுமண்டபத்தில்வாயில்சார்
செயிரிலங்குமிசையர்வாழிசீரரங்கம்வாழியே. (௨௭)

வேறு. மீனமாயவுன்னுடல்வதைத்தயன்முன்விமானமேற்றோன்றியம்மனு
வின், குலவின்றவத்தாலயோத்தியினெய்திச்சுடர்முடியிராமனீந்திட
வே, யீனமிலிலங்கைவீடணன்கொடுசென்றிக்குபுட்கரணியினிறுத்த,
மாநதியிரண்டாய்வளையரங்கத்தின்வயங்கியவரங்கனார்வாழி. (௨௮)

வேறு. சூதுமாபாதகங்கயேசெய்நன்றிகுன்று
மேதமாதவர்கடம்மையிகழபசாரமெல்லா
மூதையாற்பாறுபூழையிதெனவகற்றியோங்குஞ்
சேதுமாதவனுமெங்கோன்றிருவடிவாழிவாழி. (௨௯)

இல்லாணின்றியம்புசொல்லாலிடர்க்கடலமுந்துதாதை
சொல்லாணியாகநாடுதுடர்ந்தடர்கானினேகிப்
பல்லாணிமுத்தாங்கஞ்சப்பாவைபாலேகவேண்டிப்
புல்லாணிநகரின்மேவும்பொருகிலேயிராமன்வாழி. (௩௦)

வேறு. கருவனந்திரண்டமேகமென்னமேனிகவினுறப்
பொருவிகந்தகிரிதண்டுபுகர்கொள்வாளிலங்கவே
மருவினந்துவன்றுசெந்நென்மதில்பிறங்கவரவின்மேற்
றிருவனந்தபுரநகர்க்குண்மேவுதேவன்வாழியே. (௩௧)

வேறு. அல்லுறவிரவிதன்னையாழியான்மறைத்துப்பார்த்தன்
வெல்லமேவமீளவாங்கிவெயிலினைக்காட்டியப்பாற்
கொல்லுதிசிந்துநாடாண்மன்னனையென்றுகூறி
வல்லமாநகரின்மேவுமாதவன்றிருத்தாள்வாழி. (௩௨)

வேறு. சுற்றலக்கோடிடியிடித்துச்சாபம்வாங்குக்
துன்மதிக்கஞ்சன்விடுத்ததம்பிதன்னைச்
செற்றதிற்கோட்டைக்கொண்டேயெதிருஞ்சாணூ
ரனைவதைத்துச்சிறந்தொளிருமையாளர்பாகத்

நாற்றவற்றோட்டைக்கரத்திறொருவநூறி
யும்பர்பிரானோதிமவாகனத்தோனேத்த
விற்றுவக்கோடெனுநகரின்வித்தைமார்பின்
விளங்கிடவேயமர்விமலன்றிருத்தாள்வாழி. (௧௩)

வேறு. இறுங்கடுவினைகளேயேவின்பமெய்ஞ்ஞானமெல்லா
முறுங்குடியடியராவிருற்றுநீர்தொழுமினென்றே
நறுங்கொடிமலரோனுநேவிலநாரதனுமோத்தக்
குறுங்குடிமேவிநின்றகோவிந்தநம்பிவாழி. (௧௪)

வேறு. நலங்கொளுஞ்சடகோபனூர்நவின்றவாரணச்சொல்
விலங்குமெய்த்திருவாய்மொழியினிதலுந்தனைப்போர்
குலங்கள்சூழ்குருகூர்தனிற்கொழுமுகில்போலப்
பொலிந்துநின்றவெம்பிரான்பதப்போதுகள்வாழி. (௧௫)

வேறு. புகர்முகங்கொள்புகலிபம்வெந்துயரமெய்திப்
பொய்கையினிற்கரமெடுத்தன்றோலமென்றே
பகருமுனரடைந்தடருங்கராவைச்செற்றுப்
பாஞ்சசன்னியத்துடனேநேமியேந்திச்
சுகனாதிகர்மறையவர்கண்மகிழ்வினோடு
சூழ்ந்திடவேதென்றிருப்பேர்நகரினோரா
மகரநெடுங்குழைக்காதுவயங்கவைகு
மாதவனார்திருத்தாள்கள்வாழிவாழி. (௧௬)

வேறு. ஆடகமதில்சூழ்திலங்கரிமேயவிண்ணகரமரிவாழி
வேடனையருள்வெள்ளக்குளத்தமரும்வித்தகன்றனிணைவாழி
நீடுசித்திரத்தேர்வலவனூரிலங்குதிகாலாத்திருப்பதிவாழி
சேடனிற்றுயில்கள்ளப்பிரான்வைகுஞ்சீர்மலிவைகுந்தம்வாழி. (௧௭)

மின்னலார்வயல்சூழ்வரகுணமங்கைநகருறைகாகுத்தன்வாழி
மின்னவில்துளக்கையிலங்கியமாயக்கூத்தர்தம்மிணையடிவாழி
பொன்னகரெனவேபுகழ்மலைநாட்டிற்பொலிதந்தபுரத்தண்ணல்வாழி
மன்னமென்னடையாரமருவண்பரிசாரத்திருநகரிவாழி. (௧௮)

வேறு. வெரீயுறசசாதகரொயதக்கலர்களானோர்
மெலிந்துடலினுவிவிடவரற்றிச்சுற்றத்
தரீமமுறவேயந்தத்தனுவைச்சேர்க்கச்
சான்றவனாயிகழ்ந்தவரொன்றனலாருங்கண்
ணரீயமொடுசெம்புருக்கிநாவினுய்க்கு
நரகமெல்லாமழித்திடுநன்றுமைச்சோதி
ஸ்ரீவரமங்கலநகரிற்றிருவினோடுஞ்
சிறந்திருந்தமருதெய்வத்திருத்தாள்வாழி (௧௯)

# திருவரங்கப்படலம்.

வேறு. அருவரைப்பதினைப்பத்துலங்கவிவரந்
தருவனந்திகழ்வுறுஞ்சார்ங்கபாணியாய்க்
கருவெனமுகிலெனக்கமலைதன்னொடுந்
திருவண்வண்டுறைசெல்வன்வாழியே. (௪௦)

சிலைவலியிடரினைத்தீர்த்துப்பத்தர்கட்
கலைவிலின்பந்தரும்பதமளிக்கப்பொற்
கலைவில்விளைவெயிற்கவினைக்காட்டவாழ்
தொலைவில்மங்கலச்சோதிவாழியே. (௪௧)

வேறு. செருக்காளியுகந்துநோக்கத்திரண்டெழுமலைக்கூட்ட
முருக்காளவரைபோலாடவும்பன்மாவிரதஞ்சிய
நெருக்காழியரக்கர்மாளநிருதர்கோன்றலைகணிக்கித்
திருக்கோளூரிலங்கமேவுந்திருவிளையகன்றாள்வாழி. (௪௨)

வேறு. கருமாறவுயர்ந்தநற்கதியைக்காட்டிசற்
குருமாறனுமைமறைத்தமிழுவந்தகோ
வருமாறியடைந்துசெல்லுமழையைச்செற்றவன்
திருவாறன்விளைநகர்ச்செல்வன்வாழியே. (௪௩)

வேறு. கரிச்சங்கமிவுளியினம்யாளிசேயங்
கடல்புடைசூழிலங்கைநகர்நிருதரொல்லா
மரிச்செங்குமலைகளெனக்குரம்பைவீழ
வாளியினாற்கொய்ததசமுகனைவீட்டி.
வரிச்சங்கங்கதைநேமிகுனியுஞ்சார்ங்கம்
வாளிலங்கமாகுமரன்மருங்குசூழத்
திருச்செங்குன்றூரதனிற்றிருச்சிற்றாற்றுச்
சிற்றயன்றிருவடித்தாமரைகள்வாழி. (௪௪)

வேறு. எருக்கமுத்திண்டைசேரும்வேணியனிடரைநீக்கித்
திருக்கடித்தாரிநேடுஞ்சிறந்தொளிமார்பிலோங்க
விருக்கடித்தானமாகவிரும்பிடுமறையோரேத்தத்
திருக்கடித்தானமேவுஞ்சீதரன்கழல்கள்வாழி. (௪௫)

வேறு. அட்டநாட்டத்தயனஞ்சிடத்தன்பெயரண்டரண்ட
முட்டநாட்டிப்பரனில்லையென்றேயெழுமிதின்மோதுந்
துட்டநாட்டுத்திலமிற்றெனவீர்த்திடத்துணிபாக்குஞ்
குட்டநாட்டுப்புலியூருறைகோளரிதாள்கள்வாழி. (௪௬)

வேறு. பளிங்கொளிர்வராயமாகிப்படியினையெயிற்றுலேந்திக்
களங்கமுன்மலியும்வெய்யகனகன்றன்கனிட்டன்றன்னை
வளங்கிளராழியேவிவதைத்துமண்மடந்தைபோற்றப்
புளிங்குடிநகரின்மேவும்புராதனமுராரிவாழி. (௪௭)

வேறு. பாலிருங்கடலிற்பாந்தளோவியேபங்கயத்தின்
மேலிருங்கண்ணுண்மார்பின்விளக்கிடவமரர்போற்றத்
தோலிருங்கயத்திருேலமென்னமுன்ருென்றியிம்பர்
மாலிருஞ்சோலைமேவிவயங்கியவழகர்வாழி. (௫௬)

உருக்காட்டிவிசையன்றேறவோதியகீதைகாட்டிச்
செருக்காட்டிப்பெருகுங்கங்கைசிறுவன்முன்றிகிரிகாட்டிக்
கருக்கோட்டைக்குமாறுகக்கழலிணைமிதித்துக்காட்டி
திருக்கோட்டியூரினின்றதெய்வங்கள்பெருமாள்வாழி. (௫௭)

வேறு. நள்ளிவயல்சூழுறந்தைநம்பெருமான்ருள்வாழி
தெள்ளியர்கள்செயுமன்பிற்றேவதேவன்வாழி
கள்ளவிழ்சோலைக்கரம்பனூரமர்கண்ணன்வாழி
புள்ளம்பூதங்குடியிற்போரேறுவாழியரோ. (௫௮)

வேறு. அண்டர்கடுதிக்குமாதனூரராவணையோன்வாழி
தொண்டர்களேத்துஞ்சேறைதுலங்கியவிராமன்வாழி
முண்டகவாவிசூழ்நாண்மதியமுராரிவாழி
கண்டியூர்நீலகண்டன்கடுவினைகளைந்தான்வாழி. (௫௯)

வெறியுறுபூங்காச்சூழவேதநான்குடனேமெய்யா
றறனுறுமாலிதன்னினமருளாளன்வாழி
நறுநெய்பானுகருநந்திபுரவிண்ணகரோன்வாழி
மறைநிறைகூடலூரிலிலங்கியமாயோன்வாழி. (௬௦)

வேறு. பாந்தளேயணையாய்ப்பள்ளிகொள்பார்த்தன்பள்ளியினிலங்கிவாழி
மாந்தளிர்நிகர்மெய்மாதர்களுறைமண்டங்குடிமாதவன்வாழி
நாந்தகமிலங்கவலிர்கொண்மெய்யத்தினகரமர்நாரணன்வாழி
சேர்தொளிரனஞ்சூழ்செம்பொன்செய்கோயிற்சீதரன்ருளிணைவாழி.

தேன்மலர்ப்பொழிலாருந்திருத்தெற்றியம்பலச்செங்கண்மால்வாழி
மீனெனவியங்குநயனமங்கையர்சேர்விண்ணகரத்தரிவாழி
யாலிநாமலியுங்கவித்தலத்தமருமச்சுதன்ருளிணைவாழி
வானவர்புகழ்வைகுந்தவிண்ணகரினமர்புருடோத்தமன்வாழி. (௬௨)

காகமோர்நயனங்கழன்றிடத்திரணங்கடாவியேகாறுயிர்களைந்து
சாகரத்தரிகள்பிறங்கலாலணைத்திரவிலங்காபுரியடைந்து
மேகநாதனதிகாயன்விச்சிரவாமதலையோட்டனுசனைவீட்டி
நாகையாம்பதியினழகனுய்வயங்குநாரணன்றிருவடிவாழி. (௬௩)

வேறு. கண்டகன்காகன்போசன்காசிபன்சேதிராசன்
மண்டலின்மடியமோதிமலருமொளான்வலாரிவாணே
ரொண்டவருடனேபோற்றவிராசமாநகரின்மேவுஞ்
செண்டலங்காரமன்னன்றிருவடிவாழிவாழி. (௬௪)

தும்பிக்கையுடையோனன்னை தனுக்கிடச்சுரர்களெல்லாங்
கம்பிக்கக்கயிலைதன்னைக்கரத்தினாலெடுத்தோனுக்கை
யம்புக்கன்றிலக்கமாக்கியழகியநறையூர்மேவு
நம்பிக்கைநாச்சியார்தந்நாயகனருள்கள்வாழி. (சுரு)

மறைக்கடிமலரோன்போற்றவாளியாலிருதரோடுஞ்
செருக்கணிகரத்தனனொடுதசக்கிரீவனையுஞ்செற்றே
யெரிக்கண்ணன்வியப்பவண்டமேலவீரடியாற்கொண்டு
திருக்கண்ணமங்கைமேவிநின்றருடிருமால்வாழி. (சுசு)

அருக்கனற்குமரனெய்தவரவினாலுவமையில்லாத்
திருக்கிளர்பதவியாள்வோன்றனையனன்றிறலாவண்ணம்
பொருக்கெனவவன்றேர்த்தட்டைப்புவியினழுத்திவன்மைத்
திருக்கணங்குடியின்மேவுந்திருவினாயகனருள்வாழி. (சுஎ)

முரட்கணைதொடுத்துவிட்டன்றிராவணன்முடிகள்பத்து
மராக்கணமுறுதன்முன்னமறுத்தவனாவிகொண்டே
யெருக்கணிசடையினான்றனிரவொழித்தெயில்கள்சூழுந்
திருக்கணபுரத்துமேவுஞ்சீதரனருள்கள்வாழி. (சுஅ)

வேறு. கச்சணிநகில்வீதியவுமைகொழுனனடஞ்செயக்கமலனோடிமையோர்
நிச்சலுமுராரிதனைத்தொழும்பதியைமுன்புபோனிறுவியதிருப
னச்சுதராயன்வணங்கிடவரவினழகியதில்லையம்பதிக்கே
மைச்சுடர்வலாபோல்வயங்குகோவிந்தராயன்மாமலரடிவாழி. (சுகூ)

வேறு. தருவெழுந்தபோலொளிருந்தடக்கைமீதிற்
றமனியவச்சிரக்கடையந்தயங்கக்காட்ட
வரவெழுந்துபணுமகுடங்கவிக்கப்பாலி
னலையுறும்வேலையிற்றுயில்கொளய்யன்மெய்யன்
வெருவெழுந்துசெருக்களத்தின்மாலிமாளா
மாலியவான்பாறிடவேவிசிகந்தூவித்
திருவழுந்தூராமருவியப்பனான
தேவகிதன்றிருக்குமரனருள்கள்வாழி. (எ0)

மாகேழலாயளவில்வையமேந்தி
மகன்சொற்கேளாதுமுனிக்கெழுவின்மோது
மாகூழிலாடகனையரியாய்ச்செற்றே
யாலிநகர்த்திருமங்கையாழ்வாரோத்த
நாகாழவாவியினிற்றுலங்கமேய்ந்து
நளினமலர்தொறுமாரவினங்கணல்குஞ்
சீகாழிவிண்ணகரில்லேகர்போற்றச்
சிறந்தமருந்தாடாளர்திருத்தாள்வாழி. (எக)

வேறு. ஒள்ளியபுதல்வன்றன்னைபுரப்பிடேயொளித்தன்றேடுங்
கள்ளனைவெளிசெய்யென்னக்கனகனங்கறைந்தூணிற்
றெள்ளியசிங்கமாகியுகிரினிலவனைச்செற்றே
வெள்ளியங்குடியின்மேவுவிண்ணவன்றிருத்தாள்வாழி. (௭௨)

மண்ணகல்வானமுண்டவாமன்மாமலரின்மேவும்
பெண்ணகமாகவைகும்பிறங்கியமார்பனீள்கற்
பண்ணகமொழியாளாகியெழுந்திடமிதித்தபாதன்
விண்ணகருறையுமப்பன்விழுமியபதங்கள்வாழி. (௭௩)

கடந்தருகயமன்றுய்யக்கராவினைச்செற்றுப்பூமண்
மடந்தையர்மருங்குசூழமாழைசேர்வனசப்பொய்கைத்
தடந்தனிலிலங்கச்சற்பத்தவிசின்மேற்சயனங்கொண்டே
குடந்தையின்வயங்குமாராவமுதெனுங்கோமான்வாழி. (௭௪)

தியசேர்சனகிதன்னைமணஞ்செய்யச்சிவனார்கையிற்
சாபமன்றிறுத்தமங்குற்றுரையைத்தடுத்துத்துய்ய
கோபராவுய்யக்கோவர்த்தனகிரிதன்னையேந்திப்
பாபநாசத்தின்மேவும்பரமனார்திருத்தாள்வாழி. (௭௫)

வேறு. விடம்பரவுங்காளியன்றனுச்சிமீதின்
விண்ணவர்கள்வியப்புறவேநடித்துக்காட்டிக்
கடம்பெருகுகரியினுயிர்களைந்துவஞ்சக்
கஞ்சனுடனவன்கனிட்டர்தமையுஞ்செற்று
நடம்புரியுநக்கபிரானிருநாலான
நாட்டனிருடிக்கணங்கள்வலாரிபோற்றத்
தடம்பருகுகருமுகில்வாய்த்தஞ்சையாளி
சார்ந்திடுநற்பதியினமர்தலைவன்வாழி. (௭௬)

வேறு. பொருப்பேசிகராகியவெண்டிசைப்பூட்கையிரு
மருப்பேயிறவோர்பொருதானுயிர்வானினேற
நெருப்பார்கணையெய்துயர்நேமியுங்கொண்டுதாங்கித்
திருப்பேருறைநாரணன்சேவடிவாழிவாழி. (௭௭)

வேறு. மங்குலையணவநீண்டுமணியொளிர்சிகரமோங்கச்
சங்குகண்முழங்கப்பேரிதழும்பிடச்சின்னமார்ப்பச்
செங்கயலுகளும்வாவிசிறந்தவெள்வளைமேற்சேரும்
பங்கயச்செல்விமார்பிற்றிகழ்பரந்தாமன்வாழி. (௭௮)

வேறு. ஏராருலகையறேடளித்தலையுண்டுமிழ்ந்திடந்தே
ஓராயிரமுடிதோள்விழியுயர்தாள்களுமுளனும்
பேராயிரமுடையானெனப்பெருந்தேவர்கடுதிப்ப
நாராயணபுரமேவியநாதன்கழல்வாழி. (௭௯)

வேறு. வெம்பியசேதிராசனுருக்குமன்வென்னிட்டோட
அம்புவிட்டமரின்வென்றாண்டருள்செறிவிதற்பனல்குங்
கொம்பினைமணந்துதேவர்குழாந்துதிசெய்யநின்ற
பம்பையிற்பாண்டரங்கவிட்டலன்பாதம்வாழி. (௮௰)

நத்தூரும்வயல்கொள்பூகாடிரந்தவைபெருமற்
பத்தூரிற்பாதிவேண்டக்கொடாதவன்படியிலோங்க
வொத்தூரும்பிளந்துவீழவீமனுக்குறுதிகாட்டி
வித்தூரிற்பள்ளிகொள்ளும்விமலனார்திருத்தாள்வாழி. (௮௧)

ஏதமார்மாழைக்கண்ணனென்புகளொடியக்கோட்டாற்
காதியார்கலியின்வீழுங்காசினிதனையிடந்து
பூதலமானுக்கன்பாற்புராணமுமருளிமுட்டத்
தாதியாம்வராகமூர்த்தியடியிணைவாழிவாழி. (௮௨)

தருக்கோடன்றவுணனீயுமூவடிதானமேற்றே
யிருக்கோதுமறையோர்போற்றவுலகமீரடியாற்கொண்டு
மருக்கோடுகமழுநாகம்வழைசெழுவகுளம்பூத்த
திருக்கோவலூரின்மேவிநின்றருடிருமால்வாழி. (௮௩)

சந்திரன்றபனன்பக்கமிரண்டினுஞ்சார்ந்தமான
நந்துசெந்திகிரியேந்திநற்கரநயனம்பாதம்
சுந்தரத்தோள்கண்மார்பம்வதனம்வாய்துலங்கநேரி
லிந்தளப்பதியின்மேவுமிந்திராகொழுனன்வாழி. (௮௪)

நச்சிமெய்க்கமலன்வேதநவின்றுசெய்வேள்விநாப்பண்
மைச்சுடர்க்கிரிபோன்மேனிவயங்கிடமவுலிமின்ன
வச்சுதப்பெயரினென்றமரர்கள்போற்றிநின்ற
கச்சியத்திகிரிநாதன்கழலிணைவாழிவாழி. (௮௫)

வேறு. திங்கடங்குசடையன்மேவுகச்சிவீதிதிகழநற்
பங்கயத்தினயன்வலாரிமுனிவர்தேவர்பணியவே
கங்கைகொண்டமண்டபத்தினிற்சிறந்தகலுழன்மேன்
மங்குலாமெனக்குலாவுவரதராசர்வாழியே. (௮௬)

வேறு. வருந்தாரளகப்பதிக்கைத்தலவோடுமாற்றிக்
குருந்தேறிநின்றுச்சியர்கூறைகள்கொள்ளைகொண்டே
விருந்தாவனத்தெய்தியதிகிரிவாய்மாயன்மேவு
பெருந்தேவியெனுந்திருப்பீதகத்தாள்கள்வாழி. (௮௭)

வேறு. நேயமார்மழிசையாழ்வார்நிகரிலாக்கணிகண்ணன்முன்
காயுமவ்வளவன்சொல்லாற்கச்சிவிட்டேகுகின்றான்
மாயவயானுஞ்செல்வேனீயும்வாவென்னச்சேடப்
பாயலைச்சுருட்டியன்றுசென்றருள்பரமன்வாழி. (௮௮)

வேறு. துச்சமிலாச்சீரங்கத்தொண்டர்க்கின்புறவேகோளரியாயெழுவிற்றோ
யச்சமிலாத்துங்கத்தண்டர்க்கந்தகனுமாடகனுரமேகீறிப் [ன்றி
பிச்சையிலாதங்கைத்தண்டைச்செங்கழலாற்பீடுறவேநலனாயோங்கும்
கச்சிநிலாத்திங்கட்டுண்டத்தெம்பெருமானார்பூம்பொற்கழல்கள்வாழி.

வேறு. வெறிசெறிபொழில்சூழிந்திரபுரத்தின்வித்தகன்வாழிவெஃகாவி
னுறையரிவாழியுவமையில்பரமேச்சுரவிண்ணகரத்துள்ளோன்வாழி
மறையவர்திரள்சேர்பாடகப்பதியின்வயங்கியமாதவன்வாழி
பொறியுறுதிருத்தண்காக்கவினுறவேபொலிதருகருமுகில்வாழி. (௧௦)

நீரகத்துறையுநிமலனார்வாழிநிகரிலாவேட்கைமால்வாழி
காரகத்தமர்வோன்வாழிகார்வானத்தச்சுதன்வாழியொண்கள்வ
னூரகத்துலங்குமுத்தமன்வாழியுவமையில்கடிநகர்வயங்கு
மாரியன்வாழிசிறந்திடுமட்டபுயத்தமரமலனார்வாழி. (௧௧)

மருமலர்பொழில்சூழுங்கடன்மல்லைநகருறைமாயவன்வாழி
சுரர்தொழுதிலங்குதிருப்பிருதியினிற்சோதிதன்றாளிணைவாழி
திரையுறுநதிகளிலங்கிடப்பொழில்கள்சிறந்திடக்குயிலினங்கூவ
வரியுறுமணக்கத்தரிவைசேர்வைகுந்தத்தினிலமரரிவாழி. (௧௨)

வேறு. நிகரறின்றவூரினித்திலத்தெந்தைவாழி
சிகரஞ்செல்லுறுவேளுக்கையினிலமர்தேவன்வாழி
புகரிபக்கோடுவாங்கிப்பொருதநீர்மலையோன்வாழி
சுகர்நிகரந்தணாளர்சூழிடவெக்கைவாழி. (௧௩)

வேறு. மாதவரினஞ்சேர்காவளம்பாடிவயங்கியமாதவன்வாழி
போதின்மாதுடனேதொண்டனூரிலங்கும்புதுவைமின்னாயகன்வாழி
கோதிலாமேலைக்கோட்டியூர்மருங்கோவிந்தன்கழலிணைவாழி
சூதமார்வேலூர்புரிதனிற்சென்னராயனாஞ்சோதிதாள்வாழி. (௧௪)

வேறு. நெருப்புக்கணினாலுலகெங்கணுநீறுசெய்வான்
பொருப்பைக்கரத்தாலெடுத்தெண்டிசைப்போதகத்தின்
மருப்புற்றிடவேபொருதானுயிர்வவ்விவண்மைத்
திருப்புட்குழிவாழுமிராகவதேவன்வாழி. (௧௫)

வேறு. கொக்காரத்தொடுமேவக்கிஞ்சுகங்கள்கொஞ்சிடவேகுயில்கள்கூவ
விக்காரமுகுத்திடவேயிலங்குகடிகாசலத்தேழ்முனிவரோத்தத்
தக்கானாய்த்தமனியன்றனுரம்வகிர்ந்துமற்றவன்றன்றனையற்கென்று
மக்காரக்கனியாகியமர்ந்தருளுங்கோளரிதன்னடிகள்வாழி. (௧௬)

வேறு. வெவ்விடமதுகைவிடவரோடளப்பிலமர்செய்தங்கவருயிர்வீட்டி
யவ்வியமகன்மாமுனிவனாச்சிரமத்தமர்ந்துசெய்தாசினீர்பருகி [ங்க
மையவணமுகின்மேல்வனசமாமலர்கண்மலிந்தபோன்மெய்யெலாமய
வெவ்வுளினரவின்மிசைத்துயில்வீரராகவனிருபதம்வாழி. (௧௭)

வேறு. பொருவில்லிக்காகமைந்தன்றனைத்தந்தபுண்டரீகத்
தொருவல்லிக்காகமீய்ந்தோயோலமென்றழைத்ததொல்லை
வெருவல்லிக்கரவாலன்றுவெந்திறற்றிகிரிவிட்டே
திருவல்லிக்கேணிமேவுதேவநாயகன்றாள்வாழி. (௯௮)

கல்லைக்காற்பொடியானாரியாக்கியேகவின்கொண்டோங்கு
நெல்லிக்கோடியரப்பூகநிறைந்திடும்வயல்கள்சூழ
வல்லைக்காய்மணிகொண்மாடத்திருப்பதியணுகிவாழுந்
தில்லைக்கோவிந்தராசன்றிருவடிவாழிவாழி. (௯௯)

தீங்கடர்பிறப்புத்தீரத்திரள்பசிமூப்புநோய்க
ணீங்கிடஞானமெல்லாநிறைந்துமாமுத்திநேரப்
பூங்கொடிதிகழுமார்பிற்கவுத்துவம்போற்கொண்டோங்கி
வேங்கடமிலங்கநின்றவித்தகன்கழல்கள்வாழி. (௧௦௦)

வேறு. சலமேலெங்குந்தாவியவாலி
னிலைமேலெய்தியெழிலஞ்சனமா
மலைமேனின்றுன்மார்பின்வயங்கு
மலைமேன்மங்கையடியிணைவாழி. (௧௦௧)

வேறு. பலவெள்ளத்தழுந்தாதையபரனெங்குமுளன்பாரென்றுந்
தவமுளசிறுவன்சொல்லையிகழ்ந்ததைதியனண்டம்
புவிபிளந்திடவேதோன்றிப்பொன்னவனகம்போழ்ந்த
வவுபழநரசிங்கனடியிணைவாழிவாழி. (௧௦௨)

வேறு. மங்காத்திருமைந்தனைவைதடருமவுணன்
வெங்காத்திரமோடறைதூணினின்மீளியாகி
அங்காத்துகிராலவனாக்கைபிளந்தனைந்து
சிங்காத்திருமாநகர்மேவியசீயம்வாழி. (௧௦௩)

வேறு. சுகநாதகீதமோதுஞ்சார்முனிதுதிப்பவெள்ளி
நகநாதனிடைமாற்றினான்முகனுதர்கோமான்
ககநாதன்முதலோர்போற்றக்கடகமன்னிறைஞ்சவாழுஞ்
செகநாதமேவுமெங்கோன்றிருவடிவாழிவாழி. (௧௦௪)

வேறு. பழிபளவிலபவமெண்ணிலசெய்தே
பலவிதமாகியகொடுமைசெய்நிறையக்
குழியிடைமறுகிமெய்குலைபவர்தங்கள்
குலம்வருவானொருவன்குறுகியபோ
தழிவிலதாகியகதியினையாறு
மாறுடனென்பதுதலைமுறையடைய
வழியருளும்பிரயாகையில்வாழும்
மாதவன்றிருமலரடிவாழி. (௧௦௫)

வேறு. வெங்கைமாமூலமென்னக்காவினைவிழவேவீட்டிச்
சங்கைமாவிசையற்காகச்சமரின்வாய்மலரினூதி
யங்கைமாவீசனேற்குமருவினையகலநீக்கும்
கங்கைமாநதிசூழ்கண்டக்கடிநகரிதாள்வாழி. (௧0௬)

எதிரிலாக்கனகன்றன்னையிருகையாற்பிளவுசெய்தே
சதிரிலிலங்கைவேந்தன்றலைகளைத்தடிந்தருந்தி
சுதரொலாமுய்யத்தீயசுயோதனன்மடியச்செய்த
வதரிநாரணனுமெங்கோன்மலர்ப்பதம்வாழிவாழி. (௧0௭)

உயிர்தொறுமுளனுய்வேதத்துச்சியினிறைந்துதுய்ய
சயமழைத்திடுமுன்னெய்திக்காவினைவதைத்துவேத
னயமுறுசடிலனுகண்டலனுடனமரர்போற்ற
நயிமிசாரணியத்தெய்துநாரணன்கழல்கள்வாழி. (௧0௮)

உக்கிரக்கனகன்றன்னையுகிரினாற்பிளவுசெய்தே
நக்கரைக்கிரியினோடேயெடுத்தநாலைந்துகையான்
கொக்கரித்தெதிர்ந்தசூலமுரித்தவனுவிகொண்ட
சக்கரத்தெழில்கொள்சாளக்கிராமநாதன்றாள்வாழி. (௧0௯)

முட்காரக்கரன்றன்னோடுமெவன்கிளைமுடியவாண்மை
உட்கரச்சிரங்களெண்ணிலுறவுலர்பாதவத்தின்
சுட்கம்வெந்திறப்பாய்வன்னியெனச்சுடுசரங்களேவிப்
புட்கரப்பதியின்மேவும்பொறியுறுமார்பன்வாழி. (௧௧0)

வேறு. சுரரிவையர்போற்பொதுவர்தம்மாதர்நலங்குமாய்ப்பாடியான்வா
திருவுடன்றுவரைப்பதியினில்வயங்குதேவகிகுமாரன்றாள்வாழி [ழி
வரசர்கடுதிப்பவயோத்தியினிலங்குமருள்செறியிராகவன்வாழி
பருதிபோலவிர்கொண்மணியுறுமரவின்பாற்கடற்றுயிலரிவாழி. (௧௧௧)

வேறு. பொய்கையுயர்பூதத்தார்பேயார்மிக்க
புகன்மழிசைமாமறையோன்சேரர்கோமான்
வையகமெண்புதுவையர்கோன்மாறன்றொண்ட
ரடிப்பொடிபாணாழ்வார்சீர்மங்கைவேந்தன்
றுய்யமறைப்பொருளுறவேயிவரீனாவர்
தோத்திரஞ்செய்நாற்றெட்டுத்திருமுற்றத்தின்
செய்யமலர்மங்கைநிலமங்கைசூழச்
சிறந்தமருந்தேவர்திருவடிகள்வாழி. (௧௧௨)

வேறு. இரணியன்சிறுவன்சுரர்முனிசமதக்கினியசேயெழில்கொள்புண்டரீக
ரருமறைபகர்ந்தோனுயருமம்பரிடனருள்செறிசுகன்சவுனகன்றன்
வரநதிபுதல்வன்றுப்பியனுருக்குமாங்கதன்றனஞ்சயன்வசிட்டன்
பரவைசூழிலங்கைவீடணன்முதலாம்பரமபாகவதரும்வாழி. (௧௧௩)

வேறு. வைகுபோதின்மாரியாலும்வாடியேசில்கோவலூ
ருய்கவேதியன்கொடுத்தவிடைகழிக்குளுற்றிரா
வைகிஞானநல்விளக்கின்மாயன்மேனிகண்டுளோர்
பொய்கைபூதர்பேயரானபுநிதர்வாழிவாழியே. (௧௧௪)

வேறு. மொழிசெய்பல்சமயங்களுமூழ்கியே
வழிசெய்யாதெனமாற்றிநல்வீடருள்
சுழிசெய்சானவிபாதனைச்சூழ்ந்துவாழ்
மழிசைமாமறையோனென்றும்வாழியே. (௧௧௫)

வேறு. சிலைசேர்கரனாருயிர்கொன்றவிற்கொண்டறேவி
வலிசேர்கராராவணன்றேர்மிசைபோகும்வாய்மை
யொலிசேருமுனைக்கடவோடுதியென்றுசென்ற
குலசேகரனாகியகொற்றவன்வாழிவாழி. (௧௧௬)

வேறு. அதுவிதென்றயராதுபல்லாண்டுரைத்
துதவியேமுகுந்தற்கொளிர்கோதையார்
வதுவையாகநன்மாதலனாகிவாழ்
புதுவையந்தணர்பொற்பதம்வாழியே. (௧௧௭)

வேறு. ஆறங்கமுநால்வேதமுமறையும்பொருளெல்லாம்
நூறுமிருநூறுமெழுநூறும்பெறறுவல்வோன்
வீறுந்திரைநதிசூழ்ந்திடுகுருகாநகர்மேவு
மாறன்சடகோபன்றிருவடித்தாமரைவாழி. (௧௧௮)

வேறு. அண்டரடிப்பொடியெனவே
யரைத்துழக்குங்கும்பகன்னனுதியாகுந்
துண்டரிடிப்படமுழக்கிச்சூழ்ந்தவரைக்
கணைகளினுற்றுணித்தசோதி
கொண்டலடிப்பொடியின்மலர்க்குழலியைக்கல்
லுருவகற்றுங்குணங்கள்கூறுந்
தொண்டரடிப்பொடிமண்டங்குடிமறையோன்
றாளிணைகளிலங்கிவாழி. (௧௧௯)

வேறு. பூணாரம்பொன்னிறுடையார்பொலி
சேணுருந்திருமேனிகண்டகண்
காணுமற்றவையென்றுங்கைதொழும்
பாணாழ்வார்திருப்பாதம்வாழியே. (௧௨0)

வேறு. சதுரர்சதுமறைதமிழினுதவிய
வெதிரின்மகிழ்மலரணியுமவனை
முதிருமொழியொருபதினொருவர்செய்
மதுரகவியடிமலர்கள்வாழியே. (௧௨௧)

வேறு. செங்கண்மாலுடன்சென்றிருவைத்தனைத்
தெங்குமானவனெட்டெழுத்தோதியே
சங்கைபோகத்திருமொழிசாற்றினான்
மங்கைவேந்தன்கலிகன்றிவாழியே. (கஉஉ)

வேறு. அராமீதமர்வாய்ச்சரியுந்திடவாழியிவனைக்
கராமீதறவேவிடுவாய்கருணாகரா
மராமாவெனநான்மறைமல்கிடவேனுதிசெய்
யிராமானுசமாமுனிதாளிணையென்றும்வாழி. (கஉ௩)

வேறு. நாரணனனிலங்கியதிருச்சேனபதிசெந்தமிழ்கைய [முன்
வாரணமறைந்தோனருள்செறிநாதமுனியுய்யக்கொண்டவர்தனைன்
சீரணிமணக்காலநம்பிதொல்புகழ்சேராளவந்தார்திகழ்கரும்பார்
தாரணிபெரியநம்பிகளிராமாநுசனிவர்தாளிணைவாழி. (கஉ௪)

வேறு. கோரத்தாலேபழுக்கொண்டகண்டன்சபைமே
லூரத்தானேயிறையென்றசொன்னனிவே
யோரத்தானேதுரோணம்முனைதேன்றொழுதங்
கூரத்தாழ்வான்பதக்கோகனகம்வாழி. (கஉ௫)

வேறு. திருவரங்கநகரின்வந்தபோதுகண்டெடுரிசிலாக்
கிருமிகண்டன்மீளவோடவேகினந்தநான்மறைப்
பொருள்கலந்தமணவரங்கர்புலியடங்கவிசெய்தான்
பெரியநம்பிபிள்ளைபாதமலர்கள்வாழிபெரிதரோ. (கஉ௬)

வேறு. கொம்பினைத்தொடுத்தேயெட்டிக்கரிகுலைத்திடவென்றென்சே
யம்பினையவனைத்தாக்கமருந்தவனிலராசர்
தம்பிக்கயன்வாழ்வீய்வோன்றுணையெத்திவாழு
நம்பினையிருபொற்பாதநளினங்கள்வாழிவாழி. (கஉ௭)

வேறு. உணவாகியவைம்புலநோய்களுமோடவென்றும்
பணமாயிரப்பஃறலைப்பாந்தளிற்பள்ளிகொண்டு
மிணையேயின்முராரிபொற்றுணையேத்திவாழு
மணவாளனென்னுந்தவமாமுனிவாழிவாழி. (கஉ௮)

வேறு. மாதவனொண்சடகோபன்றமிழாற்செய்த
மறைமொழிவாவண்ணமதிற்குடந்தைமாலுக்
கோதியவாராவமுதாம்பத்தைக்கேட்டே
யுயர்குருகூருறங்காதவெனத்தின்கண்
மேதொருவச்செந்திருவாய்மாறன்கூறத்
திகழ்திருவாய்மொழியையுலகுய்யத்தந்த
நாதமுனியயலிசையினம்மவல்லோ
னளினமலரிணையடிகள்வாழிவாழி. (கஉ௯)

வேறு. ஓரங்கலாதநாவுடையானுருவிலாதோனெங்கோலின்
வீரங்கலாமலிடைந்தடையவெற்றியுறமுக்கோலுடையா
னாரங்கலரங்கமிழ்திருவையகலாவரங்கரடிபிரியாச்
சீரங்கநாராயணமுனிதன்சிறந்தவிணைப்பதம்வாழி. (௧௩௦)

வேறு. கராசலமுறவேபிணித்திழுப்பக்கராசலமவணினோலமிடச்
சராசனம்வாளம்வளையாழிதண்டேந்தரித்துவந்துதவித்
துராசையொருவுமுனிவர்தொழத்துலங்குமரங்கர்பதமேத்தும்
பராசரபட்டரிருபாதப்பதுமமலர்கள்வாழியரோ. (௧௩௧)

வேறு. நீதவியாசில்பொன்னித்திரையுலாமருங்கினோங்கு
மாதவியாரம்பூகம்வயங்கியவரங்கமேவுஞ்
சோதியைவியாளமீதிற்றுலங்கியைச்சுருதியோதும்
வேதவியாசபட்டர்விளங்கியபதங்கள்வாழி. (௧௩௨)

வேறு. நந்தாடவெங்குங்கயறுள்ளிடநாரம்பொங்க
வந்தாமோமதிப்பொய்கையின்மாமறைவாய்த்
தந்தாடியதேத்துமரங்கணைச்சார்ந்துபோற்றுங்
கந்தாடையண்ணன்கமலப்பதம்வாழிவாழி. (௧௩௩)

வேறு. உதிட்டிரன்றனக்கொன்னலன்வஞ்சமிக்
கதுட்டன்மாளக்கவான்றட்டிக்காட்டிய
மதிட்டுவாரகைமன்னடிபோற்றிய
வதிட்டையாயன்மலரடிவாழியே. (௧௩௪)

வேறு. பெருமலையப்பிணிற்பிறழவேகடை
கருமலையொப்பனார்கழல்கள்பேணுவார்
மருமலையப்புகீள்வதிட்டையாயனார்
திருமலர்ப்பாததாளிணைகள்சேருவாம். (௧௩௫)

எயினன்ராமாவெனவெழில்கொள்வைகுந்தத்
தயர்வுறவயங்கியதன்மையாமென்றுன்
மயர்வறவெட்டெழுத்தோதுமாந்தர்க
ளியல்புறுபெருமையையியம்பற்பாலதோ. (௧௩௬)

வேறு. நீதிசேர்செல்வம்வாய்க்குநிவந்தமெய்த்தருமனேறு
மேதமின்ஞானமெய்துமிந்திரையினிதுநோக்குஞ்
சேதிபராசனோடச்செருவென்றுவிதற்பனல்குங்
கோதையைமணந்தமாயோன்சிலைவலிகூறுவோர்க்கே. (௧௩௭)

உன்னியகருமம்வாய்க்குமுயர்மறைநெறியுண்டாகி
மன்னவராகிவாழ்வார்மறுவிலாமக்கட்பேறும்
பொன்னெடுங்குன்றமானப்பொருதவேறேழடர்த்துப்
பின்னையைமணந்தமாயோன்பெருநலம்பேசுவோர்க்கே. (௧௩௮)

வேறு. திருவினுடன்வசுந்தரையுநீளையென்னுஞ்
செழுங்கொடியுந்தேவியராய்ச்சிறந்துதோன்றப்
பருமணிமேற்புராண்பணமாயிரங்கள்கோடி
பருதியொளியெழுமரவப்பாயன்மீதே
கருமுகின்மேற்றிகழ்கமலக்காடுபூத்த
கவினுறவால்வளைநேமிகதைவாள்சார்ங்க
மருவவகல்பயோததியின்வயினதேயன்
வலம்வரவாழரியடியெம்மனத்துள்வைப்பாம். (க௩௯)

வேறு. இதரதேவதைதனைநினைக்கிலாமதியையீய்ந்துநீயானகிலிலந்து
சுதைதருமொழியார்கலவியிற்படிந்துதூர்த்தனுந்திரிதவதொழிந்துப்
பதமரீச்சித்துச்சரிதையைமறவாமனமளித்தென்பவந்தீர்த்தி
சதுமுகனோடெவ்வுலகுமூர்த்தியினிற்றந்தேதிற்றோன்றியதலைவா. (க௪௦)

வேறு. கன்றெடுத்துவிழவெறிந்துஞ்சகடுதைத்துங்காமதனுற்
குன்றெடுத்துமழைதடுத்துங்கலையெடுத்துங்குருந்தமர்ந்து
மென்றினைவிர்மறைந்திடவேதிகிரிதனையெடுத்தடைத்து
நின்றுகுழலூதியருணெடியவன்றன்பதநினைப்பாம். (க௪க)

வேறு. அன்னைதன்னுதரத்தடைந்துசோடசமாம்வருடமாரழகனுய்த்தரங்க
துன்னுபாற்கடலிற்சோதிபாலேகச்சுதனெனுமவாவினுல்வியாசன் [ந்
பின்னுறநடந்துவிளித்திடவதற்கும்பிறங்குபாதவங்களெல்லனவே
தொன்னலனுறவேசெனனபாசத்தைத்துணித்தகன்முனிவனைத்தொழு
[வாம்.

வானநாரியர்க்கெனத்தினராகிவாவிநீர்மருவவொண்வியாச
னீனமில்வசிட்டன்பராசரன்வரத்தாசிடையினிற்புனைந்திலச்சித்தே
வேனிலான்விசிகம்விலக்கலாதவர்நீர்விளங்கியசுகன்றனக்கியாமுங்
காணுமாமுஞ்சமமெனவுரைப்பக்கடிதகன்முனிவனைத்தொழுவாம்

வேறு. இருக்குமுதன்மலரயனோடேமுலகமளித்தவினை
மருக்கொள்குழற்றேவகிதன்மதலையெனவந்தவனித்
திருக்குளதெலாமடியச்சிசுபாலன்றிகைத்தோட
வுருக்குமணித்திருவைமணந்துவந்தருள்வான்சரிதைதனை. (க௪௪)

புகலரியவிறலபிமன்புதல்வனுக்கன்றருள்புரிந்து
சுகன்மொழிபும்வடகலையையான்றமிழாற்றொடுத்ததனின்
மகாநதிபதியலையவரும்விசையைநிகரொணமண்
ணுகுசிறுகூவற்புனலுறலொவியமண்டூகமொத்தே. (க௪ரு)

வேறு. சுகனவன்பிதாவவன்றந்தைதூய்மையாற்
பகர்கதையரியினம்பருப்பதங்களாற
சகரநீரடைப்பமெய்தனின்மணற்கொடே
புகுமணிலியல்பெனப்புகலுவேனரோ. (க௪௬)

வேறு. திசைசெவிபெடநெடியசிகாமுடியினமொடிய
விசைகொடெதிர்வருகெருடனிகரெனவேவிரிகிலன்வாய்
மசகமிருசிறகசையவருசெயலையொத்தனவா
லிசைகொள்சுகனருண்மொழியையான்றமிழாலியம்பியதே. (கஅஎ)

சம்பரனைவதைத்துயருந்தசரதராமன்சரிதை
கம்பன்மொழிசெந்தமிழின்கவித்திறத்தின்காட்சிகண்டு
மம்புயக்களலர்ந்தெழுநீரிலஞ்சிதனிலாம்பலுந்த
தம்பியபோலேவாசுதேவகதைசொல்லினனால். (கஅஅ)

வேறு. இரைகடலிப்பிராற்றமெள்கிலாததனிற்றேன்றுஞ்
சரியில்வெண்டரளநற்றிச்சார்குவார்போலஞானங் [ண்
தெரிகிலேன்மொழிக்தபுன்சொற்சிறுமையைப்பெருமையாய்க் கொ
டரிசலப்புகழுயுள்கிமகிழுவாரறிஞர்மாதோ. (கஅகூ)

வேறு. பராசரன்புதல்வன்முதலிரோருரைத்தபதினெட்டுப்புராணமாமதனு
ளிராசையையுறுத்தும்புராணமோராறுதிகரில்சாத்திகமெனவுரைப்ப
ரிராசதபுராணத்தியல்பிருமூன்றென்றியம்புவரிதுவுமேயன்றித்
துராசையையளிக்குந்தாமதபுராணஞ்சொல்லுவர்மூவிரண்டெனவே.

காருடம்பதுமம்வராகம்பாகவதங்கவினுறுவிண்டுவின்புராணம்
நாரசிங்கத்தினுடனிவையாறுநலனுறுசாத்திகபுராண
மேருமார்க்கண்டேயம்பௌடிகம்வாமனமியற்பிரமகைவர்த்தஞ்
சீருறுபிரமாண்டத்துடன்பிரமஞ்சிறந்தவிவ்வாறும்ராசதமே. (ககூக)

அந்தமார்மச்சங்கூருமஞ்சைவமாக்கினியங்காந்தத்துடனிலிங்க
மிந்தநூற்புராணமாறுந்தாமதமாமிராசதந்தாமதமிரண்டும் [ஞ்
வந்தெழுஞ்சனனமறுத்துயர்பதத்தைக்கொடாதுசாத்திகமகாபுராண
சுந்தரவரியின்பதத்தினையளிக்குமாதலாற்சுகன்மொழியுரைத்தேன்.

வேறு, எனுருலத்தவருமிறையோன்சரிதையைநற்சுகனிசையா
லுதவுசொலைத்தமிழினுரைத்தவன்வண்டிருவரங்கம்
பதியமர்வேத்திரக்கரந்தோன்பழமறையோன்வரதனெல்லிக்
கதிபதியாயுயர்ந்திடுபேரருளாளநாதனரோ. (ககூங)

வேறு. ஆபுமறையோரெண்ணவருஞ்சகார்த்த
மாயிரத்தெழுநூற்றெட்டாபத்தஞ்சாங்
காயசுபகிருதுதனின்முதன்மாதத்திற்
றிலங்குகுருவாரத்தத்திராடநாளி
னேயமுடனெல்விநகர்வரதராச
விசிலரங்கத்திலாவணியிணைக்கு
நாயகன்முன்னறிஞர்மகிழ்ந்திடவேவாசு
தேவகதையரங்கேற்றிநலனுற்றனே. (ககூச)

குந்திசுதர்தேவியுடன்கொடுங்கானின்மாதவனைச்
சிந்தைசெய்துமுயர்கதியைச்சேர்ந்ததுவுமகபதிசேய்
மைந்தன்மகன்றனக்குவியாசன்குமரன்மால்சரிதை
யந்தமுடனமுதெனவேயருளியதுமறையலுற்றேன். (௧௫௫)

திருவரங்கப்படலம்-முற்றிற்று.

ஆ இவ்வளவும்பாயிரம்.

ஆ திருவிருத்தம். ௧௬௧

---

## உ-வது—நைமிசாரணியப்படலம்.

வேறு. பூமிசைவனிதைகொழுநனுமுராரிபுவியிடத்தருந்தவரலையத்
திமைசெயசுரர்மடிந்திடவிடுப்பத்தெசசதகோடிசூரியர்போ
னேமிவந்தவனைவதைத்தவன்விழுவேலிகரிலாநைமிசாரணிய
நாமமுற்றிடவேயிலங்குமாச்சிரமத்தனேகமாமுனிவர்கண்ணினரால்.

சவுனகன்முதலாமருந்தவரெல்லாஞ்சத்திரயாகத்தைமுயன்று
சிவனயனெனுமாலிவர்மகிழ்ந்திடவேதெசசதவருடமுஞ்சிறைய
வவிசொரிந்தழலின்மறைச்சொலைவிரப்புமவர்முனேசூதன்வந்தனுகக்
கவினுறுதவிசினிருத்தியாச்சரியத்துடனிவைகழறினரன்றே. (௨)

அயனிகர்வியாசனருளியபுராணமனைத்துக்கும்பாத்திரமாகு
மியல்புறுமதிஞர்மகிழ்ந்திடச்செவிகட்கினியநல்லமுதெனவிசையாற்
செயலுறுசரிதைப்பொருளினையெவருந்தெளிவுறப்பகருமாபுருட
சயமுறுஞானம்வழங்கிடுங்கதையருளெனச்சவுனகன்மொழிவான்.

கனமுறுதடத்தின்செயலெனச்சனனமரணமுங்காட்டுமிக்குரம்பை
தனினமர்சீவனரகினுஞ்சுவர்க்கமதனினுமமர்ந்துபின்புவியின்
சினமுறுவிலங்குபறவைகள்கிருமிநருமாய்ச்செனித்திடாதுயர்ந்த
வனகன்வாழ்பதத்தினமைத்திடுஞ்சரிதையருளெனச்சவுனகனறைந்தான்.

சிவனெனவிளங்குஞ்சவுனகமுனிவன்சிறந்திடவுரைத்தசொற்கேளாத், தவர்களெண்குதனறைகுவானிகரில்சத்தியவதிதருதனையன், கவினுறவருள்பாகவதம்வானபிமன்காதலன்போசனனாகிப், பவமிலாச்சுகன்
முன்மொழிந்திடக்கேட்டபுராணத்தைப்பகருவனென்றான். (௫)

சூதனீதறையச்சவுனகனறைவன்றாபனுகியசுகமுனிவன்
பூதலத்தமரின்மடிந்தவானபிமன்புதல்வன்பாலேதுகாரணத்தான்
மாதவருறவேலிகரில்பாகவதமகாபுராணத்தினைமொழிந்தான்
நீதகல்வியாசன்பயிற்றியவுனாயென்றோதிடவனிவைசெப்பும். (௬)

தரங்கநற்சரசுவதிநதிக்கரையிற்சம்மியப்பிராசவாச்சிராமத்
தரங்கடையயம்போலவனியிற்சனங்களருவினையகலவேவியாசன்
புரங்களைபுரிதன்மகிழ்ந்திடநாலுபெயரதாய்மறையினைப்புகன்று
கருங்கடலுடனேழுததிசூழுலகிற்கவினுறுபாரதம்பகர்ந்தான். (எ)

மறையறைவியாதனிருக்குவேதத்தைமறுவிலாப்பயனிலங்கறைய
நெறியுறுவைசம்பாயனமுனிவனிகரிலாவெசுருவைநிகழ்த்த
வறிவுறுசெயன்சாமத்தினைமொழியவதருவவாரணஞ்சுமந்து
பறையவேரோமகருடணனிகரில்பாரதம்பகர்ந்திடப்பணித்தான். (அ)

பயிலமாமுனிவன்பழுதிலாவைசம்பாயனர்செயமுனியாரிற்
செயலுறச்சுமந்துமறைகணான்கினையுந்தெளிவுறவந்தணர்க்கறைந்தார்
கயலுறுகடல்சூழ்காசினியமர்ந்தோர்கவினுறுபாரதப்பொருளை
யறியவேரோமகருடணச்சூதனறைந்தனனுலகெலாந்தழைப்ப. (௯)

சத்தியவதிசேய்சதுமறையைத்தானறைந்துபாரதத்தினைமொழிந்தும்
புத்தியின்மலமாகாமையான்மனம்பொருந்தவே மெய்யெலாமெலிந்
சித்தம்வேறுகியுழலும்வேலையின்வாய்சிறந்திடுமாதவமுனிவ [து
னத்துறுநதிவாய்பராசரன்குமாரனண்ணுமாச்சிராமத்தையடைந்தான்.

வீணையுங்குடையுஞ்சிரகமுந்தண்டும்விளங்கிடநாரதபகவான்
வாணனாயிரந்தோடணித்தவன்புகழைத்துதித்தவன்வருதலும்வியாசன்
பாணியாற்றொழுதுசிரசினாலிறைஞ்சிப்பரிவுடனாசனத்திருத்தி
வேணியார்விமலனிகர்தவன்முனரினிருந்திடச்சுரர்முனிவிளம்பும்.

வேதநான்கினையுமுலகெலாந்தழைப்பவிரித்தனைபாரதவிசையைச்
சூதன்யாவருக்குமறைந்திடப்பணித்தாயாகிலுந்தூயயோகியர்தந்
நாதனாமுராரிசரிதையைப்பரிவானவின்றிடாப்பாவம்வந்துறவே
யோதியுமுணர்ந்துமனதுநின்மலமாகாமனியுழந்தனையென்றான். (கஉ)

இவையெலாமொழிந்தயாழ்முனியடியினிறைஞ்சியேபராசரன்குமர
னவையறுமறைநான்கினையுநானவின்றுநலனுறுபாரதம்பகர்ந்தும்
மறுவுறுமனதுகலங்கமெய்ஞ்ஞானம்வளருதலிலாமலேகுறைவா
யறிவறலானிவ்வினையினையகலவருளுநீயருளுதியென்றான். (கங)

நிகரிலாமுனிவனிவைநிகழ்த்திடலுநெறியுறுநாரதனனங்கள்
பகிரதியுத்தைப்பருகவேகரடம்பழுதறவச்சலம்பருகா
திகழ்வுறுகிருமியினைத்தகட்டத்தினிழுக்குநீருந்துவபோன்று
ககபதிதுவசன்புகழைமெய்யறிஞர்கழறநீயிதரநூல்பகர்ந்தாய். (கச)

கன்மகாண்டத்தைநிறைத்தவொனினுங்கவினுறுதிருமகள்பதியா
நின்மலன்புகழைநினைக்கிலாதவர்கணிரயத்தினுறுவர்வேதத்தி
னுண்மையையுணராதறநெறிதிறம்புநவையுறுமனத்தினரெனினு
மன்முகுந்தன்றந்தையடியடைந்தவர்கண்மருளறவுயர்பதத்தமர்வார். (கரு)

காசினியதனிற்றவஞ்செய்வார்யோகக்கழறிடில்யமநியம
மாசனம்பிராணாயாமநற்பிரத்தியாகாரதாரணைமருட்டியான
மேசகல்சமாதியிவையெட்டுமுணர்ந்தோரொன்னினுமுராரியொண்புகழின்
வாசனையிலாதோர்சொற்கமெய்த்திடினுஞ்சென்னமாம்வாரியின்வீழ்வார்.

ஆவலையகற்றியவனியிற்றீர்த்தயாத்திரைமருவுவோர்பெரியோர்
சேவைசெய்திடுவோரவர்களான்முராரிசரிதையைத்தினந்தொறுங்கேட்
பாவமாமளப்பில்பரவையைக்கடப்பார்பதுமநாபனன்னவரிதயத் [டே
தோவுதலிலாமலிலங்குவனவனாயுவப்பொடுந்தன்பதத்துய்த்தே. (௧௭)

படியினில்வயங்கும்பாதவஞ்சடைப்பாவகன்றுலங்குமாறெனமா
லடியினைத்தவர்பிற்குணமிரண்டகற்றியறனுறமுற்குணத்தாள்வர்
சடமகற்றியசாத்திககுணத்திறைவன்சங்குசக்கரந்தரித்தவனே
வடிவுடைமலரான்மருணனுங்கவர்கள்வைகுந்தம்பெறவருள்செய்வான்,

மறைமகம்யோகங்கிரியைமெய்ஞ்ஞானமறுவிலாத்தத்துவதன்ம
நெறியுறுசதிஷமிவையெலாமுராரிபெயருறவிறுத்திருணலற
மறனறவிதரதெய்வத்தையடையினிவையெலாமத்னமமாயளக்க
ருறுமுயர்கலங்காலடைந்திடவுடைந்தேயழிவபோற்பருவாலுறுவார்.

ஆதலின்முனிவனவனியிற்சோகமோகவெம்பவங்களையகற்றுஞ்
சீதரநெடுமாலமிர்தனாமங்கடிறமெனவுணருதியான்றன்
றாதிபுத்திரனாய்ப்பரமபாகவதவெதிகளாற்றத்துவமறிந்தேன்
மாதவனடியானெனமகிழ்வுற்றேன்மற்றவைகேளெனமொழிவான். (௨0)

சுரர்முனியெனுநான்பூருவசெனனத்துலங்குகந்தருவனாய்த்தோன்றி
யுருபெருங்கண்ணனெனும்பெயராகியுருவினுலதிகனுமாகி
மருவையரிடத்திலதிகமோகனுமாயமர்ந்திடுமெனைத்தெசப்பிரம
ருமறையவர்சேர்மகத்தினிற்கானமிசைக்கவீவருகெனவறைந்தார். (௨௧)

நிதிநையகற்றியுயர்தெசப்பிரமர்மொழியினுற்றேவியருடனு
மேதமுற்றிடானவர்செயுமகத்தினிடையிற்பாடவத்தொடுமெய்த
மாதர்களுடனீயார்த்தனாயிவணின்வந்தனையாதலினிழிவாந்
தாதிபுத்திரனாய்ச்சனித்திடுகெனவெந்தழலுறச்சபித்தனரன்றே. (௨௨)

சாபமுற்றிடயான்றயங்குகந்தருவனாகியசெனனத்தையொருவிப்
பாபமுற்றிடாவண்மறையுமோர்மறையோன்படைத்திடுந்தாதிபுத்திரனாய்
கோபமுற்றிடுநற்குணமுடையவனாய்ப்பிறந்தனன்பருவங்கூடிடமா [க்
ஞுபியிற்றிகழ்வோன்றனையிகொதிகளல்வர்வந்தவ்விடத்துற்றார். (௨௩)

ஏதமில்லெதிகள்வருதலுமறையோனெதிரெழுந்தவர்களையிறைஞ்சி
யாதரவுடன்றன்மனைதனிற்கொணர்ந்தேயருக்கியமளித்தபின்பரிவாற்
றாதிபுத்திரனாமெனையவர்க்கேவல்செயும்படிசாற்றியேவிடுப்ப
மாதவமுறையானவர்களேவினைசெய்தன்மருமலாண்டேழிவஞ்செய்தேன்.

தாதிபுத்திரனாய்த்திரியுமென்றவத்தாற்சாதுமாதத்திடையெய்து
மேதமிலெதிகள்வரமனைமெழுகியேவியதொழிலெல்லாங்கேட்ப
நீதியார்தவத்தோர்கனியினிற்படிந்துநியமமுற்றியபினர்ச்சமைத்த
வோதனமருந்திமிகுந்திடுமிலையினுச்சிட்டமளிக்கயானுகர்ந்தேன். (உரு)

மாதவமுறையானெதிகளுச்சிட்டம்வழங்கிடவருந்தவென்மனத்தி
னோதமற்றுயருமறிவுவந்துறமாதவன்கதையவரியம்பிடும்போ
தாதரவுடனுமகிழ்ந்தியானுற்பவதுவெலாம்விரித்தெனக்கறையக் [றே.
கோதின்மெய்ஞ்ஞானம்படர்ந்திடயானோர்கொள்கொம்பாயுணர்ந்தனனன்

வேதமோதிகண்மறையவன்மனையினிருதிங்கண்மேவியபின்
போதலுமவரைத்தொடர்ந்துதானேகப்பொறையுடையவரெனைமகிழ்ந்து
தாதிபுத்திரனென்றிகழ்ந்திடாதெனக்குத்தத்துவஞானத்தைமொழிய
வாதரவுடனுங்கவர்களையிறைஞ்சியகத்தினிற்றிரும்பிவந்தனனால். (உஎ)

தூயயோகியர்களறைந்தத்துவத்தாற்றுலங்கியவிருத்தியுண்டாயுந்
தாயினையொருவமனதிலாததனுற்றவஞ்செயுங்கருத்தினையறியே
னேயமோடவளோடுறையுநாளவளைநெறியுறுமறையவனேக்கிப்
பாய்புனிற்றுக்கண்மாவகத்திடைபோய்ப்பால்கறந்தெடுத்துவாவென்றான்.

மறையவன்மொழியால்வகத்தினாவினங்கள்கறந்திடவல்லையிற்செல்லு
நெறியிடையரவுகடித்திடவவளுமிறந்திடநேமியோனருளா
லறிவுவந்தனுதவனைமடிந்ததமைதானலமெனநினைந்தவணொருவிக்
கறையடியுழுவையிருளிகோளரிகள்கரடிசேர்கானிடையடைந்தேன். (உகூ)

மந்தர்களணுகாவரையுறும்வகத்தின்வல்லையினெய்தியான்றிரியத்
தினகரன்வெயிலாற்பசியுறவவனோர்கயத்தினிற்செலத்தினைப்பருகித்
தனியரசருகினிருந்தரிதியானந்தளர்விலாமற்கருதிடவென்
மனதினின்மலமாயுறப்பரஞ்சோதிவந்துமுன்னின்றவண்மறைந்தான்.

இருவிழிகளிப்பத்திருமகள்கொழுனனென்முனிற்றோன்றியேமறையத்
தரைவரத்திசைகளொருங்குறத்திரிந்துதயானுவாமுராரியைக்காணுப்
பருவரலுறயான்பருவமோணாந்தாஞ்சிறுவனுதலிற்பரிந்திரங்கி
யரியுயர்விசும்பினடைந்தசரீரியாகியேயிவையறைந்தனனால். (ஙக)

தாதிபுத்திரனையெழுந்தவிச்சென்னந்தன்னினீயொப்பிலாதுயரு
மாதியாமெனைத்தானடைவதற்கரிதேயாதலாலிவ்வுடலகற்றி
யோதுதற்கரியவழிவிலாச்சரீரமுற்றெனையடைதிசின்னாளிற்
பீதியுற்றிரங்கேலெனவருள்செய்யப்பிரான்றனைச்செவித்தவணிருந்தேன்.

வருடமோர்சதுரயுகஞ்சகசிரமாய்வரமலரயற்கிரவாகக்
கருடவாகனன்றன்னருளினிலிழிவாமுடலினைக்கழித்துத்திவ்வியமாம்
புருடனுய்ப்பிரமன்றுயில்கொளமனையிற்புகுதும்போதவன்வயிற்றுற்றே
யிருடருபொழுதாருகமதுங்காறுமிலங்கியாண்டிருந்தனனன்றே. (ஙங)

சதுமுகனிரவிற்சகசிரசதுரயுகமொருப்படத்தனைவானத்
துதிகமாயெழுந்தவவாந்தரவெள்ளமகன்றிடவவன்றுயிலுறப்ப
வுதையமாகியபோதவன்மடிதன்னினுதித்தநாரதனெனும்பெயராய்க்
கதிதருமுராரிக்கடியனாயினனலறிதிமாமுனியெனக்கழறும். (௧௪)

தாதிபுத்திரனுமிழிவினிற்பிறந்துஞ்சங்கொடிசக்கரந்தரித்த
வாதிதன்சரிதையருந்தவரறையவழியுடன்கேட்டமாபலத்தான்
மாதவர்துதிப்பவயன்வயிற்றோன்றியயங்கினேன்மாலடியவனு
யாதலின்வியாசமுனிவகாரணநற்சரிதையையறைதியெனப்பறைவான்

நற்றிலாதிருக்கத்தொடர்ந்ததீவினைதா
னவியுமாறெனப்பலவுயிர்க்கு
முற்றநல்வினையால்விபவமுற்றுழ்ந்த
நிலனுறமுடிகுகீரெனவே
பற்றுமாலார்க்குமுயலவேண்டுவதிப்
பரமநற்சரிதையைப்பரிவாற்
கற்றுணர்ந்துரைப்பதலகிற்றுல்லபமா
மவையினைக்கழறுகென்றிசைப்பான்.

அரிபெயர்நிறையவயங்குபாகவதமச்சுதனயன்றனக்குரைய
விரைமலருறவோன்யான்செய்மாதவத்தால்விளம்பினனதனைவிரித்தே
யிருவினையகலச்சனனநோய்நிரையவிருளறவிருதயத்திலங்கித்
திருவினாயகன்வந்துறப்பரனடியார்களிப்பநீசெப்பெனவறைவான். (௧௭)

வேதநான்கினையும்விரித்ததன்பொருளைமுமிதாயுணர்ந்துகேசவனே
யாதிமற்றவனையலாததெய்வங்களிறையலவீதுசத்தியமா
னோதினேனெனவேமொழிந்தநீயிதரநூல்களையுரைக்கிலையுயர்ந்த
யாதவக்குலக்கோன்சரிதையையியம்பென்றியாழ்முனிவிளம்பினேகினனால்

இவையெலாமொழிந்தேயாழ்முனிவிளம்பினேகலும்வியாசமாமுனிவ
னவையறப்புலனைவிளக்கியேகாந்தசித்தனாய்நாரணன்பெயரிற்
சுவையுறவுயர்ந்ததுவாதசாக்கரத்தைத்துலங்கிடத்தன்மனத்தமைப்பப்
பவமகற்றிடவேபரமன்முன்றோன்றிப்பாகவதந்தனைப்பகர்ந்தான். (௧௯)

நிகரிலாவியாசன்பதினெண்ணாயிரமாய்நிறைந்திடுசுலோகபாகவதஞ்
சுகமுனிக்குரைப்பவவனருள்கூர்ந்துதூயவாளபிமன்மைந்தனுக்குப்
பகிரதிக்கரைமேலெழுதினமதனிற்பயோத்தியமிர்தெனப்பகர்ந்தான்
சகலசாஸ்திரவேதத்தமர்பொருளைச்சவுனககேளெனமொழிவான். (௨௰)

அரவுயர்துவசன்மடிந்திடத்தருமனறனுறத்திரிதராட்டிரனு
திருபன்மாமகுடங்கவித்திடத்தானண்டிளவரசியற்றியேநிகரி
லருமறைமுனிவர்மகிழ்ந்திடச்செங்கோலவிருறவமர்ந்திடுநாளிற்
றனையினினுயர்ந்தசதாகதிதனையன்சார்ந்தனனுடனிவைபகர்வான். (௨௧)

இடரொடுமக்குறவஞ்சகம்பலவியற்றியிணையிலாத்துரோபதிதுகிலைக்
களைகயிறெனவன்றரிந்தெனமைவனத்திற்கடியனுய்த்தரக்குமின்மதலை
படிபடுத்திடுமென்புயமிதுவெனுஞ்சொற்பகர்ந்தவனறிவுறுகுருட
முடிகவித்திவணிருத்தியோவெனவேமொழிந்திடவவனுமைந்தனனால்.

தினமுறற்பவனன்றிருமகன்றனித்தவிடமறிந்திவ்வினைச்செப்ப
மனமெலிந்தனையுற்றிரிதராட்டிரன்முன்மறனிலாத்தருமன்வந்திறைஞ்சி
யினியனபலவுமியம்பவுமிடருற்றிருந்திடுமூத்ததாதையினைத்
தனையனாகினைந்தோவருந்தினையெனமன் சாற்றிடவவனிவைமொழிவான்.

விறலுடைப்பவனன்மதலைவந்தனையவிளம்பியவெள்கலையறையா
னறனருள்சுதனையவனியிலமர்செய்தாருயிரிழந்திடுமென்றன்
சிறுவர்கட்கிவணின்பரிவுடனுதகக்கிரிகையான்செய்திடத்தனங்க
ளிறைவுறக்கொடுக்கினலனெனவிலக்கிகரிலானிவனென்றகன்றான். (௫௪)

அனுசர்கட்கிவையையறனருள்குமரனறைந்திடக்கேட்டிடும்வீமன்
சினமுறவிறந்தோர்தமக்கவர்பெறுஞ்செய்திலமையமளிக்குவதன்றித்
தனையர்கடமக்குப்பிதாவுடத்துவதுதருமமன்றெனக்குரித்தாகுங்
கனகமோடுடைமையுங்கொடேனெனப்பகர்ந்துகொடுத்தனன்கவினுறுதருமன்

அறனுருதருமன்பரிசனன்புதல்வன்றனக்கவன்சொம்மெலாமளித்து
நெறிநிறைந்திடுநால்வருக்குறுகனகங்கலன்களுநிறைத்திடமகிழ்ந்து
திரிதராட்டிரன்றன்சிறுவருக்கன்பாற்றிலமயமளித்தபின்பிண்டம்
நிறைவுறவுதவிமறையவர்க்கொருங்குநிதியெலாமீய்ந்தனனன்றே. (௫௬)

சிறுவர்கட்குதககிரிகைமந்திரத்தாற்செய்திடுந்திரிதராட்டிரன்பாற்
கூறையிடற்றரன்போற்கனன்றகான்மதலைகடுகிவந்துருமெனவதிர்த்து
மறமிலாத்தருமன்றனத்தையிவ்வினையால்வவ்வியேவறுமையைக்கொடுத்தி
யுறவுபோற்பகைதீர்குருடவுன்வயிறுவளர்த்திவணுறுதியோவென்றான்.

இனமுமுன்மொழியைப்பவனனற்குமரன்செப்பிடவுளைந்திடுமந்த
மனன்முனர்த்தருமன்வந்துநல்லுரையைவழங்கவுமவுனனாயிருக்க
நினைவுவேறாகியிடுறவறன்சேய்சிகரிலாவுனக்கியான்செய்தீ
வினையெதுவென்னச்சமீரணன்புதல்வன்விளம்பியவீதெலாம்விரித்தான்.

அறனறவியற்றுஞ்சுயோதனன்றனையான்பயந்திடுமதிகபாவத்தால்
விறனுறும்பவனன்சுதனிகழ்ச்சியினைவிளம்பிடத்தருமயான்வந்தி
னுறுவனென்றறைந்தங்குதிட்டிரன்றடுத்துப்பலபலவுரைக்கினுமிராது.
செறியுறும்விதுரன்றுயர்கொள்காந்தாரியவளொடுநகரைநீங்கினனால்.

கந்தமார்கடத்தினமலையில்லவன்முன்கடிதினினவரொடுமேக
மைந்தர்கடுத்தவிரக்கவுமருத்துமதியினின்ஞானம்வந்தெழநற்
குந்திதன்கொழுனன்றமையனைவணங்கிக்கூடவேசென்றிடநிகரி
லந்தணர்திலகமாயசஞ்சயனுமணுகினனவனொடுமன்பால். (௬௦)

திருமருண்டரங்கித்தந்தைதன்மூத்தோன்சார்ந்திடுவனத்திடைக்கரி
யிரணியமிலங்கவுயருமண்டபங்களெழிலுறுமாளிகைபலவும்
விரைவினிலமைக்கவதனிடையவருமேவியாண்டனேகநாளிருப்ப
வரசர்களுடனேயறனுதன்றினமுமவ்விடத்தடைந்துமிடனத்தின். (௫௧)

தவமுயல்பவர்களிரணியமிலங்குஞ்சரியின்மாளிகையினிற்சார்ந்
தனைவயுறுமெனவங்குதிட்டிரன்வருமுன்னுல்வருஞ்சஞ்சயனுடனும்,
பவமறவெவருமணுகுதற்கரியபழுவத்தினடைந்தமர்தினத்தி
லுவமையில்விதுரனிவர்களையொருவிப்பலமிருகங்களோடுறைந்தான்.

விரைவினிற்றருமனிவரமர்வனத்தின்மேவியாண்டிவர்களைக்காணான்
பருவறலுறவேபலவியோசனைகளந்தப்பழுவத்தினெய்தி
யரியமாதவஞ்செய்யரசனோடவரடியினிலிறைஞ்சியபின்னர்
சரியிலாவிதுரனிரலைமானினத்தோடுறைந்திடக்கண்டவண்சார்ந்தான்.

இரலையினினத்தோடமர்ந்திடுவிதுரன்றமையன்றனருள்கதனிறைஞ்சி
யுரைபலமொழியவதற்கவனெவையும்விளம்பிடாதோடலுந்தருமன்
றரையினிற்காலாற்றுடர்ந்திடவவனோர்தழைந்தபாதவத்தினிற்கோட்டை
யிருகையாற்பிடித்தான்பெரும்யோகத்தாலிமைப்பினிற்சீவனைக்கழித்தான்

உயரும்யோகத்தாலொழித்திடும்விதுரனுயிரேயொளியதாயெழுந்து
தயவுடைத்தருமன்றனுவிடைப்புகுசவிறந்தவன்றனைத்தழல்வளர்த்தி
யியல்புறுமுனிவர்க்கிவையுரைத்திடநீயிருவருமியமன்றனுருவாஞ்
செயலினன்மடிந்தோன்சீவனின்னிடத்திற்சேர்ந்ததென்றுரைத்தனரன்றே

தவர்களீதுரைப்பவவர்களையிறைஞ்சிச்சமன்சுதன்மூத்ததாதையினை
யவனியினயனம்புனனிறைந்திடவேவணங்கலுமவன்விடைகொடுப்ப
வுவமையினகரியடைந்துசெங்கோலையோச்சிமாமறையவர்மகிழப்
பவமறவறங்களுயர்ந்திடவியலும்படியினையாளுநாடன்னின். (௫௬)

கரியுறுவனத்திற்கண்ணிலாவரசன்காய்கனிகந்தமுமருந்திச்
சரியிலாமதியிற்றயங்குமக்கினியகோத்திரஞ்சந்ததநடத்து
முரனிலாமையினலாற்றுமசமாரோபணம்பணவுயர்ந்திடுந்தழலை
விரவினவ்வனத்தினிகரில்காந்தாரிவிடுப்பவவ்வழல்பரந்தெழுந்த. (௫௭)

எரிபரந்தகன்றவனத்திடைப்புலர்ந்தவிந்தனப்புல்லிடையெழுந்து
விரைவினிலவணைவளைந்திடவரசன்விளம்புவனுரனுறுமவர்க
டளாயினிவ்வழலின்மடிவதுபவமென்றுறைந்திடச்சஞ்சயன்கடிதி
வளையினெய்திடநற்குந்திகாந்தாரியுடன்மன்னன்றழலிடைமடிந்தான்

வனமுறுமெரியாலவர்மடிந்திடலுமாதவரவணிடையெய்தி
யனலிடையிறந்தோரத்தியையெடுத்தேயத்தினபுரத்தினிற்றருமன்
முனரடைந்ததனைவைத்திவையெவையுமொழிந்திடவனுசரோடரற்றிக்
கனலிடைமடிந்தவவரெலும்பதனைக்கங்கையினையுறவிடுத்தான்.

தீயினாலுயிர்போங்குந்திகாந்தாரிதிரிதராட்டிரனிவர்தமக்குத்
தூயனாந்தருமன்சார்ந்தியதனிற்றேய்ந்தயக்கிரிசைமந்திரத்தா
னேயம்வீறிடத்தானடத்தியங்கத்திப்பதியிடைநிவர்ந்திடுதினத்தி
லாயிரநயனன்சுதனெனும்விசையனளக்கர்சூழ்துவரையிற்சென்றான்.

துவரையினடைந்தவிசையனப்பதியைச்சூழ்ந்துசாகரமழித்திடலு
மவனியினரசர்மடிந்திடத்திருமாலழிவில்வைகுந்தத்தினெய்தத்
தவர்மகிழ்ந்திடமாமதுரையினிலங்கவச்சிரன்றனைமுடிகவித்துப்
பவமுறாதருமனடியினிறைஞ்சிப்பருவரலுடனிவைபகர்வான். (௬௧)

தரையினினெதுவின்குலத்துளார்முனிவர்சாபத்தின்மடிந்திடப்பரம
னிரதமீதிலங்கியெழில்கொள்வைகுந்தத்தெய்தினனென்றுபற்குணன்று
னுரைசெயத்தருமன்படியின்வீழ்ந்தரற்றிலோகநாயகன்றனைப்பிரிந்திவ்
வரசினைநற்றியமர்கிலேன்றவத்தினடைவனென்றமைந்திடும்வேலை. (௬௨)

விலையுறக்கொடுத்துக்கொளுமனையதனின்வீழுமியநிதியினைக்கண்டே
யிலகியமறையோன்றனக்குமுன்விற்றேன்றனையிதுகொள்கெனவவன்றான்
றலமுறுதனமுமெனக்குறுமெனவேதருமன்முன்னிருவருமெய்தி
நலனுறுமிவையைநவின்றிடவரசனவைவாதீர்ப்பனென்றறைந்தான். (௬௩)

அரசனீதுரைப்பவிருவருமகன்றங்
  கற்றைநாளொருவிடவுயருந்
தருமன்முன்னணுகிமனைகொளுமவனித்
  தனமெனக்கெனத்தலம்விற்றோ
னிருநிதியவனிற்கண்டெடுத்தமையா
  லெனக்கெனவியம்பிடக்கேட்டு
நிருபர்கோன்மிகவுநகைத்துமாதவரை
  நோக்கியேநிகழ்த்தலுற்றனனால். (௬௪)

என்னலித்தனத்தைச்சுமைபடுமோடு
  நிகரெனவிகழ்ந்தவரின்றென்
முன்னரினிதனைவிரும்பியேவழக்கு
  மொழிந்தனர்முறைமையைநடத்தி
யின்னலைக்கடிந்தான்யானுமிந்நிதியைக்
  கவர்ந்திடவிச்சையாயினனாற்
றுன்னுதீவினையையறுத்திடுந்தவத்தி
  னிவைதெரிந்திடச்சொலுமென்றான். (௬௫)

நலனுறுமரசனிவைநவின்றிடலுமற்றவரவன்றனைநோக்கிப்
புலனுறுகிருபதுவாபரயுகந்தான்போயறன்மெய்நெறியழிக்குங்
கலியடருகமின்றுகையிறுமேலகருத்திறைற்றன்மதியெவர்க்கு
நிலையுறவருமெனமனநெக்கியனுசரோடிவைநிகழ்த்தினனால். (௬௬)

உலகநாயகனுமெமக்கிடர்களைந்தவுத்தமன்வைகுந்தத்துற்றான்
கலியுகம்புகுந்ததினிநிலனாளுங்கருத்திலேன்கேடிலாத்திருமான்
மலரடியடையவநத்திடைப்போவனெனவவர்யாமும்வந்திடுவேம்
புலனுறுமரசவெனப்புகன்றிடலும்புரவலன்மகிழ்ந்தனனம்மா. (சுஎ)

தரையையாண்டிடவாண்டுயர்பரிச்சித்துசிரசின்மேற்சுடிகையைச்சாற்றி
யிருநிதியாவுமிருபிறப்பாளர்க்கீய்ந்துதன்னனுசர்களுடனும்
விரைவினிற்செல்லுநெறியினில்லாமலிராத்துதான்மேவிடும்படியே
யருமறைநெறியான்மகாபதவிரதஞ்சங்கற்பஞ்செய்தகன்றனரால். (சுஅ)

அனுசர்களுடனுமகாபதவிரதஞ்சங்கற்பமடைந்திருந்தருமன்
றனியகன்றுயருமிளைஞர்கள்சூழத்துரோபதியுடன்வநத்தேக
வினையறுமறலிதானுமோர்சுவானாய்விளங்கியவாலினைக்குழைத்தே
தனிநிகரிலாதநிருபர்களுடனேதரையிடத்தேகியதம்மா. (சுகூ)

தரையினிலளப்பில்வரைகளுநதியுந்தடாகமும்வாவியுங்காவுங்
கரியரியிரலையுழைமரைகரடியுமுழைவசாகாமிருகங்கள்
கிரியினங்கவரிவிடமுமிழரவுங்கிளர்ந்தெழும்பழுவங்களொருங்கு
விரைவினிகழ்ந்தமுனிவர்சாபத்தான்மெலிகுவாரிடரெலாந்தவிர்த்தார்.

அரியினைமநத்தின்வழுத்தியக்கெங்குமவனியினிராமனில்லாமல்
விரைவினினனேகந்தினமொருவிடவேமேவிடவிதிவழியதனா
லூரணநிலத்திற்றுரோபதிமடிந்தாளதற்பினரொளிகொள்சாதேவன்
றரையினிறந்தானதற்பினர்நகுலனுயிர்விட்டனஞ்செயன்மரித்தான்.

தூயபாஞ்சாலிசுசிகொள்சாதேவன்றுலங்கியநகுலன்மாவிசையன்
சீயமாம்புழைக்கைசித்திரகாயஞ்சேர்வனத்திறந்ததற்பினரின்
வாயுசேய்நிலத்தின்மடிந்திடத்தருமன்மநத்திடர்மலிந்திடக்கரத்த
னேயமோடெடுத்துவெரினிடைச்சுமந்துநெறியிடையிரங்கியேகினனால்.

ஆவிபோமனுசன்றனைச்சுமந்தேகுமறன்சுதனுக்கசரீரி
சீவனேகியவிவ்வுடலினிற்பயனென்செத்தபாதகங்கினைத்திடுமோ
காவலவெவையுமுணர்ந்தநீயிடைக்களைந்துமூவுலகமும்படைத்த
தேவனைச்சரணென்றடைதியிச்சவத்தைத்தெசியெனவிடுத்தவன்சென்றான்

அனுசர்நால்வருங்கற்புடையபாரியும்வீழ்ந்திறந்திடவறனருள்குமரன்
றனியனாய்ச்செலமாநகரினுந்தொடங்கித்தரணியிற்சென்றிடுஞ்சுணங்கன் [ந்து
பினரின்வால்குழைத்துத்தொடர்ந்திடவுலப்பில்பிறங்கல்சேர்வனமெலாமிகழ்
வினையறுதிருக்கேதாரமாந்தலத்தின்மேயினன்றருமருபவனே. (எச)

காவலன்றிருக்கேதாரமாந்தலத்தைக்கடந்திடுமுரணிலாதயரத்
தேவர்மாமுனிவர்திரண்டுவானதியின்செலத்துநீராடியொண்டருவின்
பூவின்மாமாரிபொழிந்தவணிலங்குவிமானமேற்போதுதியெனவே
யாவலினெனைவிட்டகல்கிலாச்சுணங்கன்றனைமுனரேற்றுமென்றுரைத்தான்

மனனிவைமொழியநகைத்துவானவர்களறைகுவார்தருமமெய்மலியத்
தினகரனெனப்பாருலகினின்வயங்கிச்சீதரன்பத்தனுகையினுல்
வினையறவிவணியடைந்திடவடையும்விமாநத்திற்சுடலையிற்புரண்டு
துனியுறுசுணங்கனனுறுமோவெனவத்தூயனுநிருபர்கோன்பகர்வான்.

அத்திமாநகரமுதலதாயெனைவிட்டொருவிலாதனுசர்களிறந்துஞ்
சுத்தமார்மனமோடிணைவையுந்துறந்துதுடருமிச்சுணங்கனேறுத
சித்திரமுறுமிவ்விமானயீதியானுஞ்செலேனெனநகைத்துயரிமையோர்
மெய்த்தவர்மகிழச்சுவானுருவொருவிவிளங்கியமறலியீதறைவான். (௭௭

நீதியும்பொறையுந்தருமமுமறிவுநிறைந்திடுமிவன்றனைநிகராய்ப்
பூதலந்தனின்வான்மிசையினினெவருமிலரொனவந்தகன்புகழ
மாதவர்துதிப்பவிமானமேற்றருமன்வயங்கியமறலிதன்பதத்திற்
போதலுஞ்சொற்கத்திபல்லையுநோக்கிநரகுளார்புலம்பவுங்கேட்டான். ௭௮

சரியிலாச்சுவர்க்கத்தனுசர்களுடனுஞ்சுயோதனன்றங்கிடநோக்கி
நிருபவொண்வீமன்விசையன்மாநகுலனிகரில்சாதேவனோடிவர்க
ணரகின்வீழ்ந்தரற்றுமொலியினைக்கேட்டிலனுறுநெறிகொளென்னனுசர்
நிரையம்வீழ்ந்திடவுநெறியிலாப்பகைஞருயரவுநீதியோவென்றான் (௭௯)

தருமமேமுயல்வார்நரகிடைவிழவுஞ்சற்குணமிலாதவர்சுவற்க
மருவவுமியற்றுமறனிலாவிவணின்வைகிலேனென மனன்றிரும்பித்
தரையிடையுறுவேனெனத்தவர்நகைத்துத்தருமநீயமர்க்களத்தன்று,[வார்
குருவதையுறவேயுரைத்திடுஞ்சடத்தின் கொடுமையினடைந்ததென் றறை

குருவதையுறவேதுராகதத்தாமாவதமெனக்கூறியசெடமா
முறையினிற்கொடுமையுறுதலானிகரிலுத்தமராகுமுன்னனுசர்
நிரையம்வீழ்ந்தரற்றுமொலிகள்கேட்பதுவுநெறியிலானுயர்சுவற்கத்தின்
மருவிடவிவணிற்காண்பதுமாயமனவினிநோக்குதியென்றார். (௮௧)

மருளறுமுனிவரிவைமொழிந்திடலுமறனிலாமனன்பினர்நோக்க
விரணியமிலங்காதனத்தினின்வீமனிந்திரன்சிறுவன்மாநகுலன்
சரியில்சாதேவன்வயங்கிடக்கவரிசாமரைத்தெய்வநாரியர்க
ளிருமருங்கினும்வந்தசைத்திடவுயருமெழிலினைக்கண்டுளமகிழ்ந்தான். ௮௨

தருமனங்கிளையவனுசர்கள்சுவர்க்கஞ்சார்ந்திடக்கண்டபினெறியி
லரவுயர்துவசனிளைஞர்கள்சகுனியடைந்திடுமாழ்ந்திடுங்கோர
நரகினினமுந்துங்கொடுமைகண்டிடுமுன்னயனிலாதவனுநற்குந்தி
திருமகன்வதனநோக்கவான்கிருமிசெறிந்தசீயிடைமுழுகினனால். (௮௩)

நிரையம்வீழ்ந்தழுந்துமறனிலாதவனைநெறியுளான்றயவுடனோக்கிப்
பருதிகாணிருள்போனிலத்திடையிபற்றும்பவமெலாமறவுயர்சுவர்க்கத்
தரகேதனமன்னிளைஞர்களுடனுண்டுயர்ந்திடவுண்மகிழ்ந்தருளுந்
தருமனல்லனுசர்துரோபதியுடனுஞ்சத்தியலோகத்தைச்சார்ந்தார். (௮௪)

சத்தியவிரதனிளைஞர்களிலைதன்னுடன் சத்தியலோகத்
துத்தமமுனிவரெதிர்கொளவடைந்தேயுயர்ந்தகாருண்யவைகுண்டத்
தத்தனுமுராரியடியினின் வணங்கியளப்பரும்பரமவானந்தச்
சித்தியுற்றிடவேதிசைமுகனுவப்பச்சிறந்தினிதிருந்தனனன்றே. (௮௫)

அறனுறுதருமனனுசர்களுடனுமழகியதரோபதிவரவே
பிறிதிணையிலாதமுகுந்தனைத்துதித்துப்பிறங்கியமகாபதவிரத
நெறியின்மாவிந்தமடைந்ததற்பினரினிகரிலாவபிமனற்சிறுவன்
முறைமையாலுலகமனைத்தையும்புரந்தான்முடிகதிரொளச்சிரமிலங்க. (௮௬)

உத்தரன்மகளைவதுவைசெய்தயருமுத்தரையருளியகுமரன்
சித்தசனெனவேவயங்கியசெனமேசெயன்முதனால்வரைப்பயந்து
சுத்தமாதவர்கடுதித்திடத்துரகமேதயாகத்தினைநடத்தி
யெத்திசைத்தலத்துமிலங்குமன்னவரைச்செயித்துலகெல்லாந்திரிந்தான்.

அரசரைத்திறைகொண்டுலகெலாந்திரிந்தவழகியவுத்தரைகுமரன்
றருமதேவதைநற்பசுவடிவாயோர்தாளினின்றிடவருகலிய
விருபர்வேடத்தைத்தரித்தொருகாலாலதனையுதைத்துநின்றுழிநின்
றரிதிருப்பதத்தாற்சனித்திடுநிலத்தாலவையினையறிந்தனனம்மா. (௮௮)

தலமிசையொருதாளினின்றும்பெற்றந்தருமதேவதையெனுஞ்செயலு
நிலமிசையதனையுதைத்துநின்றவன் முனெறியிலாக்கலியனென்பதுவு
நலனுறுமரசனறிந்துவெஞ்சினத்தானவையறவவன்றன்மேல்விசிகஞ்
சிலையினிற்றொடுப்பவெருவுவோன்றனைநீயஞ்சலையேகுதியென்றான். (௮௯)

வெருவியகலியனரசயானமருமிடமெதுவிளம்புகென்றறைய
நிருபர்கோன்யான்காத்திடுமியற்புவியைநீங்கிநீசுராபருகிடுவோர்
தரையினின்வலையர்சூதினைப்பொருவார்தையலார்தமனியமென்றீண்
டுரைசெயுமைந்தனிடத்தினினமர்தியெனவவனவணினுற்றனனால். (௯௰)

தருமதேவதையைத்தவமுயர்சவுசஞ்சத்தியந்தயையிவைநான்கென்
றுரைசெயுந்தாளாலியான்புரந்திடுமிவ்வுலகினிலமரெனவிதுதான்
மருவநீண்மரங்கள்மடிந்திடச்செங்கோல்வளர்ந்திடவுலகையாண்மன்னன்
மிருகயாத்திரையைவிரும்பிவெம்புரவிமேவியேதிரிந்தனன்மாதோ. (௯௧)

வளமுறப்புரவிவெரிநிடைவயங்கியருமவன்மத்தியானத்திற்
றினகரன்கிரணமுதிர்வுறவவணிற்சிறந்தவாச்சிரமாமுனிவையப்
புனல்பருகிடநீதருதியென்றிறைஞ்சிப்புகலவுமவுனமாயிருப்ப
வெனையிகழ்ந்தனனென்றவன்கழுத்திடையினிறந்திடுமரவினைப்பிணித்தான்

மாதவன்கழுத்தின்மரித்திடும்பணியைப்பிணித்துமன்னவனகரடையத்
தீதிலாமுனிவன்குமாரனுண்டெய்திச்சினந்திறந்திடுமரவினையென்
றாதைகந்தரத்தினிணைத்தவனேழுதினந்தனிற்றக்ககன்கடித்துப்
பூதலமிசையின்மடிகுவனெனவேசபித்தனன்பொறையெலாமகல. (௯௩)

பாவமற்றுயர்மகாபுராணந்தான்பகர்ந்
தோவியத்தெழிலினைப்படைத்தவுத்தமத்
தேவியைமகிழ்வொடுசேரத்தன்பதத்
தேவிடையவனயன்போற்றச்சேர்ந்தனன். (கக௨)

கோலமாயவனியைக்கொணர்ந்தபொற்கணன்
காலன்வாயுறவரன்கமலனேத்தமா
ஞாலமான்மகிழ்கதைநவின்றநாதனூர்
சீலமீதெனமுனிதிருவுக்கோதினன். (ககங)

வராகப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - அகஙு.

## கூ. வது—கபிலப்படலம்.

வாமமவிர்சித்திரைவைகாசியானிசகோமாற்றிகெண்ணைக்காடியாவணிக்குணின்றகஞ்சத், திமையன்மண்விழப்புரட்டாசிடற்பசிகபாலன்சிரந்துணியவேவாழியைவிடுநற்றேவன், சோமகுலவந்தகன்செய்முனர்நடுங்காத்திகைத்தாடுசிடைமாளாதருளுந்துளபமார்சமுயான், பூமன்வனிகைதக்காய்மாசில்சாபங்குனியப்போரினிற்றெசமுகனைச்செற்றனைப்போற்றிசெய்வாம். (க)

வேறு. அரிபெருங்கிரியாகியேயாடகயனன்
சிரமறுத்திடுசரிதையைச்செங்கமலத்தின்
மருவுநற்றிருக்கேட்டுளமகிழ்ந்துமால்பினரின்
றரையயற்றியதெதுவெனநாரதன்சாற்றும். (உ)

விரியுநான்மறையயனொடுமுதவியவிமலன்
கருடவாகனனுய்க்கருத்தமன்முனமெய்தி
வரமளித்தவன்சுதனெனக்கபிலனாய்வயங்குஞ்
சரிதையுத்தமிகேளெனத்தவனிவையறைவான் (ங)

திருத்தமுற்றிடச்சிருட்டிசெய்மலரயன்சேயாங்
கருத்தமப்பிரசாபதிகருடவாகனனு
மொருத்தனுக்குரித்தாயவெட்டெழுத்தைத்தனுளத்தி
னிருத்தியோகமாண்டியற்றினனெண்ணருங்காலம். (ச)

இருதையத்தினிலெட்டெழுத்தழுந்துறவிருத்தி
விரதசீலனுய்விலோசனநாசியினுதியின்
மருவவைம்பொறிமறித்துத்தன்னடியினங்குட்டந்
தரையினூற்றிடத்தழலினுப்பண்டவஞ்செய்தான். (ரு)

கருத்தினுள்கவுமரியதாங்கடுந்தவஞ்செய்யப்
பிருத்தியன்கருத்தமன்றன்மேற்பிரிதியுற்றவனுய்
விருத்தம்வானவர்செயக்கையினேமியுங்கோடுந்
தரித்துவந்தனன்கலுழன்மேற்றிருவுளர்தயங்க. (சு)

அலரிகாணவேயலரரவிந்தமாமலர்கண்
மலியுமைப்புயன்மிசையிளங்கதிரவிர்வயங்கும்
பொலனுறத்திகழ்கிரீடநற்சேகரம்பொருந்தக்
கலதிறைந்திடக்கண்கைவாயுந்திகாலிலக. (எ)

மகரகுண்டலமலேந்திடவளையிருதனுபோற்
புகல்வதற்கரிதாகியபுருவங்கடயங்க
நிகரிலாக்கவுத்துவமணியவிர்நிறைந்திடப்பொற்
றுகின்மருங்கினிலமருடைநாணொடுந்துலங்க. (அ)

இரவினன்னவிர்பரந்திடுங்கருங்கடலெனவெண்
டரளமாலைகள்கழுத்தினுமுரத்தினுந்தயங்க
விரைசெய்தார்துளபத்தொடுவிளங்குகஸ்தூரி
திருமுகத்தினுக்கழகுறநுதலிடைத்திகழ. (கூ)

தேவதுந்துமிமுழங்கிடச்சிறந்தகற்பகப்பூத்
தூவிவானவர்நடித்திடமுனிவர்கடுதிப்பப்
பூவுளோரொடும்புகரிபவிறைபுகழ்ந்தேத்த
நாவிஞன்மறைநவின்றிடநாரணன்வந்தான். (க0)

வாடுறுமலர்மங்கைதன்னுயகன்வரவு
மாடினன்வருமானந்தநயனநீர்சொரியப்
பாடினன்மறையிசையினிற்கருத்தமன்பணிந்தே
சூடினன்பகிரதியமர்பதத்தணிதுளபம். (கக)

இரவிகாணலரரவிந்தமலரெனவிணையி
லரியைநோக்கியகருத்தமனனம்வயங்கச்
சரிரரோமமும்பொடிப்பநாக்குழறிடத்தடக்கை
சிரமுறக்குவித்தாடியேசெப்பலுற்றனனால். (கஉ)

அண்டமெண்ணிலவகுத்தவைகாத்தளித்ததனு
ளண்டெனத்திரிந்துரோமத்தினுதியதிலுலப்பின்
முண்டகக்கடவுளருறைமுட்டைகளமர
வெண்டவத்தினர்துதித்திடவிலங்கிவீற்றிருப்பாய். (கங)

சிவகோடிகளனைத்தினுமுறைந்தவைசெலுத்தும்
பாவபுண்ணியம்பற்றிலாய்பங்கயன்முதலாந்
தேவர்தேடவுந்தெரிகிலாய்பத்தருக்கெளியாய்
பூவினின்னமர்திருவுரம்பொருந்தியபுநிதா. (கச)

மாதவாநமமலர்மகண்மருணனேநமவே
ஆதியேநமவவனிமின்னுயகநமவே
சோதியேநமசுந்தரப்பகீரதிதோயும்
பாதனேநமபரமனேநமவெனப்பணிந்தான். (கரு)

உளமுமென்பினேடுருகிடுங்கருத்தமன்றன்னைத்
துளவணிந்திடுசோதிதன்னிருகணுநோக்கி
யளிமலிந்திடமகிழ்ச்சியாலானந்தமுறவே
வளமுறும்மிளமுறுவல்வாய்மலர்ந்திவையறைவான். (௧௬)

சுத்தனுமெனைக்கருத்திடைத்துலங்கிடவமைத்த
பத்தனுகியகருத்தமபவமெலாமறுத்தே
மெய்த்தவஞ்செயும்வித்தகாவுனக்கியான்விளங்கும்
புத்திரன்னெனவருவனென்றிவையிவைபுகல்வான். (௧௭)

சுத்தனுகியசுவாயம்புமனுவருடோகை
தத்தைநாணுறச்சாற்றிடுந்தேவகூதையைத்தான்
வித்தகம்முறவேட்டவடன்னெடும்விளங்குஞ்
சித்தசன்னெனக்கலவியிற்சிறந்தினிதிருப்பாய். (௨௮)

தேவகூதையாந்தேவியைநீபுணர்ந்திடவே
தூவியோதிமநிகர்நவவனிதையர்துலங்கப்
பாவமில்லவள்பயந்தபின்பவவிருளகற்றும்
தீபமாகியசிறுவனுய்ச்சனிப்பனென்றகன்றுன். (௧௯)

மாயனேகியபின்னரின்மலர்மகணிகராந்
தூயளாகியமகளுடன்சுவாயம்பூமனுமன்
காயும்வெவ்வினைகடிந்தருள்கருத்தமன்றன்னை
வீயொடேயயந்தனிலருச்சித்திவைவிளம்பும். (௨0)

மாதவஞ்செயுங்கருத்தமயான்பெறுமகடான்
கோதில்கோகனகத்திருநிகர்த்திடுங்கொம்பு
பூதலந்தனில்விசும்பினிலிணையிலள்பொறைசா
னீதிவாய்மையளிவளெனச்சுட்டிநின்றறைவான். (௨௧)

உருவினுலுருவிலிமடலெடுத்துறுவிரகம்
பெருகவேமயங்கிடவயங்கிடுநலன்பெற்ற
தெரிவையாகியதேவகூதைத்திருத்தன்னைத்
தருகுவனுனக்கென்றுகைத்தாரைநீரளித்தான். (௨௨)

கதமிலாதுயர்சுவாயம்பூமனுமன்கன்னிகையைச்
சதுமறைப்பொருளுணர்ந்திடுகருத்தமன்றனக்கே
வுதவினேனெனவுதகங்கைவிடுதேதலுமுவந்து
சுதைநிகர்த்திடுந்தோகையைநெறி யின்வேட்டனனல். (௨௩)

இந்துவேணியைநிகர்த்திடுங்கருத்தமனில்லாள்
விந்துமாசரசிற்படிந்தெழவவண்விதிக்க
வந்தமின்னுடனத்தயத் தனேகமங்கையர்கள்
வந்துதோன்றலுமனைவிக்கூழியஞ்செயவருத்தான். (௨௪)

கருத்தமப்பிரசாபதிகாகமுமணியு
மருத்தியாகவேபொருத்தியவிமானமங்கெழத்தான்
றிருத்தமாகவேவகுத்ததிற்றேவகூதையினை
யிருத்திமற்றவளோடுமெண்டிசையெலாந்திரிந்தான். (௨௫)

கற்பகத்தருநிழலினுங்கவினுறுகுபேரன்
பொற்புறுந்திருநகரமாம்பொழிலினுங்கனக
வெற்பினுற்றுயர்நந்தனவனத்தினுமேவி
யற்புதத்தணங்கின்குயமுறாத்துறவணைத்தான். (௨௬)

மாரனோடவன்மனைவியும்வெள்கிடமருவி
னாரிதன்னொடுங்கருத்தமனலங்கிளர்கலவி
வாரிமூழ்கிடமற்றவள்வயிற்றிடைச்சனித்தா
ராருநேரிலாவரிவையரைந்துடனால்வர். (௨௭)

பாவைமார்நவப்பெயர்களைப்பயந்தழகாருந்
தேவகூதையாந்தெரிவைசாடரத்தினிற்சிறந்து
மூவராகியமுழுமுதன்முனிவர்கள்வலாரி
பூவின்மீதமர்புநிதனும்போற்றிடவமர்ந்தான். (௨௮)

உவமையற்றுயர்தேவகூதைத்திருவுதரத்
தவிர்நிறைந்திடுமச்சுதனமர்ந்திடுநாளி
னவையகற்றியகருத்தமனாரியைநோக்கித்
தவமியற்றிடுவேன்றளரேலெனச்சாற்றும். (௨௯)

மனைவிபுத்திரர்மித்திரர்வாழ்வினையெல்லாங்
கனவினுற்றிடுபொருளெனக்கடிதினிற்கெடுமா
றினகரன்புருடாயுவுநிறைந்திடத்திரிவ
னனகனேயலாற்சீவனுக்காந்துணையிலையால். (௩௦)

ஆதலாலினிதாயபோலடர்மனைவாழ்க்கை
கோதில்கோதையேகூறிடினநித்தியமாகு
மாதவன்றிருநாமமேமறுவிலாநெறியைத்
தீதகற்றியவவன்பதத்துறச்செலக்காட்டும். (௩௧)

காமமாகியவளக்கரைக்கடக்கிலாதமிழின்
றீமையாகியசனனத்தைச்சேர்த்திடுமதனால்
வாமமேகலைமடந்தைநீவருந்தலையென்று
பூமனன்சுதன்றவஞ்செயப்போவனென்றுரைத்தான். (௩௨)

கொழுநனிவ்வுரைகூறியேயகல்வனென்றறைய
வழுதகண்ணினளயர்ந்தவனடியின்வீழ்ந்தெழுந்தே
தொழுதகையினடுணைவநீயொருவிடிற்றுன்ப
மெழுமனத்தியாமெனக்கியார்களைகணென்றிசைத்தாள். (௩௩)

மனைவியிவ்வுரையியம்பியேவருந்திடக்கூடிய
வினையைவென்றிடுங்கருத்தமன்விளம்புவான்மாலுன்
றனையனாகவேசனிககவுன்சாடரத்தமைந்தான்
வனிதையேயுனக்கவன்கதிவழங்குவனென்றான். (௩௪)

சரியின்மாதவன்றனையனாச்சனிப்பனென்றியம்பி
யரிவைதன்னிருநயனநீரங்கையான்மாற்றிக்
கரியுறுங்கருங்கானிடைக்கருத்தமனேகப்
பிரமனெய்தியேதடுத்திவைபேசலுற்றனனால். (௩௫)

திருவினாதனுன்றேவிதன்னுதரத்தினமர்ந்தான்
சரியின்மாதவவுனக்கவன்கதியினைத்தருவ
னரிவைவெந்துயராறவேயவன்சனித்ததற்பின்
மருவுவாய்வனத்தென்றகன்றனன்மலருறைவான். (௩௬)

பிரமனவ்வுரைபேசியேயகன்றிடத்தவஞ்செய்
கருமநீங்கியகருத்தமனிலகுகன்னியரை
மரிசியேமுதலானவப்பெயர்கையின்வழங்கிச்
சுரர்துதித்திடத்துலங்கினன்மனைவிதன்னுடனே. (௩௭)

சுரர்கண்மாமலர்பொழிந்திடத்துந்துமிமுழங்கக்
கரியையூருவோனரன்கமலன்புகழ்ந்தேத்தத்
தெரிவையாகியதேவகூதைத்திருவுதரத்
தரியுருபமாங்கபிலன்வந்தவதரித்தனனால். (௩௮)

பாவகாரியர்பற்றறக்கபிலனைப்பயந்த
தேவகூதையுஞ்சிறந்திடுகருத்தமன்றானு
மாவலிற்பெறுஞ்சிறுவனையரியெனவறிந்தே
பூவின்மாரிகள்பொழிந்தடிபணிந்துபோற்றினரால். (௩௯)

மைந்தனாகியகபிலனைக்கருத்தமன்வணங்கி
யிந்தமாநிலத்திருவைப்போலியற்றிடுங்காமப்
புந்திமுற்றியபுன்மைபோயுன்பதம்புகவே
யெந்தமாதவமியற்றுவனியம்பெனவிசைத்தான். (௪௦)

தந்தையாகியகருத்தமன்சாற்றிடக்கபில
னெந்தமாதவமியற்றினுமென்பெயரறியா
மைந்தர்மண்ணிடைப்பிறவியின்மறுகுவரதனாற்
சிந்தையின்னெனைமறக்கலாத்தவஞ்செயென்றுரைத்தான் (௪௧)

சிறுவனாகியகபிலனுமிறையிவைசெப்ப
வறிஞனாகியகருத்தமனடவியினடைந்தம்
பொறியைவென்றுநற்புந்தியிற்றுவாதசாக்கரத்தா
னிறைவுறத்தவஞ்செய்தரிசீவர்பதத்துற்றான். (௪௨)

# ஸ்ரீமஹாபாகவதம்.

மதுணணைப்பிரிந்தழுங்கியசுவாயம்பூமகடா
னிகரிலாததன்சிறுவனைவணங்கியேநெறியார்
புகரிபுத்திடர்போக்கியபுனிதனேயென்ற
னகமுட்டர்க்கும்வெவ்வினையறவருளனவறைவான். (௪௩)

என்பூத்துறுமடியவர்கயவரையிகழ்வர்
துன்பமுற்றியமனைவியர்சுகத்தினைத்துறப்பர்
வன்பகற்றியநயவரோடிணங்குவர்வலாரி
யின்பமுற்றியபோகமுமென்றுநச்சிலரால். (௪௪)

சிரசினாலெனையிறைஞ்சியாராதனஞ்செய்வ
ரரிசரித்திரமாயவென்காதையையறிந்தே
யுரைசெய்தப்பொருளுணர்ந்துளமகிழ்வரென்னடியார்
திரளின்மற்றவர்பாதநீர்சென்னியிற்றரிப்பார். (௪௫)

சுத்தனாகியபத்தருக்குறுகுருதுணைவ
னத்தனன்னைமித்திரன்சுதன்சகோதரனாகி
யித்தலந்தனிற்பவக்கடல்கடக்கவிட்டிலங்கு
முத்தமப்பெயருறையுமென்பதத்தினுய்த்திடுவன். (௪௬)

விரைவினூற்றமுற்றிடுகெட்டந்தாழ்தரைமேவு
மருவுநீரினைவிலக்கியேயுயர்நிலமதனிற்
பரவுநந்தனவநத்தினிற்பாய்ந்திடவியற்றும்
விரகர்போலவும்விட்டெனையுறுவரென்னடியார். (௪௭)

ஆதனந்தனிலிருந்தடர்வாயுவையடக்கிச்
சூதுசெய்யுமிந்திரியங்கடோற்றிடலொடுக்கி
நீதிமல்கநாசியினுதிநயனத்தைநிறுவிக்
காதலாலெனையிருதயகமலத்திற்காண்பர். (௪௮)

இருதையந்தனிற்கமலமாமலர்மிசையிலங்கு
முருவனாகியவெனைத்தியானஞ்செயுமுபாயஞ்
சரியில்வாலனைச்சவுந்தரியத்துடனின்றே
யரவினிற்றுயின்றிருந்தபோற்காண்குவதறிவே. (௪௯)

கொடிதுரொட்டிசெந்தாமரையலர்மலர்குலிசம்
படருநற்குறியழகுறவிலங்கியபாதஞ்
சுடர்மலிந்திடுசோமரிற்றுலங்கியநகங்கள்
வடிவுடைத்திருவயங்கியதரமுறுசானு. (௫0)

உவணன்றோள்களுக்கழகெலாமளித்திடுமுருவங்
கவின்மலிந்திடுகனகநற்கலிங்கமார்மருங்கு
நவையகற்றியபிரமனுற்பவித்திடுநாபி
யுவமையற்றுயர்திருவினுளுவக்குமில்லுரமே. (௫௧)

# கபிலப்படலம்.

கவின்கவுத்துவமணியினுக்களித்திடுகண்ட
முவமையற்றுயர்மந்தரவரையுறக்கடையத்
தவர்மகிழ்ந்திடத்துலங்கியகடையமார்தடக்கை
யவிர்கொடுத்திடுகரங்களினமருமைம்படைகள். (௫௨)




அளிசிறந்திடுங்குஞ்சிநல்லளிசெறிநயனம்
வளைவின்மானவேல்வயங்கியபுருவங்கள்வெள்ளை
யிளவிளங்கதிரிரண்டுகொண்டெனவிருகுழைக
டளவலர்ந்தசெந்தாமரைநிகர்த்திடுவதனம். (௫௩)

இவையெலாமுறவிளங்கியவுருவமாரிறையை
யவிர்நிறைந்திடவிருதயகமலத்தினலர்மே
னவையகன்றிடஞானநந்தாவிளக்கெடுத்தே
தவமலிந்திடச்சபீசயோகத்தினாற்காண்பர். (௫௪)

இருதயத்துறுமலரமர்யானெனுமிறையை
மருவுவோருளமுருகுவர்மகிழுவரழுவர்
சிரமிசைக்கரஞ்சேர்ப்பர்மெய்யுரோமங்கள்பொடிப்ப
விருகணானந்தநீர்விழவெங்கணுநடிப்பர். (௫௫)

பேயர்போலவேதம்மெயைப்பேணலர்நகுவர்
தூயபத்தரைக்கண்டிடினிருகையாற்றொழுவ
ராயவன்புறுமடியர்களென்பதமதனிற்
றேயம்விஞ்சியவிரசையைக்கடந்தருளுவரால் (௫௬)

தாமதன்பரதிரவியம்பிறர்தையல்புணர்ச்சி
தீமையெல்லவுமலிந்திடச்செய்குவனுலப்பில்
காமமுற்றுவனிராசதன்சாத்திகன்கமல
மாமனுகுமெனுமந்தன்மனத்திடையமைப்பன். (௫௭)

அலரியானுலர்காட்டத்தினதிகமாங்கிளையோ
டிலையுறும்மரமதனினுமுயரியதெண்ணில்
பிலனையுற்றிடுபிராணவாயுத்தருக்கிருமிச்
சலமுளாழ்மனக்கீடமற்றதிற்சற்றுப்பெரிய. (௫௮)

அறிவுண்டாமனக்கிருமியினதிகமாம்பரிச
முறவுணர்ந்திடுமரவட்டையதனினுமுயரு
நிறையுநற்சுவைவலசலசரமதினிவரு
நறுமலர்ப்பரிமளத்தினைநுகர்வநல்லளியே. (௫௯)

அளியைவிஞ்சிடுமோசைகண்ணானுணரரவந்
தெளியவாயிருபக்கமுந்தசனங்கள்செறியும்
வெளிறில்சட்செவிக்குயர்ந்திடுமதற்குவீறிடுமாற்
கிளருநாலுகாலுளகரிகேசரிபலவும். (௬0)

அடிசதுர்த்தியாம்விலங்கினுக்கதிகமானிடர்கள்
படியின்விஞ்சியமனிதரினுயர்ந்தவர்பவங்கள்

கடியும்வேதியரவரினுங்கலந்தவர்கருத்தி
னெடியமாமறைநான்கையுநிகழ்த்துமந்தணரே. (௯௦)

மறையையோதுவார்தம்மினும்வயங்குவார்வேத
மறையுமப்பொருளுணர்ந்தவரவரினும்பெரியோர்
நெறியினப்பொருட்சந்தயமறநிகழ்த்திடுவோர்
மறுவினித்தியநியமமுற்றவரினுமுயர்ந்தோர். (௯௧)

நீதியாமனுட்டானங்கணிறைந்தவர்தமினும்
வாதைபோகவேகாமம்வையாநியமத்தோ
ரோதமற்றிடுமவரினுநியமங்களெல்லா
மாதியாமெனக்கேசமர்ப்பித்தவரதிகர். (௯௨)

நீதியாமனுட்டானங்கணிகழ்த்துமப்பலன்கள்
வேதவேள்வியினுறுபொருள்விழுமியதான
மீதுதான்முதலானவையென்னிடத்தளிக்குஞ்
சாதுவிற்பெரியோரிலைசகலலோகத்தும். (௯௩)

சகலதேவதைதமக்கியான்றலைவன்சத்தியமே
நிகரில்சாகரங்கரைகடவாததுநிவருங்
ககனமேகங்கள்சொரிவதுங்கடல்வடவைத்தீ
வெகுவிலாததுமென்னுடைவிஞ்ஞைதவராக்கினையே. (௯௪)

கலர்கடம்முயிர்கடுஞ்சமன்கவர்வனென்றெண்ணா
ரிலனிலெண்ணிலாவருடங்களிருப்பர்போனினைந்தே
வலனிற்புரந்தருங்கலன்களுமாழையுமெல்லா
நலனின்மன்னராற்றிருடராஞ்சமாய்மெலிவார். (௯௫)

ஈனமுயினும்யாக்கையையிழக்கச்சம்மதியான்
கானலாறெனக்கருதியேயுழலுவார்போல
மானநோக்கலான்வரைவிலாமகளிர்தோளணைந்தே
யானியேதரும்பவமுறவாசையைத்தவிரான். (௯௬)

பரதனங்களைக்கவர்ந்ததுபாவமென்றெண்ணு
விரதம்போலவெந்துரிதமேநிறைக்குமில்வாழ்க்கை
மருவமற்றதிறற்றிசையெங்கணும்வருந்தி
நரைமலிந்திடுமூப்புநோய்நணுகவேமெலிவன். (௯௭)

திரையுந்தோலலைத்திடவளைவில்லெனத்திகழ்வ
னுருவமாறியேயுடல்குனிந்திடநயனங்க
டெரிவிலாதுபற்பலகழன்றிடத்தெரிவையர்க
ளருவருப்புறவகன்றிடச்சிறுவர்குறசிப்பர். (௯௮)

சிறுவரோடிலாளிகழினுஞ்சிநேகமற்றவர்மே
னிறையவைத்தவருதாசனக்கூழ்நிறைத்திடினு
மறவுறுஞ்சுவாத்தின்பபோலருந்தியெவருந்
நெறியறத்தவழ்ந்துப்பொழுதுயிர்விடநினைப்பன். (௯௯)

மனைவிபுத்திரர்மித்திரர்வாய்திறந்தாற்ற
நினைவுமற்றவர்க்குரைநிகழ்த்தவுமரிதாய
வினைகள்சுற்றிடக்கோரசாதகருறவெருவி
மனநடுக்குறப்பிரசமாமலம்விடமரிப்பன். (எ0)

இருநிலத்திடைமரித்தவன்சூக்குமயாக்கை
விரவியாதனுசரீரத்தின்மேவிடவமைத்துப்
பரவுசாதகர்திருடரைப்பற்றுமாறெனவே
கரமிரண்டுறப்பாசத்தாற்கட்டியேகுவரால். (எக)

நெறியின்ஞாளிகணிறைந்துமெய்யெங்கணுங்கவ்வ
வறையுங்காலுடன்காட்டுத்தியாண்டுவெந்தடர்க்க
நிறையும்வெம்பசிநலிந்திடநீர்நிழனிலாது
மறுகுசாதகர்கசையடிவெரினுறமயங்கும். (எஉ)

தரையியற்றியபவமெலாநினைந்துளந்தளர்வ
னெரிபரப்பியவயமுறுமிலக்கயோசனையும்
பரவுசாதகரடியினுற்பயந்தழுதரற்றித்
தருமன்முன்னரினுறுநாழிகைதனிற்சார்வன். (எங)

நடுவன்வெங்கதமுறநவின்றிடுமொழிப்படியே
கொடியசாதகர்கொள்ளியாற்குரம்பைவெந்தரற்றச்
சுடுவர்கால்கரந்துண்டமாய்நறுக்குவரவன்றன்
குடர்பிடுங்கிடக்குறைத்தடர்ஞாளியைவிடுப்பர். (எச)

அசிகடித்திடவிரிச்சிகம்புச்சமிட்டறைய
வகிர்படுத்தவன்றசையினைவாளினுலரிந்து
மிகவரற்றுவான்வாயினிற்றிணித்துவெங்கதமார்
புகரிபக்குரமிதித்திடப்புடைத்திழுத்தெறிவர். (எரு)

வரையினுச்சியினேற்றியேமண்ணினூக்குவர்க
ளிரையுநீரினுளமிழ்த்துவர்வசியினேற்றிடுவ
ரரிவர்மெய்யினைச்செக்கினிட்டாட்டியேயரைப்ப
ரெரிபரந்திடுமழுவினைத்தழுவிடவடிப்பர். (எசு)

அதிகபாவங்களியற்றினோனவனியினந்த
மிதமுறும்பசகிர்ப்பந்தமேவியேபினருங்
கதமுறுங்கடுஞ்சாதகர்கரத்திழுப்புண்டே
யதன்மமேதுணையாகவெந்நிரையத்தினுழ்வர். (எஎ)

நிவுரவம்முதலாகியநிரையமேழ்மூன்றும்
பவமுறுந்துணையாகவேபடிந்ததுதுலைத்து
நவையுறும்மவன்செய்தகன்மங்கணண்ணிடவே
யவனியிற்பலயோனியின்வந்தவதரிக்கும். (எஅ)

புருடர்வாயினிற்சீவனீரனந்தனிற்புகுந்தே
யரிவையோனியின்மகிழ்ச்சியாலவன்புணர்ந்திடவே
பரவுசுக்கிலஞ்சோணிதத்துற்றிடப்பாய்ந்தே
யொருதினத்தினொன்றாகியேயுதரத்தினுறுமால் (௭௯)

ஐந்துநாளையிலயத்துறுகுமிழிபோலாகிச்
சந்தமாகியதசையதாய்த்தசதினத்துருண்டே
யந்தமாகியோர்திங்களிற்சிரங்கைகாலாகி
யுந்திமெய்செறியுரோமமுத்திங்களிலுறுமால். (௮0)

அத்திதோறசையரிவையாண்குறியுறவமரும்
முத்திரத்துடன்முப்பதுமாறுநாடன்னின்
சத்ததாதுக்கள்சதுர்த்தியாந்திங்களிற்சாரும்
பத்தினைந்துபோந்திங்களினுறும்பசிதாகம். (௮௧)

அன்னைதானுகரன்னசாரம்மவள்குடரின்
மன்னுநாபியின்கொடிநெறிசிசுவயிற்றிழிந்து
துன்னுமாப்பையினாறுமாதத்தினிற்சூழுங்
கன்மசென்மமேழ்திங்களிற்கருத்துறவறியும். (௮௨)

அலரியான்வருமட்டமாதந்தனிலுதர
மலமுடன்பிரசரத்தினுண்மாழ்கியேகிருமி
பலவும்வாய்கொடுகடித்திடப்பதைத்துமூர்ச்சிக்குந்
தலையினைக்கவிழ்ந்தேவெரின்கூனுறச்சாரும். (௮௩)

சரியிலன்னைவாய்தனினருந்திடவயிற்றுரு
மருசியுப்பினிற்சாரங்கள்வளைத்திடக்கரித்துத்
தெருமரல்லுறுங்கழிந்திடுஞ்செனனத்தினினைவு
வரமெலிந்திடுமுடலெலாநடுங்கவேமயங்கும். (௮௪)

மாதமொன்பதின்வருந்தியேயனேகசன்மத்தின்
மீதுறும்பலமனைத்தையுந்தெரிந்துடன்மெலிந்து
சூதிவாயுவந்தறைந்திடத்துளங்கியேநெளியு
மாதிநாரணாநமவெனவங்கைகூப்பிடுமால் (௮௫)

இருநிலந்தனிலெண்ணருஞ்சனனத்தினிளைக்க
வருபவங்கடான்மாய்ந்திடமாதவன்றன்னைப்
பிரமைசேருமுன்பேணியாராதனைசெய்து
நினையவேலையைநீந்துவனியானெனநினைக்கும். (௮௬)

ஐயிரண்டுதிங்களுநிறைந்தன்னைதன்னுதரப்
பைகிழிந்திடச்சூதியாம்பவனன்வந்தெழுந்தே
மெய்யொடானனங்கீழதாய்வீழ்ந்திடநூக்கக்
கைகுவித்தரிகருத்துறச்சனிக்கும்வேலையின்வாய். (௮௭)

அன்னையோனியினனந்தோன்றுவேலையின்வாய்
மன்னுமாயையாகியசடவாயுவந்தறையத்
துன்னுஞானமும்பறிபடச்சோதியைமறந்தே
யிந்நிலந்தனிலடுத்தடுத்திறங்கியேசனிக்கும். (௯)

விட்டையுற்றிடுகிருமிபோல்விபுலையினெளிந்தே
யிட்டமேயறியாதுதாய்வளர்த்திடவிரங்கித்
துட்டசெந்துமெய்கடிக்கவுந்துடைக்கவுமறியான்
கட்டமோடுதுர்க்கந்தமாம்படுக்கையிற்கிடப்பன். (௧0)

தரையினன்னைகைதனினமர்ந்திருந்துறத்தவழ
மருவியேநடையயின்றபின்மழலைச்சொற்கூறிப்
பருவமைந்துறப்படியினிலெய்துதற்கரிய
பொருளைநற்றியேபொலனுருமுருவனுய்வளர்வன். (௧௧)

கதமுமாசையுநிந்தையுங்கயவர்களுறைசொ
லிதமதாகவாங்காரமோடிவையெலாம்வளரப்
பதகனுகவேயியற்றிடும்பவமெலாமகற்றிச்
சதுமுகன்றனைத்தருமெனைச்சார்வதுகருமம். (௧௨)

அயனுந்தான்றரவெழுந்திடுமெரிவைதன்மீதின்
மயலெழுந்தனன்மற்றவன்சிருட்டியினமருங்
கயவரொங்ஙனம்விடுகுவர்கடியதீவினையின்
செயலதன்மனைச்சேருதன்மடந்தையர்கலவி. (௧௩)

ஆதலாலனைபுத்திரற்கேதுவாயமர்ந்த
மாதரார்களைவிரும்பியுமாத்திரமாகப்
பூதலந்தனிற்புன்மையர்சங்கமதகற்றிச்
சோதியாமெனைத்துணையெனப்பற்றுவதறிவே. (௧௪)

தரையினிற்செயுந்தருமபாவங்களினாலே
விரகினெய்யுநாடாவுழன்மெல்லியவிலைழபோ
லிரவிகாதலனகரினுமிவ்வுலகத்துந்
திரிவரொண்ணிலயோனிகடன்னிடைச்செனித்தே. (௧௫)

கிரகநீதியாங்கிரமஞ்செய்தறம்பொருள்காமம்
விரகின்முற்றுறத்தேவதைபிதுர்க்களைவிரும்பி
நிகரிலாவெனைநினைக்கிலானவாந்திரவயந்தான்
புகவழிந்திடுமிந்துவினுலகத்திற்போவன். (௧௬)

சரியிலாநலசாத்திகர்சங்கமுமேவி
விரியுநான்மறைமெய்ப்பொருளுணர்ந்துளம்விளக்கிப்
பரமனுமெனையருச்சிப்பர்பருதிமண்டலத்தை
யுருவியேயயனுலகமாந்தென்பதத்துறுவர். (௧௭)

# ஸ்ரீமஹாபாகவதம்.

ஆதலாலெனைப்பயந்திடுமன்னையானவளோ
தீதையாவையுமொருவிமெய்ஞ்ஞானமுட்டெளியச்
சோதியாமெனைத்துலங்குமுன்னிதையத்தினிறுவி
மாதவஞ்செய்துவருதியென்பதத்தெனவறைந்தான். (௯௮)

மைந்தனாகியகபிலமாயவனருள்செய்யச்
சிந்தைஞானமெய்ப்பொருடிகழ்தேவகூதைத்தேன்
கந்தமாமலர்க்கழலிடையருச்சித்துவணங்கி
விந்தைநாயகவினையறுத்தனையெனவிளம்பும். (௯௯)

பீடுலாவியபிரமகற்பப்பிரளையத்தின்
சேடசாயியாய்த்திருவொடுமனந்தவண்டங்கள்
வாடுறுமலருந்திசேர்வயிற்றிடையமைத்துச்
சூடுருக்கனகக்கலன்றுலங்கிடவமர்வாய். (௧௦௦)

தூயநான்முகன்முதலினோர்தமைத்தருசோதி
யாயநீயெனக்கறிஞனும்புதல்வனுயெழுந்த
மாயமென்கொலென்றறிகிலேன்மறையினைமயக்கு
நாயகாவெனத்துதித்தவள்பின்னருநவில்வாள். (௧௦௧)

சனகனுக்கெரித்திடுமருட்டோர்க்குணனெனினு
மனகநின்பெயரறைந்திடினவனுவகெவைக்கும்
புனிதன்மற்றவன்கிரிகையேபொறையுறுதவமு
மனலினெய்சொரிவேள்வியுந்தருமமுமாமால் (௧௦௨)

எந்தைநீயெனக்கின்புறுமதலைநீயயன்றன்
றந்தைநீமகத்தலைவனீதாமரைவயங்கும்
விந்தைநாயகவித்தகவிபுலையின்கொழுன
சுந்தராவெனத்துதித்தடிதொழுதிறைஞ்சினளால். (௧௦௩)

மாயனாகியகபிலமாயவனருட்படியே
தூயதாஞ்சரசுவதிமாநதியினிற்றுலங்கப்
பாயயத்தினிற்படிந்தியோகத்தினையியற்றிக்
காயநீக்கியேயரியமர்பதத்தினிற்கலந்தாள். (௧௦௪)

சுத்தையாகியதேவகூதைத்திருத்துயர்கூ
ரத்திமுன்வருபரமன்றன்பதத்திடையடைய
மெய்த்தவத்தினாற்கழித்திடுங்குரம்பைவீழ்தலமே
சித்தமாநதியாகியபெயருறச்சிறந்த. (௧௦௫)

கந்தமார்குழற்றேவகூதைக்குமெய்கழறுஞ்
சுந்தரஞ்செறிகருத்தமன்றனக்குமொண்சுதனாய்த்
தந்தைதாய்கதிபெறவருட்கபிலன்றன்சரிதை
விந்தைநீயுணரொன்றியாழ்முனிவிளம்பினனால். (௧௦௬)

கபிலப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் - ௯௧௯.

விரதகோன்பெண்ணில்செய்துவிளங்கியவேள்விமுற்றிச்
சரியின்மாதவமியற்றித்தானங்கள்பலசெய்தாலு
மிருமையார்சுவர்க்கத்தெய்திப்பின்னரும்பர்வீழ்வ
ரரிபெயருணரயுந்தொண்டரழிவிலாப்பதம்பெற்றுய்ய. (க)

வேறு. ஒள்ளியரெனமெய்யுறவுபோற்றிரிந்துள் வினையினுற்றலைவனைக்கெடு
க்குந், தெள்ளியகுணமில்செறுநரைப்போன்றுதினந்தழைவரைவிலாத
ருந்து, வெள்ளயமெனநல்லறிஞரையறியாததன்மமேவிளைத்துவெந்நர
கிற், றள்ளுமென்மனனேயிணையிலாமுகுந்தன்றாளினைவழுத்தியாமுய்ய.

வேறு. சரியிலெண்டேவகூதைசதுமுகன்றனையனோடு
மருவவேசிறுவனாகிவயங்கியகபிலன்காதை
விரிபுகழ்விதர்ப்பன்பெற்றமெல்லியல்கேட்டுப்பின்னுங்
கரியமாலியற்றுஞ்செய்கைகழறெனமுனிவன்கூறும். (ஙூ)

ஆயிரமுடிகண்டோள்கால்பெயரதாமாதியன்பாங்
தூயசின்மதலைக்காகியவுணர்கோனறைந்ததூணிற்
சீயமாயெழுந்துதோன்றியுகிரினாலறனிநீயோ
னேயவேபோழ்ந்தகாதையொப்பிலாய்கேளென்றேதும். (ச)

இருணியாயெழுந்தசோதியிரணியாக்கனைத்தான்கொல்ல
முரணுறுமசுரனனவிரணியன்முனிவினோடு
மருணயமிலாதகாலகேயருக்கரன்கிரிட்டன்
கருணையில்காழிநாபனிவரொடுங்கழறலுற்றான். (ரு)

கிரியுருவாகிவந்திங்கெம்பியைக்கிளர்ந்துசெற்ற
யரியினையானேகொல்வனமரரைவதைத்துநீங்கள்
விரிவுறுவேதமெல்லாமழியவேள்வியைச்சிதைத்துத்
தரையினின்முனிவரெல்லாந்தவஞ்செயாதியற்றுமென்றான். (சா)

இரணியன்மொழியைக்கேட்டாண்டிலகரன்கிரிட்டனேமிக்
கருணையினிசும்பன்சும்பன்சம்பரன்காலகேயர்
விரைவினிற்கரிதேர்குந்தமிருகவாகனத்திலேறிச்
சுரருலகத்தினெய்தித்தேவரைத்துரத்தினரால். (எ)

மாதவர்தவங்களெல்லாமழித்தவர்வைகுங்கானிற்
பாதவமெல்லாநூறிப்படியினின்மறையோர்செய்யு
மேதமற்றிலங்குவேள்வியெண்ணிலவழித்துநீதி
மோதித்துன்மரங்கள்வாழமுயற்சிசெய்தார்களன்றே. (அ)

இரணியன்றமர்களாலாண்டிமையவர்முனிவரெல்லாம்
விரைவினிற்கரந்துபாறவேள்விகளழியப்பொன்னின்
வரையெனவிருந்தான்றேயமறநவன்றேவியாவாள்
கருவயிற்றிடையிற்றோன்றக்களித்தவனிருக்குநாளின். (கூ)

எம்பியைக்கிரியாய்க்கொன்றவிருடிகேசனைக்கொல்ல
வம்பவிழ்மலரோன்றன்னால்வரங்கள்பெற்றிடுவனென்று
சம்பரன்முதலினோரைத்தன்பதிக்காகவைத்தே
உம்பர்கள்வெருவத்தீயோன்றவஞ்செயவொருப்பட்டானால். (க0)

வாயுவேயுணவதாகமாதுடன்பதினொன்றாகிப்
பாயுமிந்திரியமெல்லாமடக்கிவெம்பழுவந்தன்னிற்
றேயுவினுப்பணுகித்திசைமுகன்றன்னையுள்கி
நேயமாயனேகங்காலநிறைந்திடத்தவஞ்செய்தானால். (கக)

தாலமேலனேகங்காலந்தவஞ்செயுமிரணியன்றன்
றோலுடன்றசைகளெல்லாமழிந்துசெஞ்சோரியற்று
ஞாலமேலத்தியெய்தவதனினற்சிவனேங்கக்
கோலமாரயனைத்தானுட்கொண்டுமாதவஞ்செய்தானால். (கஉ)

திதிசுதன்குரம்பையோவியத்தியிற்சிவனெய்தச்
சதுமுகன்றன்னையுன்னித்தவஞ்செயுநாளிற்றேவர்
பதியிரணியன்றன்வைகும்பழுவத்தினெய்திச்செய்த
வதன்மமார்பாவத்தாலேயிவனுடலழிந்ததென்றார். (கங)

துன்னியபவத்தினாலேதுலங்குமெய்யழிந்துவீழ்ந்திங்
கொன்னலன்மடிந்தானென்றங்கும்பர்கோன்களிப்புக்கொண்டு
பொன்னின்வண்ணத்தான்வைகும்புரியிடைவிரைவினெய்த
பின்னெயிற்றவுணரெல்லாமிடைந்துவந்தெதிர்த்தாரன்றே. (கச)

சம்பரனமுசியேதிசகுனிசாந்தாபனுக்க
னும்பர்கணடுங்குங்காலகேயர்களுடன்வந்தார்த்துக்
கம்பினமுழக்கிக்கும்பிகந்துகமிருகமெல்லாம்
பம்பவைவேல்வாள்விட்டுப்பகழிகள்பொழிந்தாரன்றே. (கரு)

அவுணர்கண்முனிவினோடுமாயுதம்பலவும்விட்டுச்
சிவனெனமுனிந்துதாக்கத்தேவர்கடிரண்டுகூடிக்
கவனமாக்கரிகளெண்ணில்சகமிருகங்கள்மீதி
னிவர்சிலைவாளிதூவிநிறைந்தெங்குமெதிர்ந்தங்கார்த்தார். (கசா)

எரிசினத்துடனுந்தீயவவுணர்களெழுவும்வாளுஞ்
சரியில்வெம்படையும்விட்டுச்சாயகஞ்சொரிதலோடுஞ்
சுரர்கண்மெய்துளைக்கப்பீதிதொடர்ந்திடவோடலோடுங்
கரியினைவலாரியுந்திக்கடுங்கணைசொரிந்தானன்றே. (கஎ

இந்திரன்முனிவால்வெய்யகணைசொரிந்தெய்தலோடு
மந்தகன்றுவட்டாக்காமனலரிவெவ்விடையையூர்வோன்
சந்திரன்முதலாயுள்ளோர்தழலெழவிழித்துத்தாக்கிக்
கந்தரம்பொழிவபோலக்கடுஞ்சரஞ்சொரிந்தேயார்த்தார். (கஅ

# நாரசிங்கப்படலம்.

சுரர்பதிதமர்களோடுஞ்சூடுகணைசொரிந்தார்ப்பக்
கரிபரிரதம்வெய்யககமிருகங்களெல்லாம்
விரைவினின்மடிந்துவீழவினையுறுமசுரர்கைகா
லூரனையறலுமோடித்திசைதொறுமொளித்தாரன்றே. (௧௯)

உரனெலாமழிந்துதீயவசுரர்களோடலோடுஞ்
சுரரெழுந்தார்ப்பத்தெய்வதுந்துமிமுழங்கபேரி
லிரணியன்மனைவிதன்னையிந்திரன்பற்றியேகச்
சுரர்முனிதடுத்திந்நாரிதனைவிட்டேகென்றுசொன்னான். (௨0)

சுரர்முனியுரைப்பக்கேட்டுத்தும்பிவென்னுறுவோன்சொல்வா
னெரிசிறிதென்றுநூறுதிருந்திடிற்காட்டமெய்த
விரைவினின்றுலகமெல்லாம்வீக்குவபோலிந்நாரி
தரிகருச்சிறுவனாகிற்கருமமன்றென்றுசாற்றும். (௨௧)

இவள்வயிற்றுறையமாகுங்குமரனையிமைப்பிற்செற்று
நவையறவிடுத்துமிந்தநாரியையென்றுகூற
உவமையின்முனிவனேரிலும்பர்தம்மிறையைநோக்கிப்
பவமறுபுதல்வனாகப்பயக்குமிவ்வனிதையென்றான். (௨௨)

இரணியன்மனைவியானவிவள்வயிற்றுதிக்குஞ்செம்மல்
கருணையங்கடலாய்த்தூயகருடவாகனனுஞ்சோதி
தருணமார்பதங்கள்போற்றும்பரமபாகவதன்றான
மரணமக்காகியேநம்மிடரறுத்தருள்வனென்றான். (௨௩)

நாரதனிவைகள்கூறநலமிலாவிரணியன்றன்
பாரியைவிடுத்துத்தேவர்பதியும்வான்பதியிற்சேரச்
சீருறுமுனிவனந்தவனிதைதன்செவியினேரி
னாரணனீறிலாதபரனென்றுநவிலலுற்றான். (௨௪)

மலரயனுடனுமண்டமெண்ணிலவகுத்துக்காத்தங்
கிலையெனத்துடைத்துநின்றேயாவர்க்குங்காண்கிலானா
யலகிலாவிளையாட்டாடியன்பருக்கெளியனாகி
யிலகியாண்டவர்முன்னிற்குமிறையரியறிதியென்றான். (௨௫)

இறையரியென்றுகூறும்யாழ்முனிநீதானல்குஞ்
சிறுவனப்பரமன்றன்னைமறக்கிலானென்றுசெப்பி
நறுமலர்க்குழலியுன்றன்கணவனுஞ்சிறிதுநாளி
னுறுவனென்றுரைத்தங்கேகநாரிதன்பதியிலுற்றாள். (௨௬)

சுரர்முனிவிடுவித்தேகத்திதிசுதன்மனைவிதூய்தாம்
புரிதனில்வைகுநாளிற்புவியினினுடனீன்றான
விரணியனத்திதன்னிற்சீவனுற்றெண்கணோனைப்
பரிவுடனினைந்துரையப்பங்கயத்தவத்தோன்வந்தான். (௨௭)

அன்னவென்னுறுவோனெய்தியத்தியிற்சிவன்வைகத்
தன்னையங்குனிப்பல்லாண்டுதவஞ்செயுமவனைநோக்கி
யுன்னுடலெழில்சேர்ந்தொப்பிலோங்கல்போல்வளர்தியென்று
சொன்னநான்முகன்றன்முன்னிரணியன்றுயங்கிநின்றான். (உஅ)

தசையுறுதோலுங்கூடித்தமனியவரையினோங்கி
யசுரர்கோனெழுந்துதூயவயன்றனைவணங்கியேத்த
வசையிலாவயனீகேட்டவரமெலாந்தருவனென்றே
யுசனனல்லாசானுகவுயரவுணனுக்குச்சொன்னான். (உகூ)

மறைமலர்த்தவத்தோனிவ்வாறுரைத்திடத்திதிதன்மைந்தன்
சுரரிறையியக்கர்தேவர்நிருதர்களசுரர்தூய
வரியரன்றிக்கிலுள்ளோரயனெனுநீபூலோக
நரரினுநாரியாலுஞ்சாவிலாவரநல்கென்றான். (௩௦)

பின்னருங்கூறுவானீள்பிருதிவியப்புவாயு
வன்னியாகாயந்தன்னின்மடிகிலாதிரவியோடுந்
துன்னவக்கிரகத்தாலுந்தூயமாதவர்கணெஞ்சி
லுன்னியசாபத்தாலுமுயிர்விடாதருடியென்றான். (௩௧)

நிகரிலாநேமிசூலங்குலிசம்வேனீண்டபாண
மிகல்புரிவாளினோடுமெண்வருமாயுதத்தாற்
பகலிடையிரவினுள்ளிற்புறத்தினிற்பணியின்மற்றுங்
ககமிருகத்தினாலுங்கடிகிலாவரநல்கென்றான். (௩௨)

இரணியனிவைகளெல்லாமியம்பிடமுறுவலெய்தித்
தருணமார்கமலத்தோனுந்தந்தனனென்றுபின்னு
முரணுறுபடைகளெல்லாமருளித்தன்னுலகின்முந்த
வருணயமிலாததியோன்றமருடனடைந்தானன்றே. (௩௩)

சம்பரன்முதலினோர்கள்சலதிபோன்மிடைந்துசூழ
வம்பரத்திரதமீதினமர்ந்துபொன்னுலகத்தெய்தி
யும்பரோடதிதிமைந்தன்சசியொடுமொளித்துப்பாறக்
கம்பினைமுழக்கிவெய்யகணைசொரிந்தார்த்தானன்றே. (௩௪)

இந்திரனனலோன்காலனிருதிநீரிறைவன்வாயு
முந்தியகுபேரனீசன்முறிந்திடவடர்ந்தேயெட்டுத்
தந்திகள்பீதியோடுமிரிந்திடக்கரத்தாற்சாடி
இந்திரைகொழுனன்வைகும்பயோததியெய்திச்சொல்வான். (௩௫)

எம்பியைக்கொன்றகள்வாவெதிர்த்தியென்றறவேயார்த்துச்
செம்பொன்மால்வரையுநாணத்திரண்டதோர்கதைகைக்கொண்டு
வெம்பியேபயோததிக்கண்மிடைந்தெங்குங்கலக்கித்தேட
வம்பரனனந்தனோடுமவன்முன்றோன்றேனென்றுணரான். (௩௬)

மந்தரவரையுநாணுங்கதையினான்மறுவிலாப்பாற்
சிந்துவைக்கலக்கியெங்குந்திருவினாயகனைக்காணா
னிந்தனையுறத்தானேமிநேர்கிலாதொளித்தானென்று
புந்தியின்மகிழ்ச்சியாற்றன்றோளிடைப்புடைத்தேயார்த்தான். (௩௭)

செருவிடையெதிர்ந்திடாமற்சிறந்துநீதுயிலைமேவு
மரவொடுமொளிந்தகள்வாவுன்னையானண்டமுற்றும்
விரைவினிற்றேடிக்கொல்வன்குருதியால்விடைநேரொம்பிக்
குரியதாங்கிரிகையெல்லாமுதவுவனென்றங்கார்த்தான். (௩௮)

அரியினைக்காண்பானாகியமரர்கள்பதியெண்டிக்குஞ்
சரியில்பொற்கிரியோடெண்ணில்பிறங்கல்கடனினுந்தேடி
விரைவினிலரன்றன்வைகும்விலங்கலைநேடிவாசப்
புரைமலருறைவோன்வைகும்புரியினையடைந்தானன்றே. (௩௯)

விரைபுரைமலரோன்வைகும்பதியிடைமேவிக்காணான்
சரியில்காருணிகவைகுந்தத்திலுங்காண்கிலானா
லிரணியனண்டமுற்றுந்திரிந்தரியில்லையென்று
சுரரொடுமுலகமுட்கத்தோள்புடைத்தார்த்தானன்றே. (௪௦)

அரிதனக்கஞ்சிவானண்டத்திலாதகன்றானென்று
விரைவினிற்பதியின்மேவிவிடநிகரவுணர்சூழ
விரவியாயுலகமெங்குமிலங்கிநற்சோமனாகிச்
சரியிலாவிமானமீதிற்றயங்கியேதிரிந்தானன்றே. (௪௧)

அரவதாயவனிதன்னைப்பரித்துமப்பாரையாண்டு
சுரரிறையாகித்தேவர்துதிக்கவப்பதியின்வைகிக்
கரியதாய்க்கரியையேந்துங்கடலரசாகிவானா
யெரியதாய்வாயுவாகிவியமனுமாகுவானால். (௪௨)

கொண்டலாய்ப்பொழியுமோங்குங்குபேரனாயிலங்குநேரி
லெண்டவரியற்றும்வேள்வியவியெலாமினிதினுண்ணு
முண்டகன்பதியினெய்திமூவுலகுக்கும்விஞ்சு
மண்டர்நாயகன்றானென்றங்கவன்றுதித்திடவேவைகும். (௪௩)

பாரினோடுலகமெல்லாம்படைத்தளித்தழிப்போனாகி
மேருவினுச்சிதன்னின்வீற்றிருந்துயர்காலாலே
வாரியையுழக்குமண்டமுகடுறநிற்கும்வண்மை
யாரவேயிருக்கிற்சேடனயர்ந்துடனடுங்குமம்மா. (௪௪)

பிரணவத்துடனேயட்டாக்கரமெனும்பெருமையோங்கு
மரிபெயருடனுநக்கனஞ்செழுத்தினையுமாற்றி
யிரணியநமவென்றேத்தியிருடிகண்மறையோர்யாரும்
பொருணலமுறும்வேதங்கள்புகன்றிடுவார்கண்மாதோ. (௪௫)

வாயுவைநுகர்ந்தேயோங்கும்வரையிடைத்தழல்கள்சூழப்
பாயவேயோகஞ்செய்யும்பழுதிலாமுனிவரோனுந்
தூயவெட்டெழுத்தும்பஞ்சாக்கரத்தையுந்துரந்துசோதி
யாயவனிவன்றானென்றுண்டிரணியநமவென்பாரால். (௪௬)

மூவுலகுக்குந்தானேமுதல்வனாயவுணர்க்கெல்லாங்
காவலனாகிவாழுங்கடியனாமிரணியன்றன்
றேவிதன்வயிற்றிலோங்குகருப்பம்பல்காலஞ்சென்றே
யோவியத்தெழுதவொண்ணாவுருவுடைமகனைத்தந்தான். (௪௭)

அறன்மறைநீதியோங்கவமரரோடெவர்க்குமேலா
மிறையவன்றனக்குநல்லசகுனங்களெழுந்துதோன்ற
மறமுறுமசுரர்க்கெல்லாம்வாமங்கடிப்பவேதான்
பொறையுறுமவனிபோற்றப்புதல்வனுமுதையமானான். (௪௮)

குமரன்வந்துதித்தானென்றுண்டிரணியன்றனக்குக்கூற
வமரர்கடுதிப்பநீராடித்தன்கோயிலெய்திச்
சமர்செயுந்தடக்கைதன்னாற்றனையனையெடுத்துப்புல்லிக்
கமையிலாவொப்பில்லாதகலனெலாமணிந்தானன்றே. (௪௯)

சரிவளைதிமிலைபேரிமத்தளியிடக்கைதக்கை
முரசுகாகளங்கள்சின்னமுருமினுமுடுகியார்ப்பத்
தெரிவையர்வீதிதோறுஞ்சிறந்தசோபனங்கள்பாட
விரைகமழிளநீர்செய்பால்வீசினார்புரியினெங்கும். (௫0)

இரணியன்றனக்குத்தூயகுமரன்வந்துதித்தானென்று
தரணியிலவுணர்வீரர்நிருதருந்தாமுமாட
வருணலமிலாதார்மாளவரியன்பனடைந்தானென்று
கருணையால்விபுதரெல்லாங்களித்தெங்குநடித்தாரம்மா. (௫௧)

மூவுலகுக்குஞான முதிர்ந்திடக்கலைகணில்லாத்
தேவர்கண்மலினமெல்லாந்தீரநான்மறைகளோது
நாவலர்மகிழநாராயணவெனுநாமமோங்கப்
பாவமற்றிட்டத்தானேந்துபருவமாய்வளர்ந்தான்பாலன். (௫௨)

பெருமையாற்பிரகலாதனாகியபேருமாகிப்
பரமபாகவதனாவான்பருவமைந்தாகித்தோன்றக்
கருமைசேர்மநத்தனானவிரணியன்களித்துநோக்கி
யருமறைசிறுவனோதுங்காலம்வந்தடைந்ததென்றான். (௫௩)

எண்டவர்க்கதிபனாகியங்கியவுசனன்மைந்தர்
சண்டனோடியருமற்கன்றனையழைத்தென்றன்செம்மன்
முண்டகன்மகிழவேதமொழியவோதுவியுமென்றே
கண்டகனுரைப்பக்கேட்டுக்களித்தவர்தலைமேற்கொண்டார். (௫௪)

பறு. இறைவனாகியாண்டிலங்கியவிரணியன்பயந்த
சிறுவனோடியர்சண்டனுமற்கனுஞ்சென்று
மறையையோதிடுமிடத்தினின்மன்னியேயமர்ந்து
நிறையும்வேதத்தைநிகழ்த்திடமுயற்சிசெய்தனரால். (௫௫)

தூயதாகியமுகூர்த்தத்திற்சுருதியையறைய
நேயமோடியிரணியநமவெனநிகழ்த்தென்
றாயுமாமறையசுரராசான்மைந்தரறையத்
தீயகோலெனச்சிறுவன்றன்செவியிடைமடுத்த. (௫௬)

அந்தணாதிபரிரணியநமவெனவறைதி
மைந்தனேயெனுஞ்சொல்விடமாமெனமடிப்பச்
சிந்தைவெந்திருகரத்தினாற்செவியைப்பொத்தினனா
லந்தியாற்குவிநளினம்போலானனங்கருக. (௫௭)

அரிதிருப்பெயராகியஅட்டவக்கரத்தைப்
பிரணவம்முதலாகவன்புளமுறப்பேசிக்
கரதலங்குவித்திருகணீர்கலுழவொண்சிறுவன்
சரிரரோமங்கள்புளகிப்பத்தான்மகிழ்ந்திருந்தான். (௫௮)

சிறுவனெட்டெழுத்தினையுறச்செப்பிடலோடு
மறுவில்சண்டனுமற்கனுமுயிரறமலைந்தீண்
டிறுதிகாலம்வந்தடுத்ததாமின்றெமக்கென்னா
வறிஞனாகியபுதல்வனோடிதையறைந்தனரால். (௫௯)

மைந்தநீயுரைமாயவனண்டம்விட்டேக
விந்திரன்கமலாசனனிமையவர்பிறரும்
வந்துநித்தலும்வருந்தியிங்கேவல்செய்திடுவ
ருந்தையேயண்டங்காக்கின்றவொருவனாயுயர்ந்தான். (௬0)

ஆதலாலிறையரியலனுந்தையாமவன்பே
ரோதுவாயெனச்சண்டனுமற்கனுமுரைப்ப
நீதிமல்கிடவளர்ந்திடுஞ்சிறுவனேமயன்றன்
பாதமேசரணென்பதுசுருதியாற்பகர்வான். (௬௧)

இரவியேகிடவெழுந்தமின்மினியையென்றுவக்குச்
சரியெனுமொழியறிவிலர்போற்சதுர்வேத
முனைசெயாதியைவிடுத்துத்தண்டுலமிகழ்ந்துமியைப்
பருகுவாரொனவிரணியநமவெனப்பகர்வீர். (௬௨)

சுதையிகழ்ந்துவர்சுனையினைப்பருகுவார்போன்றும்
பதியையோவியேபரனையிச்சித்தவள்போன்று
மதிகவீடருளரிபெயரறிந்துயாதழிந்தன்
மதியினாலிரணியநமவெனுமுனைவகுப்பீர். (௬௩)

பழுவமெய்தியும்பருப்பதமெய்தியும்வெய்ய
தழல்வளைந்திடத்தவஞ்செயும்யோகியரொனினு
மழிவிலாதுயரரிபெயர்நினைக்கிலராயிற்
கொழுவுகோலுருக்கொடியெனச்சுவர்க்கமுற்றிழிவார். (௬௪)

மறுவிலாதுயர்மாதவன்பெயரையாதேனு
திறுதிகாலமின்றுமக்குவந்ததுவெனவிளம்பு
மறிவிலீரஃதறுமுமக்கரிபரனென்னு
முறுதியெண்ணிலாதிரணியநமவெனுமுறையால். (௬௫)

அன்னைதன்வயிற்றமருநாளரிபரனெனயான்
முன்னநான்மறைப்பொருளுணர்ந்தேன்மருண்மூடுகி
மன்னுஞானமின்மதியிலீரொன்னையிவ்விடத்தி
லென்னவோதுவிப்பீருமைக்கேட்பதேதென்றான். (௬௬)

பெருகுநீரெனப்பிரபைசெய்கானலைவிரும்பு
மிருகமாமெனவறிவிலீரும்முடன்மேவ
வருகனல்லனியானெனவுரைத்தவர்களையிகழ்ந்து
முருகுமல்கியதுளவணிமுகுந்தனைத்துதித்தான். (௬௭)

அரிதிருப்பெயரறைகுவான்றன்னருகிருந்தே
மருவியோதிடுமேதலையர்தங்களைநோக்கி
யிருளகற்றிடுங்குருவெனவிருந்திவணும்மை
நரகினுய்த்திடுவாருலாநம்பன்மினென்றான். (௬௮)

நிரையமெய்திடநேரிடுங்குருவினைநோக்கி
மருளொழிந்துயர்பத்தியின்வைகியான்சொல்லு
முறையைநம்புதிருமக்கியான்சுரர்முனிமொழியும்
சரியின்மாமறைப்பொருள்பகர்வேனெனச்சாற்றும். (௬௯)

தந்தையாகியவிரணியன்றவஞ்செயுநாளி
னிந்திரன்னெனைப்பயந்தவடன்னைக்கொண்டேக
முந்துநாரதமுனியென்றனன்னையைவிடுவித்
தந்தமாதவன்பகர்ந்தனன்கேண்மினென்றறைவான். (௭0)

அண்டரண்டங்களெண்ணிலதன்னிடையமர
முண்டகம்மெனுமுந்தியிலயனுமூவுலகு
மண்டியேயெழுந்திடவளித்ததுதனைவாயா
லுண்டுமிழ்ந்திடந்தளந்தவனொப்பிலாவொருவன். (௭௧)

ஏகமாகியபிரணவத்துள்ளிருப்பவனுஞ்
சாகரம்மெனத்தழைத்திடும்வேதசாத்திரத்தி
லோகையாருபநிடத்தினிலுயர்ந்தொளிர்பவனு
நாகமேலமர்ந்தேயருணாரணமூர்த்தி. (௭௨

உவரியாகியபிறப்பினையொழித்திடுபவனும்
பவர்கள்மாண்டிடப்பலவுருவாயெழுபவனுந்
தவர்களுக்குயர்தன்பதமளித்திடுபவனு
முவணமீதமர்வோனுயர்வைகுண்டத்தொருவன். (எங)

ஆதியேயரியவனலாலிறையிலையெனவாண்
டேதெலாமுனியென்னையீன்றிடுமெனக்கிதமா
யோதினனவளுதரத்திற்கருவினுள்ளிருந்தே
யாதரத்தொடுமோர்ந்தனன்யானெனவறைவான். ஈ)

மருணிறைந்திடுமுசனன்றன்மைந்தர்வாய்மையிரு
லிரணியநமவென்றிடும்பவங்கழித்திடநற்
கருணையங்கடலாகியபரனையுங்கருத்தி
னரணதாகிநீரடைந்துய்மினென்றிவையறைந்தான். (எரு)

அறிஞனிம்மொழிபகர்ந்திடவருவினையகலுஞ்
சிறுவர்சற்குருவிவனெனவிரணியன்செம்ம
லறையுமாபுவனட்டவக்கரத்தினைக்கருத்தி
னிறையவோதித்தாம்விகரிலாக்கதிபெறப்போனார். (எசு)

சிறுவர்சுக்கிரன்புதல்வர்சொலிகழ்ந்துசீதரனு
மிறையைநெஞ்சமைத்தேகலுமிரணியன்மதலை
நெறியிலாச்சண்டமற்கரிநீரிபெயரை
யறையுமிவ்வினையறவெனவவரஞ்சியகன்றார். (எஎ)

அரியெனும்பெயரசுரர்கோன்சுதனறைந்திடலும்
வெருவுநெஞ்சினர்மெய்குலைந்தோடியேவிரைவின்
வரையெனத்திகழ்மடங்கலாசனத்தின்வீற்றிருந்த
விரணியன்றனைவணங்கிநின்றிவையுரைத்தனரால். (எஅ)

மறையையோதவுன்மைந்தனுக்கியான்சொலும்பொருளை
யறைகிலானவனநீதியாம்பொருளினைமொழிந்தே
யிறைவவெம்மருங்கிருந்துவேதத்தினையியம்புஞ்
சிறுவர்நீங்கவெவ்வுரையினைச்செப்பினனென்றார். (எகூ)

உசனன்மைந்தர்களுரைத்திடுமொழியினைக்கேட்ட
வசுரர்கோனென்றன்சிறுவனீருரைத்தசொல்லகற்றி
விசனநீருறப்புன்மையாய்விளம்பிடும்பெயரை
யிசைகொளுவினீரியம்பிடுவீரெனவிசைத்தான். (அ0)

சீலமில்லவனுரைத்திடுமென்றவண்செப்பக்
கோலவந்தணர்குலைந்திருசெவிகளைப்பொத்தி
யாலமன்னசொல்யாமுனக்கறைந்திடிற்கடிதின்
றுலுவெந்திடுநிரயத்திற்சார்குவமென்றார். (அக)

உசனனைமைந்தர்களுரைக்கிலருளாநடுங்கிடலு
மசுரர்மன்னவனருகுநின்றூர்களைநோக்கி
வசையிலாதவென்மதலையைக்கொணருதிரெனலுங்
கசனிகர்த்தவர்மறையையோதிடங்கடிதுற்றூர். (அஉ)

அந்தணாளர்கள்சிறுவர்கள்கூடியாரணத்தின்
சந்தையோதிடஞ்சார்ந்தவர்பிரகலாதனைத்தா
னுந்தையுன்றனைக்கொணர்திரென்றுரைத்தனனெனலுந்
தந்தைபாதத்திற்சற்குணன்சேர்ந்தடிதாழ்ந்தான். (அங)

வந்துகைதொழுமதலையையிரணியன்மார்பிற்
சந்துடன்கலனழுந்துறத்தழுவிமாடிருத்தி
யந்தணாளர்கண்முனியநீயறைந்திடும்பெயரை
மைந்தனேயெனக்குரையெனமொழிந்தனன்மகிழ்வான். (அச)

தாதையிவ்வுரைபகர்ந்திடத்தனயன்கைகூப்பி
வேதமோதுதன்முன்னரின்விளம்பிடும்பெயரை
யோதினேனெனவவுணர்கோனுவப்பொடுமதனை
யீதெனுவெனக்கியம்புதிதெரியநீயென்றான். (அரு)

கண்டகன்னிவைகழறிடக்கடிதினிற்சிறுவ
னண்டமுற்றவுமமர்ந்தவனுயிரம்பெயரி
னெண்டவத்தினரளியுடனியம்புமெட்டெழுத்தை
முண்டகன்றுதிசெய்திடமொழிந்தனனன்றே. (அசு)

கரங்குவித்திருகண்ணினீர்படிமிசையுறநற்
சிரங்கைகால்விழிபெயர்களாயிரமுடைச்செல்வன்
குரங்கலோசனியாகியதிருமகள்கொழுந
னுரங்கொணாமமீதுணருதிநீயெனவுரைத்தான். (அஎ)

வேதமீனமிர்தாவதும்வேள்வியின்பொருளும்
போதன்முக்கணோன்புகல்வதும்யோகிகள்பொருந்த
வோதுநாமமுமும்பரினிம்பரினுயிர்செய்
யேதம்வேரறவெழுவதுமிணையிலெட்டெழுத்தே. (அஅ)

சனனமாகியசலதியைநீந்திடநாவா
யெனவெழுந்தகலிம்பரினும்பரினெவரும்
வினைகடிந்துநற்பதத்தினைமேவவேயருளு
மனகனாமமிவ்வெட்டெழுத்தேயெனவறைந்தான். (அகூ)

உட்டெளிந்துவஞ்சகமறவொப்பிலாமதலை
யெட்டெழுத்தினையறைந்திடவிரணியன்முனிந்தே
அட்டதிக்குறுங்கரியுடனமரர்கள்வெருவத்
தட்டமீவல்லதாமமேற்றழலுறநகைத்தான். (கூ0)

விழியுகாந்தத்தினழலினையுலகெலாம்விரிப்ப
வழலுநெஞ்சினனழகியபுதல்வனை நோக்கிப்
பழயவொன்னலன்பெயரினைப்படியினின்வானி
னிழிவையெய்திடவழிபவர்யாருனக்குரைத்தார். (௯௧)

அரனயன்முதலிருடிகளமரரிப்பெயரை
யுரைசெயாரவரஞ்சுவரொளித்துனக்கின்று
வெருவலாதிந்தமொழியினைவிளம்பினராரென்
றெரியுநெஞ்சினன்பின்னருமிவைபகர்ந்தனனால். (௯௨)

வரையினெண்வடகிரிசிகரமென்னவயங்கித்
திரியுமெம்பியைச்சினத்துடனிமைப்பின்முன்னுயரு
மிருணியாய்வதைசெய்தவன்பெயரியம்பிடவோ
பரிவினாலுனைப்பயந்தனன்யானெனப்பகர்வான். (௯௩)

இரைபயோததிகலக்கினானிமையவருலகின்
வரையின்வாரியின்மலரயனுலகினுந்தேட
வெருவிநேர்பொரும்விறலிலாதண்டம்விட்டேகு
முரணிலான்பெயருறுதியென்றுருனக்குரைத்தார். (௯௪)

மாதவந்தனாலுலகெலாம்வகுத்தளித்தழிக்கு
மாதியாகியேமகத்தவியடங்கலுநுகர்வேன்
சோதியென்றுநீசொல்லரிபெயரினையொழிந்தென்
பாதமர்ச்சனைசெய்குவார்பங்கயன்முதலோர். (௯௫)

புண்டரீகனும்புராரியும்புரந்தரன்றானு
மெண்டவத்தரோடருச்சித்துச்செவிப்பரொன்பெயரை
விண்டலத்துளோர்புவியுளோர்விளம்புவதரிதோ
வண்டகோளகைக்கப்புறத்தனைவருமறைவார். (௯௬)

வேள்வியின்னவிவிலக்கியங்கவன்றனெட்டெழுத்து
மேழிரண்டெனும்பொழிலினினிலையெனவடர்ந்தே
னேழைநீசொலுமிறையவனெவ்வலிகொண்டு
வாழுவானெனமற்றவன்பெயரினையறைந்தாய். (௯௭)

உலகநாயகனாகியேயொளிருமென்பெயரை
மலரயன்முதன்முனிவர்களிசழ்ந்திடின்மடிவர்
நலனிலாதவிவ்வுரையினைநவின்றுநீபிழைத்தாய்
சலமிலாதியான்பொறுத்திடத்தனையனாகையினால். (௯௮)

மழலைநீங்கலாமதலைநீயாதலினிந்தப்
பிழைபொறுத்தனனினியொன்றும்பேசிலைமறையோர்
விழைவினாலறைமறையினைவிளம்புபோதியென்
றிழையினாலொளிரிரணியனியம்பினனன்றே. (௯௯)

தந்தையம்மொழிபுகன்றிடச்சரியிலாப்புதல்வ
னந்தகாந்தகனஞ்சமவ்வவுணனையிறைஞ்சிக்
கந்தநாண்மலர்க்கடவுளுங்காண்கிலாதயரும்
விந்தைநாயகன்செயலினைக்கேளெனவிளம்பும். (க00)

காந்தைசூடியுங்காலனும்வெருவமுன்றனக்கு
வரந்தருந்தவன்றானுமாய்வானுயரண்டம்
பரந்துமேவியவுயிர்தொறுநிறைந்தொளிர்பரமன்
காந்தனன்னுனக்கென்றனையவன்செயல்காணுய். (க0க)

வேதநான்கினும்விளங்கியசாங்கியந்தனினும்
போதநீறணிபுராரிமாதவர்கருத்தினினு
மூதையேயுணவாருவோருணர்வினுமெட்டா
வாதியோவுனக்கஞ்சியேகாந்தனனையா. (க0உ)

வாயினால்கொடேயுலூதையோர்வட்டமாய்வளைந்தாண
டாயதெல்லவுமருந்திபேர்தன்மைபோலுயரு
மாயனெண்ணிலவண்டமோரிமைப்பினின்வகுத்துக்
காயுமாலதுதன்னுளேகாந்திடவம்மா. (க0ங)

அண்டநீங்கிமால்காந்தனனென்றிவணறைந்தாய்
முண்டகக்கணிமைப்பினின்முடிவிலாதண்ட
முண்டெனக்கடிதியற்றித்தன்னுரோமத்தினுனியின்
மண்டவேயவைதன்வயின்வாழ்பவன்காண்டி. (க0ச

அரிநுகர்ந்திடாதுயர்மகத்தவியெலாமடங்கப்
பருகினேனெனப்பகர்ந்தனையுன்னுடலுயிரின்
மருவிநிற்பவன்மாதவனென்றறிகில்லாய்
விரைவித்தாமலேவினையுமென்றுணருணர்விலியே. (க0டு

வேதமோதுவார்போலவேவிரோதமாம்பொருளை
யோதிநாரணனுலகெலாநிறைந்திடுமொளியைப்
பேதையாயினோரறிகிலார்மருளுறப்பிதற்றி
யேதமாநரகெய்துவரெந்தைநீயுணர்தி (க0௬

மறையுனுச்சியிற்சித்தெனுந்தத்துவமருளா
தறியும்யோகிகளரியினையறிந்தவீடுறுவர்
பிறிதொன்றாகவாண்டறிவறப்பொய்மையைப்பிதற்றி
யுறுவர்வெந்நிரையந்தனுளெந்தைநீயுணர்தி. (க0

மாயன்மாயையின்மலரயன்முதலினோர்மயங்கி
நாயகன்னெனத்தம்மைத்தான்மெய்மையாய்நாட்டி
யோய்வுகாலம்வந்துறுபொழுதவன்றனையுள்கி
ஆயிரம்பெயரறைந்துய்வரறிதிநீயெந்தாய். (க0

சாங்கியத்தினும்யோகமார்பொருளினுந்தானே
யோங்குமாயனையுணர்குவரவரறிந்துய்வர்
பாங்கிலாப்பொருள்பற்றியங்குய்குவார்போன்று
தாங்கிலாதெழுசனனமாஞ்சலதியிற்றாழ்வார். (க0க)

முக்குணங்களுமூவுலகமுமெனமுளைத்துச்
சற்குணங்களாய்த்தழைப்பவர்தமக்குவீடருளுந்
துற்குணங்களாமவர்களைப்பகைஞராய்த்துணிக்குஞ்
சிற்குணத்தரிசெயலினையார்கொலோதெரிப்பார். (கக0)

வேறு. அரியினைநினைந்திடாதருளுந்தானங்கள்
விரைவினிற்செய்பலவேள்விமாதவர்
தரையினிற்பெருகிடுஞ்சலமில்வித்தென
விரைவினிட்பலமாகிவீடுமால். (ககக)

மனதினிலரியினைவைத்துநன்குடன்
றினையளவாகினுஞ்செய்ததானங்க
ளனலுறுவேள்விகளனந்தமாகியே
தினம்வளர்செய்கையைவேதஞ்செப்புமால். (ககஉ)

இந்திரியங்களினியங்கிவேதமார்
மந்திரங்களின்மிகவயங்கிக்காட்டியே
நந்தலுமநந்தலுநல்குந்தீயர்க்கும்
வந்திடரகற்றுவானவனென்மாதவன். (ககங)

பாலுறுதுப்பெனப்பரந்தெவ்வண்டமுஞ்
சீலமார்ஞானங்கள்தெரிந்துளோர்க்கெலாங்
கோலமாரொளியனுய்த்தோன்றிக்கோதுறு
மாலமேசிகர்த்தவர்க்கரியனுகுவான். (ககச)

அராவணைத்துயின்றிடுமமலனாகிவெங்
கராவினைவதைத்துயர்கரியைக்காத்தருள்
பராபரவஸ்துவுன்பாதங்கண்டுய்ய
நிராசையுற்றவர்க்கலானினைக்கற்பாலதோ. (ககரு)

சகமிசைச்சிவதாபரசங்கத்தினுக்
ககமதாய்ப்புறமதாயவையினல்லனு
யுகமெணில்காலங்களிமைப்பிறேயக்கஞ்
சுகியுறுவாரியிற்றுயில்கொளும்பரன். (ககசா)

கரந்தவன்போலவேகாணும்வான்புவி
பரந்துளன்போலவேபற்றிற்றேன்றிலா
வரந்தருமுதல்வன்றன்மாயவாரியிற்
பொருந்தினரலதியார்பொழிலேநீந்தினார். (ககஎ)

மாதவவரத்தினல்வல்லுற்றேயண்ட
நாதனுயினனெனநவின்றுளாயுலர்
பாதவம்வடவையாற்பரந்தெரிந்தபோ
லாதியையெள்கினுரழிவர்காண்டியால். (ககஅ)

மயர்வறவுயர்ந்திடுமாதவன்றனை
யியல்பலவெள்குகியென்றுமாய்கிலா
உயிர்நலச்செல்வம்விட்டுலர்தியென்றியான்
செயலுறுமரிபெயர்செப்பினேனென்முன். (ககக)

வேறு. சிறுவனெதிர்நின்றிவைகள்செப்பிடமுனிந்தே
யிறுதியுகமெய்தவருமீசனெனவாயா
லுறுபுகையெழக்கணுமிலங்கியுலகெல்லா
மறுகவிடியஞ்சிடநெருப்பெழநகைத்தான். (கஉ௦)

திக்கயமிரிந்தொளிகொள்தேவர்திரளஞ்ச
நக்கனுடனேயயனடுங்கவுலகெல்லா
முட்கிடவரந்தன்மெய்யுலைந்துடலிரத்தங்
கக்கவசுரன்பிரகலாதனைமுனிந்தே. (கஉக)

என்வயினுதித்தவிவனெம்பியைவதைத்த
வொன்னலனையேத்தினனிவன்றனையுரத்தாற்
கொன்மினெனவெய்யவர்கள்கூடிமெய்கயிற்றாற்
பின்னினர்கள்வெல்கதைபிறங்கயிலெறிந்தார். (கஉஉ)

எய்தனர்கள்வாளிமழையெங்கணுநெருக்கிக்
கொய்திடுமினென்றவர்கள்கூர்மழுவெறிந்தார்
வைதனர்களெண்ணில்படைமாவடவைபோலப்
பெய்தனர்கள்பூமனுெடுபிஞ்ஞகனுமஞ்ச. (கஉ௩)

எறிந்தபடையெய்தகணையெற்றுக்தையாவு
முறிந்தனவலாதகுமரன்மெயினின்மொய்த்தே
யறந்தருமனத்தரியைநெஞ்சிடையமைக்கச்
சொறிந்ததிறனுஞ்செய்கிலதீயர்திரடுன்னி. (கஉ௪)

மன்னனருகெய்தியெதிரின்மறவரொல்லா
மின்னிலகுமாரன்மெயினெய்தலருமொத்தே
துன்னுபடையாவையுமுறிந்தசெய்திசொல்ல
வன்னியிடையுய்த்துவதைசெய்மினென்றுரைத்தான். (கஉ௫)

சிகரில்கனகன்னிவைநிகழ்த்திடவும்வீரர்
ககனமுகடுற்றிடவெழுங்கனல்வளர்த்தே
யிகழ்விலகுமாரனையெடுத்ததின்விடுப்ப
மிகவுமெய்குலைந்தலறினர்விபுதரொல்லாம். (கஉ௬)

தீயர்விடுதீயினிலமிழ்ந்துசிறுவன்முன்
மாயவனைநெஞ்சினிடைவைக்கநளிர்சீத
மாயுடலிலங்கவதுகண்டுமறவோர்க
ளேயெனுமுன்மன்னனிடையெய்தியிவைசொன்னார். (கஉஎ)

அன்னவருரைக்கவனலாகுமசுரேசன்
வன்னிதனைவன்சிறையின்வையுமெனவோதி
மின்னெயிலெயிற்றினவன்மேனிகவ்விமாய்க்கப்
பன்னகம்விடுந்திடுமினென்றுரைபகர்ந்தான். (கஉஅ)

வேறு. மனந்தழலுறவந்திரணியனுரைப்பமறவர்கடுன்னியேகூவ
வனந்தன்வாசுகிகார்க்கோடகன்குளிகனடர்மகாபதுமன்வேற்பதுமன்
கனந்தருசங்கபாலன்றக்கன்முனிவொண்மர்கடிதினினெய்திச்
சனந்தனைநிகர்க்குமதலையைக்கடித்தார்தம்விடவெயிற்றினாற்கவ்வி. (கஉக)

ககபதிநடுங்கக்கண்மிசைப்பிறைகணுழைந்தெனக்கடித்திடவிடங்க
ளுகவலுசிதையாவெயிறுகளெல்லாமொடிந்துக்குவிழுந்திடவரியை
நிகரிலாக்குமரனினைந்தெழிலிலகநின்றிடக்கண்டுமசுரர்
புகல்வதற்கரியவலனுடைமனனுக்கிவையெலாம்புகன்றனரன்றே. (கங0)

அரவினங்கூடிக்கடித்திடவிடங்களமிர்தமாயெயிறுகளொடிந்து
தரையினில்விழுந்ததகைமையைக்கேட்டுத்தயையிலாவிரணியன்முனிந்தெண்
கரியினந்தனைநீர்விடுத்திடுங்கொம்பாலவனுயிர்களைந்திடுமெனலும்
வரையெனவுயருமறவர்கள்மிடைந்துமாதிரத்தோல்களையழைத்தார். (கஙக)

வஞ்சனையவுணரழைத்திடநடுங்கிமாதிரந்தாங்கிடுங்கரிக
ளஞ்சனங்குமுதம்வாமனமயிராபதங்கரற்றபுண்டரீகம்
விஞ்சியகிரிநேர்புட்பதந்தம்மெய்விளங்கியசுப்பிரதீப
மஞ்சவேயடருஞ்சார்வபூமமிவையெட்டுமெண்வரையெனவந்த. (கஙஉ)

மும்மதந்தியாய்முடுகிடவரைபோன்முந்தியதந்திகள்முனரின்
செம்மலைக்கயிற்றாற்பிடித்திடுந்தியர்திரண்டுபாரிடையினின்வைப்ப
மெய்ம்மைசால்குமரன்கரிகளைநோக்கியிடங்கரால்மெலியுறுங்குலத்தின்
கைம்மலையழைப்பக்கடிதின்வந்துதவுங்கடவுளென்மனத்தினனென்றான்.

நிகரிலாக்குமரனிவைநிகழ்த்திடலுநெடுவரைபோலவந்தெதிர்ந்த
புகரிபவினங்கள்வெருவிமாதவஞ்செய்புதல்வனைவணங்கியகிடலும்
நகமெனவிளங்குமவுணர்களிவையையிரணியன்றனக்குநவில
மிகமுனிந்தெனக்குவென்னிடுமரியைவிரும்பிபங்களைக்கொலுமென்றான்.

சிந்தையிற்கனன்றங்கிரணியனுரைப்பத்திறலுடையசுரர்கள்சென்றே
யந்தகனெனவெண்கரிகளைவதைக்கவடார்தலுமவைமிகவஞ்சி
மைந்தனையணுகித்தழுத்தினநிகர்த்துவயங்கிடுமருப்பினாற்குத்தி
முந்தியவலரிவெயிலினுலர்ந்தகிடையெனக்கோடெலாமுறிந்த. (கஙரு)

திசையுறுகரிகளுரனொடுகுத்தித்திரண்டிடுகோடுகள்முறிந்த
வசுரனுக்கவர்களுரைப்பநெஞ்சழன்றேயளப்பிலாதுயர்ந்தகோபுரத்தின்
மிசையினிலவனையுயர்த்திநீர்கீழின்விழுத்திடுமெடியவென்றறையச்
சுசியுறுநயனர்மதலையையெடுத்துத்துய்யமாசிகரத்தினுற்றார். (கஙசு

யோசனையெழுநூறுயர்ந்திடுசிகரத்துச்சியின்குவடிடைவிளம்பி
யாசகல்புதல்வன்றனையெறிந்திடலுமவனிமாதனந்தமாங்கரங்கள்
மாசறுகடையம்வயங்கிடவேந்திவைத்திடவிழுமியமதலை
யீசனெட்டெழுத்தையியம்பியாண்டன்போடிதையமுமுருகிடவிருந்தான்.

வேறு. தரையினெண்ணில்கரங்கடயங்கத்தான்
பரவிமைந்தனையேந்திடப்பார்த்தவர்
விரைவினெய்திவிளம்பவிரணியன்
சுரர்நடுங்கிடவேயிவைசொல்லினான். (கஙஅ)

வரையின்மைந்தனைவார்கொடுவீக்கிநீ
ரிரையும்வாரியினுய்த்திடுவீரென
வரனுஞ்சிந்தைமயங்கவவுணர்கோ
னுரைசெயக்கடிதுற்றனர்தீயவர். (கஙகூ)

சுந்தரச்செம்மறோள்களைப்பாசத்தால்
மந்தரம்நிகரும்வரையிற்பிணித்
திந்திராதியரோங்கிநடுங்கவாழ்
சிந்துவின்னிடையுய்த்தனர்தீயவர். (கச0)

வரையின்மீதுறமைந்தனவ்வாரிநீர்
சுரருலோகத்திற்றுன்னவிழுந்தவன்
பரனைநெஞ்சிற்பதிக்கமிதந்திடுஞ்
சரியிலோங்கலின்மீதிற்றயங்கினன். (கசக)

வேலையேழுடன்மேவியவெள்ளத்தி
னாலினீளிலைமேலிலமர்ந்திடும்
பாலனென்னப்பரந்தபரவையிற்
சீலமுற்றசிறுவன்வயங்கினான். (கசஉ)

வாரிமீதின்றரையின்வயங்கிய
சீருறுஞ்செம்மல்சிந்தையினேழ்பொழிற்
பாரணாமுகுந்தாபரமாவரி
நாரணாவெனவுன்னிநவிலுவான். (கசங)

கந்தர்தாதையுயர்கமலாசன
னிந்திராதிகளெண்ணிலிருடிகள்
சிந்தைவேதத்திற்செய்யவுந்தோன்றலா
வெந்தைநின்செயல்யானெங்ஙனெண்ணுவேன். (கசச)

விடமுநீசுதைநீயெங்கும்விஞ்சிய
சுடருநீயிருணீபகைநீதுணை
வடிவம்நீவெளிநீமறைநீவரு
மிடருநீயதொழித்திடுமீசனீ. (கசரு)

தந்தைதாயெனத்தந்தவர்நீயவர்
முந்துவெம்பகையாகமுடுக்கிய
வெந்தைநீமறையெண்ணவுமெட்டலாச்
சுந்தராவுனையானெங்ஙன்சொல்லுவேன். (கசசு)

வெறிகொண்மாமலர்வேதன்முதலினோ
ரிறைவருமெனவெண்ணமயக்கியே
யுறுகலாதங்கொளித்துருவாகுவாய்
சிறியனானுன்செயலெங்ஙன்செப்புவேன். (கசஎ)

படியும்வானும்பரந்துநிறைந்தநின்
வடிவையேதறிந்தேத்துவன்மாயநின்
னடியர்தங்களடியரடியினிற்
பொடியதாகுந்தவமிலிப்புன்மையேன். (கசஅ)

அழல்கள்சூழவளப்பிலுகந்தனி
லுழலுமாதவருன்னவுமெட்டலா
வெழிலிவண்ணவிடர்கெடவாவென்றே
மழலைநீங்கிலாவாய்கொடங்கேத்தினன். (கசகூ)

வேலையின்மிதக்கும்வரைமீதினின்
சீலமார்சிறுவன்வயங்கக்கண்டே
யாலமன்னவரோடியவுணர்கோன்
பாலடைந்திச்செயலைப்பகர்ந்தனர். (கருo)

கேட்டவேந்தன்கிளர்ந்திடுவெந்தழல்
நாட்டமெய்தநகைத்துநஞ்சேனையி
னீட்டத்தாலிமைப்பின்னவனின்னுயிர்
வீட்டுவிப்பனென்முன்விடுமென்றனன். (கருக)

மறலியஞ்சவசுரர்மன்கூறலு
முறைமைசெய்கிலாமூர்க்கர்களெய்திநற்
சிறுவனைப்பற்றிச்சென்றுதயித்திய
ரிறையவன்முன்னரெய்தியிருத்தினர். (கரு௨)

சிறுவனைக்கண்டுசீறியிரணியன்
முறைமையில்சம்பரன்முதலோர்களை
யெறுழ்வலிக்கரத்தாற்படையேவிநோய்
நிறையமாயத்திற்கொல்லுமினீரென்றான் (கருங)

தீயனவ்வுரைசெப்பத்தயித்தியர்
காயும்வெங்கதைநீள்கணையெண்ணில
வேயுறும்வளைவீசிநிறைந்திடு
மாயையெங்கும்வகுத்தடர்த்தாரரோ. (கருச)

ஆலமென்னவசுரர்செய்மாயையாற்
காலநீணிருதித்திரள்காளிகள்
சூலியஞ்சிடத்தோன்றியுகாந்தத்தீ
காலவும்பர்கலங்கியிருந்தனர். (கருரு)

அரவினங்கள்கறுத்தவலகைகள்
வரைகள்வாயுவடவைக்கடுவிடஞ்
சுரர்களஞ்சவிவற்றொடுந்தோன்றவான்
பரவிஞர்பங்கயத்தன்றிகைக்கவே. (கருசு)

மந்தரம்மெனமாக்கதையெண்ணில
வுந்திரத்திவ்வியாத்திரமோட்டியே
முந்துமாயங்களெண்ணிலமொய்த்திட
வந்தகனஞ்சவார்த்தடத்தாரரோ. (கருஎ)

சினந்தழீஇயசுரேசர்செய்மாயையி
னினந்தழீஇயும்பரோங்கவடர்க்கலு
மனந்தசாயியையன்புடன்செம்மறன்
மனந்தழீஇக்கொளவெல்லவுமாய்ந்ததே. (கருஅ)

கடியர்விட்டகடும்படைமாயையும்
நொடியின்முன்னரீனிற்றுநுறுங்கவக்
கொடியனுனவிரணியன்கூறெறு
விடமருந்துவித்தான்சுதன்விடவே. (கருகூ)

கடியனிட்டகடுவிடம்யாவையுஞ்
சுடர்கொள்மாதவனைத்துதிசெய்துய
ரடியனுக்கமுதாகிவயங்கவக்
கொடியனெஞ்சங்கொதித்தெழுந்தானரோ. (கசுக)

கோபம்விஞ்சசுரன்மகனைக்கொல்ல
வாபிசாரமிழைக்கவடர்த்திடும்
பாபமென்னக்கிருத்திபகட்டிறை
மாயயங்கொளவந்துருத்தாளரோ. (கசு0)

இறுதிகாலத்தெழுந்திடுமீசனும்
நிறையயங்கொளநேத்திரத்தியினல்
மறுகவாரிவடவனல்வெந்துகக்
கறையுயிர்க்குலங்கக்கவெழுந்தனள். (கசுஉ)

அழலுநெஞ்சினளானனமூன்றினள்
சுழலுநாட்டமுமூன்றெட்டுத்தோளினள்
மழலைநீங்கிலாமைந்தனைச்செற்றிட
வெழிலிவானினெறிந்திடவெய்தினள். (கசுங)

கடியகாலையுயிர்ப்புத்தரக்கண்ட
வடவைதேயவளர்ந்திடவாரியைக்
கடையுமத்தின்கயிற்றையணிந்தண்டம்
வெடிபடக்கொக்கரித்தெழுந்தாள்விண்ணின். (கசுச)

சூலம்வேன்மழுதோமரம்பாசமுட
கோலெழுங்கணையங்குறடட்டிவாள்
காலனஞ்சுங்கரங்கடொறும்விரித்
தாலமென்னவதிர்த்தடர்ந்தாளரோ. (கசுரு)

கதிர்சுழன்றிடவெண்டிசைக்கட்செவி
யுதிரங்காலவெண்டோல்களுமோடவே
பிதிரமாழைப்பிறங்கலுமின
முதிரவார்த்தனள்வாய்புகையுற்றிட. (கசுசு)

அடியிற்பாரிளந்தேயமல்கவே
முடியினண்டமுகடுநெரிந்திட
நெடியகைகளினுல்வானீறுற
விடிகள்சொல்லிலுடைந்திடவெய்தினள். (கசுஎ)

அண்டகோளங்கிழிந்திடவார்த்தயில்
கொண்டுவாசவன்கூற்றஞ்சவெய்துவாள்
வண்டுழாயணைமைந்தன்றுதித்திட
வெண்டவத்தர்வியப்பவெரிந்தனள். (கசுஅ)

விருத்திராசுரன்மெய்யினைமானவே
யுருத்துருத்திரனஞ்சவங்குற்றிடுங்
கிருத்திநீறுறக்கண்டசுரன்கெடுங்
கருத்தினன்விடம்போற்கனன்றனரோ. (கசுக)

வீயும்வண்ணம்விடுத்திடும்யாவையும்
மாயஞ்செய்துவயங்கியமைந்தனைத்
தீயுறப்படிதேய்த்தென்கரத்தினி
லேயெனுமுனிற்கொல்வனென்றெய்தினன். (கஎ0)

சுரர்நடுங்கத்துலங்கியவம்பலிற்
கரியிரிந்திடநற்கமலத்தய
னரனுமஞ்சவடர்ந்திங்கிரணியன
வரநகைத்துமதலையறைகுவான். (கஎக)

இன்னலில்லெனைக்கொல்லவென்றெந்தையே
யுன்னினுயெனிலுன்னுயிர்தன்னினு
மன்னியண்டம்வருவித்தமாலடி
யென்னுள்வைகுமுனக்கெளிதாயதோ. (கஎ௨)

மைந்தன்கூறிடமாயனென்னுண்மையாற்
சிந்தியோரடினன்றேவர்மன்னெண்கணே
னந்தகாந்தகனென்னடியர்ச்சிப்ப
ரெந்தமாமுதனீசொல்லிறையென்றான். (கஎ௩)

எரிசினத்துடனீதறைதந்தையை
மருளகற்றியமைந்தன்வணங்கியே
கருதவும்மரிதாகுங்கடவுடன்
பெருமைகேளெனப்பேசலுற்றனரோ. கஎ௪)

பிரணவந்தனில்வைகும்பெருமையோ
னரணிதன்னிலமர்ந்திடுமங்கிபோல்
முரணுறுமெணிலண்டங்கள்மொய்த்துளான்
மரணமென்னும்வரம்புகடந்தவன். (கஎ௫)

திலமுமுள்ளிற்சிறந்ததயிலமு
மலரும்வாசமும்பாலும்வைகும்நெய்யு
மிலகுமாண்பெனவெவ்வுலகங்களு
முலவும்பல்லுயிர்தோறுமுறைகுவான். (கஎ௬)

எரியுந்தூமமும் பொன்னுமிழைகளுந்
திரையும்வேலையுஞ்சேர்ந்ததுபோலத்தன்
னுருவினுருமுரோமத்தெணிலண்ட
மருவச்செய்தளித்தேதன்னுள்வாங்குவான். (கஎஎ)

மூன்றுகாலமுமூன்றுசுடர்களு
மூன்றுலோகமுமூன்றுகரணமு
மூன்றுசெய்கையுமூன்றுகுணங்களு
மூன்றுதோற்றமுமாகியமூர்த்தியோன். (கஎஅ)

அரிதுமாயெளிதாயிடுமாதியைச்
சுருதிசொல்லிற்றுலங்குமென்னுள்ளம்போற்
கருதுவாயெனிலெங்கணுங்காணலாந்
திரணங்காட்டமுதற்செறிதேவனே. (கஎக)

நெறியையோவினர்முன்னரிநேர்ந்திடான்
மறனேநீங்கினர்க்கேயெளிதாய்வரு
மறிதிநீயென்றறையவவுணர்கோன்
கறைகொணெஞ்சன்கைகொட்டிநகைத்தனன். (கஅ0)

அண்டமெண்ணிலவன்றனுரோமத்தின்
மண்டுமென்றுமவற்றெருடும்வைகுவ
துண்டெனப்பகர்வாய்கிலையோதென
முண்டகத்தயன்போற்றமொழிகுவான். (கஅக)

நொய்யதாகுமணுவினைநூறெனக்
கொய்துகூறிட்டகோணங்கடோறுளன்
வையம்வானம்வடவரைமீதுளன்
மெய்யுட்டோன்றிவிளங்கியமாழ்தல் (கஅஉ)

நிகரிலாதவென்னெஞ்சிலுளனிவண்
புகலுஞ்சொல்லினுளன்மணிபூணுள
னிகழ்வினுன்னிதயப்பங்கயமெனு
முகையின்விஞ்சும்பொருட்டுளமூர்த்தியோன். (கஅங)

ஆதலாலரியெங்கணுமாயுள
னீதிமோதியநீயிவண்காணென
வோதுமைந்தனைநோக்கியுறநகைத்
தேதமூரிதையத்தினியம்புவான். (கஅச)

அழிவிலாதெண்ணிலண்டத்துயிர்தொறு
மொழிவிலாமலுறைபவன்றன்னையிவ்
வெழுவிற்காட்டிலையேலுன்னிரத்தந்தோல்
முழுதுந்தேக்கிமுடிப்பன்குறையென்றான். (கஅரு)

இயல்பறுந்தந்தையிவ்வுரைசாற்றலு
மயர்விநெஞ்சனவன்றனைநோக்கியென்
னுயிருனற்கொள்வதற்கரிதென்றுமால்
செயலினுனவன்முன்னிவைசெப்புவான். (கஅசா)

எந்தைநீசொல்லிடந்தொறுமெம்பிரான்
வந்திலானெனிலென்னுயிர்மாய்ப்பன்யா
னுய்ந்துளேனெனிலுற்றவனைத்தொழு
மந்தமாலடியானலனென்றனன். (கஅஎ)

இரணியன்சொல்லிடந்தொறுந்தோன்றநற்
கருணையங்கடலாய்க்கடல்வைகுவோன்
றரணிவானிற்றயங்குமுயிர்தொறுந்
திரணங்காட்டந்தொறுஞ்சினையாயினன். (கஅஅ)

வேறு. மகனிவைசொலவிழியழலுறவாய்நகைவந்திடவோர்கையினு
லுகவிறுதியினிடிபோலோருதறிமிசையுரனொடுமோதுதலுங்
ககனமோடண்டமும்வெடிபடநீள்கனகனுளநடுங்கிடவே
மொகுமொகுமொகுவெனமானரசிங்கமுழங்கநகைத்ததரோ. (கஅகூ)

நீடியதறியினுளோநரகேசரிநின்றுமுழங்கிடலுஞ்
சேடுறுகுமரனுயர்ந்துவியந்துசிறந்தகல்படியின்மிசை
யாடியெழுந்துவிழுந்துமகிழ்ந்துயராரணநூல்களெலாம்
பாடிவயங்கியவெழிலினைவலமுறவந்துபணிந்தனனால். (கக0)

அரனொடுதிசைமுகன்மாதவர்தேடியுமவர்முனுருதவரி
வரவருமகிழ்வொடுமதலைபணித்திடவானவர்தாம்வெருவ
விரணியன்முனிவொடுமெழுவினுள்மிகநகைசெய்திடுமெம்பரனை
வெருவியகன்றிடுநீயிவண்மேவினைவெளியுறவருகெனவே. (ககக)

பரவையினுவணனொடொருநொடியிம்முனர்பாறியகன்றிடுநீ
வெருவலையமர்பொரவருகெனவேயசுரேசன்விளம்பிடலும்
வரையிவருந்தறியிளவுறவானுயரண்டமுமிண்டிடநீள்
சிரமுறவடிபடிகுழியவளர்ந்திடுசீயமெழுந்ததுவே. (ககஉ)

விண்டிடுதூணினெழுந்தெழிலார்நரமீளிவளர்ந்தசெய
லெண்டவராலுமுணர்ந்தறிதற்கரிதென்றிடில்யாரறிவா
ரண்டமுகட்டின்வயங்கியமர்ந்திடுமாதியிவ்வரியினொளிர்
முண்டகவுந்தியின்வந்ததுபோன்றனன்முடிவறைதற்கெளிதோ. (ககங)

சீருறுதாரகையின்னினமாநரசிங்கமெய்யணியிழைக
ளுருவின்வீழ்ந்திடவேயதினூற்றொளிர்சித்திலமொத்தனவா
லோர்கொளுமுந்தியினலர்களினத்திடையெய்துபொருட்டெனுமா
மேருவயங்கியதென்னில்வளர்ந்திடுபெருமைவிளம்பெளிதோ. (ககச)

ஆயிரகோடிவெள்ளம்மெனவேபகரவுணரினிருமடியாந்
தூயமுகங்கடொறும்விழிமூன்றுதுலங்கியுகாந்தமுறும்
தீயினையுமிழவுயிர்ப்பிறுதியினைதேயுசகாவுரனு
மோய்வுறவேயெழவான்மணின்யாவையும்வாய்கைகடொறுமுளதால்.

எண்ணிலகோடிகரங்களிலங்கிடவெயிறுகள்வரையெனவாய்
நண்ணிடவெரியொடுபுகையுறவிடிகளுமஞ்சநகைத்தலகின்
புண்ணியமாநரகேசரிபொறையிலவசுரர்கணிருதரலா
விண்ணவரொடுமறன்மேவியவனைவருமுபயருள்செய்தனனால். (ககசு)

கரிபரியிரதமொடெண்ணிலவசுரர்கள்கடலெனநிறைபவரை
அரிபடவிரல்களினுகிரினுறந்திடவண்டமுகட்டளவாய்
விரைவினினுயர்வரைபோலவெழுந்துவிழுந்துமடிந்திடநீ
டரையினினிறைகறையோடினவலையுறுசாகரமாமெனவே. (ககஎ)

அகலியவடிவிரனுனிகளினிட்டிடவயமுறமினிரிரதம்
புகரிபவினமொடுபாடலமெண்ணிலபொறையிலவசுரர்திர
ணிகரிலவரையெனுநிருதர்கள்கடிகியவிசையொடுசுழலுமவர்
மிகமுனியரிவிழிபெருமழல்வலைவுறவெந்துகரிந்தனரால். (ககஅ)

வேறு. அசுரரைப்படிமிசையரைத்திடுமழலுறக்குதியாற்
பிசையுமத்திகளுடலினிற்றிகழ்பிதிர்வுறப்பொடியாய்
நிசிசரக்குழுமடியவுக்கிரவுகிருறுத்திடநீ
டசைமலைக்குலையுறநடித்தனதலையிலுறுகுறையே. (௧௯௯

வடவரைக்குவடிடையடித்திடுமதகரிக்குழுவை
யுடல்படிக்கணினுறவுணிக்கிளுமுனிரினிற்பரியைக்
கடையமுற்றிடுகரவிரற்கொடுதுணிசெய்கத்திரிபோ
லடல்மிகுத்திடும்சுரரைச்சிரமறவதைத்திடுமே. (உ00)

வகிர்படுத்துடலறவுரித்திடும்வரையையொத்தவரைக்
ககனமுற்றிடவிடுமுயிர்ப்பினிற்கரிபரித்திரளை
யுகிரிடத்தவனொளிசெயுக்கிரமுறுமறத்திரளை
நிகரின்மற்றொருநகநுனிக்கணினிறையவைத்திடுமால். (உ0க)

சிலர்களைப்பெருமலையினுற்றுடல்சிதறமொத்திடுமால்
சிலர்களைக்கடிதுயிரறக்கடறிரையினுய்த்திடுமால்
சிலர்களைக்கொடுவடவையிற்சிரமெரியவைத்திடுமால்
சிலர்களைத்திரிவரையிறக்கடுசினமொடொத்திடுமால். (உ0உ)

நரசியுற்றெழுவாதமெற்றிடநாகமுற்றிடுவார்
வாசியுற்றவர்தேரினுற்றவர்மாருதத்திறலோ
ரோசைபெற்றுயர்வானமுற்றுவிலோசனத்துறுதீ
வீசவக்கணநீறுபட்டனர்வீரமற்றிடவே. (உ0௩)

உகிரினிற்கரிபரியினுற்றவரொருகணத்துருவ
வகிருமெத்தியகுடர்களைக்கொய்துமகிழுமத்தசையை
நுகருமிக்கிடுகுருதியைக்கொடுநொடியினிற்பருகிக்
ககனமுட்கிடமிகநகைத்திடுமெனல்கடிக்குறவே. (உ0௪)

அலகைசுற்றிடவிகலனுற்றிடவவுணரத்திபரி
யிலகுநற்கிரிநிகரெயிற்றிடையமரவிட்டுழல
வுலகமெத்தியவுதரவக்கினிதனிலுலர்த்துசரு
கிலையெனக்கடிதெரியவிட்டனவெவையுமிக்கணமே. (உ0௫)

கரியினைப்படிமிசையடித்தனகவினுடைக்கரமே
பரியினைக்கொடுவடவையிட்டனபலதிருக்கரமே
நிருதரைக்கடறிரையினிட்டனநிகரிலக்கரமே
தெரிமணிச்சுடர்கலன்மெய்யிட்டனசிலதிருக்கரமே. (உ0௬)

சிலர்களைக்கொடுகடிதுசுற்றியசிலதிருக்கரமே
சிலர்களைத்திசையுறவிடுத்தனசிலதிருக்கரமே
சிலர்களைச்சலதியினமுக்கினசிலதிருக்கரமே
சிலர்களைத்தரையினுரைத்தனசிலதிருக்கரமே. (உ0௭)

உசனனுக்கிரத்தோடெய்தியுதாசனன்வாளிதூவத்
திசைதொறுமமரரோடச்சிறந்தபீதகன்முனெய்திச்
சசிபுருகணைகளொல்லாமவன்மெயிற்சொரிதலோடுந்
தசையுடனுலச்சோரிதரையுகப்பாறினுனல். (கஎக)

சுரர்குருவடரப்பாறுசுக்கிரன்றனைக்கண்டு
நரகன்வந்தெண்ணில்கோடிசிலீமுகம்விடுப்பநாகஞ்
சிரகிகொய்பனைவாலேபஞ்சிசிருயவரிநடுமுட
மனையிநெடமார்கைகாலறக்கறைவாரிசோர்ந்த. (கஎஉ)

அந்தகன்வெருவவெய்துநரகனுசகங்களாலே
யிந்திரன்முனிநனஞ்சியிமையவரோடலோடு
மந்தன்மந்தரம்போற்குன்றிமழையெனவாளிதூவக்
கந்துகமுறுதேரற்றுக்கடியவன்பாறினுனல். (கஎந)

வேறு. பீதிகொண்டுநரகன்பெயர்ந்திட
நீதியில்லாநிவாதகவசர்கள்
வாதமஞ்சமணித்தண்டுகைகொடு
மோதவோடினரும்பர்கள்முந்தியே. (கஎச)

பருதியஞ்சப்பவர்தண்டினற்சுரர்
குருதிமெய்யிலொழுகக்குலைந்திட
மருதரொய்திவருடங்கள்போற்கணை
சொரிதலும்மவர்மெய்யைத்துளைத்தவால். (கஎரு)

ஆலம்போலமருதரடர்க்கநீ
டாலமீதினிவாதகவசர்தம்
வேல்வில்லற்றுவெறுங்கைகொடேகவெங்
காலகேயர்கடிதின்வந்தார்த்தனர். (கஎசா)

சூலியஞ்சச்சுடுகணைமாரிபெய்
காலகேயரைக்கண்டுவசுக்கடாம்
வேலும்வாளுமுலக்கையும்வீசிட
ஞாலமீதவரோடினர்ஞாளிபோல். (கஎஎ)

ஏயெனுமுன்னவுணரிடைந்திடத்
தீயைநேரிபலோமநுஞ்சீறியே
மாயவத்திரம்வீசிடவானவ
ராயிரங்கணன்முன்னஞ்சியோடினர். (கஎஅ)

மாயைசெய்துமயக்குங்கொடியர்மேற்
றூயவிச்சுவதேவர்கடுன்னியே
சீயவெங்கணைசிந்தியடர்த்திட
வேயெனுமுன்னிரிந்தனர்திக்கெலாம். (கஎகூ)

தீரராமசுரோசர்சிதறவெங்
கோரரானகுரோதவாகெய்தி
வாரிபோலவளைந்தம்புதான்விடப்
பாரினோடினர்பம்பியிலேகர்கள். (கரு0)

கடையுகக்கனல்போற்கடுந்தியவ
ரடர்தலோடுமமரர்கள்பாறலும்
விடையபொய்திவிட்டேறுமுட்சோன்மழுக்
கடவவெய்யவர்கால்விசைத்தோடினார். (கருக)

வருணன்மித்திரன்மாரன்விதுச்சனி
சுரர்குருத்தபனன்றுவட்டவசுச்
சரியிலண்டர்கள்தானிவர்தாக்கலும்
வெருவியேயசுரோசர்வென்னிட்டனர். (கருஉ)

சுரர்களார்க்கத்திதிசுதரோடலும்
வரன்மிகுத்திடுமாவலிநோக்கியே
யெரியெனச்சினமெய்தவிமானமே
லரியெனப்பெரிதார்த்துவந்தானரோ. (கருங)

சிலைவளைத்துச்சிலீமுகம்பெய்யவங்
கிலகுதேர்கரிமாவிறவீரர்க
டலைகைதோளுரந்தானறத்தேவர்கள்
நிலையிலாதுடைந்தார்பயநெஞ்சுற. (கருச)

இந்துசேகரனஞ்சவெதிர்த்தவண்
வந்தமாவலியைக்கண்டுவானவர்
சிந்தவெள்ளயிராபதத்திற்சிறந்
திந்திரனெதிர்ந்தானிணையில்லவன். (கருரு)

சுரர்கணாதன்சுசியெனச்சீறித்தன்
வரிவிலாற்கணைமாரிகவேவே
சரியில்மாவலிசாயகத்தாலறுத்
தெரியுறும்விசிகந்தொடுத்தெய்தனன். (கருசு)

இந்திரன்மெய்யிலீரைந்துபாணமுந்
தந்திகாய்பவற்குச்சதுப்பாணமு
முந்துவெண்கரிமீதொருமூன்றம்பு
முந்தியார்த்தனனோசையண்டம்முற. (கருஎ)

அசியின்மாவலியார்த்தெதிர்தூவிடு
விசிகமெல்லவுமற்றுவிழுந்திட
வசையிலிந்திரன்வாளிகள்பெய்திடச்
சசிதரனெனத்தானவன்சீறினான். (கருஅ)

இண்டைசேர்சடையோனெனுமாவலி
யண்டர்கோன்மிசையம்பொன்வரைநிகர்
தண்டுகொண்டங்கெறிந்திடத்தானவர்
மண்டியார்த்தனர்மானவன்பாறவே. (௧௫௯)

அண்டரண்டமுடையுமென்றஞ்சியே
புண்டரீகன்றிகைத்திடப்போர்த்திடுந்
தண்டுசாயகத்தாற்றுகளாக்கினு
னெண்டவத்தவரேத்திடவிந்திரன். (௧௬௦)

ஏயெனுமுனிற்றிண்டிறல்மாவலி
தீயெழச்சினம்விஞ்சிடச்சீறியே
தூயவேதன்சுரர்கணடுங்கிடக்
காய்கனற்கதிர்ச்சூலங்கடாவினுன். (௧௬௧)

வேறு. மாவலியேவிடவண்டரடுங்கிடவிடுசூல
மூவிலையோரமும்வடவனல்முடுகிடவரலோடுந்
தேவர்களதிபதிசிலையொடுபகழிகள்முகில்போலத்
தூவிடவயிறுகளாகிவிழுந்தனசுரரோத்த. (௧௬௨)

வேறு. சூலமிமைப்பினிற்றுகளுறமாவலிசுரர்களுமஞ்சவெழு
மாலமெனச்சினமல்கிடமாயமுறும்படைவிடவவணிற்
காலனும்வெருவிடவேமிருகாபதிகொடுவரிகட்செவிதோல்
கோலம்விரிச்சிகமாகியெழுந்தனகுவலயமெங்கணுமே. (௧௬௩)

வாரியெழுந்துவளைந்தனவிறுதியின்வாயுவறைந்திடவெங்
கோரநெடும்படைகொண்டுயர்நிருதர்கள்கூடிமலைந்திடவெஞ்
சோரிவளூரம்விழுக்கொடுசீய்கள்சொரிந்திடவேயலகை
பாரினிலெங்குநடித்தனநிகரில்பருப்பதமழைபொழிய. (௧௬௪)

நிருதர்கள்வாயினிலங்கிநிறைந்துநெடும்படைதூவிடவே
யரிபுலிகரடியதிர்த்திடமத்தகசங்களடர்ந்திடவான்
கிரிமழைபெய்திடமாசுணமாலமுமிழ்ந்திடவெங்கரிக
டரையையிடந்திடவானமெலாமுயர்சலதிவளைந்தனவால். (௧௬௫)

மாயமுறும்படைமாவலியேவிடமாதவர்வானவர்தம்
நாயகனோடுநடுங்கியிவ்விடரினைநீக்கிடநண்ணுதியெம்
மாயமுகுந்தபராபரவச்சுதமாதவமாவுருவத்
தூயவநாரணகேசவவென்றுதுதித்தயர்வேலையின்வாய். (௧௬௬)

வேறு. நிகரற்றுயர்ந்தவசுரேசன்விட்டநெடுமாயையெங்கும்வளையச்
சிகரத்தையொத்தகரிமீதினுற்றவிறைதேவரோடுசெயலற்
றுகமுற்றுநாளினிடருற்றபோலவுளமஞ்சமாயனுவணக்
ககமுற்றிரண்டுசுடர்பற்றிமல்குகருமேகமென்னவரவே. (௧௬௭)

வடமேருமீதின்வருகொண்டலென்றினவிருற்றிலங்கமறுவில்
கடிநீடுகோகநகமல்கிவந்தகவினென்னமாயன்வரவே
விடமாகியெங்குநிறைமாயம்விண்டுவெளியாகவானினுறைவோ
ரடிமீதிறைஞ்சிநெடியோய்முகுந்தவருளாளவென்றுதொழவே. (கசுஅ)

விடுமாயமற்றுநெடியோனுயர்ந்தககமீதின்மேவியிலகக்
கடிதாகவந்தனிவர்காலநேமிகரிமேல்வயங்குமிறைமேற்
சுடர்வீசுசூலம்விடநாலுவம்பல்சுசியாகவண்டரிரிய
விடமாயெழுந்துகடனீரும்வேகவெளியாகமுந்திவரவே. (கசுகூ)

சுரர்நாதனுவியுணவேதுலங்கிவருகின்றதூயவயிலை
யரிநாகர்கண்டுமகிழ்வெய்தவங்கைகொடுபற்றிவிட்டவுணன்
சிரமீதினேவவவன்வீடலோடிமிமையோர்கள்தேவர்பதியோ
டடிமீதிறைஞ்சியலர்மாரிதூவியருளாளவென்றுதொழவே. (கஎ0)

விடநேரதாகிவருகாலநேமியயிலால்முடிந்துவிழவே
கொடிதாயமாலியுடனேசுமாலியழல்போலநெஞ்சுகொதியாக்
கடிதாயயானைபரிதேர்கள்கொண்டுகடல்போல்வளைந்தபொழுதின்
நெடிதாமுராரிசிலைகொண்டுவானிறையாசுகங்கள்சொரிய. (கஎக)

கரிகால்களற்றவொருகையுமற்றகவின்வீழுகொம்புமறவே
பரிதாள்களற்றவெரினற்றவற்றவுயர்வால்படிக்கணிருதர்
சிரம்வானினுற்றவுடல்பாரினுற்றசெவிகண்களூருவலிசேர்
கரமார்புமற்றகவசங்களற்றசிலையற்றவற்றகணைகள். (கஎஉ)

கொடியற்றவற்றகுடைசாய்மரங்களறவற்றபாகர்சிரமா
வடியற்றவீரர்தலையற்றவற்றவவர்தோள்கண்மார்பமதமா
வுடலற்றவுற்றவுரனற்றகொற்றமுறுகையினேடுநிருதர்
முடியற்றசோரிநிலமுற்றுமுற்றமுகிலுற்றவற்றபிசிதம். (கஎங)

அரிவாளிதூவவவனேறுவீறுககராசன்வீசுசிறகால்
மிருகாரிகோணம்வெளில்காடைநாகமயின்மோழல்மேடகுலங்
கரிகோடரங்களுயர்வானினேறஅசுரேசரோடுகவினுர்
பரிநீடுதேர்கள்சருகாகியேகியுடனேபடிந்துமடிய. (கஎச)

வரைபாதவங்களடியோடுபேரமகமேருவெற்புமசைய
வொருகோடிகாதமளவாகவீசுசிறகாலடிப்பவுயருங்
கிரிபோல்மிடைந்தவசுரேசர்தாள்களனவேகிளர்ந்துமடிய
உரகாரிசெய்தசெயல்கண்டுமாலியுளம்வேவநெஞ்சுகொதியா. (கஎரு)

வரைமீதின்வீழுமிடிபோலநீசன்மதியாதுவெய்யகதையா
லுரகாரிமீதின்முனிவோடுமோதவுலகேழளந்தபெரியோன்
றெரியாவலங்கொளுயராழியேவவயிறேறுசிந்தலர்கிரனோர்
சுரர்நாதனேறுதுதிசெய்யவந்துஅணிசெய்சுமாலிசிரமே. (கஎசு)

சுரர்வாழுமாலிதலைஞாலம்வீழவதுகண்டுநெஞ்சுதுடியா
வரைபோலெழுந்துவிறலார்சுமாலிமலரோன்வலாரியிமையோ
ரரனோடுமஞ்சவயில்கொண்டுவீசவரியெய்யும்வாளியதனை
யெரியாகநூறியவன்மார்பினேகவிழிசோரியோடுமயர. (களஎ)

கலனுணமாலிமடியச்சுமாலிகடிதின்னயர்ந்துபெயர
நலனுறும்வாளிதனையேவிநின்றநளினங்கொள்மாதுபதியை
மலரோன்வலாரியிமையோர்களாடிமலரோபொழிந்துமகிழ
உலகேழுநுங்குமிறைபாலின்வாரியணைமேவினன்னுவணன்மேல். (களஅ)

வேறு. காலநேமியுளப்பில்கடுந்திறல்
மாலியங்குவரச்செற்றுமாயவன்
வேலையெய்தவெகுண்டுயர்மாவலி
காலனஞ்சக்கடுங்கணைசிந்தினான். (களகூ)

இந்திரன்மெய்யிற்சோரியிழிந்திடத்
தந்திமீக்கறைவெள்ளந்தரையுக
மந்தன்மாரன்மறலிவிபுதர்கள்
சிந்தியோடச்சிலீமுகம்பெய்தனன். (கஅ0)

மலினமுற்றுபபுலவர்மண்டனோடவே
சலமிகுந்தெயுமாவலிதனமெயின்
வலனுறத்தந்திபூர்பவன்மாறிலாக்
குலிசம்விட்டுக்கொதித்துறவார்த்தனன். (கஅக

வாசவன்விடும்வன்குலிசத்தினு
லீசனென்னவிலங்கியமாவலி
நாசமுற்றவன்போலுளமைந்தசு
ரேசரஞ்சவயர்ந்தனனிம்பரின். (கஅஉ)

இம்பர்மாவலிமூர்ச்சிக்கவெய்திய
செம்பொன்சியமெனவந்துசீறிய
யம்பொன்மால்வரையாமெனுந்தண்டினு
னும்பரஞ்சவெளும்பலைமோதினன். (கஅந)

கதுமெனச்செம்பொன்கைக்கதைமோதவே
மதமுறுங்கரிமண்ணிடைவீழ்ந்துதா
னுதிரங்கக்கியுளைந்திடமாதலி
விதமுறும்வையங்கொண்டவண்மேவினான். (கஅச)

மாலியானைமுனர்வந்துமாதலி
சீலவாகண்டலன்சிறந்தேறிடக்
கோலுமாவிரதங்கொணர்ந்தேயிடக்
காலனுஞ்செம்பன்கண்டுளங்கன்றினான். (கஅரு)

இந்திரன்றனக்கிங்கிமையின்முனர்த்
தந்திசாயுமுன்வையந்தந்தானென
வந்தகன்கலங்கும்மயில்கைக்கொடே
யுந்தமாதலிமார்பிடையுற்றதே. (௧௦௬)

அயிலுரத்துறலும்மயர்மாதலி
துயரநோக்கியதூயசுரர்கள்கோன்
கயிலுறுங்குலிசத்தைக்கடாவவே
யியல்பிலாச்செம்பன்றன்சிரமிற்றதே. (௧௦௭)

பாரிற்செம்பன்மடியவலன்பக
ஞரிகாதுறநற்சிலைதான்வளைத்
தேர்கொளிந்திரன்மேலினெண்ணுயிரங்
கோரவெங்கணைசிந்திக்கொதித்தனன். (௧௦௮)

சுரர்கள்கோனிரதத்திற்றுலங்கிய
பரியின்மேலுநாலாயிரம்பல்லவம்
விரைவின்மாதலிமேலுமெண்ணுயிரம்
சரமுந்தூவினன்தானவரார்ப்பவே. (௧௦௯)

பகனெடேவலன்பாய்பகழித்திரள்
சிகியுமஞ்சச்சொரிந்திடத்தேவர்கள்
புகலிடமிலராகிப்பொருமினர்
மிகவுஞ்சோரிகளாறெனமேவிய. (௧௧௦)

கலர்விடுத்தகணைகளிற்பாடலச்
சலம்வலாரிதன்மெய்யினிற்றுனுகக்
குலிசம்வானவர்கோன்முனிந்தேவிட
வலனெடேபகன்மண்மிசைமாண்டனன். (௧௧௧)

வலனெடேபகன்மாய்ந்திடக்கண்டனன்
நலனிலாதநமுசிநற்றேவர்கள்
குலையவெங்கணைகோடியின்மேலெய்தெவ்
வுலகுமஞ்சிடவூதினன்சங்கமே. (௧௧௨)

தியர்விட்டசரங்களைத்தேவர்மன்
தூயவச்சிரத்தாற்றுணிசெய்திட
மாயம்வல்லநமுசிவரைமழை
யேயெனுமுனரொங்குஞ்சொரிந்தனன். (௧௧௩)

காலமாவருடம்மெனக்கன்மழை
வேலனேகம்விடுதலுந்தேவர்கோன்
கோலவச்சிரங்கொண்டுதுணித்திடச்
சூலமேந்திநமுசிதுரந்தனன். (௧௧௪)

நமுசிவிட்டகவையற்றுயரயி
லமரரஞ்சவரவதிதிப்பெணின்
குமரன்வெய்யகுலிசத்தறுத்திட
விமையவர்திரளெங்கணுமாடினார். (௧௯௫)

கடியனேவுமயிறுணியக்கண்டே
விடமெனக்கணையெங்கணும்வீசலுங்
கொடியவெஞ்சரத்தாற்குறைத்திந்திரன்
சுடர்விடுங்குலிசத்தைத்துரந்தனன். (௧௯௬)

வேறு. இந்திரன்குலிசந்தன்னையேவிடநமுசிவன்பார்
கந்தரந்துணிக்கலாமைமீண்டதுகண்டுவெண்டோ
ளுந்துவோனுயர்விருத்திராசுரன்றனைக்கொன்றோங்கு
மிந்தவச்சிரமித்தீயோன்றனைப்பற்றாதென்னோவென்றான். (௧௯௭)

தீயவன்றனைக்கொலாமற்றிரும்பியகுலிசமென்றே
யாயிரநயனனோவவுயரசரீரிவெய்ய
தாயுலர்ந்ததிலும்பச்சைதன்னினுமிவன்றன்சாகா
னீயிவையிரண்டுமில்லாததனிற்கொனெறியீதென்ன. (௧௯௮)

உயரசரீரிசொல்லவுலர்ந்திடாபச்சையாகா
வியல்பெனவெனவேசுட்டியிரையுநீர்நுரையைவாங்கிக்
கயினுறவெறிதலோடுநமுசியைக்கண்டமாக்க
மயர்வறவமரர்பொற்பூப்பொழிந்துளமகிழ்ந்தாரன்றே. (௧௯௯)

பின்னும்போர்தொடங்கும்வேலைப்பெருமையார்கமலன்சொல்லால்
மன்னிநல்வினையோதுமுனிசமர்விலக்கமாயா
தின்னமுதருந்தினோர்களியாவருங்களித்தங்கேகத்
துன்னியமகிழ்வினோடுஞ்சுரர்பதியிலங்கினானால். (௨௦௦)

தந்திரமெல்லாம்பட்டுத்தானவரோடலோடுந்
துந்துபிமுழங்கத்தெய்வமடந்தையர்துலங்குதீப
முந்தியேயெடுப்பத்தூயமுனிவர்களேத்தத்தேர்மே
லிந்திரன்பதியினெய்தியிலங்கிவீற்றிருந்தானன்றே (௨௦௧)

மாலியுமெதிரிலாதவலன்பகனமுசிதானுங்
காலனுங்காலநேமிதன்னுடன்மடியக்காதித்
தாலமேலயர்ந்துவீழ்ந்தமாவலியுசனன்சாற்றுஞ்
சீலமார்பொருளாருஞ்சஞ்சீவியாற்பிழைத்தானன்றே. (௨௦௨)

அவுணரோடமரரெல்லாமமரொழிந்தேகப்பின்னர்
சிவனுயரனந்தன்மீதிற்சீதரன்றன்னைக்கண்டு
சுவையுறுமமிர்தமீய்ந்தமோகினிசுருபங்காண
வவமையிலிறைவவிச்சித்தேனென்றங்குரைத்தானன்றே. (௨௦௩)

அரனிவைமொழியக்கேளாவரிநகைசெய்துநேர்
லுருவுடையஞ்சங்கின்ளைபிணிமுகங்கபோதமுற்ற
வரியுறுமலரின்வாசமடர்ந்தபூங்காவிலங்கச்
சரியின்மேர்கினியாய்த்தோன்றித்தன்னுருக்கரந்தானன்றே. (உ0ச)

வேறு. மீனெனவிலங்கிப்பழுதிலாமையினுல்விளங்கிடுங்கோலமாயரிமெய்
மானவேவாமம்நிறைந்திடுங்கருமைவயங்கப்பார்க்கவன்குலத்தவனு
யானிசெய்யிலங்கையரக்கனந்தகனேந்தம்பெணவலர்ந்தரியொளியாய்
வேனலாணையனயமுறவவிர்பொற்றேடுசேர்குழையடர்விழியாள்.

வேறு. அயனமைத்திடவுமொண்ணுவற்புதவுருவமாகி
யியல்புடைத்தெய்வமாதரியாவரும்வெள்கியேத்தக்
குயில்சுவாகதங்களெல்லாமொழியினுற்குறைந்தேயோட
உயரனநடையாற்றேற்கவுருத்திரன்முன்னர்நின்றுள். (உ0சு)

அலங்கல்சில்லளகபாரத்தழகுறவானனத்தி
னிலம்பகம்விளங்கித்தோடுமிலங்கிடக்கந்தரத்தின்
கலன்கள்வில்வீசவாரங்கவினுறநகிலினூடத்
துலங்கநேத்திரங்கலாபர்துடியிடைவயங்கவந்தாள். உ0எ)

கந்துகங்கரத்தினேற்றிக்கடைவிழியதனுேக்க
வந்தரமதனின்மொய்க்குமளியெனவதன்மேற்காட்டச்
சுந்தரிபதங்களன்னந்தொலையவேநடிக்கவார
மந்தரவரைபோற்பொங்குநகிலினின்வயங்கியாட. (உ0அ)

கோலமாரேகப்பந்துகோடிமேலுளதாமென்னக்
காலினுற்கரத்தாற்றேளாற்கவினுறுமுழங்கைதன்னுல்
ஞாலமேனடிப்பள்விண்ணிற்றுலங்குநற்கையிற்றேன்று
மேலுங்கீழ்சுற்றுங்காணும்விரைவின்மாதடிக்கமாதோ. (உ0கூ)

கைபுகச்சிவக்குமேலிற்கண்டிடிற்றவளமாகும்
மெய்கணைசேர்க்கநோக்குவிழியினுற்கருகுமோரா
துய்யகந்துகமிவ்வண்ணமாகியேதுலங்கிக்காட்டி
நொய்யதாகியநுசுப்புநுடங்கிடவடித்தாள்மன்னே. (உக0)

கைவளைதிருத்துந்தோடுகாதினில்வயங்கச்சேர்க்குந்
துய்யமாதளிகவேர்வுதுகிலினுற்றுடைக்குமார
மெய்யினிற்கோலமாரவணியுமேகலையைமின்னும்
நொய்யதாநுசுப்பின்மீதினிறுக்கும்பந்தடிக்குமன்னே. உகக)

தூயயோகியர்க்குமெட்டாச்சோதியோர்தையலாகி
மாயையையியற்றிப்பந்துமண்மிசையெழிலான்மோத
வேயெனுமுனரிற்றேன்றவிருநகிற்றுகிலேகீக்கப்
பேயினங்குழும்பெதைபாகன்றுன்பித்தனுனன். (உகஉ)

வாசமார்வசந்தமெய்திமங்கைதன்கொங்கைமீதிற்
றூசினைநீக்கலோடுஞ்சுசியுறுவிரகமெய்தத்
தேசுறுமுமைபுங்கங்கைமங்கையும்வெள்கச்சேர்ந்தே
யீசனம்பாங்குவீழவெழின்மினைத்தழுவவந்தான். (௨௧௩)

தழுவியபுராரிகையிறசார்குவார்போலவங்கண்
நழுவியவனிதையோடநாணமுமகலவேகச்
சுழியெழுமாறுபோலவீரியஞ்சுரந்துகாலி
னொழுகிடவவணின்மாசாத்தன்கடிதுதையமானான். (௨௧௪)

வீரியந்தனாயிற்றோயுமிடமெலாமிளிருமாழை
சாரவேயோடப்பாலுந்தையலைத்தழுவவெய்தும்
நாரிபாகத்தன்வெள்கநங்கைதன்வேடமாறிச்
சீரியகருடன்மீதிற்சிறந்தரிதிகழநின்றான். (௨௧௫)

தூயனுஞ்சோதியெய்தித்துலங்கிடவுமைதன்கேள்வன்
மாயையங்ககலஞானமெய்தநான்மறைகொடேத்தி
நீயியற்றிடவேநானுமயக்கவாரியினைநீந்த
மாயையில்வல்லார்யாவரெனுமுறைவழங்கிச்சொல்வான். (௨௧௬)

நேயமாயிவணின்மாயத்தழுந்துமென்மேலென்றும்நீ
மாயையிம்மருளையேவாதருளெனவணங்கியேகத்
தூயபாற்கடலினுப்பண்டுலங்கியவனந்தன்மீதி
னாயிரம்பெயரினையனமர்ந்தினிதிருந்தானம்மா. (௨௧௭)

கமடமாய்வரையைத்தாங்கிக்கடலினைக்கடைந்துதுய்ய
வமுதினையமரர்க்கீய்ந்தங்கசுரரைவதைத்துநேரி
லுமையிடப்பாகனானென்மருளறவொருத்தியாகு
மெமதிறைசெயலிதென்றேயாழ்முனிபொறிக்குச்சொன்னான். (௨௧௮)

கூர்மப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௪௫௩.

---

## ௧௪. வது — அண்டப்படலம்.

கேசவனாராயணனுயர்மாதவன்கிளர்கோவிந்தன்விண்டு
மாசகன்மதுசூதன்றிருவிக்ரமன்மன்னுவாமனனவிர்மலியும்
தேசுறுசிரீதரனிருடிகேசனெண்பதுமநாபன்சீர்
வீசியதாமோதரனெனவுரைமின்வினையறவுயர்பதத்துறலாம். (௧)

வேறு. துட்டரையிணங்கிக்கொலைகளவியற்றிச்சுகமெனப்பிறர்மனைவிரும்பி
சிட்டனாலிந்துபுவிபொருள்கவர்ந்துதினமின்றுவிளைத்தியென்மனனே [ச்
விட்டினும்விளக்கையுண்வெனவிரும்பிவிழுந்தவண்மடிவதேசிவணக்
கட்டமார்கிரையத்தழுந்திடாதுயர்ந்தகதிபெறவரியினைநினைத்தி. (௨)

ஆதியிற்பாகவதபுராணத்தைஅரியயற்கருளநாரதற்கு
வேதனுமுரைக்கநாரதன்வேதவியாசனுக்குரைக்கவும்வியாசன்
மாதவமயிதத்திரேயற்குஞ்சுகற்கும்வண்மையாற்சூதற்கும்பகர்ந்தா
னேதமினமயித்திரேயனும்விதுரற்கியம்பிடவிதுரன்வீடுற்ருன். (௩)

ஈதெலாஞ்சுகன்ருன்பரிசித்தைநோக்கியேழ்தினமதனினீகேட்கிற்
சீதரன்பதம்பெற்றிடுகுவையெனமனறினமேழின்முடியுமோவென்னக்
காதலாற்கட்டுவாங்கனுங்கன்னலிரண்டிற்கேட்டடைந்தனன்கதியை
யாதலாற்கேளென்றறையவேழ்தினத்தினரசன்கேட்டெய்தினன்முத்தி. (௪)

இதுவலாலுருக்குமணிக்குநாரதன்ருனிசைத்ததைநைமிசாரணியத்
ததிற்சவுனகனேமுதல்வறொண்பத்தெண்ணாயிரர்முனிவரர்கேட்பச்
சதுமறைச்சூதனுரைத்திடும்வடநூற்சுலோகமாம்பதினெண்ணாயிரமும்
விதித்தமிழெனல்விவரத்தையன்சொன்னான்விருத்தமொன்பான்சகசிரமே. (௫)

கச்சபமாகிவரைபினைச்சுமந்துகடலினைக்கடைந்தமிர்தத்தை
நச்சியவமரர்க்களித்தமாக்கதையைநளினமின்கேட்டுளமகிழ்ந்தே
யச்சுதனுகர்ந்திங்குமிழ்ந்தவிவ்வண்டத்துலகெலாமழிந்திடுஞ்செயலை
நிச்சயமாகப்பகரெனத்திருவேங்கடனைமுனிநிகழ்த்திடுவான். (௬)

ஆதியுநடுவுமீறுமில்லாதவரும்பொருட்பகுதியின்முளைத்த
நீதிசேர்புந்திபுந்தியுளகந்தையகந்தையுட்பிரகிருதியுதனுட்
டிதிலம்புலனுமொன்றினிலொன்ருய்த்தெசமடங்கதனிலோர்கூருய்ச்
சோதிசேர்புவனஞ்சதுர்த்தெசங்கூடித்தோன்றியதண்டமானதுவே. (௭)

இப்படியண்டமனந்தகோடிகளாமெண்ணிலாவடுக்குகளதற்கு
ளொப்பிலாவண்டமாயிரங்கோடியோரடுக்கொன்றின்மேலொன்று
மெப்புகழடுக்கிலொன்ருண்டத்துகையவிளம்புவன்யோசனைகணக்கின்
றப்பிலெண்ணிடுமோரியோசனையளவைச்சாற்றிடத்தையலேகேட்டி. (௮)

கதிர்த்துகளெண்மூன்றதுகசாக்கிரதத்ததுவெட்டேயிலாக்கையாமதுநான்
குதித்தரும்பூகையூகைபெட்டிபைபையிபைபைமூன்றங்குலத்தல்வா
மதுவறுநான்குகரங்கரநான்கேதனுதனுவிரட்டியேதண்டங்
கதிதண்டமிரண்டாயிரங்குரோசமதாங்குரோசநான்கியோசனையொன்றே.

அந்தயோசனையிலைம்பதுகோடியளவுபூமண்டலங்கடாக
மிந்தளவதற்கிழ்மேலுமெண்டிசையுமியற்சதகோடிவட்டமதாய்
முந்தியேபெட்டிமூடியாமுட்டைபோன்றிடுமண்டத்தைப்பிரமன்
றந்தசுவாயம்பூமனுவருள்பிரியவரதனேதனியரசாண்டான். (௰)

அரசுசெய்பிரியவரதற்கேழ்மதலைபவர்பெயராக்கினீத்திரனும்
வரமிகுமித்துஞ்சிகுவனுமிந்திரவாகுவேவாடிரணியரோதா
விரகுளகிருதப்பிருட்டன்மேதாதிவீதிகோத்திரனிவரொழுவர்
இரணியவரைக்குமேழ்கடலேழ்தீவாக்கியேயெழுவர்க்குமீந்தான். (கக)

அறனுறுகமலனருள்சுவாயம்பூமனுவினுக்குதையமாமரசன்
பிறிதிலாப்பிரியவிரதன்மாதவன்றன்பெயரொலாமறைந்துயர்பதத்தின்
மறுவிலாமாணெழுயிரதமேல்வைகிவடகிரிசுற்றியெட்டாசை
யுறவவன்வையத்தாழியின்வழியினுவரிகளேழுமாயினதே. (கஉ)

வடவரைநிலத்திற்றாழ்ந்ததுபதினாறாயிரயோசனைவண்மை
யடியினிற்பருமம்யோசனையீரெண்ணாயிரமதினெழுமுயர்ச்சி
படியினிற்கிளாந்தெண்பத்துநாலானசகசிரயோசனைபரவ
முடிதனியகலத்தியோசனைமொழியின்முப்பத்திராயிரமன்றே. (கங)

செயவுறுபவன்பாரியாத்திரமெனவேதிகழ்வரைகுடதிசையிலங்க
வயங்கறையருவித்தேவகூடமுஞ்சேடாவும்பூருவதிக்கினமர
வுயர்திரிசிருங்கமகரமுத்தரத்தினுறைந்திடத்தெக்கணதிசையின்
கயிலைபுங்கரவீரமுந்திகழ்ந்திடும்பொன்மலைக்கட்டவிட்டமாய்க்கதித்தே.

திகழுமிவ்வரைநாற்றிசையுமெட்டெட்டாந்தெசசகசிரத்தியோசனையாய்
நிகரிலாதுயரவதனிற்றெக்கணமாதிசையினிவர்கயிலையின்வாய்ச்
சிகரகோபுரங்கள்நிறைந்திடவுமைபாற்றெரிவைவாமந்தனிற்சிறப்ப
வகிலருபரணத்தான்றவளாத்தவமரர்கள்பணியவீற்றிருப்பான். (கரு)

வடவரைமேவாயுயர்ந்திடாநாலுபக்கமும்வயக்கிடுகிரிகள்
குடதிசைச்சுபார்சுவமுறுங்குணக்கமந்தரமேருமந்தரந்தெற்
கிடமதாயமருமுத்தரக்குமுதமிலக்குமிந்நாலெனும்பிறங்க
னெடியவொவ்வொன்றுக்கயுதயோசனையினுயரமாயுறைந்திடுமன்றே. (கசு)

மேருவைச்சூழ்ந்துவிளங்கிடுஞ்சுவார்சுவமெழில்மந்தரமினிரு
மேருமந்தரமொண்குமுதமிந்நான்குகிரிகளின்விரிந்திடும்பூங்கா
நேரில்சுக்கந்தனற்சயித்திரவிரதம்நிறைந்திடும்வைப்பிராசுத்தே
ஞர்வுறவயங்குஞ்சருவதோபத்திரத்துடனுலுமங்கமரும். (கஎ)

நாலுபூங்காவினவெறுவயக்குமோடைகளுன்கதாய்நிறையும்
பாலொளிர்செந்தேன்கன்னலின்சாறுபயமிவைமலிந்தவோதிச்
சேலொடுவரால்கள்சிறந்தபல்வகுலிகூருமந்திகழ்சிஞ்சுமாரம்
வாலவளைபிவைகள்வளையெனத்திரியவாரிபோல்வயங்கியதன்றே. (கஅ)

மந்தரமிசையினிலங்கிடுஞ்சூதம்வயங்கியமேருமந்தரத்தி
னித்துவையணவவர்த்திநாவலெழிலுறுசுவார்சுவத்தில்
கந்தமார்கதம்பந்தயங்கிடுங்குமுதங்கவினுறவிற்குறதுரோத
மிந்தநான்மரமுந்தமால்மலிகிடவானிமையவர்பதமுறவுயரும். (ககூ)

பருவரைமிசையினிவருநான்மரங்களொவ்வொன்றினடியினிற்பரும
மிருபதிற்றைந்தாந்தொகைகொள் யோசனையாயீரைஞ்ஞூற்றியோசனையுயர
விரிவுறுகவடுதெசசதமென்றுவிளம்பிடியோசனையாகு [ம்
விரணியப்பிறங்கலெழிலுறநாலுபக்கமுமிலங்கியதன்றே. (உ0)

மந்தரமிசையின்வயங்குசூதத்தின்கனிவரையெனவளர்ந்தநனீர்
சிந்துவைநிகர்த்துவிரிவுடன்குணக்குத்திசையினிற்பெருகிடவதனை
யிந்துசேகரன்றன்மனைவியோடிலங்கும்வனிதையர்பலர்களும்பருக
வந்தமாமடவாருடற்பரிமளந்தானையிரண்டோசனைகமழும். (௨௧)

மேருமந்தரத்தின்மிசையுறுசம்புப்பலமத்தகசமெனவிளங்கி
வாரிபோலதனீர்தெக்கணதிசையில்வருமிடமெலவும்பொன்னாகச்
சேருறவவணின்மருங்குறுமடவார்திகழுறுமெண்ணிலாபரண
மேருறவணிவரதுதனைவாங்கியிலங்கிடவேகடஞ்செய்தே. (௨௨)

துலங்கியசுவாருசுவவரையதனிற்றோன்றியகதம்பம்பால்சொரிய
விலங்கியநதிபோற்குடதிசைபுறவேயதுதனைப்பருகுமேந்திழையார்
நலங்கொளும்வதனப்பரிமளஞ்சதயோசனையெட்டுத்திசைதொறுநண்ணிக்
கலன்களோலிடத்தன்கணவர்களுடனற்கலவிசெய்தகமகிழுவரால். (௨௩)

குமுதமால்வரையின்சகசிரவலிசமெனப்பெயர்படைத்தந்தக்குரோத
மமுதநேரெனப்பால்சொரியவுத்தரமாதிசையிடையாறெனப்பெருகிச்
சமையுமோதனம்பாறயிர்குளந்துப்புத்தரவவைபொசித்திடுமவர்க
ளிமையவர்தொழவேநரைதிரைமூப்பற்றிலங்குவரொவ்வனமுறவே. (௨௪)

கிரிபொழிலோடைமரமிவைநான்குங்கிளர்ந்திடுந்தமனியப்பொருப்பின்
சிரமுறுங்குமுதங்காருடங்குசும்பஞ்சேதிவாசகந்திரிகூடஞ்
சரியிலொண்பதங்கம்நிடதமஞ்சமம்வைகங்கடங்கபிலமாச்சங்கம்
விரிவுறுவைடூரியமிவைமுதலாயிரங்கொடுமுடிவிளங்கியதால். (௨௫)

இயல்புறவுயராயிரங்கொடுமுடிகளிலங்கியவடவரைநாப்ப
ணயனமர்ந்திலங்குமபுதமோடேகசகசிரயோசனையகலஞ்
செயலுறுநகரம்வயங்கிடவதனைச்சூழ்ந்திடத்திசையினெண்பால
ருயர்பதியொவ்வொன்றகலமஞ்சரையஞ்ஞூறதாம்யோசனையாய. (௨௬)

உலகமேழளந்தோன்வாமபாதத்தினுவமையிலங்குட்டவுகிரி
னிலகிடவெழுந்தசுரர்நதிதூயவேழுமாமுனிவரும்பரிவாற்
பொலனுறச்சுசியாய்ச்சிரமுறப்படியப்பொருந்துநற்சீதத்தைமலிவாய்
நலனுறவிதுத்தானமர்ந்திடும்பதத்தைநண்ணிப்பொன்மேருவிற்குதித்த. (௨௭)

இரணியவரையினயன்பதியதனினிலங்கிடக்குதித்தவானதிதான்
பரவிநான்முகமாயெழுந்துமேற்றிசையிற்சக்குவென்றேபகர்பெயராச்
சரியிலாக்கேதுமாலகண்டத்திற்றயங்கிடவிழுந்துமேலுவரி
திரையுடனுடைந்துகிழிந்திடவடையுஞ்செகதலமதிர்ந்திடச்சிறந்தே.

விரிவுடன்குணக்குத்திசையினிற்சீதையெனும்பெயர்விளங்கிடவெழுந்து
சரியிலாதிலங்கும்பத்திராசுவகண்டத்தினிற்றாவியத்திசையிற்
பரவையையடையும்வடதிசையுறவேபத்திரையெனும்பெயர்விளங்கி
மருவமர்பொழில்சூழ்குருகண்டமிசையின்வழிந்துத்தவாரியின்வீழுமால்.

# ஸ்ரீமஹாபாகவதம்.

செம்பொன்மால்வரையிற்குதித்தவானதியுத்தரதிசைகுடக்கொடுகுணக்கி
னம்புவிமிசைமுப்பெயருறவழகரந்தையாம்பெயரினையடைந்தே
யிம்பரினுயர்தெக்கணதிசையதனினிலங்கியபரதகண்டத்தி
னம்பொடுமனவேயெழுபெயருடைத்தாயலையுறமோதிவந்தணுகும். (௩௦)

பரதகண்டத்தையடைந்தவானதிதான்பாவினியிலாதினிநளினி
சரியிலிம்மூன்றுபெயருறக்கிழக்கிற்சாகரமிசையின்வானிழியும்
விரிவுறுசுசக்குச்சீதைநற்சிந்துவெனப்பெயர்மூன்றவண்விளங்கப்
பருதிசேர்ந்தொளிக்குந்திசையினிற்பரவைபடிந்திடுங்கணத்தினெறியால்.

பருதிசேர்ந்திலங்குகுணக்கொடுகுடக்கிற்பரவையினிவ்வறுபெயராய்த்
திரையுறக்ககனநெறியின்வீழ்ந்திடவேதென்றிசைக்கங்கையாய்ச்செகத்திற்
பரவியமனிதர்பவத்தினையறுத்துப்பகிரதிசானவியெனத்தா
னுரைசெயவிளங்கிப்பெருகியேகுணக்கினுவரிநீரொதுங்கவீழ்ந்திடுமால்.

செம்பொன்மால்வரையைச்சிறந்திடச்சூழ்ந்ததீவுகள்செம்புவண்பிலக்க
மும்பர்கண்மகிழுஞ்சான்மலங்குசநற்கிரவுஞ்சமுவமையில்சாகம்
வம்பவிழ்பொழில்சூழ்புட்கரமிவையேயாறேழுமாய்வளைந்ததினேழா
மம்பரம்லவணந்தேமதுத்துப்பொண்ணளைபயமயமிவைசூழும். (௩௩)

செம்புயர்நாவலிறளிவண்பிலக்கஞ்சிறந்திடுமிலவுசான்மலமா
மம்புவிமிசையிற்குசப்புலொண்குசமேயகல்வரைப்பெயர்கிரவுஞ்ச
மும்பரொண்ணிலையினகரிமானசாகமொளிகொளுமம்புயமலரோ
யிம்பரிற்கவினார்ந்திலங்குபுட்கரமாமிவையுறுந்தீவுமிப்பெயரோ. (௩௪)

நாவலந்திவுக்கிறைவனுய்வுபங்குமாக்கினீத்திரனலப்புதல்வர்
தேவர்கள்மகிழத்திகழிலாவிரதன்சிறந்திடுமிரமியனழகார்
காவலனிரண்மயான்குருகிரிலரிகவ்ன்மலிநதகிம்புருடன்
மாவுறுபாதன்கேதுமாலன்பத்திராசுவனிவர்நவமைந்தர். (௩௫)

சீலமன்னிவர்பேருறுசெம்புத்தீவினவகண்டந்திசமுமெண்வரைக
ணீலமாச்சுவேதஞ்சிருங்கமொப்பில்லாநிடதநீளேமகூடம்பொற்
கோலமேதிகழுமிமாலயம்சிகரில்மாலியவான்குளிர்சொண்மூச்
சாலவேபடியுங்கெந்தமாதனத்தோடிவையெட்டுபபிறங்கலுந்தயங்கும்.(௩௬)

உயர்பொனின்வரையைச்சூழிலாவிரதகண்டத்தையடுத்தவுத்தரதிக்
கியல்புறக்குணக்குக்குடக்களவாகவிலங்கிடும்நீலநற்சுவேத
மயர்வறுசிருங்கமுடனிவைமூன்றுவரைகளுந்தெக்கணதிசையின்
செயலுறுநிடதமேமகூடஞ்சிரிமாலயமூன்றிவைதிகழும். (௩௭)

உத்தரதிக்கினளவதாய்க்கிடக்குங்குடக்குமாதிசையினிலோங்குஞ்
சித்திரகாயமலியுமாலியவானெனும்வரைசிறந்திடுங்குணக்கி
னத்திகணிறையுங்கெந்தமாதனக்குன்றமர்ந்திடுமிவைவெட்டுமொவ்வொன்
றுத்திடும்பருமமிருசகசிரமீதுயர்ச்சியுமயுதயோசனையே. (௩௮)

# அண்டப்படலம்

உத்தரதிசையினீலமால்வரைக்குஞ்சுவேதவொண்பிறங்கற்குநாப்பண்
வித்தகரினம்வாழிரமியகண்டம்விளங்கிடுஞ்சிருங்கமீருகச்
சுத்தர்கணிறைந்துதுலங்கிடவிரணமயகண்டந்தோன்றிடுமுப்பி
னத்தியினளவாயமர்ந்திடுமகன்றகுருகண்டமருந்தவர்மலிய. (௧௯)

ஏருறுதெற்கினிடதமால்வரைக்குமேமகூடத்துக்குநடுவே
கிரிசண்டமிலங்கிடும்மாலயவரையினளவதாய்ச்செறிந்த
காரியமாகிம்புருடகண்டந்தானமர்ந்திடுமிலவணம்நிறையும்
வாரியினளவாய்வயங்கிடும்பரதகண்டமாதவரொலாமலிய. (௨௦)

விரிவுறுகுடக்கின்விளங்குமாலியவான்வரைக்குமவ்வீரைக்குநாப்பண்
சரியிலாக்கேதுமாலகண்டத்திற்றயங்கிடுங்குணக்குமாதிசையிற்
றெரிவுறுகெந்தமாதனக்கிரிக்குஞ்சிறந்திடுமுவரிக்குநடுவே
யருமறையவர்களமரும்பத்திராசுவகண்டமொன்றமர்ந்திடுமன்றே. (௨௧)

அம்பொன்மால்வரையைச்சூழிலாவிரதகண்டத்தினமர்ந்திடுஞ்சோதி
யும்பரினுயர்சங்கருடணமூர்த்தியவன்றனைத்தொழுதவணுறைவார்
நம்பனுமுமையும்நாரியர்பலரும்நலனுறவமருந்தவர்திரளு
மும்பர்களுடனேயுலப்பிலாக்களிப்போடியருவர்மறைநெறியுறவே. (௨௨)

உத்தரதிசையினிரமியகண்டத்தோங்குமச்சியவவதாரச்
சுத்தனுஞ்சோதியிலங்கலவ்வசுதமனுத்தொழுதேத்தியங்கமர்வ
னித்தர்வாழிரணமயகண்டந்தன்னினிவர்ந்திடுகச்சபமாய
வித்தகனடியைவிரும்பியேபணிவர்விஞயகன்பிதுத்தெய்வத்துடனே. (௨௩)

அவிருறுகுருகண்டத்திடையோங்கியமர்ந்திடுவராகமூர்த்தியினை
புவிமகள்தொழுதுபுனல்மலர்கொணர்ந்துபூசைசெய்துளமகிழ்ந்திருக்கும்
நவையகன்றிடவேவயங்குமிம்மூன்றுகண்டமும்நலனெலாமலியத்
தவருறவிளங்குமிளாவிரதத்தினுத்தரதிசையினிற்சாரும். (௨௪)

விரிவுறுகுடக்குத்திசையினிற்கேதுமாலகண்டத்தினில்விளங்குந்
திருவுடன்காமதேனுவைத்தொழுவார்தெசப்பிரசாபதிதனையர்
பருதிசேர்குணக்கிற்பத்திராசுவகண்டத்தினிற்பத்திராசிரவா
மரசர்கோன்றொழவேவங்கமாய்க்கிரீவமலன்வீற்றிருந்திடுமென்றே. (௨௫)

தென்றிசையரிகண்டத்தினிநரசிங்கம்வீற்றிருந்திடஞான
மொன்றியபிரகலாதன்மாதவரோடிருக்கியேதொழுதினிதிருப்பன்
புன்மொழிலகல்கிம்புருடகண்டத்திற்பொலனுறுமிராகவன்சீதை
வென்றிகொளிலக்குமணனுடன்வயங்கமேவிமாருதிதொழுதமர்வன். (௨௬)

பரதகண்டத்தின்வயங்கிடுநரநாராயணமூர்த்தியாம்பரனைச்
சுரர்முனியுடனேயருந்தவர்மனிதர்தொழுதுளமகிழ்ந்தினிதிருப்பார்
விரிவுறுமலையமங்களப்பிரத்தம்வேங்கடமகேந்திரவிந்த
மிருசியமுகமிருக்கிசகிரிகோவர்த்தனமிடபஞ்சிசயிலம். (௨௭)

நேரிலாச்சயிலஞ்சுருஙிமான்றுரோணநீலநற்சித்திரகூட
மேருநம்வேதகிரிமயிளுகமிந்திரசிலகங்ககுபம்
பாரினினுயரும்பாரியாத்திரங்கோகாமுகம்பழுதகலிமவான்
சாருறுவாரிதரந்திரிகூடமுதலியகணக்கிலாதமரும். (௪௮)

சந்திரவசைநற்றும்பிரபருணிசரியிலாதிலங்கவடோணி
கந்தமார்கிருதமாலைநேரிலவைகாயசிசிறந்தகாவேரி
சிந்தனையகற்றும்பெண்ணைபாலாறுநிகரிலாச்சக்கரவரத்தை
யந்தமார்துங்கபத்திரிவேலையலையெனக்கிளர்ந்திடும்வேணி. (௪௯)

வினையறுவீமாநதியகல்கோதாவிரிகிருவந்தைமானதிபார்ச்
சுனையுறப்பெருகுபருட்டுணிதாம்சுரகிருமதைநலவிரவை
யனமுறுமலர்சூழ்வேதசிமிருதியலைமலையுந்திரிசாமை
நினைவதன்முன்னம்வினையகலிருடிகுல்லைநேரில்கவுசிகையே. (௫௦)

சானவியமுனைசரயுநற்சரசுவதிசதமாலைநீள்சகோணை
வானவர்மகிழ்சந்திரவதைசத்தருபைமருத்துரதைவந்தையா
தீனமில்விசுவைவிகிரணியிவையோடெண்ணிலாநதிகளுமிலங்க
வாணிறைநிறையும்பரதகண்டத்தினளவினைவிளம்புதற்கரிதே. (௫௧)

சிருறுநவகண்டத்துடன்வயங்குஞ்செம்புத்தீவியோசனைநியுதம்
நேரிலாலவணவுவரியுமஃதாய்நிறைந்திடும்பரதகண்டத்திற்
பாரினிற்சனித்தோர்பலத்தினைத்தேடிச்சுவர்க்கத்திற்பயனுறப்பொசிப்பா
ரேருறுசுவர்க்கத்திருமடிபலனுற்றிருப்பர்மற்றெண்கண்டத்துறைவோர்.

மற்றையெண்கண்டத்துறைகுவோர்சுவர்க்கத்திருமடிவாழ்வுபெற்றுவந்து
பெறற்கருடிமடவார்கலவியிற்களித்துப்பொலனுறுதேவகற்பந்தான்
முற்றுநாட்டனிலோர்புதல்வனைப்பெற்றுமுடிகுவருடலினைதுறந்து
நற்றவமகங்கள்புரிந்துவான்மிசையினலனுய்ப்பார்பரதகண்டத்தோர். (௫௩)

இரண்டதாந்தீவுபிலக்கமானிலத்திலித்துமசிகுவன்சேயெழுவர்
திரண்டதோளினர்கள்பெயரினுற்கண்டஞ்சிறந்திடுஞ்சிவமியவசஞ்சீர்
தெருண்டிடவயங்குஞ்சுபத்திரஞ்சாந்தஞ்செலமிருகேமம்நல்லமிர்த
மிருண்டடர்பொழில்சூழ்பயமிவையுடனேயெழுமாகண்டமுமிலங்கும். (௫௪)

ஏழுகண்டங்கடொறுநவேலைடையவிலங்கியவனாமணிகூடம்
வேழமெண்ணிலசேர்வச்சிரகூடம்விளங்கியவிந்திரசேனம்
மாழைசேர்ந்துயர்சோதிட்டுமான்றும்பிரவருணமுமிரணியவருணந்
தாழ்விலாமேகமாலையோடேழுபிறங்கலுந்தயங்கியதன்றே. (௫௫)

அருணநீர்மலியுஞ்சிரவணையகலாங்கிரதிசாவித்திரியயம்வால்
வருணமுற்றுயர்ந்தசுப்பிரபாதைவயங்கிடும்பிகதனாமுத்தின்
றருணவெள்வளைசேர்சத்தியவரையோடேழுநதிதயங்கியதீவி
லருணயத்துடன்வாழ்சனங்களேயவர்க்கையாயிரம்வருடமாயிசுவே.

சீருறுபிலக்கத்தீவினுக்குயர்ந்ததேவதைதபனனேயரம்ப்
பாரிடையகலமிரண்டிலக்கத்திரேசனைபழுதிலாவிக்குச்
சாரமாருவரியகலமுமஃதேசற்பமீன்மணிகளெண்ணிலாத
வாரமோடணியுமரிவையர்புருடர்மகிழுவர்நரைதிரையறவே. (ருஎ)

மூன்றதாந்தீவுசான்மலமதற்குமுதல்வனுமிந்திரவாகு
தோன்றியங்களிக்குஞ்சுதர்களோரொழுவரவர்பெயராற்றுலங்கியது
சான்றவருறையுஞ்சுரோசனஞ்சரியில்சவுமனஞ்சமமிரமனக
மான்றிடுந்தெய்வப்பாருகம்பாரிபத்திரமாப்பியாயகம்பிஞாகம். (ருஅ)

ஈதெனும்பெயராலகன்றிடுகண்டமேழுக்குநடுவதாம்வரைகள்
பீதகவருணச்சாசுசம்பழிப்பில்சதசிருங்கம்பிறிதிதுவென்
ரோதுதற்கரியவாமதேவக்குன்றுயரிபகுமுதமாழுகுந்தஞ்
சூதமன்புடையவருடனேரிலாதசகசிரசதியிவையேழ். (ருக)

அனுமதியலேமோதுஞ்சினிவாலியகல்சரசுவதிநற்குருநீர்
சனையுறுரசனிதுலங்கியநந்தைதூயதாமிரோகையோடேழு
வினையகற்றியமாநதிகளுமமரவிளங்கியசான்மலத்தீவுக்
கினியமாதெய்வமெதிரிலாக்குமுதசகாயனுமிலங்கியதன்றே. (சுO)

சான்மலத்தீவினகலநாலிலக்கவோசனைநரங்கமார்மதவங்
கானவார்கலியினகலமுமஃதேயழகுறுமந்நமாவிலத்திற்
றேனகுமொழியார்கொழுனர்களுடனுந்தினந்தினமற்புதமுறவொண்
பானகுமதாமளித்துவேணுலைப்படித்தின்பமெய்துவரன்றே. (சுக)

நாலதாந்தீவுகுசமதினுறுவோர்நலனுறுமிரணியரோதாச்
சீலமார்குணத்தன்சிறுவர்களெழுவர்பெயரினாற்சிறந்திடுங்கண்டந்
கோலமார்வசுநீள்வசுதரந்திடமொண்ணுருசிருபிகுத்தங்கோதிலாத
மேலவன்றிரியுஞ்சத்தியவிரதம்விப்பிரநாமமோடேழு. (சுஉ)

சதுவிவர்சிருங்கர்தயங்கியகபிலந்தாழ்விலர்ச்சித்திரகூடம்
விதுதவழ்ந்திலங்குந்தேவரநீகம்விலங்கல்சேருறத்தரோமத்தோ
டுதையமாகிரிபோலுயர்ந்திடுவரைகளேழுவாரோங்கியதீவின்
சதையுறுகனிகடுலங்கியபொழில்கள்சூழ்ந்திடவயங்கியதன்றே. (சுங)

அந்தமாரிரசங்குல்லைமாதங்கமதுகுல்லையலையுறுஞ்சருதி
விந்தைநற்றேவகெருப்பைவண்கிருதச்சுதைவிளம்பரியமாநதைகள்வா
னந்துறுமாலையிவையுடனேழுநதிகளும்விளங்கியதீவின்
முந்துதேவதையாயுதாசனனமரமுநிர்ச்சியில்புருடர்களுறைவர். (சுச)

குசமெனுந்தீவினகலமெட்டிலக்கவோசனைகூறுதற்கரிய
சுசியுறுதுப்புப்பரவையுமஃதேதூயவத்தீவினினுறைவோர்
கசவினமிவுளிக்கிறைவராய்வயங்கிக்கவினுறுமரிவையருடனும்
நிசியுடன்பகலும்பிரிவிலாதையாயிரம்வருடம்நிறைந்தமர்வர். (சுரு)

அஞ்சதாந்திவுகிரவுஞ்சகிருதம்பிநட்டனத்திவினுக்கிறையாம்
வஞ்சமிலரசன்சிறுவர்களெழுவர்பெயரினால்வயங்கியகண்டம்
விஞ்சுமாமனம்வண்மதூரகமேகபிருட்டமாமேவிடுசுதர்கள்
மஞ்சுசூழ்சிகரவிரிசிட்டமுமெலாகிதாருணம்வனமுடனேழே. (சுசு)

இவையதாங்கண்டத்திடைக்குறுக்குநவங்கிலங்கியவளாகள்சுக்கிலஞ்சொல்
லுவமையில்வருத்தமானம்போசனதீருறப்பெருங்கணமாறுபோதுர்
தவருறையவனுந்தனமநந்தனம்வண்சருவதோபத்திரமிவையே
யுவிருறவிலங்குந்தமகியக்கிரிபோலவழுகுறவமர்ந்திடுமன்றே. (சுஎ)

அயமுறும்பையையலைகொளுமமுதவோகையாரியகைதீர்த்தவதி
கயலினமுகளுந்திருப்பதியூருபவந்திரற்கவினுறுபணிலஞ்
செயுலுறவணங்கித்திரிபவித்திரசுக்கிலையுடனேழெனச்சிறந்தே
யுயர்தவர்விரும்புநதிகளக்கண்டந்தொறுமகன்றுலாவியதன்றே. (சுஅ)

அகல்கிரவுஞ்சத்திவினுக்கமர்ந்ததேவதையறனுறுவருணன்
புகல்வதற்கரிதாயுயருமத்தீவிலகலஞ்சோடசலக்கம்பொலனார்ந்
திகழ்விலவனையாஞ்சலதியுமஃதேயிலங்கியதரையினினமரும்
நகினகமெனச்சொல்நவிலுநாரியரும்புருடருமலனுற்றுமகிழ்வார். (சுகூ)

ஆறதாந்தீவுசாகமத்தலத்துக்கரசன்மேதாதியறன்மெய்
யூறுசித்தையனுமவன்றருமைந்தரொழுவர்கள்பெயரினாலோது
மாறிலாதிலங்குபுரோசவமனோசம்வயங்கியதுமநல்லநீகம்
வீறுசித்திரரோபம்வெகுரூபம்விகிரியமிவைகண்டமேழு. (எ0)

இலங்குமீசானமிகழ்விலபலபத்திரந்தெய்வபாலமோர்மிருத்துத்
துலங்குறுசிங்கம்வயங்கியசதகேசரந்துய்யவிரசுரோதந்தோல்
வலங்கொளரிசேர்மகாநசமிவையோடேழுமால்வரையுமத்தீவு
நலங்கொளவுயர்ந்தமாழையாலவிர்கொண்டோங்கியநாகமாமெனவே. (எக)

அனகைநல்லாயுதோற்புகைசிருட்டியகல்பராசிதைபாபெவர்க்குந்
துணியகன்றிடவேவிளங்குபஞ்சபதிசகசிரசுருதியிவ்வேழு
வினையகல்நதிசேர்சிகரிலத்திவுக்குறுந்தெய்வகாலந்தவிபுலை
வனிதையருடனும்வயங்கியபுருடர்மகிழுவர்நாதினையறவே. (எஉ)

ஆசறவயங்குஞ்சாகநற்றீவினதலநாலெட்டிலக்கத்தி
னெசனையனந்தன்மிசையரியுறும்பாலுவரியுமன்னதேயாமக்
காசினியமரும்புருடருங்கவின்கொள்கயனிசர்கண்ணியர்தாமு
மாசகல்சுவர்க்கத்தென்மடங்காகிவைகுவர்மறைநெறியுறவே. (எ௩)

ஏழதாந்தீவுபுட்கரமதனினிலங்கியவீதிகோத்திரன்றன்
வாழவேசனித்தசிறுவர்களிருவர்பெயரினால்வயங்கிடும்பொழில்கள்
சூழிரமணகந்தாதகமெனவேதுலங்கிருகண்டத்தினுப்பண்
மாழையார்கிரிபோன்மானசோத்திரமென்றொருகிரிவளைவுறச்சூழும். (எச)

தூயபுட்கரத்தீவகலமெட்டெட்டாமிலக்கயோசனையெனத்துலங்கும்
பாயலையுறவேவிளங்கவப்பரவைபகருமவ்விலக்கமேயாகும்
வேயுறுவனாகள்மிடையிரமணகந்தாதகமிருகண்டம்விளங்கத்
தேய்விலாதுயரும்பிரமருபமாயதேவனைத்தொழுவாரங்குறைவார். (எரு)

அயுதமஞ்சுறுமோசனையுயர்மானசோத்திரமாகியகிரிமே
லியமனிந்திரனொடெண்மருமமரவெண்டிசைதொறுமுளநகர
மயர்வறவுயரத்தீவினுறைவோர்வயங்கியபிரமமாந்தேவைக்
கையினயமலர்கொண்டருச்சனையியற்றியயுதவாண்டமருவர்களித்தே. (எசு)

செம்பொருவிலக்கமிலக்கமோரிரண்டுசிறந்திடுஞ்சான்மலநாலு
வம்பவிழ்செறிகாக்குசமிருநாலுவயங்கியகிரவுஞ்சமீரெட்
டும்பர்கண்மருவுஞ்சாகநாலெட்டஞ்சொலிதிகழ்புட்கரமெட்டெட்
டம்பரமேழினகலமுமப்பரத்தீவுகளிலக்கமேயாகும். (எஎ)

தீவுகளேழினகலநூற்றிருபத்தேழிலக்கந்திரைப்பரவை
மேவிடமஃதேயிருவகைகூடவிரண்டரைக்கோடியோசனைமேல்
பாவலிலக்கம்நாலெனப்பகர்வர்பழுதல்புவரியினப்பாற்
றேவர்கள்சரிப்பர்கோடிமேற்றொண்ணூறிலக்கம்வாசனைசெறிவிடமே.

உவமையிலமார்செறிவிடமிலக்கம்நூற்றுநாற்றொண்ணூறவையொழிவி
னெவர்களுமியங்காவெளியிடமெட்டுக்கோடிமேலிலக்கமோராறு
நவையறுதீவும்பரவைகொளிடமீரண்டரைக்கோடிநாலிலக்க
மிவையெலாங்கூடுந்தொகைகளீராறிரண்டுகோற்கோடியாயிசைப்பர்.

சேடுறுந்தீவுபரவைவிண்ணவர்கள்செறிவிடமெல்லவுஞ்சேர
வாடகவரையின்வடக்குறுதிசையினகலம்பன்னிரண்டரைக்கோடி
நீடுதெக்கணமுந்துணைக்கொடுகுடக்குங்கீழ்கிலுமுத்திசையகலங்
கூடநாற்றிசையுங்குறைவில்பஞ்சாசட்கோடியாய்விளங்கிடுமன்றே. (அ0)

அம்பொன்மால்வரையைச்சூழநாற்றிசையின்யோசனையைம்பதுகோடி
யிம்பரினுறநற்சக்கிரவாளகிரியண்டமுகடுறவெழுந்தே
யும்பர்களுறையுமடிக்கனமீராறுடனரைக்கோடியோசனையாய்
வம்பவிழ்பொழிலார்தீவுகளுவரிவெளியிவைவளைத்துத்தோன்றினவே. (அக)

இலகியேயுயர்நற்சக்கிரவாளகிரியின்மேலிந்திரனியமன்
றுலங்கியவருணன்றனபதியிவர்கள்நால்வர்க்குந்தூயதாநகரம்
புலன்களைந்தவொண்மனோந்திராபுரிநற்சயமினிநிம்ரோசதிபொன்
னலங்கிளர்சிகரவிவர்பதியிவைகளுமாபுரிகளுமமர. (அஉ)

பரவையேழுந்தீவுடனிமையவர்களுறுமிடமுறுதுபார்கூடி
யுரைசெய்பன்னிரண்டோடரையறுகோடியோசனைசக்கிரவாள
வரையடிக்கனமிவ்விலக்கமேயாமம்மலையினப்புறத்தண்டபித்தி
யிருபதோடைந்தாங்கோடியோசனையாமிரவிதன்னவிரிலாதிரவாய. (அங)

சிந்துராலுடன்மூன்றெழுதீவமார்செறிவிடமவிருப்பாங்கு
வந்தமாயதனைவளைந்திடும்பிறங்கலடிக்கனத்தப்புறத்திரவி
வந்திடாதிரவுமலியசீளண்டபித்தியைமருவிடுகிலமுஞ்
சந்துசெய்தொகைதானன்பதுகோடியோசனையென்றுசாற்றுவரால். (௮௫)

மேருவேமுதலாயியலுமண்டத்தின்பித்தியீறுகிடவிளம்பும்
பாரொருதிசையின்றொகைகளோசனைதானன்பதுகோடியாய்ப்பகர்வர்
ஓர்கெழுமாழிப்பிறங்கல்காப்பவர்கடெற்குயர்சங்கபாற்குடக்குச்
சோர்வில்பொன்னிரோதாவுத்தரதிசையிற்கேதுமான்சதனுவாக்கிழக்கே.

இரவிதேர்த்தட்டினகலமொன்பதினாயிரத்திரோசனையதாயிலங்க
விரிவுறவுருளாழியின்றனைவழியினவினங்கியவிரிசிகீளந்தா
விருபதாயிரத்திரட்டியோடையாயிரத்திரோசனையதாயிசழ்வில்
தூரகமேழுறவேவலவனுமருணன்றலங்குவனவிரதத்தின். (௮௬)

இரவிதேர்க்குகிளையேழ்பசந்தகவாயிலங்குமரப்பூண்டிடுநுகந்தா
னுறைசெயிருமூன்றிலக்கயோசனையாழ்பார்த்திடவலவனுமருண
னூரனொடுகொரத்தாற்கொளுவிடுமூட்கோலிருபத்தாறிலக்கவோசனையாம்
பரியுறுவையந்தனைக்கொடாண்டிருளும்பண்டியொன்றிலங்கியதன்றே. (௮௭)

வானவர்மகிழும்வாலகில்லியர்கள்வயங்குமாங்குட்டத்திற்பாதி
யூனுறுமுடலராறபதாயிரம்பேருவந்துசேவிப்பவாழ்பதங்கன்
தானுறுமிரதத்தாழிநேரில்லாமானசோத்திரவரைதன்மேற்
றுன்வரிரியத்தவர்களுண்மகிழத்தயங்கியங்குருண்டிடுமன்றே. (௮௮)

மானசோத்திரமாவரையினிருளுமாழியின்வயங்கிடுமச்சின்
மேனுனியளவல்லுயர்ந்திடுகீளம்விளம்பிடினூற்றன்பத்தெட்டா
மூனமிலிலக்கயோசனையாங்கொருகலைமேருவுச்சியினிற்
றுனமர்ந்திடவேதயங்கிடுஞ்செயலைச்சாற்றுதற்கெளியதன்றம்மா. (௮௯)

உரனுறவருமானசோத்திரத்தினுத்தரதிசையுயர்ந்திடுமவ்
வரையிடையிரதத்தாழியுட்புறத்தின்வந்திடினுத்தராயணமாம்
விரிவுறுபுறவோரத்திடையுருளின்விளம்பிடுதெக்கணாயனமாஞ்
சரியுறநடுவின்வருதினமேடந்துலாத்திடையிரண்டுநாட்டானே. (௯0)

இரவிதன்பதமோரிலக்கயோசனைசந்திரன்பதமதனின்மீதிரட்டி
சரியிலாவிதுவின்பதத்தின்மேன்மூன்றுலக்கயோசனையுடுத்தயங்கும்
விரிவுறுதாராகணவுலகத்தின்மீதிரண்டிலக்கயோசனையின்
சுரர்களொன்றார்தங்குருவெனவயங்குஞ்சுக்கிரன்மருவுவனன்றே. (௯௧)

உசனனெண்பதத்திரண்டிலக்கத்திரோசனைமேற்புதனமர்வன்
வசையிலாப்புதன்றன்பதத்தின்மீதுபையவிலக்கயோசனையிடைவயங்குங்
குசனவன்பதத்தின்உபையயோசனையிற்குலாவிடுங்குருவவன்பதமேற்
கசியுறவுகவிலக்கவோசனையிற்றுலங்கியங்குயருவன்காரி. (௯௨)

சனியமர்பதத்தின்மீதினிலேகாதசவிலக்கத்தின்யோசனையின்
வினையறத்தவஞ்செய்யிருடிகளெழுவர்விளங்குவரவர்பதமீதி
னணியுயர்பதமூன்றிலக்கயோசனையினான்முகன்முதலினோர்துதிப்பத்
துனியறச்சிறியமதலையாய்த்தவஞ்செய்துருவன்வீற்றிருந்திடுமென்றே. (௧௯௩)

யோசனைமுப்பத்தொன்பதினிலக்கச்சோடசவாயிரமுயரு
மாசுகப்பாசமிலங்கிடவதனையயமுறுதவனன்றேரச்சாய்
மாசகன்றெழுந்தமேருவுச்சியினின்மருவிநேர்ந்தடியிடைப்பொருத்தித்
தேசடைத்துருவன்சோதிசக்கரத்தைத்திகழ்கையாற்றிருப்புவனன்றே.

இரவிதன்பதமேமுதலதாயுயர்ந்தபதமெலாமிலங்கிடச்சுழலுஞ்
சரியிலாவிரிவாஞ்சோதிசக்கரத்தைத்தன்னுடைக்கரத்தினாற்றுருவன்
ஒருதரந்திருப்பவொருதினமாகவியற்றியங்கொளிகொளவமர்ந்தான்
திருமகள்கொழுநனருளினாலெவர்க்குநிவந்திடும்பதத்தினிற்சிறந்தே. (௧௯௫)

துருவன்றன்பதமேற்கோடியோசனையிற்றுலங்கிடுமேகன்மகாலோகஞ்
சரியிலங்கதன்மேலியோசனையிரண்டுகோடிமீதிற்சனலோக
மருவமீயெட்டுக்கோடியோசனைமேற்றவவுலகம்வைகுமதன்மே
லுணாசெய்நாலெட்டுக்கோடியோசனைமேலொளிருமாற்சத்தியவுலகம்.

சரியிலாவயன்வாழ்சத்தியவுலகமிசையினிற்றயங்கியவண்டப்
பெருமையார்முகட்டினளவதாந்தொகையைப்பேசிடினூறுகோடியின்மே
லுணாசெயினன்பத்தெட்டிலக்கமுமுப்பதாயிரயோசனையாகுந்
துருவன்றன்பதத்திற்கீழுளவெவையுமவாந்திரவெள்ளஞ்சூழ்ந்தழியும். (௧௯௭)

அரியினல்லவிராயமர்சிஞ்சுமாரபிரசாபதியகலியவம்பொன்
கிரிமிசைநிகரில்குண்டலாகாரமாகவேதன்சிரங்கீழாய்
விரிவதாயமர்வோன்வாலினிற்றுருவன்விளங்கினனவனடிக்கூலத்
திருவர்தாதாவிதாதாவெனும்பேரிலங்குதேவதையமர்ந்திடுமால். (௧௯௮)

அரையினின்முனிவரொழுவருமமரவகலியவலச்சகனத்திற்
சரியிலாதுயரும்புனர்வசுவயங்கத்தயங்கியவிடச்சகனத்தின்
விரிவுறுபூசமிலங்கத்தெக்கணப்பின்காலினாதிரைவிளங்க
வுரமலியிடப்பின்காலினாயிலியமொளியினோடுறைந்திடுமென்றே.

முன்வலக்காலின்விசித்துவம்வயங்கமுரணுறுமுன்னிடக்காலின்
மன்னுமுத்திராடம்வலக்கணினோணமிலங்கிடமறுவில்பூராட
மின்னும்வாமக்கண்மிசையினவிட்டம்விளங்கிடும்வலச்செவிதன்னி
னின்னலில்வாமச்செவியினின்மூலமியல்புறவமர்ந்திடுமென்றே. (௨௦௦)

வாமபாகத்தின்மகமுதலனுடமளவெட்டுநாள்களும்வயங்குந்
தாமமாவலமார்பிடத்தினிலமர்ந்துதயங்கியமுற்கொழுங்கோலாம்
நாமமேமுதலாமான்றலையளவாநவின்றிடுநாள்களீர்நாலுந்
தீமையில்வலக்கந்தரத்திடைக்கேட்டைசிறந்திடுந்திசையெலாமிலங்கி.

இடச்சிரதரத்திற்சதையமேருறநாளிருபத்தெட்டிவ்வகையமருங்
குடத்திடைப்பிறந்தகுறுமுனிமேலிற்கபோலத்திற்குறுகியேயமரு
மடர்த்தெழுமறலிகீழ்க்கபோலத்திலமருமானனத்தின்மங்களன்முன்
திடத்துடன்வயங்குமேட்டிரந்தன்னிற்சிறந்திடுநிகரிலாமந்தன். (௧௦௨)

வெரிநிடைமுரிப்பிற்சுரர்குருவயங்கும்விரிவுறுநடுவின்மார்பிடையி
னிரவிவந்தமருமிருதயந்தன்னினிலங்கிடுமிருடிகேசன்முன்
சரியிலாமனதிற்சந்திரனமருர்தயங்கிடுமுசனனாபியினி
னிருமுலைமிசையினுறுவர்கடெய்வவயித்தியரொழில்மலிந்திடவே. (௧௦௩)

சீருறுபிராணன்புதன்பரந்ததனிற்சிறந்திடுமிராகுநேரில்லா
வாரமாரும்முட்கழுத்திடைக்கேதுவயங்கிடுமமரர்கள்முதலா
வேருறவெவருமுரோமமீதமர்வரிவ்வகையிரணியமலியு
மேருவுச்சியினினுயர்சிஞ்சுமாரப்பிரசாபதிவிரிவுடன்மேவும். (௧௦௪)

இரவிதன்பதத்திற்றாழ்வுறவயுதயோசனையிராகுகேதுக்க
ளுரனொடுமமர்வரவர்பதத்தின்கீழ்யோசனையீரையாயிரத்திற்
சரியிலாச்சித்தர்வித்தியாதரர்கள்சாரணரிலங்குவரதன்கீ
ழிருபதாயிரத்திற்பாதியோசனையினியக்கராக்கதர்கள்பேயமரும். (௧௦௫)

அவனிமீதுயரச்சதவியோசனையினுசுகன்பதமதின்மாற்கத்
துவணையிலெழிலியுறைந்திடுமேதன்கீழ்ப்பறவைகள்சஞ்சரித்தோங்குந்
தவருறுதரணிமிசையினிற்றாழச்சததசயோசனைதன்னிற்
கவினுறுமதலமதற்கிறையசுரபலன்மயன்காதலனன்றே. (௧௦௬)

விதலலோகத்தின்விடையுறுமிறைவனாடகேசுரனெனவிஞ்சி
யெதிரிலாவுமையோடிலங்குவன்சுதலலோகத்தின்மாவலியிருப்பன்
விதமுறவகலுந்தராதலலோகமயேசுரன்விளங்கியங்கமர்வன்
கதமுறநிவர்தெக்ககனமர்ந்திடுவன்மகாதலலோகத்திற்கதித்தே. (௧௦௭)

விரிவுறுமிரசாதலவுலோகத்தின்விளங்குவரெண்ணிலாவசுரர்
சரியில்பாதாளமிசையின்வாசுகியேமுதலினோர்தயங்கியங்குறைவர்
முரணுறுமுரகவுலோகம்யோசனைதான்முப்பதினாயிரத்தின்கீ
ழரவரசாயவனந்தன்வீற்றிருக்குமாயிரமுடிகளுமிலங்க. (௧௦௮)

ஏருறுமநந்தன்சகசிரமுடிகளிலங்கிடவெழுகடல்வளையாற்
சீருறுமீரேழுலகெலாங்கடுகுபோன்றவண்டோன்றவோர்சிரத்திற்
சாரவேசுமந்துதயங்கினானிகரில்சதுர்த்தசபுவனமாரண்டம்
நேரிலாதுயரும்பெட்டிமூடியும்போனிறைந்தன சகலமுமுறவே. (௧௦௯)

தரையினிற்கதுமையெழுபதாயிரத்தின்யோசனைதாழ்ந்தவேழுலகு
மிருமைசேரனந்தனிருப்புமோரிலக்கமென்றளவாய்ப்புவவுலகும்
பருதிவைகிடமேமுதலவாய்த்துருவன்பதமளவாச்சுவவுலக
மிருவகையுலகவுயரம்யோசனைநாற்பதிலக்கமென்றியம்புவரால். (௧௧௦)

சரியிலாமகலோகஞ்சனவுலகந்தாழ்விலாதுயர்தவலோக
மரைமலரயன்வாழ்சத்தியவுலகமிவையெனவருமொருநாலா
யிருளகல்பதத்தினுயரம்நாற்பத்துமூன்றதாங்கோடியோசனையென்
றுரைசெய்வரிந்தவுலகுகள்பிரமனெழிவுகாலத்திடையழியும். (கககூ)

வெறிமலரயன்வாழுலகமீயண்டமுகட்டளவாறுகோடியின்மீ
துறைகுவரன்பதுடனிருநான்கினிலக்கத்தின்முப்பதாயிரமா
யுறவயோசனைகாருணியவைகுண்டமதினுறுந்தொகையுறக்கூடி
கிறையும்பஞ்சாசத்கோடியோசனையென்றறிஞர்கணிகழ்த்துவரம்மா.

அயனெடெவ்வுலகுமமைந்தவிவ்வண்டத்தப்புறத்திற்பதின்மடங்காப்
பயமுறுமதனையதிற்றசமடங்காப்பரந்துறவளைக்குமக்கினிதா
னயமிலவ்வழலைப்பதின்மடங்காகிநண்ணியேவளைந்திடும்பவன
னுயர்வுறவறைகாற்றினைத்தசமடங்காவளைத்திடுமொப்பிலாகாயம்.

பவனனைவளையுங்ககனமுள்ளமிழ்த்திப்பரந்திடும்பிரகிருதியினிற்
புவனமார்ந்திலங்குமனந்தவண்டங்கள்பொலிந்திடும்பிரகிருதி
உவமையிலரிதன்சத்தியாதாரமாகவேயுறையுமப்பரமன்
நவையறுந்தனக்கேதானுரமாகநலனவிர்வைகுண்டத்தமர்வன். (ககச)

அனந்தனுய்நீளவரையதாய்மானசோத்திரப்பிறங்கலாயளப்பில்
கனந்தரநிவருஞ்சக்கிரவாளகிரியதாய்க்கடல்களுமாகி
யனந்தமாமருணச்செய்யவாய்ச்சிஞ்சுமாரப்பிரசாபதியாகி
வனந்திகழண்டமெவையுமாமாலின்செயல்முனிமாதினுக்கறைந்தான்.

அண்டப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கடுகூஅ.

---

## கடு. வது—பிருதுச்சக்ரவர்த்திப்படலம்.

அண்டமெண்ணிலாதபடைத்தவையிடையினமர்ந்தளித்தழித்தெதிரில்லா
முண்டகமடந்தைகொழுநனேயாகிமுளரியோன்முக்கணனுகிக்
கண்டகர்மடியக்கரத்தினைம்படையைக்காட்டியமுராரிசேவடியைத்
தொண்டர்காடொழுமின்றனியறவழியாப்பதத்தினிற்சூழ்ந்தியாமுய்ய.

அரிபடைத்தருளிவந்திடுமண்டச்செயலினையருந்தவனறையச்
சரியிலாவிதர்ப்பனருளுருக்குமணித்தத்தைகேட்டுளங்களிப்புற்று
விரிவுறுமுலகிற்பின்னருமுராரியிற்றியவித்தகம்விளம்பென்
றுரைசெயப்பிதுவாயுய்ரரிசெயலையுத்தமிகேளெனவறைவான். (உ)

நெறிகொளுத்தானபாதமன்மரபினிகரிலாவங்கராசனுக்கு
மறனுறுமதன்மதேவதைமகளாஞ்சுநிதிமான்பயந்திடுமதலை
யறனெறியறியாவேனனுமரசனவனிவிண்ணடுங்கிடத்தோன்றிக்
கறவையான்சிசுக்கள்வனிதையர்திரளைவதைத்தனன்கரத்தினுல்முறித்தே.

கூவலிற்சிசுக்கடி ரள்களைவிடுத்துங்கோவினைக்கரத்தினால்முறித்தும்
பாவையரினத்தைநிலத்தினிற்புதைத்தும்பவமுறவேயெழுமவனே
காவலான்மாதாமகனெனுங்கொடியவதன்மதேவதையினைக்கடுப்ப
மேவிடவவனைப்பயந்திடுமரசன்மிகமெலிந்துளநடுங்கினனால். (௪)

விறலுடையரசர்கோன்சுதனனவேனனுக்கறநெறியுரைத்தீண்
டறனலாவதையையொழித்தியென்றிடவுமதன்மதேவதைமகள்சுதனு
மறுவுறுகுணத்தோன்மறுத்தடர்விடம்போற்கொலைசெயமன்னவன்றிகை
நெறியறுமதலைதனைப்பயந்தவர்கணிரையம்விட்டகல்கிலரென்றான். [த்து

துன்மதிமலியுமதலையைப்பயந்தோர்தம்மினுஞ்சுதர்களைப்பெறுதார்
நன்மையுற்றவராமெனமனனவின்றுநலனிலாதவரொடுமிருத்தல் [ளு
புன்மையென்றிகழ்ந்துபுலன்களையடக்கிப்பொருக்கெனத்தவஞ்செயப்போ
னுன்மதமடுத்தங்கறிவிலாவேனனுடவர்களையடர்ந்துலகாண்டான். (௬)

மகஞ்செயாதொழிமின்குருக்களையிகழ்மின்மறையவர்தங்களைத்துறமின்
செகஞ்சிறப்புடையதெய்வபூசைகள்செய்யாதிருந்தானங்களைவையு
மிகழ்ந்துநீரெவையுங்கொடாமலேயதன்மமியற்றுமினிரந்தவர்க்கொன்று
முகங்கொடாதடர்மினென்றுமாபேரிமுரசறைவித்துலகாண்டான். (௭)

மறையவர்நடுங்கக்கயவர்கள்மகிழமந்திரத்தவர்மனஞ்சலிக்க
வறநெறியழியமுடிகவித்தரியாசனத்தின்மேலமருமன்னன்பாற்
குறைவிலாமுனிவரனுகிநான்மறையினின்சொலாற்கொடுமையையியற்றன்
முறைமையன்றெரிவாய்நிரையத்துள்விழுதியென்றுதாம்பின்னருமொழிவார்,

நீதியால்மறையினெறியினைநடத்திநிகரில்செங்கோலினையோச்சிப்
பூதலந்தனையாண்டிருத்தியேன்மனவிப்புவியுளோர்செய்திடுந்தரும
மாதவமகங்கடனிலுனக்காறிலொன்றுறவருமுன்றன்பிதுக்க
ளுதறுகெதியையடையநீசுவர்க்கஞ்சேருதியாமெனச்சொன்னார். (௯)

சதுமறைமுனிவரிவையெலாமுரைப்பத்தருமமில்லெனமன்னன்மொழி
விதிமுதலெவர்க்குமுலோகநாயகனெனென்சழல்விரும்பிநீரோதிக் [வான்
கதுமெனமகங்களியற்றுமினிலாதகணவனையொருவிவேறொருத்தி
பதிதனையணையுமகளிரைநிகர்ப்பீரென்றிவைபகர்ந்தனனன்றே. (௧௦)

பாவமார்நிருபனிவைமொழிந்திடலும்பழுதிலாமுனிவர்கள்கனன்று
சீவனீவிடுதியெனச்சபித்திடவேசிறப்பிலாவேனனங்கிறப்ப [து
மேவியாண்டனையாஞ்சுனீதிமற்றவன்றன்குரம்பையைத்தயிலத்தின்விடுத்
மாவடுவெகிரினிவரிருவிழிநீர்மலிந்திடக்காத்தனளன்றே. (௧௧)

சீருறுமுனிவர்கதமுறச்சபிப்பச்செகதலமாளுமன்மடியச்
சோரர்கள்மிகுத்துமனுநெறியழியச்சுருதிசொல்குலவருணத்தி
னேரொலாங்குலையவவனியிற்பழனத்தினில்விபசாயங்களிறப்பப்
பாரிலெவ்விளையுமகன்றிடமடவார்பதிவிரதங்கள்போயினவால். (௧௨)

இந்திரதேவதையின்வழியினிலொழுகியிணையிலாவிறையினைநினையாப்
பதிதர்தமுளத்திற்புலன்கள்போற்சிலரப்படியுளோரலைந்திடக்கண்டு
சதுமறைமுனிவர்திரளெலாமணுகிச்சரியிலாச்சுனீதியாமாதின்
சுதனிடத்திணையில்மகன்பிறந்தவனிதுலங்கவாழும்படிநினைந்தார். (கரு)

இடரெலாமகலத்தவரெலாமணுகியிறந்திடும்வேனனினுருவைக்
கடையவக்கணத்தினிருநயனத்திற்கனலுறக்கரத்தின்வில்லேந்தி
விடமெனக்குஞ்சவுருவனாய்த்தழலால்விரிந்திடுமெரிநவிர்பிறங்க
விடியெனவதிர்த்தீண்டியாவரைவதைப்பனெனுமுரைபேசியேயெழுந்தான்

உருமெனவதிர்த்துப்பவமெலாந்திரண்டவுருவனாயெழுந்தவன்றன்னைக்
கிரியுறைமுனிவரனைவருநோக்கிக்கிராதனாயொழிதியென்றம்மன்
னிருகையைக்கடையவரியினதுருவாயிணையிலாக்குமரன்வந்தெழவே
திருவினல்லவிராய்ச்சிறந்ததில்வனிதைதேவர்கள்போற்றிடச்செனித்தாள்.

எதிரிலாச்சுதனாயெழுந்தவன்றன்னையிணையிலாவரியிவனென்று
பிருதுவெனப்பெயரிட்டழைத்தனர்திருவாம்பெண்ணினையரிச்சிசுவெனத்தான்
சதுமறைமுனிவர்மொழிந்தவன்றனக்குத்தாரமாயிவடனைவிதிப்ப
விதியொடுவலாரிதுதித்திடமணந்தான்விண்ணவர்மலர்மழைபொழிய.

துந்துபிமுழங்கச்சுரர்மலர்பொழியத்துறந்தவர்தோத்திரஞ்செய்ய
வந்தணரினநான்மறையினாலாசியறைந்திடவரிச்சிசுப்பதியாஞ்
சுந்தரப்பிருதுவின்சிரமிசைமணியாற்றுலங்கியபொற்கிரீடத்தைக்
கந்தமாமலரோனிருகையால்வாங்கிக்கவித்தனனுலகெலாமகிழ. (கஎ)

தனபதியரியாதனமிடவருணன்றரளமார்சத்திரங்கொடுப்ப
வனிலன்மாமணியாராலவட்டத்தையளித்திடவறனெழினந்தாத்
தனிமலர்மாலையுதவிடச்சுடிகைசதமகனீய்ந்திடமறலி
கனமுறுகதையைத்தரக்கவசத்தைக்கடிமலர்க்கிறையவன்புனைந்தான்.

நாமகளுலகெண்டரளமாவடத்தைநல்கிடச்சக்கரந்தன்னைப்
பூமகள்கொழுநனளித்திடத்துவட்டாப்பொலனுறுமிரதத்தைக்கொடுப்பச்
சோமனைச்சடையிற்றரித்தவன்றெசசெந்திரநல்வாளீய்ந்திடத்துலங்கும்
காமன்வெண்கலிங்கையானவன்றவளக்கவனமாநாலுதந்தனனால்.

அரனிடப்பாகத்தமர்ந்தவள்சதசந்திரமெனுங்கேடகமளிப்ப
வுரனுறுதனுவையுதாசனன்கொடுப்பவுருளையொன்றுடையதேர்வைகு
மிரவியெண்ணிலாதசரங்களீய்ந்திடவேயிரண்டுபாதுகத்தினைவசுதை
யருளநற்சுவர்க்கத்தமருவோரலங்கலுறுவெறியலங்கலையுதவ.

நாட்டியம்வாகிந்திரமகாசுகிதநவினந்தத்தானமிந்நான்கும்
வாட்டமிலுயர்கேசரர்கொடுத்திடநீள்வாரிதிவலம்புரிவழங்க
வீட்டமாரிவுளியிலங்குமாதேருக்கிடமதாநெறிநதியுதவப்
பாட்டினானிகரில்சூதர்மாகதர்கள்பழுதில்வந்திகர்புகழ்ந்தனரால்.

வந்திகர்கிகரில்மாகதர்சூதர்வழுத்திடப்பிதுமொழிவான்யா
னெந்தவீரியத்தையியற்றினனென்றீண்டியம்புதிரிலாததுபுகழி
னிந்தனைய துவாமென்னைநீர்துதிச்சொனிகழ்த்துவநன்றலவினையில்
சுந்தரவரியின்சகசிரப்பெயரைத்தோத்திரஞ்செய்யுமென்றுரைத்தான்.

பிருமனனிவையைப்பேசமாகதர்கள்பிறிதிலாச்சூதர்வந்திகரு
மெதிரிலாவிறையைமகிழ்விநூனேக்கியிம்புவாரிருடிகளுனைத்தான்
விதியினையருளுமுராரியாமென்றும்வேதசாத்திரம்விரையெல்லா
முதவிநீளவனிதுலங்கிடப்பளமேடொத்திடத்திருத்துவையென்றும். (௨௫)

சரியிலாநெறிகட்கதிக்ரமம்பிறர்தந்தாரசகோதரனென்று
மாநமறைவழாமல்மகங்களைமுடித்துமந்தணர்க்கெண்ணிலாத்தானம்
புரிகுதியெனவுஞ்சகலசற்குணமும்பொருந்தியபுருடனீயென்றும்
விரிவுறுமுனிவருரைத்தசொற்படியேவிளம்பினம்யாமெனத்துதித்தார்.

பாவலரவைகடுதித்திடநிகரில்பங்கயச்செல்வியையிகராந்
தேவியாமெழில்கொளரிச்சிசுவுடனுஞ்சிறந்துலகாண்டிடுநிருப
னேவியமொதுங்குமுருவுடைவிசுதாசுவனெனுமதலையையுதவிப்
பூவினிலுறைவோன்வலாரிபுத்தேளிர்புகழ்ந்திடப்படியையாண்டனனால்.

வேதசாத்திரங்கள்விரைகளுமிலாமல்வெறுமையாய்மனிதர்களிரங்க
நீதிசானிருபனவனிமேற்கோபநிறைந்திடவிரதமீதேறி
மாதிரம்வெருவவலம்புரிமுழக்கிவரிவிறுஞெலியண்டத்தப்பாற்
போதவேயழலார்கிலீமுகந்தொடுத்துப்புவியினையடர்ந்தனனன்றே. (௨௬)

நிருபர்கோன்சினத்தோட்டர்ந்திடவெருவிநிலமகடேனுவாயோடி
யரனயன்வலாரிமுதல்விண்ணேரிடத்தினடைந்திடவவர்கடாங்கிலாது
திருமகள்மகிணனரியினல்லுருவாச்சிறந்திடும்பிதுவினையடைந்து
சரணமுன்பாதமுனிவொழியெதுவேண்டினும்யான்றருகுவனென்றுள்

அவனிமின்னிவையையறைந்திடவரசனருள்புரிந்தவடனைநோக்கி
யுவமையில்விரைகள்வேதசாத்திரங்களுதவுதிநீயெனவசுதை
கவினுறுநிருபவிவையெலாந்தருவன்கன்றுகொண்டேகறவென்ன
நவையறுமுனிவரரனயன்வலாரிகலனுறமனனிவைசெய்தான். (௨௮)

துலங்கியசுவாயம்பூமனுத்தனையேதுயகன்றுக்கிமாநிருப
னிலங்கியவிரைகளனைத்தையுங்கறந்தானிருடிகள்சுரர்குருவினையோர்
நலங்கிளர்குழக்கன்றுக்கியொண்வேதநான்கொடுசாத்திரங்கறந்தார்
பலங்கொளவிமையோர்வலாரிகன்றுகக்கறந்தனர்சோமபானத்தை. (௨௯)

மருளுறுமசுரர்பிரகலாதனைக்கன்றுக்கியேமதுவர்க்கங்கறந்தார்
விரைவினிற்சித்தர்கபிலன்கன்றுகவிளங்கியசாங்கியங்கறந்தார்
சரியில்கெந்தருவர்கவினுறுவிசுவாவசுவொருகன்றதாய்ச்சார
விருகமுமிகிலங்குகாந்தருவர்மதுக்கறந்திடப்பினரன்றே. (௩௦)

மாயதேவதைகள்மயனைக்கன்றுக்கிமற்றவையெல்லவுங்கறந்தார்
பேயுயர்பூதயியக்கராக்கதர்கள்பிஞ்ஞகப்பிரானைக்கன்றுக்கி
நேயமோடிரத்தம்நிறைந்திடக்கறந்தார்நிகரிலாமாசுணவினங்க
டீயுமிழ்நயனத்தெக்ககன்கன்றுச்சிறந்திடக்கறந்தனர்விடமே. (௬௧)

ஆவினமகிழ்வாலிடப்பங்கன்றாகவடர்ந்திடும்பசும்புல்லுக்கறந்த
தேவர்கள்முதலாவனைவரும்பினருஞ்சிறப்புறவேண்டியதெலவு
மாவலிற்கறப்பப்பிதுவினைவணங்கியவனிமாதகன்றனளரசன்
யாவரும்பரிபூரணத்துடன்களிப்பவிருநிலமினிதுறவாண்டான். (௬௨)

வரிவிலிற்கோடிமடுத்துயர்ந்தடர்ந்தவரைகளையொதுக்கியேதாழ்வு
சரிவரமேடுதகர்த்தகலவனிதடவிலைபோற்பரம்படித்து
விரைவினிற்றரையிற்புலம்புரீருறவும்விளங்குநீர்ச்சிறையகல்வாவி
பரவைபோன்மலியப்பட்டணநகரம்பழனமார்கிராமங்கள்வகுத்தான்.

வரைதனிற்சிற்றூரதுதனிற்கீணீர்வரும்படியழகுறவகுத்துத்
துருகமெண்ணிலாதபுரியினிலெயில்கடிலங்கியநாஞ்சிலுமமைத்தே
யருமறைமலியத்தெய்வதானங்களழகுறவாவினநிறைய
விரவலர்நிகரில்புரவலராகவளித்துலகாண்டனனிலங்கி. (௬௪)

துரகமேதந்தொண்ணூறுசெய்தரசன்பின்னரும்வேள்வியைத்துடங்கச்
சரியிலாவலாரியகுயையாற்புரவிதனைக்கொடுபோகவத்திரிகண்
டுரைசெயவிசுதாசுவன்றுடர்ந்தேகிப்பிடித்திடவும்பர்கோனடுங்கி
மரவுரிசடைவெண்ணீறுறவுருவமாறவேகொலாமல்விட்டனனுல். (௬௫)

பின்னரும்வலாரிகபாலமுமேந்திப்பிறங்கியமாத்திரைக்கோலுந்
துன்னுவெண்டலைகடயங்கநீள்சடைகலெங்குவேடத்தினைத்தாங்கி
யுன்னுமுன்னடைந்தேயூபமார்பரியைவிடுத்தவனோடவத்திரிகண்
டின்னலில்விசுதாசுவமனுக்குரைப்பவெரிசினத்துடனவன்றுடர்ந்தான்.

கதுமெனவிசுதாசுவமனன்றுடர்ந்துகணைதொடுத்திடுதலுமமரர்
பதியுளம்நடுங்கியிவுளியைவிடுத்துப்பாறிடவவன்றன்மேல்முனிந்து
பிதுவரிச்சிலைகொண்டெழுந்திடநோக்கிப்பெருமையாரிருத்துகடடுத்துக்
கதமொழிந்திடுநீயெங்கள்மந்திரத்தால்வலாரியைக்கட்டுவமென்றார். (௬௭)

இவையுரைத்துயர்ந்தவிருத்துகள்சினத்தங்கிந்திரன்வலங்குறைந்தெய்த
வவியுறுமகத்திலினையில்மந்திரத்தாலழலிடையோமத்தையியற்றத்
தவரெணுமயனுஞ்சங்குசக்கரத்தைத்தரித்திடுதயாளுவுமெய்தி
யுவமையிலரசபொறுத்தியென்றுரைத்தேயும்பர்நாயகனைமுன்வைத்தார்.

சுந்தரமுராரிபிதுவினைநோக்கிச்சொல்லுவானீயெனதுருவாய்
வந்தனையுனக்குநிகரிடும்புருடர்மண்ணிலும்விண்ணிலுமிலையால்
இந்திரன்றனக்குமவன்பதியவணிற்கொடுத்தனையினியிந்தயாகஞ் [ன்.
சிந்தையாற்செயவும்நினைக்கிலையெனுஞ்சொற்செப்பிநற்பாற்கடற்சேர்ந்தா

ஈறிலாமுகுந்தனிவையுரைத்தேகயாகத்தையொழிந்திடும்பிதுமன்
கூறுதற்கரியவயனையும்விபுதர்கோனையுமேருமென்றுரைத்து
மாறில்மாதவரைமகிழ்வினுலிரைஞ்சிமாதவப்பிரியிரியாய்வேத
மூறுமாமகத்தைமுடித்துநீரெனக்கீண்டாறிலொன்றுதவுவீரென்றான்.

அரசனீதுரைப்பமகிழ்ந்திடுமுனிவரச்சுதப்பிரியாயெங்கட்
குரியநால்வேதநெறியினின்மகங்களியற்றவமென்றுரைத்தேகச்
சரியிலாச்சனகசனந்தநற்சனுதசனற்குமாரத்தவர்சார்ந்து
திருபவாத்துமநாயகனுயரொளிசானேமியானதிதியென்றகன்றார். (சக)

அரியுயரிறையென்றறிந்திடுமரசனளப்பருங்காலமேதினியைத்
தருமம்வீற்றிடவேநெறியுடனுண்டுதேனையனைமவுவியைக்கவித்து
விரைவினிற்பழுவத்தரிச்சிசுத்தேவிமேவிடவருந்தவஞ்செய்து
திருமகள்கொழுநனுறையும்வைகுண்டஞ்சேர்ந்தனனுடலினைத்துறந்தே.

அரியமாயோகந்தனினுடறுறந்தேயரிபதத்தரசன்போயணுகச்
சரியிலாக்கற்பினரிச்சிசுத்தேவிதன்னுடைக்கொழுநனுக்கையினை
எரியினைவளர்த்தியிமைப்பின்முன்றுனும்விழூந்துயரிமையவரோத்த
மருவமர்துளவமணியுமால்பதத்தின்மகிணரேடெய்தினள்மகிழ்ந்தே.

அரியினங்கிசமர்ம்மலர்மகளவிராய்ப்பிதுமனுமரிச்சிசுதானுந்
தரையினினுயிர்மாய்வேனனைக்கடையச்சார்ந்துநால்வேதசாத்திரங்கள்
விரைகளையுதவிவரைகளையகற்றிமேபெள்ளம்பரம்படித்தே
யரசனுயுலகாண்யெர்பதமடைந்தானணங்குகேளெனமுனியறைந்தான்.

பிதுச்சக்ரவர்த்திப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசுகஉ.

---

## ககூ. வது—இடபராசப்படலம்.

அரிதிருமகிணன்ரங்கமீதொளிர்வோனச்சுதானந்தகோவிந்தன்
பரமனுரணன்மால்பரவையைக்கடைந்தோன்பாண்டவர்தூதன்வேயூதுங்
கரியவனிகரில்கச்சியினமர்ந்தோன்கவினுறநிறையுமஞ்சனமா
கிரியினினுறைவோன்சகசிரப்பெயரோன்கேசவனெனவினைகெடுமே.

புடவியைத்திருத்திமறையொடுவிரைகள்புவிமகளருளவேமுயன்று
திடமுடனரசாண்டியெர்பதத்தமர்ந்தபிதுவினன்செயலினைக்கேட்டு
வடிவுடைமலர்மான்மகிழ்ந்தரிபினருமியற்றியதருளெனமாறி
விடபனுமுராரியெழுந்தமைகேளென்றியாழ்முனிதிருவினுக்கியம்பும்.

துலங்கியபிரியவரதனுமரசனளித்திடச்சிறந்திடுசுதர்க
ளிலங்கியவாக்கினீத்திரனெழில்சாவித்துமசிருவனெண்ணில்லாக்
கலன்களால்கிகரிலிந்திரவாருகவினுறுமிரணியரோதா
நலன்களார்கிருதப்பிருட்டனெண்மேதாதிதிகவில்வீதிகோத்திரனே.

எதிரிலாப்பிரியவரதன்றன்சிறுவரிவரொழுவருமெழுதீவுக்
கதிபதியாகியமர்ந்தனரவரோடுதித்திடுமரிவையூர்சச்சு
வதியுசனனுக்குத்தேவியாய்ச்சிறந்தமகடெய்வயானையையீன்றுள்
சதிருறுமவடான்சோமனன்குலத்தின்யயாதிக்குத்தாரமாயினளால். (௪)

வேறு. சுந்தரஞ்சால்பிரியவ்ரதன்னருளும்சுதன்சுரர்கடுதிக்கவோங்கு
மந்தரநேர்புயமுடையோனுக்கினித்திரன்மறுவில்குணத்துமன்னன்
கெந்தமாதனவரையிற்கிளர்காவிலருவிநீர்த்துறையினெய்திச்
சிந்தையினிற்றிசைமுகனைத்தியானித்துக்கணிப்பருநாட்டவஞ்செய்தானல்.

சதுமுகனைத்தன்கருத்தினமைத்தவன்றன்பலசாலந்தவஞ்செய்நாளிற்
சுதைசுரர்கட்களித்தபிரான்சுதனருளவவனவையிற்றுலங்குகின்ற
விதுவதநவயிலைநகுவிலோசனிபூருவசித்தியென்னுமின்னாள்
கதுமெனநற்கந்தமாதனவரையிற்கவினுறவேதோன்றினாளால். (௬)

பரிபுரம்வண்டிசைபகரப்பாதசாலகம்வயங்குபதம்பார்மேவச்
சரியில்வரான்மிசைப்பலவன்றயங்கிடவேயரம்பையதின்மீதிற்சார
வரவின்மிசையாசாயமுறவதின்மீயிருவரைகளமரச்சங்க
மிருவில்கணைபிறையதின்மேற்புயலுயரவெழுகனகக்கொம்புபோல்வாள்.

மலரளசமாமதியின்வதனமிலங்கிடமுறுவனிலவைமான
விலகுமிருவிலோசனநாளிகங்குமிழிற்றுயிலிடக்குயங்கள்மீதிற்
கலநிறையகித்திலத்தாவடமலையக்கரமிசையிற்கடகமின்ன
நலனுறுபொற்றுகிலின்மிசைகாஞ்சியுறவோதிமமுநாணவந்தாள். (௮)

சிந்துரநல்லளிகமுறத்தெரியலலைந்திடக்காதிற்றோடுமாட
மந்தரநேர்நகிலின்மணித்தாவடங்கள்புரளமலர்ப்பாதமீதி
னந்தமுறுபரிபுரங்களரற்றிடவேயாடகநற்றூசுமாடக்
கந்துகங்கொண்டனங்கன்மனங்கலங்கிடவேகரமாறியடித்தாள்மாதோ. (௯)

கரும்புருவந்தனில்வேடன்கரத்தின்வளைகரும்புறுநாணுறவேமுல்லை
யரும்புவெள்குபல்லிரவினரும்புநிறைசுடரினும்வாலவிளாவீச
விரும்புலவர்மனமரத்தினிரும்பெனவேசிதையவிழிகுழையினூடச்
சுரும்புமலர்க்குழலாடச்சுரும்பின்மிசைபந்துகொடாடினள்பொற்றேசை.

சந்தனங்குங்குமநானங்கஸ்தூரிதளவலர்கள்வாசம்வீச
விந்தைதிகர்த்தந்தரத்தின்விளங்குதிலோர்த்தமைமுதலோர்வெள்கக்கையாற்
கந்துகங்கொண்டறைந்தெழுமின்கவினைநலவாக்கினீத்திரமன்கண்டே
சிந்தைமறுகிடவசந்தன்சிலீமுகமெய்நிறைந்திடவேயுளைசெய்வானல். (௧௧)

நாரியில்லாவிருசிலையின்குதைசிறகில்வாளிகொடுநாரியாரோ
யாரையெய்யவடருகின்றீரரிகுழலின்விரகவிசையறைவதென்னே
மார்பினுறுகலசநிறைதனமுனதோவலைவபரிக்கமருங்குகாணேன்
சீரினுறுவாயினுரைசெய்யாமற்சிலம்புசெப்பவருவீர்கூறிர். (௧௨)

சிலைகளிரண்டிரண்டெனவேயானனத்துமார்பிடத்துந்திகழ்வதேது
நலனுறுகந்தரம்பிறைபொற்றுமனாக்கீழ்நவையகல்வமர்வதென்னே
நிலவைநகுநித்திலங்கள்வாய்தனினுந்தனந்தனினுநிறைவதென்கொல்
கலைமருங்கிற்றென்றுறவேகலைபலவுங்கண்டுறுவகழறுவீரோ. (கங)

கரமிசையின்வெண்சகுந்தங்கனமிசையெழுந்துநிலன்றவழ்வதென்கொ
லரிகுழலினமராமலுயர்ந்துயர்ந்தேயாழினிசையறைவதேது
பரிபுரங்கள்பதமிசையிற்பலகாலுங்கலகலெனப்பகர்வதென்னே
தரளவடநகிலின்மிசைதாங்காமற்புரள்வதேதுசாற்றுவீரோ. (கச)

எனதுகையிற்செபவடம்போலுமதுதனத்தரளவடமிலங்கக்கண்டேன்
கனமுறுமென்சிரமிசையிற்சடையெனவேயுமதுகுழற்பின்னல்கண்டே
னினைவிறைமேல்வைப்பதுபோற்கருதுகமேலுன்மனதுநிற்பக்கண்டேன்
முனிவர்களினதிகமென்பதறிந்தேனீமொழியாதமவுனத்தாலே. (கரு)

உம்மிடத்தின்வளையமர்ந்துமலர்வாயினுறுதேனைநுகர்ந்துகாமன்
வெம்மையறப்பணிப்படத்தின்வீரியயோகம்விளையத்தவஞ்செய்வேனேல்
நன்மையுறுசுவர்க்கமதினுன்மடங்கினின்பமுறுநவையையோவுஞ்
செம்மையிதுநுங்கருத்தைச்செப்புவீர்தனங்கள்செப்பாய்த்திகழுவீரோ. (கசா)

ஊருளாயீர்விழியாலேயுயர்விசும்பினுறைந்திடுவேனென்றுசொல்வீர்
பேருளாயீரழகாலேபிறங்கியபூருவசித்தியெனும்பேர்பூண்டீர்
தாரருளீரிலவதரந்தருளீரொன்றெனக்குத்தாரமாவீ
ராருளார்தாமும்மையல்லால்விரகவேதனையகற்றியருள்செய்வாரோ. (கஎ)

வேறு. விரகவேதனையினிவையெலாமுரைத்துமெலிந்திடுமாக்கினீத்திரனைச்
சுரர்கடாமகிழத்துலங்குபந்தறைந்துதோன்றியபூருவசித்தி
யிருகையாற்றொழுதேயெனக்குநீகொழுநனிணையில்லாவரசவென்னுள்ள
முருகிடுமயலையளித்தனையெனவேயுவந்தவனுரத்துறவணைத்தாள். (கஅ)

கலைமருங்ககலக்கற்பகத்தருநேர்காவினினுதிர்மலரணையி
னிலவிதழதரமளித்துமென்புள்ளினிசையினைமுழக்கியுமிணையில்
வலனுறுபுயத்தினகக்குறிவகுத்தும்வதனம்வேர்வுறவிருகரத்தின்
பொலனுறுவளைகள்பதபரிபுரங்கள்புலம்பிடக்கலவிசெய்தனளால். (ககூ)

அலரியத்தியிலோராழிமேற்றிசையினஃதிடையடங்குவதறியான்
கலவியாமுலப்பில்கடலிடையமிழ்ந்திக்கவினுறுபூருவசித்தி
யிலகியவமிர்தகலசநேரிணையிளமுலையிறுகுறத்தழுவிப்
புலனொடுபொறியுமனதுமொன்றாகிநியுதவாண்டுறப்புணர்ந்தனனால். (உ0)

நிபநேரரசன்புயந்தனையணைத்துச்சிறந்திடும்பூருவசித்தி
நாபியாம்பரதனிலாவிரதன்சீரிகுருநவையில்கிம்புருடன்
சோபனமலியுமிரம்மியனிரணமயனலப்பத்திராச்சுவன்வெம்
பாபமற்றுயருங்கேதுமாலனென்றிவர்நவமைந்தரைப்பயந்தாள். (உக)

செகமெலாமுயவேசிறந்திடுமரசதிடவிரதத்தினைச்செயுமிப்
புகழுயனழியுந்தினத்தினும்பொன்றுதெனவிவைபுகன்றிடுந்திருமால்
நிகரில்மன்னனையுமவன்சுதன்றனையுமணைத்திடநெறியுறுபொறிமான்
மகிழ்வுடனிணையில்சந்தியாவலியைமார்புறத்தழுவினள்மாதோ. (உஅஅ)

அரியுறத்தழுவவுருக்குமாங்கதனுமவனருளுத்தமமனனுங்
கரமிருநாலும்வயங்கிடத்திகிரிவலம்புரிகவ்வுறவேந்திப்
பரனுருவெனவங்கிலங்கினின்றேத்தப்பழிப்பிலாச்சந்தியாவல்லி
திருமகடழுவவவளுருத்தரித்துச்சிறந்துதாள்போற்றினள்மாதோ. (உஅகூ)

வித்தியலேகைமுதலரிவையர்கள்விதியினையுந்தியுனுதவு
மத்தனைத்துதிசெய்தாடியேமகிழவவரொடுமுருக்குமாங்கதனை
யுத்தமமனத்துச்சந்தியாவல்லியுயர்தருமாங்கதனுடனும்
வித்தகக்கருடன்மிசையினின்முராரிவிளங்கியபதத்தினிற்சேர்த்தான். (உகூ0)

தாரணிமிசையிலரிதினவிரதமிறுவுமன்சார்நெறியெல்லாம்
தோரணநிறையமலர்மழைமலியத்துந்துமிகாகளஞ்சின்னம்
வாரணமுழங்கத்தீபதூபங்கண்மடந்தையரேந்திடநிகரி
லாரணங்களரயாமொலிமிகுப்பவச்சுதன்பதத்தினிலடைந்தான். (உகூக)

வரைமரமுருகவீணைவாசித்துமதனசாத்திரத்தினுலுருக்கி
விரகமுற்றிடநற்கலவியைவினைத்தும்விபரிதமுறுத்தவுமிதனைத்
திரணமாய்நினைந்துசுதன்றனைத்துணித்துச்சீதரன்பதியிடைச்சேரு [மா.
மரசர்கோன்செயலினிடங்கொண்மோகினிமின்னயர்ந்தனள்புவியிடையம்

அரிவரவுருக்குமாங்கதனுயர்ந்தகெதியிடையடையமோகினிமின்
றரையினினிடரினயர்ந்திடவிதனைச்சமன்மொழிந்திடவயனெய்தி
நிருபனுன்மாயைக்ககப்படாதழிவில்கதியினிற்புகுந்தனனீதான்
விரைவினின்வரம்வேண்டளிப்பம்யாமெனநற்சுரரொடும்விளம்பிடும்வேலை.

புகழுறுமுருக்குமாங்கதன்பரிவாம்புரோகிதன்றிரிபதைதன்னி
னகமருடணீர்படிந்தரிசெபத்தைமுடித்தபின்னவணியினெய்தி
நிகரில்மோகினியால்நிருபர்கோன்சுதனைத்துணித்துயர்நேமியோன்பதத்தி
னிகழ்வில்சேயுடனுமனைவியருடனுமெய்தியசெயலினைக்கேட்டான். (உகூச)

பதியினுக்கிடர்செய்யயனருள்குமரிபாதகியாமெனமனத்திற்
கதமுறவவளுக்குறும்வரமளிக்கக்கருதிநற்சுரரொடுமெய்துஞ்
சதுமுகன்முனரினடைந்திவண்மகுணத்துரோகிசக்கரவரித்துரோகி
யிதுவறிந்திருந்தும்வரங்கொடுத்திடவேயிசைந்ததேனென்றவன்முனிந்தான்.

புகழுடைப்பதியின்றுரோகியுமாகிப்புயல்வணன்றுரோகியுமாகி
யிகழ்வுறுமிவடன்னுடலெரிந்திடவாண்டிருநூறுபவமடர்ந்திவண்
சகலலோகத்துமிருப்பிடமிலாமற்றிரிகெனச்சபித்தபின்னிவளை
யகல்கிலார்வரங்களருளுவாரொவருமடைகவிச்சாபமென்றறைவான். (உகூரு)

அரிதினவிரதஞ்செயுமவர்தம்மையிதுதவிர்த்திடுமெனவறையுந்
தரையினுற்றவருமிவடனைப்போலவிடருறுவாரெனச்சபிக்க
விருளகனெறியினுறும்புரோகிதன்முனியம்பவக்கணத்துடலெரிந்து
வெருவிமோகினிதன்சிவனேகிடலுமபன்சுரர்மேலிந்துபோயினரால். (உ௯௭)

தரையினிற்குரம்பைபெரியமோகினியின்றயங்கியசுவர்க்கத்திலெய்த
யரிதினத்துரோகிமருணனுக்கிடர்செய்பவத்திபென்றடித்தவர்துரத்த
விருபதோடொன்றுகிளையமுற்றிடலுமிவள்கொடும்பாவியென்றதனின்
மருவுமோராரற்றரகுகாவலர்கண்மறித்தடித்தோட்டினர்மாதோ. (உ௯௮)

உவமையில்சுவர்க்கங்கிளையமுற்றவர்களுறுகலையென்றடித்தோட்டப்
புவியினிற்றுனேழுலகினின்விளைவிற்புருதலுமதிலுறுமாக்க
ளவுணர்களியக்கராக்கர்கணமெங்கியரிதினத்துரோகியாயளப்பில்
பவமுறுபதகியகல்கெனக்கதையாற்றகர்த்திடப்பாறினளன்றே. (உ௯௯)

தரையினிற்கீழேழுலகினுள்ளவர்கட்டியினுல்மோதியேதுரப்ப
வரைகடல்வடவையடவிகாசினியினுறைவனைவருபூதங்கள்
விளைவினிற்றுரத்தவரற்றியேதிரிந்துமீளவும்பவங்கொள்மோகினிதான்
சுரரொடுபிரமன்றனையடைந்திருக்குமிடமிலையென்றிவைசொல்வாள். (௩௦௦)

நரகுவான்சுவர்க்கஞ்சகலலோகத்துநண்ணிடுமெனையரித்துரோகி
வருகலையெனவேவைதுகல்லுலக்கைமரங்கதைசுளிகினுமடிக்க
வெருவிநானரற்றியோரிடத்தனினுமேவிடமிலாமையால்மெலிந்தே
னருளுநீருக்குமிடமெனவவளையிறைஞ்சியின்னமுமிவையறைவாள். (௩௦௧)

உருமினுலரவாலுரனுறுத்துட்டவிலங்கினுனீசாலுயிர்போய்த்
தரையினின்மடிவார்தமக்குமாறினத்தினனமருந்தியதயையிலர்க்கும்
நிரையமேயலாதுவேர்கதியென்றுமுறுதிதுங்ச்சயமிந்த
விரதவிக்கினியாமெனக்குயும்வகையைவிளம்புவீரெனவவரறைவார். (௩௦௨)

திருமகள்கொழுனன்றினவிரதத்துக்கதன்மம்நீசெய்சையாலுனக்கு
வரமருளமையுஞ்சபித்திடுமறுவில்புரோகிதன்முனிவினைமாற்றி
யிருவினைக்கடலுளமிழ்ந்திடுநீதானமரிடமீயருவமென்று
சுரரோடுபிரமனுருக்குமாங்கதன்றன்பதியினைடத்தலங்கியேகினரால். (௩௦௩)

விறலுடையுருக்குமாங்கதற்கிதமாம்வேதியன்றன்முனரடைந்து
மறலிதன்னுலகுஞ்சுவர்க்கமும்பாழாயுறும்படிமாதவன்றிதியி
னெறியுறவிரதஞ்சகலரும்நடத்திநிகரிலாக்கதியமர்ந்திடலா
லிறைவருத்திடுமிவ்வுலகம்நில்லாதென்றெண்ணினேமென்றுபின்னறைவார்.

தரையினிற்சனங்கள்சனித்திறந்திடவுந்தயங்கியசுவர்க்கமேறிடவும்
நிரையமுற்றிடவும்பரன்றினவிரதம்நீக்கமோகினிதனைவிடுத்தோம்
அருளறனறியும்புரோகிதவதனுலிவடன்மேல்முனிவகற்றுதியென்
றுரைசெயவவனுக்ககமொழிக்கெவருமறைவிடங்கொடுமிவட்கென்றுன்.

சரியிலாதுயரும்புரோகிதன்முனிவையொழித்திவைசாற்றுதலோடுஞ்
சுரரொடுமுனிவரிவடனைநோக்கியுனக்கிடஞ்சொல்லுதியெனவெந்
நரகுடன்சுவர்க்கம்நிறைந்திடமறலிக்கதிகமார்பத்தியநண்ண
வரிதினவிரதமருளுவீரெனலுமயனொடுசுரர்முனிந்தறைவார். (௩0௬)

படியினின்மறையோர்வதைமுதலானபஞ்சபாதகத்தினையகற்றி
யிடர்கெடவழியாக்கதியினைக்கொடுக்குமிணையிலாவரிதினவிரத
மடியிரண்டதனுலகெலாமளந்தோனருளுவதலாலுனக்களிக்கும்
திடமிலையிவையைத்தருகுதிரெனில்வச்சிரத்திறற்றெறுவமென்றுரைத்தார்.

நரர்பிறப்பிறப்பையொழித்துயர்கெதியைநல்கிடுமாதவன்றிதியை
யருளுமென்றுரைக்கிற்சங்கரித்திடுவமதுவலவேறுகேளென்ன
விரவிசேர்வலவன்வரவதிற்றெசமியிறுதியிற்சூழேகாதேசி
தருகுதிரெனலுமவடனைநோக்கிச்சதுமுகன்முதலினோருரைப்பார். (௩0௮)

அரனுரையதனாலசுரசம்பனுக்கன்றயனருணன்வருபோழ்திற்
பரவியதெசமியிறுதியைக்கலந்தபதினோராந்திதியளித்தனனாற்
றெரிவைநீயதனையொழியவேறுளதாய்ச்செப்பெனச்சப்பனவேதை
மருவிடுமேகாதெசியினையருளுமெனவவர்வழங்கினமென்றார். (௩0௯)

சப்பனவேதைகலந்திடுமேகாதெசிவிரதந்தனைச்சார்ந்தா
ரப்பினினுறையுமுராரியையகத்தவிரவினாராதனைசெய்தா
ரிப்புவியிடத்தினவர்க்குறும்பலத்தையீந்தனங்கொள்ளுதியென்றே
செப்பியாங்கவர்தம்பதியினேகிடலுஞ்செகத்தினிலவ்விடத்தமர்ந்தாள்.

அயன்மகளரியின்றினத்தனம்நுகர்தியன்றியேற்புதல்வனைவதையென்
றியல்புறவுரைக்கவறனுறுசிறுவன்கழுத்தினிலிலங்குவாளோச்சிப்
புயல்வணமுராரிபதத்தினினடைந்தவுருக்குமாங்கதன்புகழெல்லாம்
தயையுடைவிதர்ப்பன்புதல்விநீயுணர்தியென்றியாழ்த்தவமுனிபுகன்றான்.

உருக்குமாங்கதப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௨௧௪௬.

---

## ௨0. வது — அம்பரீடப்படலம்.

கொலைபலசெய்துங்குருவினையிகழ்ந்துங்கோப்பிராமணர்களைநலிந்தும்
நலனிலானாகிப்பார்தனிற்குரவர்நாரியைவிரும்பிமெய்யறனற்
றுலகெலாம்பழிக்குங்கயவனாயுழல்வெம்பவக்கடல்சுவறிடவொதுக்கிப் [டீர்.
பொலனுறுமடியார்க்கடியராத்திருத்திப்பொருத்துமாலினைத்தொழுந்தொண்

உருக்குமாங்கதன்றன்சரிதையைக்கேட்டாண்டுளமகிழுருக்குமற்கிளையா
னிருக்கறைந்திலங்குமியாழ்முனிவனைத்தானினிதுடனோக்கியேயிணையில்
மருக்கமழ்குழலிவயங்குமோகினிதன்மயக்கினையகற்றுமால்விரதம்
பெருக்கநற்சதனைத்துணித்தமன்போல்வாருளரெனிற்பேசுதியென்றாள். (௨)

வம்பவிழ்குழலியிவையுரைத்திடலுமறுவிலாநாரதமுனிவ
னும்பர்கடுதிக்குமுருக்குமாங்கதனையொத்திடுபரமபாகவத
னம்புவிமிசையினறநெறிவளரப்புரந்தவம்பரீடமன்செயலைச்
செம்பதுமத்திற்றிகழவீற்றிருக்குந்திருவனாய்தெரிதியென்றறைவான். (௩)

அலரிதன்குலத்தின்வயங்குமாந்தாதாவருளம்பரீடனேழ்திவு
மிலகிடப்புரந்துதிருவினாதனைத்தன்னிருவிழிநாச்செவிசிரசு
புலனுறுமனங்கைகளிப்பினோக்கித்துதித்தவன்புகழினைக்கேட்டு
நிலனுறப்பணிந்துநினைந்துபூச்சாத்திநிகரிலாவடியவனானான். (௪)

பரமபாகவதனாகியவரசன்பழுதகல்வசிட்டமாதவனோ
டரியநற்றவஞ்செய்முனிவரையிருத்தாய்வரித்துமாமகமளப்பிலாத
தரையினின்முடித்துச்சகலதானங்கள்சற்பிராமணர்தமக்கருளி
யரிதினவிரதந்தவறநடத்தியாசையையகற்றியங்கமர்ந்தான். (௫)

அரிதினவிரதந்தவறநடத்துமம்பரீடனுக்கருள்புரிந்து
திருமகள்கொழுனனுருக்குமாங்கதனைச்சினத்துமோகினிதடுத்தனபோற்
றரையினினெவருமிவனுறுவிரதந்தனக்கிடர்செய்யிற்சங்கரியென்
றுரைசெயத்திகிரிசகசிரவிரவியொளியுறக்காத்திடுமன்றே. (௬)

புகரிபத்திடரைத்தவிர்த்திடும்புனிதன்புகன்றிடவிருடனுயருந்
திகிரிகாத்திடவேதிகழுமம்பரீடன்விருச்சிகத்திங்களிற்சிறப்பாம்
நிகரிலுத்தானதுவாதெசிவாரலும்நெறியுறுமறையவர்தமக்குச்
சகலநற்றானமளித்தனமருந்தத்தமரொடுமெய்திடும்வேலை. (௭)

வேறு. விரைவினிற்றுருவாசமாமுனிவன்மேவிடலும்
பரிவினன்னவன்பதத்திடையிறைஞ்சியம்பரீட
னருளுவான்றிருத்துவாதெசிப்பாரணையருந்த
வருதியென்றலுமாதவன்சம்மதித்துரைப்பான். (௮)

படியின்விஞ்சியயமுனைமாநதியினிற்படிந்து
கடிதினெய்துவனென்றுமன்னவனுடன்கழறி
விடையவன்னிகர்முனிநதிமேவிநீர்படிந்தாண்
டடைகிலான்மனன்பாலகமருடனாகி. (௯)

நிகரிலாமுனிநீருறயாண்டையுங்காணான்
பகலவன்குணக்குதித்தபின்னைந்தினிற்பாதி
புகலுநாழிகைபோயிடிற்றிருத்துவாதேசி
யகலுமென்றுமன்னுதகபாரணைசெய்தானஞ்சி. (௧௦)

திதியின்விஞ்சியதிருத்துவாதேசியேகிடுமென்
றுதகபாரணைமன்னவன்செய்தமையொளிசால்
மதிகொள்வேணியனிகர்த்திடுமாதவனுணர்ந்து
நதியினீரிடையெழுந்தெரிபுகையுறநகைத்தான். (௧௧)

திருத்துவாதெசிசெலுமெனச்செலத்திளைப்பருகிக்
கருத்திறலெனையெள்கினனென்றயங்காய்ச்சுர்
தருத்திபோல்விடுமுயிர்ப்பினன்றலங்குவேணியினைக்
கிருத்திதோன்றிடப்பிடுங்கிமோதினன்கிளர்சினத்தால். (கஉ)

அவனியிற்கடிதடித்தவேணியினிடைக்கிருத்தி
புவனமெங்கணும்நடுங்கிடப்போந்திடவவனை
யிவணினிக்கணமம்பரீடனைத்தெறுவென்று
சிவனெனக்கனன்றறைந்தனன்றேவர்களிரிய. (கங)

நிகரின்மாதவனாணையிற்கிருத்திநீண்டதிர்த்தாண்
டகிலமெங்கணுமஞ்சவம்பரீடனையடரக்
ககபதித்திருத்தோள்மிசைக்கவினுறுவான்கைத்
திகிரியுக்கிரமாகவேசென்றெதிர்த்ததுவால். (கச)

கோடிசூரியவவிரினைக்கொண்டொளிர்திகிரி
மூடிநீண்டடர்கிருத்தியைமுனிந்துசங்கரித்துக்
கோடிரம்முறுமுனிவனைக்குறுகிமேற்சுடலும்
வாடியோடினன்மலரயனுலகினின்மாதோ. (கரு)

விரைசெறிக்கமலத்தயனடிமிசைவீழ்ந்தீண்
டரிதிருக்கரத்தாழியென்மெய்யனலுறுத்த
வெருவியுற்றனன்விலக்குதிநின்னடைக்கலமென்
றுரைசெயத்திசைமுகப்பிரமனிவையோதும். (கசு)

மறுகிமெய்சுடவந்திடுமுனிவநீகேட்டி
யிறைவனுந்தியினெழுந்திடுமியானுநான்படைத்த
குறைவிலண்டமுமவன்புருவத்தினைக்கோட்டி
னிறுமிமைப்பின்முன்னவன்படைதடுத்திடவெளிதோ. (கஎ)

இவையுரைத்தயனென்பதமழிந்திடாதிவணிற்
கவலையுற்றறுமுனிவநீயேகெனக்கடிதிற்
சிவனையுற்றுமாறிகிரிவந்தெனைநலிந்திடாமற்
பவமறுத்தருள்பரமகாவென்றிவைபகர்ந்தான். (கஅ)

சிந்தைவெந்துவந்துறுமுனிசெப்பிடவிடையோன்
விந்தைநாயகன்மெய்மயிர்நுனிதொறுமியான்சே
ரிந்தவண்டமேபோலவெண்ணிலாவண்டமமரு
மந்தமால்கரத்தாழியார்தடுப்பரொன்றறைவான் (ககூ)

படிவிண்ணீரடியாலளந்தருளியபரம
னடியனானவம்பரீடனுக்கிடர்செயுமறிவில்
கொடியமாதவநீயுயவேண்டிடிற்கோல
வடிவமாகியமாயனையடைகுதியென்றான். (உ0)

அரனுனக்கிவணலவகலென்றரன்கூறக்
கிரணமுறநிமிர்ந்திகிரிகாய்ந்திடக்கெடுமுனிவன்
கருணையுற்றவைகுந்தநற்கடவுளைவணங்கிச்
சரணமற்புதவுனதடியென்றிவைசாற்றும். (௨௧)

அம்பரீடனையிடர்செயுமருவினையாலே
யெம்பிரானுனதாழியெண்டிசையினுந்தொடர
வெம்பிமெய்யழலுறுதீயையொத்தன்விமலா
நம்புதும்பியைக்காத்தபோற்காவெனநவில்வான். (௨௨)

முனிவனென்னுனையிகழ்ந்திடுமறிவிலாமூர்க்கர்
வினையையென்னடியாரறுத்திடுவர்மேதினியி
னினியபத்தருக்கிடர்செயுங்கயவர்கட்குற்ற
துனியகற்றிடுமுரனெனக்கிலையெனச்சொன்னான். (௨௩)

வேதசாத்திரநெறியுறவித்தையுந்தவமு
மேதமற்றவர்க்கடைந்திடினவர்க்கின்பமீயுந்
தீதுகற்றவர்க்குற்றிடினவர்க்கிடர்செய்யு
மீதுனிச்செயமுனிவவுன்னிடத்துணர்கென்றான். (௨௪)

உவமையற்றிடுமம்பரீடனுக்கிடருறத்துந்
தவவுன்மீதடர்திகிரியைத்தவிர்க்கவெற்கரிதா
லவனியிற்றிருத்துவாதசிவிரதத்தையடையும்
பவமிலாதவன்பாலுய்யப்பாறுதியென்றான். (௨௫)

வம்புலாவியதுளவணிமாயவன்கூற
வம்புராசியின்வடவைபோலாழிசுட்டிடவே
யும்பரம்பரமோங்கல்கடிசையெலாமுழல்வா
னம்பரீடனையிறைஞ்சியுன்சரணமென்றடைந்தான். (௨௬)

திகிரிமெய்சுடவருடமொன்றெங்கணுந்திரிவான்
மிகவுநொந்துதன்னடிமிசைவீழ்ந்திடத்தலையுற்
றவனியெங்கணுமறனுறப்புரந்திடுமரச
னிகரிலாழியைத்துதித்திவைநிகழ்த்தினனம்மா. (௨௭)

இரவிகோடியர்க்குறுமவிரிலங்கிடவெழுந்தே
யரிதிருக்கரத்தமர்ந்துயரவுணரைவதைத்து
விரைவினுன்னுமுன்னடைந்தடர்வினையினையகற்றுஞ்
சுரர்துதித்திடுஞ்சுதரிசனநமவென்றான். (௨௮)

வேறு. பரப்பினின்யான்செய்மகங்களுமறிவாறபண்ணியதானமுமினையி
லரிப்பிரீதியுமாயியற்றிமாதவன்றனைத்தினுமுளனெனவறிந்து
விருபமுற்றுயர்மாறினவிரதத்தைவிளைத்ததுமெய்ம்மையேயாகில்
நெருப்பிறைத்தவனைமுனிந்தடராதுநீங்குதிதிகிரியென்றனனால். (௨௯)

காவலனளியாலிவைமொழிந்திடவக்கணத்தினிற்றிகிரியோவிடலும்
பாவமற்றுயருந்தவமுனிவியந்துபங்கயன்மாலரனுகு
மூவராற்றவிராப்பவத்தினையிமைப்பினகற்றினைமனவெனமொழிந்து
தேவருந்துதிக்குமரசனுக்காசிசெப்பிநல்லனமருந்தினனால். (௬௦)

பரமபாகவதவுன்னையானறியாதிகழ்ந்திடவுறும்பவமெல்லாம்
பிரமன்மாலரனும்வியந்திடவிமைப்பினகற்றினைபிருதுவிதன்னிற்
றருமமெய்நிறையுமரசவென்றுரைத்துத்தவனனமருந்தியேகியபின்
வருடமொன்றவனினகன்றபின்னரசன்மகிழ்வினுற்பாரணைசெய்தான். (௬௧)

திருத்துவாதேசிவிரதமாதவத்தைத்திடமுறச்செய்தரிதன்னைக்
கருத்தினுள்ளத்தினிருத்திநற்கதியையடைந்தனனவன்கதைதன்னை
விருத்தியால்மறையோர்க்கிருநிதியருளிசசிறந்திடும்விதர்ப்பர்கோன்பலநாட்
சிரத்தினுற்றவஞ்செய்தருளவேசிறந்ததிருவனுய்தெரிதியென்றறைந்தான்.

அம்பரீடப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகஎஅ.

---

## உக. வது — பரசுராமப்படலம்.

நீதியையகற்றிநெறியிலாக்கருமநிறைந்திடவறன்மெய்யைத்தூரத்திப்
பூதலத்தனேகவுகமிருப்பனபோற்பொற்கொடியார்சொலவிரகத்
தீதினைத்தினமுமியற்றிடும்வினையேன்பவமெலாந்தீர்ந்திடவேதன்
றுணைதம்மடியார்க்கடியராத்திருத்துந்தயாளுவாமுராரியைத்தொழுமின்.

அரிதிதியதனிற்றுவாதசிவிரதமடைந்துயரம்பரீடன்றன்
சரிதையைக்கேட்டுமகிழ்ந்தருக்குமணிதவமுறுநாரதமுனியை
விரதமுற்றிடுவோர்க்குயர்பதமளிப்போன்மேதினியிற்றிகழ்நலனை
யுரையெனப்பரசுராமன்றன்செயலையுணருதிதிருவெனவறைவான். (௨)

விதுவினற்குலத்தினரசரின்மலிந்தவிறலுடைக்காதிமன்பயந்த
மதிநிகர்வதனச்சத்தியவதியைமறுவிலாப்பார்க்கவன்மரபிற்
சதுமறையுணருமிருசிகன்றனக்குத்தாரமாயுதவிடமகிழ்ந்து
கதமிலாமுனியக்காரிகையுடனேகவினுறவமர்ந்திடுநாளின். (௩)

காதிதன்மனைவியானகாரிகையுங்கவினுறுசத்தியவதியு
மேதமற்றிலங்குமிருசிசன்றன்னையிறைஞ்சிநின்றெமக்கிருவருக்குந்
தீதினையகற்றுஞ்சிறுவர்கள்வரவேசிறந்திடுபிண்டநீயருளென்
றோதிடமுனிவனிரண்டுமந்திரத்தாலுடைப்பயநற்சருவினைவைத்தான். (௪)

சாத்திககுணத்தையுறவொருசருவுஞ்சரியிலாராசதமலியுங்
காத்திரமனத்தையுடையதோர்சருவுமமைத்தவன்கங்கைமாநதியிற
றீர்த்தமாடிடவேசென்றிடவதனைச்சிறந்திடுகாதிதன்மனையாள்
வேத்திரமெனவும்விளங்குதோளுடையவிழுமியமகளுடனுகர்ந்தாள். (௫)

சரியிலாதுயருங்காதிதன்மனையாள்சாத்திககுணச்சருநுகர
விரிசிகன்பாரியிராசதமலியுஞ்சருவினையிலங்கியங்கருந்தச்
சுரர்நதியதனிற்றோய்ந்துமீண்டகன்றுதலங்கியமுனிவனிதுணர்ந்து
வரசமந்திரத்தின்சருவினைவிழுங்குமரிவையைநோக்கிமீதுறைவான். (௬)

சரியில்சாத்திகமார்சருவினையருந்துந்தவமுறுகாதிதன்மனையா
ளருமறைநெறியையடைந்திடுஞ்சுதனையளிப்பதியாசமந்திரத்தாற்
பரவியசருவைதுசார்ந்திடுஞ்செயலாற்பாரிடைக்குரூரமாங்குணத்தை
மருவியமகனையருளுவையெனவுமற்றவள்மனமெலிந்துறைவாள். (௭)

தவமுறுமுனிவவுனக்கெழும்புதல்வன்சாத்திககுணத்தினையுறும
லவமுறுகுரூரமடுக்குமோவெனவாண்டவனவட்கிவையறைவா
னவையகலணங்குன்சுதன்றனக்குயருநற்குணமாகுகவவன்சேய்
புவனமுமடுக்கப்பொருந்துகாத்திரமாம்புத்தியையடைகுவனென்றான். (௮)

இரிசிகனிவைகளுரைத்திடலோடுமெதிரிலாக்காதிதன்மனையாள்
பரிவினுற்பயந்தசுதன்கவுசிகனப்பமுவச்சினருந்தவஞ்செய்து
சரியிலாவிசுவாமித்திரனுருந்தவனெனவிலங்கியங்கமர்ந்தான்
தெரிவையர்திலகச்சத்தியவதியீன்றாள்செமதக்கினிதன்னை. (௯)

இரிசிகன்குமரனுயெழுஞ்செமதக்கினிநலரேணுகையென்னு
மரிவையைப்பரிவால்வதுவைசெய்திடலுமவளவன்றனையனைந்தெதிரி
றருமமார்சுமதன்முதலிருவரைத்தான்பயந்திடத்தவமோலாமகிழ
மருளகல்மறையாற்சாதகஞ்சவுளம்வயங்குமுன்னூலெலாமறைந்தான். (௧௦)

சிறுவரைப்பயந்தாண்டெழில்கொளுஞ்செமதக்கினிமகிழ்ந்திலங்கிடுநாளி
னிருதருங்கொடியவசுரருங்கிலத்தினிருபராய்ப்பொதுவியசெயலாற்
றரையினுளயர்ந்துமெலிந்திடவவடன்சுமையினைத்தவிர்த்திடவேண்டி
யரியினல்லுருவாய்ப்பரசுராமப்பேரியோகிரேணுகைவயிற்றுதித்தான். (௧௧)

சுரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கத்துலங்கியபரசுராமன்றன்
மருளகன்மறையையுணர்ந்திடுஞ்செமதக்கினிமகிழ்ந்திடச்செனித்திடலுந்
தருமமெய்யோங்கச்சாதகஞ்சவுளந்தயங்குபேயனமுநடத்தி
வரனுடையவனாய்ச்சோடசவருடமுறவவன்வளர்ந்திடுநாளின். (௧௨)

இரிசிகன்சுதனுக்கிரேணுகாதேவியிலங்கியதேவபூசனைக்குச்
சுரர்நதியதனையங்கொணர்ந்திடவேதுலங்கிடவெட்டியவுடன்
மருவமர்விசிகமுடையவன்மானவானிரேழெழில்கொள்செந்தருவன்
விரைசெறியளகத்தெய்வவாணுதலோடேகிடநோக்கினள்வியந்து. ௩)

மாலெனவயங்கியெழில்கொள்செந்தருவன்மனைவியோடேகிடக்கவினூர்
வேலெனமிளிர்கண்ணிரேணுகாதேவிவியப்புடனேக்கிமீண்டிடலுஞ்
சீலமார்செமதக்கினிமுனிபூசைக்குதவிடுஞ்செலமிலாததி
யாலமேபோலவழன்றிவடாழ்த்தசெயலெலாமறிந்திவையறைவான். (௧௪)

கற்புடையவள்போற்றிரிந்தநீயுயருங்ககனநீதேகிடுகிகரி
லற்புதமனையவெழில்கொள்கெந்தருவனரிவையோடுறாலதேைக்கிப்
பொற்புறவெழில்சேர்தேவபூஜைக்குப்புனல்கொணர்ந்திலையெனவுரைத்துச்
சற்பமிங்குமிழும்விடமெனச்சீறித்தனயரைநோக்கிமீதறைவான். (க௫)

தனயருஞ்சமதனவனுடைக்கனிட்டனிவர்களைநோக்கியெண்டவத்தோன்
முனிவொடுமிவளைத்துணிசெயுமெனத்தான்மொழிந்திடவவர்மறுத்திடலுஞ்
சினமுறவவரோடவரையுங்கணத்திற்சிரமறநறுக்குதியெனறு
புனிதனுய்வயங்கியுயர்ந்திடும்பரசுராமனைநோக்கியேபுகன்றான். (க௬)

தந்தைவெஞ்சினத்தாலிவையுரைத்திடத்தன்றலையையுமுந்தவர்தலையு
மந்தகனனவேமழுவினாற்சிரங்களவரிடுறுண்டிடத்தறிப்பச்
சிந்தையின்மகிழ்ந்துமுனிபுனக்கிதமாம்வரத்தினைச்செப்புகென்றுரைப்பப்
புந்தியையுடையோன்பரிவுடன்வணங்கிப்பிதாவுடனிவைபுகன்றனனால். (க௭)

இயல்புடைமுனிவகதமொழிந்திவணினின்றவெண்ருயுடன்சேட்ட ருயிரினை
யருளென்றுரைத்திடத்தவத்தோனிமைப்பின்முன் னெழுதியொன்றுரைப்பத்,
துயிலுணர்ந்தவர்போற்சிரம்பொருந்திடமெய் துலங்கிவந்தடியினிறைஞ்ச
த், தயையுடைத்தாதையுடனெழில்ராமன்றயங்கியாண்டமருநாடன்னில்.

கிருபர்கட்கதிகமாகிநற்படியைநெறியினாலாண்டிடும்வலத்தோன்
சரியிலாவரங்களுறுபவனெழில்சேர்சக்கிரவாளுவாய்ச்சிறந்தோன்
கரிபரியிரதம்பொதுளவுற்றிடவேகார்த்தவீரியனெனும்வேந்தன்
மிருகயாத்திரைமேல்விருப்பமுற்றவனாய்விழுமியபழுவத்தினிறுத்தான். (க௯)

பரிகரியிரதம்பரவைபோற்சூழப்பழுவத்தினடைந்திடுமன்ன
னிரிசிகன்சுதனுமிணையிலாச்செமதக்கினிமுனிகோசரத்திறுத்துத்
தனாமிசைவணக்கத்தவனலமொழியைச்சாற்றிநற்றெனுவையழைத்தாண்
டரசர்கோனுடனேயனைவருமருந்தவடிசிலையுதவுதியென்றான். (௨0)

அருமறைமுனிவனிவைபகர்ந்திடவுமருள்செறிதேனுவுமெய்தி
யரனுநுகார்த்தவீரியன்றனக்குமுவரிபோலடைந்தசேனைக்கு
மிரணியக்கலத்தினறுசுவையடிசிலினிதுறவருந்திடவளித்து
விளாமலர்கலவையுதவவுமரசன்வியந்துமாதவனுடன்மொழிவான். (௨க)

சகலர்கடமக்குமடிசிலையுதவுந்தேனுவைத்தருதியென்றுரைப்ப
நிகரிலம்முனிவன்மறுத்திடவலத்தானிருபனவ்வாவினைப்பற்றிப்
புகரிபம்பரிதேர்புரவலர்பொதுளிப்போதலும்பரசுராமன்றன்
மிகவுநெஞ்சழன்றுமழுவினுலவன்றன்சேனையைவீட்டினன்மாதோ. (௨௨)

பாரினிற்கடல்போற்பரவியபதினெழக்குரோணிப்படையெலவுங்
கூரியமழுவாலிமைப்பினின்வதைத்துக்குறைத்தலையெழுந்துகூத்தாட
வாரிபோற்குலிகப்புனல்திரையுறநீள்மண்மிசைப்பரவிடநோக்கி
நேரிலாதுயருங்கார்த்தவீரியன்றனெருப்பெழக்கனன்றெழுந்தனனால். (௨௩)

உததிகள்கலங்கவடவரையசையவுறத்தெதிர்கார்த்தவீரியன்முன்
சதுமுகாத்திரமால்படையான்பகழிசலத்தினால்விடுத்திடுமவையை
மதிதவழ்சடையோனிசர்த்திடும்பரசுராமன்கைமழுவினாற்றுணித்துக்
கதலியின்வனத்தைக்கழித்தபோலவன்றன்கரங்களாயிரத்தையுங்களைந்தான்

சகசிரகரத்தைத்தறித்தவன்மழுவாற்சடக்கெனவவன்சிரந்துணிக்க
நிகரிலாவரசன்சுதரயுதப்பேர்வெருவிநீணிலத்திடைவணங்கிப்
புகலுதற்கரியபசுவினைக்கொடுத்துப்போதிநீயென்றுரைத்திடலும்
இகழ்புறுமுனிவையொருவிநல்லாவோடடைந்தனன்றந்தையாச்சிரமம். (௨௫)

விரைவினிற்பசுவோடடைந்துதன்றந்தையுறைவிடமேவிநின்றிறைஞ்சி
வரனுறுங்கார்த்தவீரியனுடன்சேர்மன்னவர்மடிந்திடுஞ்செயலை
யுரைசெயமுனிவனிரங்கிமண்ணரசைவதைசெயிலுறும்பவமென்று
சுரர்நதிமுதலாமயத்திநீர்வருடந்தோய்குதியெனப்பணித்தான். (௨௬)

உவமையின்முனிவனுரைத்திடமழுவோனுயர்ந்திடுந்திரிபதகையமுனை
கவுதமிசெனனமொழித்திடும்வேணிகடுவினைகழித்திடும்பம்பை
பவமகற்றியகாவேரிதண்பொருந்தம்பரவைசேர்கன்னியாகுமரி
இவைமுதலானநதியினீர்வருடம்படிந்தவனெய்திடுவேலை. (௨௭)

மழுவினான்மடிந்தநிகரிலாக்கார்த்தவீரியன்மதலையோராயுத
ரொழுவெனவயங்கும்புயமுடைப்பரசுராமனுண்டிலாதமையுணர்ந்து
விழுமியசெமதக்கினிமுனிசிரத்தைவிரைவினிற்றுணித்தவரோக
வழிகினுற்சரியிலிரேணுகையிராமாவடைதியென்றுருலித்தழுதாள். (௨௮)

பாவமில்லணங்கிவ்வுரைபகர்ந்தழுதுபருவாலுறும்பொழுதிராமன்
சேவலோனெனவாண்டடைந்துயிரொருவச்சிரமுறுந்தாதையைநோக்கி
கோவெனலரற்றியனைதனைத்தேற்றியவலுவான்படியிலிலரசர்
மூவெழுகுலமுமடிந்திடக்களைவனென்றுசபதத்தினைமொழிந்தான். (௨௯)

மிகவுளைந்தரற்றுமனைமுனர்ச்சபதம்விளம்பிநீள்வடவரைநிகரா
புகலிறுதியினுமையவள்கொழுனனைத்துயர்பரசுராமன்முன்
சிகைவிழியுறவெவ்வுயிர்ப்பினால்வடவைத்தியவிர்ந்திடக்கடல்சுவறக்
ககனமீதிரவிசுழன்றிடமுனிந்துகார்த்தவீரியனகர்சேர்ந்தான். (௩0)

இரவியினவிர்போலிலங்கியமழுவாலிணையிலாக்கார்த்தவீரியனு
மரசர்கோனயுதச்சுதர்களைவதைத்தாண்டகன்றிடுமவனியையாளும்
நிருபர்கள்குலமூவெழுதலைமுறையுநிலந்தனிற்களைந்தவர்குருதி
சுரர்பயமுறநீள்சமந்தபஞ்சகத்திற்றுப்பெனநிறைத்தனனம்மா. (௩௧)

சமந்தபஞ்சகத்தினக்கயமமைத்துத்தரணியிலுலப்பிலாக்கிளையோ
டமர்ந்திடுமரசர்குருதியைநிறைத்துத்தாதைதன்குரம்பையையவணிற்
சமந்துவந்தெரியிற்கிடத்தியக்குலிகத்தோயமார்துறையினின்முழுகி
நிமிர்ந்துவேதியர்சொனிறைந்திடத்தாதைக்குதகமெள்ளுறநிரப்பினனால்.

தவமுறுசெமதக்கினிமுனிதனக்குத்தாரணியெங்கணுமாரு
முவமையிலரசர்குருதியாலுதகக்கிரியையைமுடித்தபின்சிராத்தங்
கவினுறவிராமன்மறையினூலுயருங்காசிபவருக்தேனவவன்சொல்
லவமதித்தவன்றன்மறுத்திடயானாவனியையடைகிலேயென்றான். (௩௩)

சிரமறமடியும்பிதாவினுக்குரியசிராத்தநீருகரன்றேலியானு
டரையைவிட்டகறியெனமழுப்படையோன்சாற்றிடக்காசிபமுனிவன்
விரைவினிற்புவியினகரொருங்ககன்றுவிபுலேயிற்சனங்கள்சென்றுறுதற்
கரியமால்வரையினமர்தலும்பிராமணவணிற்சென்றவனுடனறைவான். (௩௪)

இறந்திடுந்தாதைக்குரியமாசிராத்தமருந்திடாதெல்கியானுள்ளுவ்
வுறைந்திட்டேனெனவன்றறைந்துமிப்புவியீதோங்கல்மேலடைதியோவெனலு
மறந்தவறிலாதவறிஞனுகுலத்தோடம்பொன்மால்வரையின்மீதமரச்
சிறந்திடுமிராமன்வடவரைமிசையிற்சேர்ந்தவனடிதொழுதறைவான். (௩௫)

உவமையின்முனிவவெனைத்தரும்பிதாவுக்குரியமாச்சிராத்தம்நீபுரியா
தவமதித்தகன்றிவ்வரையின்மேலமரவடுக்குமோவறிஞயானுளும்
புவியின்மீதமரிப்பொருப்பைவிட்டகன்றேயென்னுடைக்காவலிற்பொருந்தா
வவனிதானுளதேல்டைதியென்றறையவருந்தவனழன்றுபோயினனால். (௩௬)

மழுவொளிர்கரத்தோனுரையின்மாதவத்தோன்வடவரைக்குத்தரதிசையிற்
பழுவமார்பறம்பின்மிசையமர்ந்திடுகோட்டன்னிரேரார்படிகவன்னத்தின்
விழுமியகபோதச்சேவலோர்பெடையைவிரகமுற்றடைந்திடவிதுதான்
பழுதிலாவெணதுபதிசகத்திருக்கப்பற்றுதியோவெனப்பகர்ந்த. (௩௭)

பெடையதுபகரவடருமாண்பதங்கம்பெலத்தினாற்பிடித்துனைப்புணர்ந்தாற்
கடுகியுன்பதிவந்தெனைச்செயுங்கருமமெதுவெனக்கழறிடக்கபோதம்
படியினிலரசர்குலமறுத்தவன்கையாழிவந்தடுமெனப்பகர
மிடலுடைக்கபோதம்பெண்புள்ளைப்பற்றத்திகிரியுஞ்சிரமறுத்ததுவே. (௩௮)

திறலுடன்பெடையைப்புணர்ந்திடப்பற்றித்திகிரியாற்சிரம்விழச்சேவற்
பறவைவீழ்ந்திடக்கண்டிரேணுகைசிறுவன்காவலில்படியிலையெனவே
யறியுமாதவத்தோனவன்முனரடைந்துன்னுக்கினைநிறைந்திடாவவனி
யெறழ்வலிப்புயத்தாயில்லையுன்பிதாவின்சிராத்தத்துக்கெனைவரியென்றான்.

காசிபமுனிவனிவைகழறிடலுங்களிப்புடனவன்றனையிறைஞ்சி
மாசகன்மழுவோன்பிதாவினற்சிராத்தம்வரித்தனநுகருதியெனவே
யாசகறவத்தோன்சிராத்ததெக்கணையாயையவுன்காவலினமருங்
காசினிமுழுதுமருளெனக்கொடுப்பக்கடிதினேதனமருந்தினனால். (௪0)

இலங்கியசெமதக்கினிதனைமழுவோனிணையிலாவெழுமுனிவருக்கு
ணலனுறவமரும்படிசெயுமகத்தைநடத்திடப்பிருகுகாசிபன்று
னலரியினவிர்நேரத்திரிவதிட்டனங்கிராக்கவுதமன்விசும்பிற்
பொலனுறமறையையறைந்திடுருச்சரிவருடன்பொலிந்தனனன்றே. (௪௧)

தாதையேழிருடிக்கணத்தொடுமமரச்சரியிலாமகத்தினைமுடிக்குங்
காதிதன்மகடன்பவுத்திரன்றனைநற்காசிபற்களிக்கிப்பெற்கருளும்
பூதலமிசையினிருத்தியோவென்னலும்புணரிசூழ்முதிவினையு
மாதவமுயரத்திரித்திடுமழுவோன்வைகிடமிலாதழன்றனனால். (௪௨)

பரவைசூழ்புவிகள்பழுவமெண்ணிலபொற்பருப்பதமிவையெலாமனுகி
விரைவினினமருமிடந்தொறுந்தடர்ந்துவிழுமியகாசிபன்றமிப்ப
வர்சார்வேரறுப்போன்றளர்ந்துளம்வாடியயமன்முன்னெய்தியென்மழுவா
லிரைகடல்மிசைமுத்தரமியானெதிபுமிடமெலாமெனக்கருளென்றான். (௪௩)

சார்த்தவீரியனைக்களைந்திடுந்தவத்தோன்கழறிடவருணமணிசைய
மாத்திரையாளவினெறியவான்வயங்கிவிழுந்திடுமழுவைப்பார்க்கவன்றன்
கோத்திரத்தமர்ந்தோன்குறுகிவந்தெடாமற்குழுமியசிதலையாயரன்கைப்
பாத்திரம்பொடிசெய்பரியெனவிபுதர்படியினிற்றுகளதாயெரித்தார். (௪௪)

ஒருதரமெரியவீழ்ந்திடுமழுவையும்பர்கள்சிதலையாயெரிப்ப
வருணனைகணிச்சிவிழுமிடநாற்பதியோசனைநீளமும்வழங்கத்
தரைமலையாளப்பெயரினையுடையசயநற்பருப்பதத்தமர்ந்தா [ன்.
னிருபர்வேரறுத்தக்குருதியைக்கயத்தணிறைத்துமாச்சபதத்தைமுடித்தோ

அரசர்களிருபத்தொருதலைமுறையுமழிந்திடவதைத்திடுமழுவோ
னுரனெடுந்தவமுந்தெசரதனருளுமுவமையிலிராகவனுயரும்
வரிசிலையுமிழும்வாளியால்வாங்கவாருதியருள்மலையாளத்
தரையினச்சசியவரையிடையமர்ந்தரனெனத்திருவுடனவணுறைந்தான்.

பரசுராமப்படலம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௨௨௪.

---

## ௨௨. வது—இராகவப்படலம்.

திருவுடன்புவிமானினைமான்வயங்கச்சிறந்திடும்பயோததிநாப்பண்
கருவரையிசையிற்கவின்கொளும்ளினக்காடுபூத்தெனக்கரங்கண்கா
லூரனெழிற்சொப்புள்திகழ்ந்திடவிணையிலுரகநல்லணையின்மீதொளிகொ
ளரியினையடைந்தேயழிவிலாப்பதத்தினமரயாமியற்றுவந்தோண்டீர் (௧)

அயமுறுதூண்டிலயமிசைக்கிருமிதனையுணவாமெனவருந்தி
மயிலையங்குழல்வதெனப்பவம்விடுத்துமறலிகைக்கொடாதுயர்மனனே
தயரதன்றவத்தாற்றனையனுப்சனித்துத்தசக்கிரீபன்றனைத்தடிந்து
குயின்மொழிச்சனகியுடனயோத்தியின்வாழ்கோதண்டக்குருவினைநினைநீ.

குவலயத்தரசர்திரள்களைவதைத்துக்குழுமியகுருதியின்முழுகு
முவமையில்மழுவோன்சரிதையைக்கேட்டவுருப்பிணிகோனுசைசுதனுந்
தவனுரமடையப்பகழியால்வாங்குந்தசரதராமனென்றுரைத்தா [ன்
யவனெவன்மொழியென்றியம்பிட முனிவனனங்குநீகேட் டியென்றறைவா

மறுவிலாவிரவியனைத்திடுஞ்சிராத்ததேவிதன்வயிற்றிடைப்பிறந்தான்
குறைவிலாவைவச்சுதனெனுமனுவாங்கோவவன்சேயிக்குவாகு
நெறியினாலினைகவுகர்தவமியற்றிநிகரிலாத்திசைமுகனியைப்
பொறியுலாவியமார்பமுதியவரங்கன்றனைக்கொணர்ந்ததுபொறிகேட்டி. (௪)

பூமகன்கலங்கமறையினைப்பறித்தநிகரிலாப்புணரியிற்புகுந்த
திமுகத்தனைமால்வலைத்துநால்வேதத்திகழ்நான்முகன்றனக்கருளித்
தூய்மைசேர்விமானமிசையினிங்கிற்றலங்கரங்கேசனாய்வரவே
மாமலர்கொடுபூசனையினைச்செய்துமகிழ்ந்தயனமருநாடன்னின். (௫)

மனுவெனுமரசன்மலரயனுலகில்வைகிமற்றவன்றனையிறைஞ்சித்
தினகரனவிர்சால்விமானமேற்றிகழுந்திருவரங்கேசனைவணங்கித்
துனியகல்திருபனயோத்தியினெய்திச்சுதனெனுமிக்குவாகுக்குத்
தனைநிகரிலாதவரவின்மேற்றுயின்றுதயங்கியசெயலெலாமுரைத்தான். (௬)

மனுநிகழ்த்திடவுஞ்சிறந்திடுமிக்குவாகுமற்றவன்றனைநோக்கி
யனவெரினமர்வோனகரிலடையிலங்குமரங்கனையான்றொழுதிடவான்
றினகரன்புதல்வருளுதியெனமன்னுனக்கரிதாமெனச்செப்ப
வினையகல்வசிட்டமுனிபிருபதத்தினிறைஞ்சிநின்றிவைவிளம்பினனால். (௭)

மலருளோன்றிருவாராதனைசெய்புமறுவிலாவரங்கனையான்றும்
னிலமிசைக்கொணர்ந்திண்டருச்சனைசெய்யும்விரதத்தைநிகழ்த்துதியெனலு
பொலனுறுவசிட்டனயன்றன்மந்திரத்தைப்புகன்றிவையுளத்துறநிறுவி
நலனுறத்தவஞ்செய்யெனநயினறிடமன்னகர்துறந்தடவியிற்சேர்ந்தான். (௮)

வனமடைந்தயன்றன்மந்திரஞ்செவித்துமன்னவனுலப்பிலாவருடம்
வினையகன்றிடநற்றவஞ்செய்யுநாளின்விபுதர்கட்கிறைவிடவடருங்
கனமழைபொழியக்காலறைந்திடநற்காமனோடரம்பையர்வரவான்
றினகரன்புதல்வன்செயலைதன்னிற்சிறிதுமாண்டயர்ந்திடாதமர்ந்தான். (௯)

நிலைகுலைந்திடாமற்றவஞ்செயுமனனைநெருப்பெழநோக்கியேவலாரி
யிலகுவச்சிரத்தைவிடுத்தலுமாழியெழுந்திடவெருவியாயுதத்தோ
டுலைவயிற்பறக்கும்பூனைபோற்சரியின்மகபதியோடலும்நிகரில்
மலரயனிவன்முன்செயுமருந்தவத்தைமனத்திடையுணர்ந்துவந்தனனால்.

வருமயன்மகிழ்வாற்றனருச்சிக்குமறுவிலாவிமானத்திலோங்குந்
திருவரங்கேசன்றனைநிலத்திருந்தச்செயுமனன்றவத்தினைநோக்கி
வெருவியபிரமவிராசதகுணத்தால்மேவுபாடவந்தனின்மெலியா
தருவினையொருவவமருமச்சுதனையானெங்கனளிப்பனென்றயர்ந்தான். (௧௧)

மருளகல்பிரமனயர்ந்திடத்திருமால்வந்தசரீரிதானாகிச்
சுரர்நதியெனத்துபதத்தினிற்றோன்றித்தலங்குநாளன்றகாவேரி
யரியநற்றவங்கள்புரிகையினாலேயவளிடத்துறுவமென்றறைந்த
வுரையினும்விதப்புட்கரணிமாதவர்முன்வருவனென்றுரைத்தசொல்லாலும்.

நிலமிசைவிமானத்தோடும்யானமர்ந்துநிகரில்பொன்வரையினைச்சுற்று
மலரியால்வருமத்தினமுறுஞ்சதுவாமுகஞ்சகசிரமகன்றிடுநாள்
மலரின்மீதுறைவோயுனக்கிரவாகும்பொழுதினிவண்வருவேன்யா
னலனுறுமன்னுக்கினையருளெனவுநான்முகனவன்கரத்தியந்தான். (கரு)

திசைமுகன்பரமனருளினாற்கொடுக்கச்சிறந்திடும்விமானமீதோங்கி
திசியகலிரவியவிருறுமணிசேர்நிகரிலாப்பணமுடையனந்தன் [மேவுஞ்
மிசைமரகதம்போல்விளங்கியவரங்கன்றனைக்கொண்டாண்டயோத்தியின்
சுசியுறவயங்கிக்குவாகுவின்சுதனுய்த்தோன்றினன்விகுக்கியாம்பெயரோன்.

கவினுறவயக்கும்விகுக்கியின்சுதனின்காமனன்னேரதாய்த்தயங்க [ல்லாற்
வவுணரைச்செயித்தோன்விடைமுரிப்பினுக்குக்கருத்தூவென்றறைந்திடுசொ
பவமுறுமதன்மீதுவனமர்கைமிகுற்பழுதிலாக்ககுத்தனென்றியம்பக்
குவலயத்தமர்ந்தோர்மகிழவீற்றிருந்தானவன்சுதன்குறைவிலாப்பிருது.

விறலுறுபிருதுசுதனுயர்விசுவகந்திமற்றவன்மகன்வேத
னெறியுறவயங்குஞ்சந்திரனவன்செய்வருவானரச்சுவனவன்றன்
மறுவறுமதலையயங்குசாபத்திமற்றவன்றவத்திறுற்பயந்தோ
னறனுறுபிரகதச்சுவனவன்றனளித்தவன்குமலையாச்சுவனே. (கசா)

அந்தமார்குமலையாச்சுவன்புதல்வனசுரதுந்துவைச்செயித்திடலாற்
றுந்துமாரனென்றியம்பிடும்பெயராய்த்துலங்கினனவனெழிற்குமரன்
சிந்தையின்மகிழவெறியுறுதிடாச்சுவனவனளித்திடுஞ்செம்மல்
சுந்தரமிகுத்தவிறலுறுபரியச்சுவனவன்சுதனுயர்கிரும்பன். (கஎ)

சீறியகிரும்பனருளியகுமரன்சிறந்திடும்பிரசேனச்சுவனு
மேருறுமவன்செயிலங்கியசிரசாச்சுவனவனளித்தவனிலையா
வீரனுஞ்சேனைசரித்தவன்புதல்வன்விறலுறுவனுச்சுவனவன்றன்
பாரினின்வேட்டசுதமனைவியவனைப்பரிவிருளினைத்தினிதிருந்தான். (கஅ)

பாரியரிடத்திற்புதல்வரில்லாமற்பழுவத்தினடைந்தமாதவங்கள்
சீருறுமகத்தைவிளைத்துமந்திரத்தாற்கொடுத்திடுஞ்சலத்தினைப்பருகி
யேருறுமவனுச்சுவன்கருத்தரித்துயிறந்திடாதுவகையிற்பயந்தான்
மாரனைநிகர்த்துவயங்குமாந்தாதாவெனும்பெயருடையமன்னவனை. (கக)

இம்பரிற்றந்தைகருத்தரித்தினவிரவிபோலிலங்கியதவஞ்சா
லும்பர்கள்மகிழவெழுந்தமாந்தாதாவுதவியபுருகுச்சனெழிலா
ரம்பரீடன்மெய்யகல்கிலாநெறிசேர்முசுகுந்தனெனுமிவரயந்தோர்
தம்பிகணிறையமறையவர்மகிழத்துலங்கிநின்பாரினையாண்டான். (உ0)

மருளறுந்தவத்தாலுயர்ந்தமாந்தாதாமைந்தரிற்புருகுச்சன்புதல்வன்
றிரசதச்சவன்றன்பயந்திடுங்குமரன்றிகழனரண்ணியனவன்சே
யருளுறும்பரியாச்சுவனவன்சிறுவனழகியனுந்திரியருண
கிருபன்மற்றவன்றனுதவியகுனுநிகரிலாச்சத்தியவிரதன். (உக)

சத்தியவிரதனுந்திரிசங்குசரியிலாவதிட்டர்சாபத்தா
லித்தலத்திகழும்புலைபனுய்ப்பினரினிணையிலாக்கவுசிகனருளால்
வித்தகவனுடமுதலெனுமைந்தாமுடிக்களும்வானங்கிடங்கரில்
சுத்தனுயுயர்தெக்கணமடைந்திடவேறலங்கினமர்ந்தனனன்றே. (௨௨)

உயர்விசும்பதனினுறுதிரிசங்குபயந்திடுமுத்தமகுணமா
யியல்புடன்றனையெமய்யிலங்கியவரிச்சந்திரனெனுமரசர்கோனிலங்கக்
கயல்நிகர்நயனச்சந்திரமதியைக்கவினுறவேட்டிடவவடான்
செயனுறும்படிவமொளிருலோகிதனையுதவியேசிறந்திடுநாளின். (௨௩)

மகபதியவையின்வசிட்டமாமுனிவன்முன்னரிற்சத்தியவிரத
னிகரிலாவரிச்சந்திரனெனவலனென்றுவமையில்கவுசிகனிகழ்ந்தி
யிகமுனிந்தெழுந்தேயயோத்தியினெய்திவிழுமியதனமருளொன்று
புகலுறநிருபன்மணியொடுகனகம்பொருப்பெனக்குவித்தனனன்றே. (௨௪)

வரையெனக்குவித்ததனத்தைமன்னிடத்தினமைத்தியான்வழங்கெனுநாளிற்
றருதியேயெனவான்டரசனுக்குரைத்தத்தவனுறைக்குழலிறசார்ந்து
பரவைசூழ்படியின்வைதமுதல்விளைவுபழுதுறவழித்திடும்படியே
மிருகமெண்ணிலாதமுனிவொடும்படைத்துவிடுத்தனன்றனைநிகரிலாதான். (௨௫)

தரையிடையமருமிளைவிளைபயிர்கள்சகலமுமழிந்திடவெண்ணில்
மிருகமெண்டிசையுமிருந்திடவரிச்சந்திரனொருதேரின்மேல்விளங்கி
யரிமுதல்விலங்கலினத்தையும்வதைத்தாண்டடர்ந்திடுகிரியினைத்தொடர்ந்து
சுருதியையுணருங்கவுசிகமுனிவன்றலங்கியபழுவத்தினுற்றுன். (௨௬)

உவமையிலரிச்சந்திரமனன்பழுவத்துறைந்தமைபுணர்ந்திடுமினையில்
கவுசிகனசுத்தாலமைத்திடச்சனித்தகவினுறும்புலைச்சியரெய்திப்
பவமறுநிருபன்மகிழ்ந்திடப்பாடியேமையணைத்தருளெனப்பகரச்
சிவனெனமுனிந்துகசையினலடிப்பச்சினத்தவர்முனிவனுக்குரைத்தார். (௨௭)

சினமுடனவர்களுரைத்திடக்கேட்டுத்திகழ்ந்திடுநிருபனைச்சார்ந்து
முனிமுனிவுடனியிவர்களையணைத்தியலவெனமொழிந்திடினரச
வினியவன்புவியோடயோத்திமாபுரியுமிலங்கியதனமுமீகெனனு
மனனினவியற்றேனெனதுமானகர்நாடிவையெலாம்வழங்கினெனென்றுன்.

இன்னவிரைசன்புவியுடனசரமளித்திடவிளையறுமுனிவன்
மன்னவன்னிடத்திலமைத்திடுந்தனத்தைவழங்குதியெனவதற்கிசைந்து
துன்னியவிளைபோற்றுடர்ந்தவனூர்வாய்விடுத்திடுந்துற்குணனுடனு
மன்னனற்காசிப்பதியினிற்சுதனைமனைவிதன்னுடன்விலக்கியந்தான். (௨௯)

காசியின்மனைவியுடன்சுதன்றனையுங்கடுவிலையுறவிலைக்ககற்றி
நீசனுக்கடிமைபுகுந்துமன்முனிவன்றனத்தினைநெறியுறக்கொடுத்து
மாசறுபுலையனுரைத்திடுமொழியால்மருவுறீமத்தினைக்காத்தாண்
டாசறவமர்காட்டனிற்றிருமகன்றனரவுறக்கடித்திடமரித்தான். (௩௰)

மறித்திடுஞ்சுதனைமறுவிலாதுயர்சந்திரமதியிரவிடைச்சுமந்தாண்
டெறித்திடுமிடத்தினணுகிடநிருபனிவ்விடத்திழைத்திடுங்கருமம்
விருத்தமாயவத்தமுறுதிதற்குரித்தாய்விளங்குகாற்பணமுதவென்ன
வருத்தமோடணங்குசிலதியாய்த்தனைக்கொள்மறையவன்பாற்செலும்வேலை

அரசவொண்காசிமனன்மகன்சிரத்தையறுத்தவளுக்கையையரக்கர்
பருவரலுடன்காற்பணங்கொணர்ந்திடச்செல்பாவைதன்கரத்தினிற்படியத்
துரிதமாண்டியற்றுமுனிவன்புள்ளுவத்தாலமைத்திடத்துளங்கியமின்னை
விரைவினிற்பிணித்துநகரிகாவலர்கள்வேந்தன்முன்விடுத்தனரன்றே. (௩௨)

இரவிடையெய்திச்சிறுவனைவதைத்தவரக்கியாமிவளெனப்பகர்ந்து
நிருபன்முன்விடுப்பவவனிருநயனம்நெருப்பெழவடுதிறொன்றுரைப்பத்
தரையினிற்பிணம்வேமிடத்தினிற்காக்குஞ்சந்துகனுகியவயோத்தி
யரசர்கோன்கரத்திற்கொடுத்திவடன்னைத்தெறுகெனக்காவலரறைந்தார்.

மனைவியென்றறிந்துநிகரிலாநிருபன்மலர்க்கையால்வாளினைச்சுழற்றி
முனிதடுத்திடவுந்தறித்திடும்வேலைமுக்கணுனெய்தமாதவர்க
ளனைவருமகிழவமரர்கோன்பதியினமரரிச்சந்திரவரசன்
றனையனுய்வயங்குமுலோகிதன்சிறுவன்தருமமெய்மலிந்திடும்பரதன். (௩௪)

விறலுறும்பரதன்பயந்திடுங்குமாரன்விசையன்மற்றவன்சுதன்பருக
னெறியுறுமவன்சேய்வலனுறும்விருகனவன்சுதனிகரில்வாகுச்சன்
மறனுறுமவன்சேய்மறுவிலாச்சகரன்மற்றவன்மனைவியரிருவர்
குறைவறுசுமதிசகேசினியெனும்பேர்சுமந்துசோகனகமின்னுெப்பார். (௩௫)

அரிவையர்திலகச்சுமதியீன்றிடவேயறுபதினுயிரஞ்சிறுவ
ருரனுறத்திகழ்சாகரரொனும்பெயருற்றொளியுறவமர்ந்தனரொப்பின்
மருவமர்குழலிசுகேசினியுதவவயங்கசமஞ்சசனென்னுஞ்
சரியிலாமதலையிலங்கிடச்சகரன்சதமகனெனவமர்நாளின். (௩௬)

விறலுடைச்சகரன்குரகதமேதவேள்வியைவளர்த்திடவமரர்க்
கிறைவனம்மகத்தினிவுளியைக்கபிலனிடந்தனிழெளிக்கவவ்வரசன்
சிறுவராய்த்திகழ்சாகரருலகடையத்தேடிநீள்புவியினைக்கெல்லி
யுறுபவர்கபிலத்தவனமரிடத்தினுவமையில்புரவியைக்கண்டார். (௩௭)

மகமுறுபுரவியவணுறக்கபிலப்புனிதனைவைதடரரசர்
நிகரிலம்முனிவன்விழித்திடநோக்கிநீறதாயெரிந்துவீழ்ந்திடலும்
புகழுடையசமஞ்சசனளித்திடுநற்புதல்வனுமஞ்சுமானுகிப்
பகருதற்கரியவிறலுடைமன்னன்பரியினைக்கொடுவரச்சென்றுன். (௩௮)

குரவர்களெரிந்துவிழுந்திடுமடலைக்குப்பையாம்வரையினைநோக்கி
வெருவிநற்கபிலனடியினிற்றெழுதலும்விழுமியமாதவனருளும்
புரவியைக்கொணர்ந்துவிடுத்திடச்சகரப்புரவலன்மகத்தினைமுடித்தா
னிருபர்கள்மகிழுமஞ்சுமானன்றுனிகரிலாத்திலீபனைப்பயந்தான். (௩௯)

பவமறுதிலீபனருளியபுதல்வன்பகிரதனெனுமிகுவரச
னுவமையில்கபிலன்றனையிகழ்ந்தெரிந்தவரனுறுகுரவர்வீடெய்தப்
புவிசம்பளந்தபுராதனனுயர்ந்தபொன்னடித்தாமரைவிளக்குந்
கவினுறுகங்கைநதிவரவயனைக்கருதியேயருந்தவஞ்செய்தான். (௬௰)

சதுமுகன்வரநறதவஞ்செயநளினத்தவனவணெய்திநற்கங்கை
நதிவரினனதுகுரவர்வீடுறுவரதனினலவள்படிறனுகி
னுததியும்பொருதாலவடனைத்தாங்குமுரனுளனரனவணெய்த
மதியுளவரசதவம்புரிந்ததற்பின்வரநதிவரவியற்றென்றான். (௬௧)

மலருளோன்மொழியாற்றவஞ்செயுநாளின்மழுவொளிர்விடையவனெய்தி
நிலனுறமுடுகியெழுஞ்சுரர்நதியினிரினைத்தாங்குவனென்னப்
பொலனுறமரசன்பகிரதிவரனைவம்புலன்களையடக்கியொண்டவஞ்செய்
நலனிஞற்கங்கையவனியினுறவேண்டினிலுநலகெலாமதிர. (௬௨)

தரையினின்வருடமூன்றயுத்ததுச்சகசிரமிரண்டுசார்ந்திடமா
லருளயன்புரரிகங்கைவந்திடநற்பகிரதனருந்தவஞ்செய்யச்
சுரர்நதியுறவான்முகடளவாகத்துலங்கிவிண்பரந்திடவதனை
யரனுயர்சடையிற்கரந்துபின்விடவுமவனியினிழிந்தனளம்மா. (௬௩)

அவனியினிழிந்தசுரர்நதிரிகரில்சன்னுமாதவனிடத்தடையப்
பவமகன்முனிவன்குடங்கையாலெற்றுப்பருகநற்பகிரதன்வேண்டச்
செவிநெறியுறவேவிடுத்திடக்கபிலவிறையினாச்சிரமத்தைச்சேர்ந்து
புவியினிலிறந்தகுரவர்மெய்ப்பொடியிற்போதலுமவர்கெதியடைந்தார்.

பண்டுலகளந்தோன்பதத்தினுற்பவித்தபாணியப்பாதபங்கயத்தை
முண்டகன்விளக்கிக்கரகமீதமைத்தமுதுபுனல்முக்கணன்சடையிற்
கொண்டநீர்சிறிதுபகீரதன்றனக்குக்கொடுத்திடப்புனிதமாயிந்த
மண்டலத்திழிந்தவானதியடையின்வண்கதியாவரேயுறுதார். (௬௫)

பகிரதன்றவத்தாற்கொணர்ந்திடப்பாகிரதியெனுமுனையிணைப்பசா
கிகரிலாச்சன்னுமுனிசெவிநெறியினேர்ந்திடச்சானவியாகிச்
செகதலத்தடைந்தசுரர்நதிபரவவுதவியசிருறுமரசன்
புகழுறப்பயந்தபுதல்வனும்நாபாவானெனும்புரவலனம்மா. (௬௬)

தருமமார்நாபாவான்சுதனெனத்தயங்கியசிந்துத்திவீப
நிருபன்மற்றவன்றன்மகனயுதாயுநிகரிலாவவனுதவிடுஞ்சே
யுரனுறுமிருதுபன்னவன்சிறுவனுத்தமச்சாருவகாம
னரசன்மற்றவன்றனருளியகுமரனழகியசுதாசனுமத்தோன். (௬௭)

ஒரியசுதாசனருளியகுமரன்சிறந்திடுமித்திரசகனும்
பேருடைநிருபனவன்சுதனசுமஞ்பிறங்கியபுகழுடையவன்சே
யேருறுஞ்சகலனவனருட்புதல்வனிலக்கியதெசரதனெனிப்
பாரினையாண்டானவனெழிற்சிறுவன்பழுதிலாதுயரயிலுமிழி. (௬௮)

விறலுடையயிலுமிழிசுதன்விசுவசகனவன்விழுமியபுதல்வன்
மறைநெறியுயரவளர்த்திடுகட்டுவாங்கன்மற்றவன்பயந்திடுஞ்செய்
நெறியுறுதிலீபனவனருட்குமரனிகரிலாவிரகுவாமரச
னறனிலங்கிடவான்புவியுளோர்தமைவென்றடகமிறைவலர்க்கீந்தான். (சகூ)

இரணியமுதலாய்ச்சகலமுமறையோர்க்கீந்துமண்ணதனினாலியற்றுஞ்
சிரகநீர்பருகியனமுமக்கலத்திற்சிறுறநுகரும்வீரியனுய்த்
தரணியாளிரகுபயந்திடுங்குமரன்சரியிலாவசமனன்விதர்ப்ப
னருணலக்குமரியாகியவிந்துமதியினையழகுறவேட்டான். (ரு0)

அசனெனுமரசனுழ்கியவிந்துமதியினையணைத்திடவவடா
னிசியகன்றிடவானிவந்திடுதபனனிகர்த்திடப்பயந்திடுகுமரன்
றெசரதனெனும்பேர்சிறந்திடவலத்தாற்றிசைகளைச்செயித்துலகாண்டான்
வசுதையின்மறையோரிணையில்மாதவர்கள்மகிழச்செங்கோலினையோச்சி.

தவர்மகிழ்ந்திடமாகிருபர்கட்கிறையாய்த்தயங்கியதசரதராஜன்
கவுசலையுயர்கைகேசிமின்னிகரில்சவினுறுசுமித்திராதேவி
யிவருடனுறுமயுதமென்மடவார்தமைமணந்திந்திரனைய
வவனியினறன்மெய்நெறியுறவாண்டானறுபதினாயிரம்வருடம். (ருஉ)

அறனுறவறுபதாயிரம்வருடமவனியையாண்டிடுமரசன்
சிறுவர்களிலராய்வருந்திமெய்யுயருஞ்சிருங்கமாமுனிசெய்யுமகத்தை
மறைநெறியதனுடத்தும்வேலையின்வாய்மலருளோன்வலாரிபுத்தேளிர்
சிறகறைகளுழன்மிசையினிற்றோன்றுந்திருவினையகனிடஞ்சேர்ந்தார். (ருங)

திருவினையகனையிறைஞ்சினாண்மலரோன்செப்புவானென்வயிற்றுதித்த
வருள்செறிந்திடுநற்புலத்தியன்சிறுவனாகியவிச்சிரவாவக்
குரனுறுசுமாலிபயந்தகைகேசியுதவியவிராவணனிருதன்
சுரரொடுதவரைநலிந்திடுமவனைவதையெனச்சோதியிதனுறவான். (ருச)

நிசிசரர்க்கிறைவனாகிவானமரர்முனிவருக்கிடரினைவிளைக்கும்
புசவலனுடையவிராவணனுலப்பில்கிளையுடன்பொன்றயானயோத்தித்
தெசரதன்குமரனாகியொண்டிகிரிவலம்புரியனந்தனுமிவர்சீர்ச்
சுசியுறுமனிதராகநீடொளியிற்றுலங்குவனெனவரியகன்றான். (ருரு)

அரியிவையருளியகன்றிடப்பிரமனமரர்கீரரன்முதலாக
விரைவினிற்றரையிற்கவிகளெண்குகளாய்மேவுகமென்றுரைத்தொருவ
மருவமர்தொடைசேரயோத்திமன்னடத்துமகமுறுபாவகனுப்பண்
சுரர்துதித்திடப்பொற்கலத்தினோர்பிண்டந்துலங்கிடவெழுந்ததோர்பூதம்.

ஏதமில்மகத்தினுறுகனலிடையோர்கலத்தொருபிண்டத்தையேந்திப்
பூதம்வந்தவனிமிசையின்வைத்தழலிற்புகுதலுந்தெசரதவரசன்
கோதகன்றிடுந்தன்மனைவியர்கரத்திற்கொடுத்திடமூவரும்வாங்கி
யோதையாருவரியமுதெனவருந்தவுதரத்தினிறைந்ததுகருப்பம். (ருஎ)

உவமையில்லயமாதந்தனிற்சோமனுயர்ந்திடுநவமியிலேந்து
கவினுறுகிரகவுச்சமாய்ப்புனர்பூசத்திற்கற்கடகலக்கினத்தி
னவனிவிண்ணடங்கவயின்றுமிழ்ந்தளந்தவச்சுதனிராகவனாகிக்
கவுசலைவயிற்றினுதையமாயினன்சீர்க்கடிமலரமரர்கள்பொழிய. (ருஅ)

பூசநாளதனின்மீனலெக்கினத்திற்பொலனுறுகைகேசிவயிற்றி
னாசறுபரதன்சனித்தனனிகரிலாயிலியம்மகமிலங்க
வேசறுமடங்கலிலக்கினந்தன்னினிலக்குவனுடனிளையோனும்
வாசமார்குழற்சுமித்திராதேவிவயிற்றினிடையுதயமாயினரால். (ருகூ)

முரசுகாகளநற்றிமிலைதுந்துமிமுந்நீரோலியாமெனமுழங்க
விரைசெறியளகவரம்பையர்முதலோர்நடித்திடவிபுதர்கடுதிப்ப
நிருபரொண்ணயோத்திக்கரசனுய்வயங்குந்தசரதன்சரயுநீர்படிந்து
கரைசெயற்கரியகளிப்புடன்குமரர்கவினுறுவதனநோக்கினனால். (சு0)

வேதியர்தமக்குநிகரில்மாதானமளித்துத்தன்மெய்ப்புதல்வருக்குச்
சாதகஞ்சவுளம்நிறைத்தபின்முன்னூற்றரித்துபநயனமும்செய்து
மாதவர்மகிழப்புரவலர்துதிப்பமறையறநெறியுயர்ந்திலங்கித்
தீதறவனுசர்விரசவேவளர்ந்தான்தெசரதன்களித்திடவிராமன். (சுக)

கருமுகில்காயாமலர்மரகதமஞ்சனவரைகருங்கடல்மயூரச்
சிரதரமெனமெய்சிறந்திடவறன்மெய்திடவிரதம்பொறையறிவு
கருணையுமுறவெங்கயவர்கடனக்குக்கடையுகவிடையவன்பொருவ
மருவமர்தொடைசேரிராகவக்குரிசில்வளர்பிறைபோலொளிர்நாளின். (சுஉ)

மாதவர்மகிழநடத்தும்வேள்வியினைக்காக்கவுன்மைந்தரில்மூத்த
நாதனைத்தருதியெனக்கவுசிகன்முனண்ணியேயுரைத்திடவதற்குப்
பூதலத்தரசன்மறுத்திடமுனிவன்கதமுறப்பொறுத்திநீயென்று
தீதறும்வசிட்டன்மனன்றனக்கரனைச்செப்பிடச்சிறுவனையளித்தான். (சுஙு)

கவுசிகன்மகிழவிலக்குவனுடனற்கவினுறுமிராமனையளிக்க
உவமையிலயோத்திநகரினையொருவியொளிர்தரும்பொழிலிடையுற்றுச்
சிவனுதல்விழியின்மதனெரிந்திடுமெக்கடத்திடைச்சேர்ந்தெழிலிராமன்
பவமுறவுயர்தாடகையெதிர்ந்தடரப்பகழியாலவளைவதைத்தான். (சுச)

நிருதியைவதைத்துச்சிலைகரத்தேந்தும்நிகரிலாவிராமனைநோக்கிச்
சுருதியையுணருங்கவுசிகன்மகிழ்ந்துதுலங்குதெய்வப்படையொருங்கு
பரிவுடன்கொடுத்தாண்டவருடனடந்துபழுதிலாமாவலிமகஞ்செய்
விரைமலர்ப்பொழிலினடைந்தியாகத்தைவிளைத்திடவரக்கர்சென்றடர்த்தார்.

கவுசிகனடத்துமகத்தினையளிக்கக்கடுவெனவடர்நிசாசரரைப்
புவியிடைத்தலைகளுருண்டிடவடித்துப்புகழுடைத்தெசரதவிராமன்
றவர்மகிழ்ந்திடவேமடிந்ததாடகைதன்றனையரிற்சுவாகுவைத்தடிந்து
பவமெனவடர்மாரீசனாழ்கடலிற்கரந்திடப்பகழிகடுரந்தான். (சுசு)

பகலவனவிராற்கெடும்மெனவேபழுதறவிராகவன்சரத்தால்
நகநிகர்நிருதருருண்டிடச்சுரர்கணறுமலர்பொழிந்திடமுனிவன்
மகிழ்வுடன்முகத்தைமுடித்தவருடனும்வரநதிகடந்துநீள்கல்லா
மகலிகைசாபமறக்கவுசலைசேய்மிதித்திடத்துதித்தனளம்மா. (௬௭)

தலமிசைப்படர்கல்லுருவொழிந்தெழுந்தசமனிலாவகலிகையேக
நலனுறுமுனிவன்குமாரர்களுடனும்மிதிலைமாபுரியிடைநண்ணிச்
சலமிலாதுயருஞ்சனகனையணுகவவன்மகிழ்ந்திடவுழைதரித்தோன்
சிலையினைக்கரத்தாலெடுத்தொடித்தனனற்றெசரதனருளியராமன். (௬௮)

விரைபுனைமலரோன்விபுதர்களண்டம்விண்டதுகொல்லெனவெருவ
வானுயர்சிலையையிறுத்திடுமிராமனழகினைநோக்கியசனகன்
றிருவும்வெள்கிடநற்சீதையையிணையில்கவுசலைசிறுவனுக்கீய்வான்
விரைவினின்வரவேதெசரதன்றனக்குவிழுமியதூதனைவிடுத்தான். (௬௯)

பீதகவரைபோற்பிறங்கியசிலையைப்பிடித்தொடித்தருளிராமனுக்குச்
சீதையைத்தருவனெனவுயர்மிதிலைசிறந்திடுஞ்சனகர்கோன்மொழியைத்
தூதர்சென்றுரைப்பத்தெசரதன்மகிழ்ந்துதோல்பரிவீரர்தேர்சூழ
மாதவமுறுந்தன்மனைவியர்சிறுவர்வசிட்டனுஞ்சூழ்ந்திடவந்தான். (௭0)

வேறு. உததிபோலனிகர்சூழவொல்லையிலயோத்திவேந்தன்
மிதிலையினடைதலோடும்விறலுடையிராமனெங்கோன்
சதுமறைநெறியினாலேசமனிலாச்சனகிதன்னை
வதுவைசெய்திடலும்வானோர்மலர்மழைபொழிந்தார்மாதோ. (௭௧)

பாளிதமருங்கிற்சேரவயங்கியபரதனேரில்
வேளெனவிளங்குமெய்யன்மிதிலையிற்சனகன்பின்னோன்
கோளரிபோலவோங்குங்குசத்துவசன்முன்பெற்ற
மாளவியென்னும்பேராமடந்தையைவதுவைசெய்தான். (௭௨)

மான்மதஞ்செறிந்தமெய்யன்வளமுறுமயோத்தியாளும்
கோன்மகிழ்ந்துதவுஞ்செல்வக்குமாரனிலக்குவன்முன்
றேன்மொழியாயசீதைக்கனுசியாய்ச்சிறந்தேயோங்கு
மூன்முளையெனும்பேர்மாதையுவப்பொடுமணந்தான்மன்னோ. (௭௩)

நதியுறுவளநாடாளுந்தெசரதனல்குமைந்தன்
சதுமறைநெறியையோம்புஞ்சரியில்சத்துருக்கன்வாரிச்
சுதையெனுமொழியளாயமாளவிக்கிளையதூய
மதிமுகச்சுரதகீர்த்தியெனுமினைவதுவைசெய்தான். (௭௪)

மிதிலையினனுசரோடுமிராகவன்விவாகஞ்செய்து
மதிதவழ்கவிகையோங்குந்தெசரதருடனும்வையத்
துததிபோற்சேனைசூழச்சனகனையொருவியும்பர்
பதிநிகரயோத்திக்கெய்தப்படியின்மேலெழும்வேலை. (௭௫)

சரியில்மன்னிருத்தவல்விலொலியினைச்சகியமென்னும்
வரைமிசையதனிற்கேட்டுமனமுறுசினத்திரோடும்
பரசுராமன்றுனெய்திப்பழிப்பிலாவிராமன்றனனோ
டுருமெனவுலகமஞ்சவுருத்திவையுரைத்தானம்மா. (எசு)

சிறுவநீயிறுத்தவில்லுமிணையிலென்சிலையுஞ்சீரா
வெறிமலர்க்கமலன்செய்யும்வேள்வியினெழவேநேரில்
கறைமிடற்றரனோர்சாபங்கரத்திடையேந்தமாலா
மிறைவனோர்தனுவைப்பற்றியிருவருஞ்சமர்செய்தாரால். (எஎ)

இருவருந்திசைகளெல்லாமெரிந்திடக்கணைகள்பெய்து
பொருதிடும்வேலைநேரில்புராரிதன்கரத்திற்சாப
முருவமாலெய்தலோடுமுமாபதியந்தவில்லைத்
தரையிடைவிடுத்துச்செய்யுஞ்சமரொரீஇயேகினானால். (எஅ)

அரன்முரணற்றவில்லையவனியின்விடுத்தேயேகத்
திருமகள்கணவன்றன்கைச்சிலையினையுவமையில்லா
விருசிகமுனிவற்கீயவவனென்றன்பிதாவுக்கன்பா
லருளியசாபமீதென்றறைந்தவன்பினருஞ்சொல்வான். (எகூ)

உரனிலாத்தனுவைநீதானொடித்ததிங்காண்மையன்று
திருமகள்கணவன்கையிற்சிறந்தவிச்சிலையைநின்றோட்
பெருமையால்வளைத்தாயாகிற்பிறங்கலாரவனிதன்னி
னரசர்நாயகநீயாதியலையெனிற்சமர்செய்யென்றான். (அ0)

பரசொளிர்கரத்தோன்கூறப்பழுதிலாவிராமனோக்கி
யரிசிலைதருதியென்னவவன்கொடுத்திடலும்வாங்கி
வினாவினிற்கரத்தினாலவ்வில்லினைவளைத்துத்தூய
சரமுறத்தொடுத்துநேரிறவனஞ்சச்சாற்றலுற்றான். (அக)

நலனுறுமரசர்சூழ்வேழ்தலைமுறைமடியநண்ணிச்
சலமுடன்பொருதுவென்றுயாகிலுந்தவவேடத்தை
நிலமிசைத்தாங்குகின்றநெறியினாற்கொலைக்காகாயென்
சிலையுமிழ்சரந்தப்பாதாலிலக்குநீசெப்புகென்றான். (அஉ)

அரசரொண்ணயோத்திவேந்தனருளியகுமரன்கூற
வெருவியபரசுராமன்விளம்புவான்விரசைபோங்குஞ்
சரியில்லைகுந்தந்தன்னிற்றத்துவமூர்த்தியாய
பரமநீநிருபன்போலப்படியின்மேனின்றாயென்றான். (அஙு)

திரையுறும்பயோததிக்கட்சேடன்மேற்றிகழுகின்ற
சரியிலாக்கவினுமண்டத்தப்புறஞ்சார்வைகுந்தத்
திருமகளுடனுந்தோன்றுஞ்செயலெலாம்வெள்கவிந்தத்
தரையினிற்சனகியோடிந்தகையெலாந்தரித்தாயென்றான். (அச)

உன்பெருமாயந்தன்னையுவமையிலுமையாளான
மின்பதிமலரோனாலும்விளம்புதற்கரிதேயாகு
மன்பருக்கெளியவையவடியனென்றவத்தையெல்லாம்
வன்புறுபகழியாலேவாங்குதியென்றான்மன்னே. (அரு)

இரிசிகன்பவுத்திரன்னீதியம்பிடவிராமநம்பி
வரிசிலைப்பகழிதன்னைநெகிழ்த்திடவானோர்போற்ற
பரசுறுகரத்தோன்செய்தபழுதகறவத்தைவாரி
விரைவினின்விசிகமீளவிழும்யோன்வணங்கிப்போனான். (அசு)

மழுவொளிர்கரத்தோன்கையிற்சிலையுமாதவமுநேரி
லழகனுமிராமநம்பிக்களித்தவனேகலோடும்
விழுமியவமரர்பொற்பூவிடுத்திடத்தாதையெய்தித்
தழுவியுண்மகிழவள்ளலயோத்தியிற்சார்ந்தானம்மா. (அஎ)

சரயுசூழயோத்திதன்னிற்சார்ந்தவணிருக்குநாளிற்
கருமுகினிகராமைம்பாற்கைகேசிதாதையூரிற்
பரதன்சத்துருக்கனோடுமடைந்திடப்பழுதிலாத
வரசர்கோன்வசிட்டனண்வருந்தவனுடனேசொல்வான். (அஅ)

பரகதியடையவேநான்பழுவத்திற்றவஞ்செய்வேனாற்
றருமமெய்வலத்தினாலுஞ்சரியிலாவிராமன்றன்னை
விரைவினின்மவுலிதன்னைக்கவித்திடவென்றுகூறி
நிருபனுண்டதற்குத்தக்கபயனெலாநிறைக்கும்வேலை. (அக)

மறுவிலாவிராமனேரில்மணிமுடிசூடும்வாய்மை
நெறியதுகூனிகேட்டுநிகரில்கைகேசிக்குத்தா
னறையநற்றெசரதன்பாலவளடைந்தெனக்குமுன்னா
ளிறைவநீதருவேனென்றவரங்களீகென்றுசொல்வாள். (கூ0)

பரதனிவ்வரசையாளவருளிநீபதினாலாண்டு
விரைவினிற்சீதைகொண்கன்வனத்திடைமேவவிந்த
வரமிரண்டருளுகென்னமன்னவன்மயங்கிவீழத்
திருவுடனிராமன்பின்னோனுடன்பழுவத்திற்சேர்ந்தான். (கூக)

குகனவனிறைஞ்சியேத்தவவன்விடுகுவலையத்தி
னிகரில்வானதியைநாவாய்மிசையினிற்கடந்துநீளும்
புகரிபமடையுங்கானிற்பொலிந்திடும்பரத்துவாசன்
மகிழவும்வணங்கிப்போனார்வடபங்குசித்திரகூடத்தின். (கூஉ)

தூயவோவியத்தின்கூடத்துற்றலுமசுமந்திரன்முன்
போயுயர்தெசரதற்குப்புகன்றிடப்பொருமிமன்னன்
மாயவீண்டிராமன்சூடுமகுடமென்றுயர்கைகேசி
சேயினுக்குரைமினென்றுமுனிசெப்பத்தூதர்சென்றார். (கூங)

ாதவவசிட்டன்கூறமறுவிலாப்பரதன்பாலிற்
றூதுவரெய்தியுன்முன்னவன்முடிசூடவாவென்
றோதலுமகிழ்ந்துபின்னோனுடனடைந்தவன்றாய்சொல்லாற்
றாதைமாண்டதுவும்வள்ளல்வனத்திற்சார்ந்ததுவுங்கேட்டான். (கூச)

தாயெனுந்தீயடன்னைச்சலத்தொடுமொருவியேகிச்
சேய்பிரிந்திடலுமாண்டதசரதன்றன்னைத்தீயிற்
றூயவேதியர்சொல்லாலேதுலங்குசத்துருக்கன்வைத்து
நேயமோடுதகத்தெள்ளுங்கிறைத்திடவாற்றினனல். (கூரு)

இடருறும்பரதன்றன்னைவசிட்டனீயிரங்கலிந்தப்
படியினையாள்தியென்றுபகர்ந்திடநடுங்கிமுன்னோ
னடையுமாவனத்தினெய்திக்கொணர்வனென்றறைந்துதானுஞ்
சடையுயர்சீரைசுற்றிவனத்திடைச்சார்ந்தானம்மா. (கூசா)

நகருளோர்பலருமெய்தநன்னெறிவசிட்டனோடுங்
குகன்விடுமம்பிதன்னிற்கங்கையைக்கடந்துகோதில்
நகபதியெனவேதோன்றுஞ்சித்திரகூடம்நண்ணி
நிகரிலாவிராமன்பாதத்திறைஞ்சிநின்றிரங்கிச்சொல்வான். (கூஎ)

என்றனைப்பயந்தபாவியிழைத்திடுந்தீமைதன்னா
லுன்றனையொருவலாலேமடிந்தனனுந்தையென்ன
வின்றுலகயின்றவையனரற்றலுமுனிவன்றேற்றத்
தன்றுணைக்கரத்தாற்பிண்டஞ்சலந்திலமளித்தானம்மா. (கூஅ)

தாதைநற்கதியையெய்தவியற்றியசதுரன்றன்னைப்
போதுநீமகுடஞ்சூடவெனப்புகன்றிடும்பின்னோனை
நாதனுமகிழ்ந்தீரேழாண்டறவனநண்ணுவேனென்
றோதிடச்சிரசின்முன்னோன்பாதுகமொளிரப்போனான். (கூகூ)

பாதுகஞ்சிரசின்மீதின்வயங்கிடப்பரதனேக
மாதவர்மகிழவந்தவனையினையொருவிவள்ளல்
போதமர்திருவுசேரிளவலும்புடைசெல்வேலை
தீதுசெய்விராதன்றன்னைத்தெறவவன்கதியிற்சேர்ந்தான். (௧00)

வேறு. விறலுறுவிராதன்கதியினிற்சேரவிழுமியசரபங்கனிடத்தி
னுறவவன்றழலின்விழுந்துயர்பதத்தையுற்றிடவிரைவினேகிக்
குறுமுனியடியினிறைஞ்சிடவவன்விற்கணையொடுதூணியைக்கொடுப்பப்
பறவையினதிகசடாயுவைக்கண்டுவியல்பஞ்சவடியினிற்சேர்ந்தான் (௧0௧)

படியினிற்பஞ்சவடியினினமருந்தினத்தினிற்பழுதகல்சனகி
வடிவினின்மயல்சால்மகபதிசிறுவன்மருளுறுகாகமாயெய்தித்
தடமுலைமிசையிற்கிழித்திடமுனிந்துதசரதவிராமனோர்திரணம்
விட்டிசும்படையத்தொடர்ந்தொருநயனம்விழுந்திடவகற்றியதன்றே. (௧0௨)

நிருதிசூர்ப்பநகைநிகரில்மோகினியாமுருவினைநிறைந்தெனையணையென்
றுரைசெயவிராமன்மறுத்திடவவடானுவமையில்சனகியைப்பற்ற
விரைவினிளவலவள்செவிநாசிவிழுமியநகிலிவையறுப்பக்
கரனுடன்குருதிசொரியவேயிறைஞ்சியிவையெலாங்கழறினளம்மா. (௧௦௩)

நிருதியீதறையக்கனன்றெழுங்கரன்றூடணன்றிரிசிராநிகரில்லாப்
பரிகரியிரதம்நிசாசரர்சூழ்ந்துபழுவத்திற்சமரொலாஞ்செய்து
குருதிகள்பெருகத்தலைமலையெழவான்குவாலுறக்குறைத்தலையாட
வரசர்கடிலகத்தசரதவிராமன்கணையினாலவனியின்மடிந்தார். (௧௦௪)

கரனுடனனுசரிராக்கதர்மடியக்கலங்கியவரக்கியுட்காந்திப்
பரவைசூழிலங்கையிராவணனடியிற்பணிந்தவள்பழுதிலாதுனக்குத்
திருமகணிகராஞ்சனகியைக்கொணரச்சேர்ந்தியானவடனைப்பற்ற
வரிசிலையிராமற்கிளவலென்னகில்மூக்கிருசெவிவாளினாற்கொய்தான். (௧௦௫)

குருதிநீரிரியமுலைசெவிநாசிகுறைந்தயானரற்றிடக்கேட்டு
விரைவினிற்கரதூடணன்றிரிசிராவெவ்விடமெனவளைந்திராமன்கை
வரிசிலையுமிழுங்கணையினால்மடிந்தாரெனவயிற்றெற்றியாண்டரற்றி
யுரைசெயச்சனகியழகுகேட்டரக்கன்மயலுறவுளைந்தனனன்றே. (௧௦௬)

மருளுறுமளகச்சனகிதன்மயலாலுளைந்துமாரீசனையடைந்து
விரைவினிற்பஞ்சவடியினினவடானிவணுறும்வினைசெய்யென்றறையும்
நிருதர்கோன்மொழியானுழையுருவாகிநிகரிலாச்சனகிமுன்றிரியத்
திருமகளிதனைத்தருதிநீயிராமாவெனுமுரைசெப்பினளன்றே. (௧௦௭)

தேவியீதுரைப்பச்சிலையுடனிராமன்றிரிந்திடுமுழையினைத்தொடர்ந்து
பாவமார்மடவார்மனமெனக்குராங்கம்பழுவத்தினகப்படாதேக
மேவுவோன்மாயமிவையெனக்கணையைவிடச்சிரந்துணியுமாரீச
னாவிபோயிடுங்காலிலக்குவசனகியெனமனன்குரலறைந்திறந்தான். (௧௦௮)

மதிமுகச்சனகிநிருதனுண்டரற்றுங்குரலினால்மருணன்சொல்லென்று
பதறியேகெனமன்னிளவலுமொருவப்பவமுறவிராவணனுயரு
மெதியெனவடைந்தாண்டவடனைப்பற்றியெதிர்ந்திடுசடாயுவைவதைத்தே
யுததிசூழிலங்கைநகரிடைமேவியுத்தமிதனைச்சிறைவைத்தான். (௧௦௯)

சனகியாணையினாலொருவிடுமிளையோன்றனாயிடைப்பெட்புறவேகி
யனுசனையடைந்துன்மனைவிசொல்லதனாலணுகினனெனவவனுளைந்து
கனகமாமெனுமெய்த்திருவினைப்பஞ்சவடியினிற்காண்கிலனாகித்
தினகரனவிரால்வதனம்வேர்வரும்பவாடியேதேடினனம்மா. (௧௧௦)

பவனவேகத்தாலடைபவனுயரும்பறவைகட்கதிகமாஞ்சடாயு
புவியினினுளைந்துவிழுந்திடக்கண்டுபுனல்கணின்மலியவேயிரங்கித்
தவர்வியப்புறவப்புள்ளுயர்பரமன்றயங்கிரும்பதத்திடையேகக்
கவலையார்மனத்தனவன்றனைப்பரிவாற்கனலிடைவளர்த்தனன்மாதோ. (௧௧௧)

புவிமிசையிறந்தசடாயுவைக்கனலினருமறைப்பொருளுறவளர்த்தி
யுவரியிற்கதிரோன்மறைந்திடுமிரவினயோமுகியுறவவணாசி
செவிவிழப்புனலைக்கொடுவரக்கயத்திற்சென்றிடுமிளையவன்கொய்ய
வவனியினுயிரைக்கரத்தினால்வாரியருந்திடுங்கவந்தனைவதைத்தான். (கக௨)

புவியினினிறந்தகவந்தனோர்தவனாய்க்கதியிடைப்போகவேயருளிச்
சுவைதருகனியையருந்திடவளித்துத்தொழுதிடுஞ்சவரியாமரிவைக்
குவமையில்பரமபதத்தினையன்பாலுதவிநற்பம்பையினெய்திக்
கவிகுலதிலகவனுமனைக்காணக்கதிரவன்சேய்சகாவானான். (கக௩)

இரவிதன்சிறுவன்றுணைவனாயடையுமிராகவன்பாதவங்குட்டம்
வரையெனவுயர்துந்துபியெலும்பிடையின்மடுத்துவானெழுந்திடவுந்தித்
தரையினினிவரேழ்மராமரம்விழவேசாயகம்விடுத்துயர்வாலி
யுரமறவுயிர்போம்படிகணைதுறந்தானும்பர்கள்வியப்பொடுதுதிப்ப. (கக௪)

அங்கதமுறுநல்லங்கதப்புயமன்னங்கதன்றனக்களிசுரந்து
செங்கைதங்குடைவாள்சிறப்புறவீய்ந்துதினந்திசையெங்கணுந்திரிந்தே
கங்கைபொங்கியகோடீரனைமலராலருச்சனைசெய்திடுங்கவியாந்
துங்கனன்றருளுஞ்சுதனெனவரித்துத்துலங்குதிநீயெனச்சொன்னான்.

சுரர்பதிசிறுவன்றனைவதைத்திரவிசுதன்றனக்கரசினையளித்து
மருவலர்கெடவெங்கணைதொடுமிராமன்வருடகாலங்கழிந்ததற்பின்
விரைவினின்வருதியெனவவன்பதியின்மேவிடலுஞ்சரற்காலம்
வருதினந்தனிலுங்கவிகுலக்கிறையாய்வயங்குவோன்வந்திலனன்றே. (கக௬)

வருடகாலந்தானொருவவுமிரவிமதலைவந்திடாதமர்ந்திடநற்
புருடர்நாயகனுமிறையிலக்குவனைப்போயவன்றனைக்கொணர்கெனவுங்
கருடவேகத்தாலவன்பதியணுகிக்கழறிடக்கதிரவன்சிறுவன்
மருடவிர்ந்திடவானரப்படைசூழமன்னடிவணங்கினன்மாதோ. (கக௭)

வானரவினத்தோடடைந்திடுதபனன்மதலையைமகிழ்ந்திடுமிராமன்
றேனுகுமொழியாஞ்சனகியைத்தேடத்தென்றிசையடைந்திடுமென்றே
மானகவீகரங்கதனயன்குமரன்மாருதிநீலனோடனேகத்
தானையைவிடுப்பவவர்களோர்பெலத்திற்சார்ந்தவனொருவியேகினரால்.

தரையினில்மணித்தருறைவிடம்பழுவஞ்சயிலமெண்ணிலபலமுழைகள்
பரவியாசுகன்றன்வேகமோடுழன்றுபங்கயச்செல்வியைக்காணார்
தெருமரலுறத்தம்முயிரினைவிடுவமென்றுதென்றிசைமகேந்திரமால்
வரையினினெவருங்குழுமியேதேடும்வகையிலார்வருந்துமெல்லையிலே. (கக௯)

அனுசனுஞ்சடாயுதபனன்வெம்மையினாலயர்ந்திடவன்றனைக்காத்துத்
தினகரன்கிரணமதனினாற்சிறகுதீய்ந்தசம்பாதியாண்டுறலும்
வனசரர்குழுமியிராமவென்றேத்துநலத்தினால்வளர்ந்திடுசிறகன்
சனகிசாகரஞ்சூழிலங்கையினமர்ந்தாளெனுமுரைசாற்றினன்மாதோ. (க௨௦)

வேறு. எருவைமன்றிருவிருந்தமையியம்பிடக்கடலி
னிருதிவாயினிற்புகுந்தவள்வயிற்றினைநீக்கி
விரைவினுலவள்குடரொடாசினியிடைமேவிக்
குரைகொள்வேலையைக்கடந்தனனஞ்சனைகுமரன். (கஉச)

எதிரிலங்கைமாதேவதைதன்னையீடழித்து
மதில்வளைந்திடுமிராவணன்கோயிலின்மன்னிச்
சதுரவீதியின்மனைதொறுந்தாவியேதிரிந்து
புதியநல்லமிர்தானபொற்கொடியினைக்காணுன். (கஉஉ)

இலங்கைமாநகரெங்கணுந்தேடியுங்காணுக்
கலங்குசிந்தையன்கவினுறுமசோகநற்காவாண்
டிலங்கவெய்துவோனிகமப்பினினேகியேகண்டான்
கலங்கிநீர்பொழிந்திடக்கலைந்தசானகியை. (கஉ௩)

மாசுறும்மணியெயநீயர்கொள்மைதிலியை
ஏசறுங்குணமாருதியிறைஞ்சியேயிராம
ஞசறுங்கரவிரலிடையாழியையளிப்பத்
தேசுறுந்திருவாங்கித்தன்சென்னிமீதமைத்தாள். (கஉச)

சிரசின்மீதொளிராழியைச்சேர்த்திடுஞ்சனகி
யிரவியின்னவிர்போன்றசூளாமணியீய
விரைவின்வாங்கியமாருதிவிளம்பிநீள்பொழிலைச்
சுரர்துதித்திடத்துகைத்தனன்றுகளதாயிறவே. (கஉரு)

வேறு. சுரருலகளவாய்த்துலங்குமுத்தியானந்துகள்படவடிகொடுதுகைத்து
வரைசிகர்கவியொன்றடர்ந்ததுவெனக்காப்பவர்கள்சென்றிலங்கைமன்னவ
குறைசெயமுனிந்துபரிகரியுடனேயுலப்பிலாநிருதரைவிடுப்பப் [னுக்
பரவைபோலவர்கள்வளைந்திடக்கண்டுபவனன்சேயெழுந்தமர்செய்தான்.

விக்கிரமத்தாலடர்நிசாசரரைவிலங்கல்போல்விழுந்திடவதைத்துத்
திக்கயமெனவந்தெதிர்ந்தமந்திரிகளெழுவர்சேனுபதியைவர்
தொக்கரித்தயில்வேல்விடுத்திடுஞ்சம்புமாலியோடிவர்களைக்கொன்று
யக்கனைக்குதியால்நிலத்திடையரைத்தந்தகாந்தகனெனத்திரிந்தார்த்தான்.

பரிகரியிரதம்நிருதர்மந்திரிகள்பஞ்சசேனுபதியக்கன், றரையினில்மடியப்புர
ந்தரசித்துச்சரமைந்துவிடுத்தவந்தடர்த்துப், பிரமவத்திரத்தாலுயருமாருதி
தோளுறப்பிணித்திலங்கையாண்மனன்முன், விரைவினின்விடுப்பவவன்முனி
ந்திவன்வால்வெந்திடச்சுடுதிரென்றுரைத்தான். (கஉஅ)

நிருதர்சோனுரைப்பப்பலரிராக்கதர்கள்நிகரிலாமாருதிகூலத்
தெரியினைக்கொளுத்தச்சனகிசொல்லதனுலிதையமோடென்புகள்குளிரத்
திருமகள்செயலீதென்றுணரனுமன்றெசமுகனகரெலாமெரியத்
சரியிறன்வாலின்மிசையினினெழுந்ததழலினையெங்குமுவைத்தனனால்.

சதுரமாரிலங்கைநகரினைக்கூலத்தழலினாலெரித்ததன்பின்னர்
கதுமெனச்சனகியடியினிறைஞ்சிக்கடலினைக்காலினாற்கடந்து
மதுவனமழித்தங்கதன்முதற்கவிகளுடனிராகவன்றனைவணங்கிச் [ன்.
சுதைதருமொழிநற்சீதையீய்ந்திடுஞ்சூளாமணிகொடுத்தெல்லாஞ்சொன்ன

மாருதிசனகியிருந்தவாறுரைப்பமகிழ்ந்திடுமிராகவனெழுந்து
பாரினிற்கவிகள்பரவைபோல்மிடையப்பருதிசேய்முதலினோர்சூழச்
சீருறவயங்குமிலக்குவனுடனேதென்றிசையளக்கரிற்சேர்ந்து
நேரிலாச்சலதிக்கரையினிற்றானைநிறைந்திடவமர்ந்திடும்வேலை. (க௱க)

வேறு. "எரியினினேம்பலுற்றிடுமிலங்கையைச்
சுரர்நகர்வெள்கிடத்துலங்குசெம்பொனால்
நிருதர்கோன்மகிழ்ந்திடநிகரிலாமயன்
விரைவினிற்குயிற்றினன்மணிகள்வில்லிட. (க௱உ)

மயனியற்றிடவிலங்கிலங்கைமன்னவ
னியல்புறுங்குரங்குவாலெரியவைத்திட
வயனமற்றிடவவ்வூரழிந்ததென்னினிச்
செயும்விறலேதெனச்சினத்துக்கூறினான். (க௱ங)

எரிசினவிராவணனிவைகள்கூறலுஞ்
சுரர்பதிசெயித்திவைசொல்லுவானுயர்
நரரொடுகவிகடன்னுமம்வேற
விரைவினிற்செற்றிவண்மீள்வனென்றனன். (க௱ச)

தாதையோடிவைசுதன்சாற்றவீடணன்
றீதுசொல்லினையெனச்செப்பிமுன்னவன்
பாதமேற்பணிந்துயர்பரமன்றேவியை
யேதமற்றிடவிடுத்துய்யென்றானரோ. (க௱ரு)

இனையசொல்லிளையவனியம்பமுன்னவன்
முனிவுடனகல்கெனமுடுக்கவீடணன்
வினையொரீஇநால்வர்மந்திரிகள்மேவிடத்
தனைநிகரிலாதமால்சரணந்தாங்கினான். (க௱சா)

தீமையில்வீடணன்சேர்ந்திறைஞ்சநற்
பூமனைத்தந்தருள்புனிதராமனென்
னாமமுள்ளளவும்நீவாழ்கநாமமார்
மாமதிளிலங்கையைவழங்கினேனென்றான். (க௱எ

சிந்துவினலையுறத்திகழிலங்கையைத்
தந்தனனென்றமனடியிற்றாழ்ந்துபின்
னிந்திரன்றனைச்செயித்திலங்குதீயவன்
றந்தையின்வலனெலாஞ்சாற்றினானரோ. (க௱அ

நிருதர்கோனுரனெலாம்நிகழ்த்தக்கேட்டமன்
பரவைசூழிலங்கையம்பதியிற்சென்னெறி
தருகுதியெனத்தவஞ்செய்யச்சார்கிலா
வருணன்மேற்சரம்விடவாரிவெந்ததே. (௧௩௯)

பரவைகளேழினும்பகழிபாய்ந்திட
வெரிகனல்மடுத்திடவேங்குநெஞ்சினன்
வருணன்வந்திறைஞ்சிடவானரற்கவி
திரையுறமுவரிமேற்சேதுசெய்ததே. (௧௪0)

கடலிடைச்சேதுவைக்கடந்திலங்கையின்
மிடலுடையிராகவனமரும்வேலையிற்
கடியவரொற்றர்கள்கலந்துவானரர்
வடிவுகொண்டெய்தினார்மறங்கடுஞ்சமே. (௧௪௧)

சாரணர்சுகரிவர்சாரவீடணன்
சோரனென்றிவர்களைப்பற்றச்சோதியோ
னேருறுமிலங்கைதனிலவற்கெய்ந்தமை
கோரராவணனுக்குக்கூறுமென்னவே. (௧௪௨)

கவினுறுமிராகவன்கழறவொற்றர்கள்
பவமுறுமிராவணனடியினிற்பணிந்
தவரியிற்சேதுவையோரிமைப்பின்முன்
கவிகள்கட்டினதெலாங்கனன்றுகூறினர். (௧௪௩)

சேதுவைக்கடந்திவண்சேர்ந்துவீடணற்
கேதமிலிலங்கையையிராமனீய்ந்ததுந்
தூதுவர்குருதிவாயுமிழச்சொல்லவே
தீதுறுதெசமுகன்சினமுற்றனரோ. (௧௪௪)

வேறு. முனிவுடனிருதனெழில்கொள்கோபுரத்தின்முகட்டினினேறியேயிலங்
வனகனுஞ்சுவேதவரையினுச்சியின்மீதமர்ந்திடநோக்கிடுவேலைத் [க
தினகரன்புதல்வனிமைப்பினிற்சேர்ந்துதெசமுகன்சிரத்தினின்வயங்கும்
கனகமாமவுலிமணியினைக்கவர்ந்துகாகுத்தனடியிசைத்தாழ்ந்தான். (௧௪௫)

கோலமார்மவுலிமணியினையிழந்துகொடியவனுளைந்திடும்வேலைச்
சீலமாரிராமன்சனகியைவிடுத்துவுய்யெனச்செப்பிவாவெனவே
வாலிகான்முளைவிடுத்திடவவன்போய்மொழிதலுமற்றவன்மறுப்ப
நீலமாமுகில்போற்கவின்கொளுமிராமனுடனிவைநிகழ்த்தினனம்மா. (௧௪௬)

சனகியைவிடாதுமறுத்திடுமரக்கன்சமரிடையெதிர்ந்திடுமயிலா
லனகனுக்கிளையோனயர்வுறவவனையெடுத்திடுமரக்கனைப்பவனன்
றனையன்வந்திமைப்பிறடுத்திலக்குவனைத்தடக்கையாலணைத்தவனேக
வினையறுமுனிவர்துதித்திடத்தருவின்மலர்பொழிந்தார்த்தனர்விபுதர். (௧௪௭)

பீனிபோலிரதமிசையினின்வயங்கிவிசிகம்விட்டடரிராவணனைக்
காளமாமுகில்போற்கவினுறுமிராமன்காலினற்சுதன்புயமிலங்கி
நீளும்வார்சிலையிற்கணையினாலவன்றன்மகுடம்வில்நிலத்துறவறுத்து
நாளைவாவெனுஞ்சொல்மொழிந்திடவவனும்நாணமுற்றகனகரடைந்தான்.

விறலெலாமழிந்துவெறுங்கரம்நாற்றிமீண்டவன்றனக்குமாலியவா
னறனலதியற்றினிவைவருவனவென்றறைந்திடமகோதரன்முனிந்து
குறைவிலாக்கும்பகருணனைவிடுத்துக்கொடும்பகையழித்தியென்றுரைப்ப
நிறைதுயிறவிரவவன்றனையெழுப்பிநெடுஞ்சமர்பொருதிநீயென்றான்.

நிருதர்கோனுரைப்பநெடுவரைநிகர்த்துநீண்டமர்செய்திடுமரக்கன்
குருதிநீர்பெருகக்கவிக்குலமடையக்கொன்றுசுக்கிரீபனைப்பிணித்து
விரைவினிற்றிரும்புமளவினிலிராமன்விலக்கியாண்டவன்கைகாறுணித்துச்
சிரமுவரியின்கண்வீழ்ந்திடச்சரத்தைநிறைத்திடத்தேவர்களார்த்தார் (கருo)

மருத்தனைச்சனகனுகவேவகுத்துமாயமாங்கியற்றிவைதேகி
பெருத்திடுமிடரினயர்ந்திடுமளவிற்பிறங்கலைநிகர்கும்பகருணன்
சிரத்தினையிராமன்றுணித்திடுஞ்செயலைச்சென்றிடர்ந்தூதுவர்மொழிய
வருத்தமுற்றரற்றுமிராவணன்முனிந்துவயங்கதிகாயனைவிடுத்தான். (கருக)

அந்தகனெனவந்தடர்ந்ததிகாயனத்திரத்தரிகளையழிக்கச்
சுந்தரமிகுத்தவிலக்குவன்சிலையாற்சுடுகணைமழைகளைசொரிந்து
கந்தமாமலரோன்படையினாலவன்றன்சிரத்தினைக்கதுமெனத்துணிப்ப
விந்திரன்முதலாயிமையவர்மலர்கள்பொழிந்தனரொழுந்தெழுந்தாடி. (கருஉ)

பின்னரும்நிகரிலிராவணன்குமரர்பிறங்கல்போலடர்ந்திடுமவரைத்
துன்னியவிருளையொழித்திடுமிரவிசுதன்முதலாயினோர்கரத்தாற்
சின்னபின்னங்களுறத்தடிந்திடலுஞ்சென்றுதூதுவர்சொலவிலங்கை
மன்னவனிரங்கிவலாரியைச்செயித்தமறவனைவிடுத்தனன்மாதோ. (கருங)

அரனயன்வெருவவிராவணிமுனிவோடரிகளைச்செற்றுவான்கரந்தே
யுரகவெம்படையாலிலக்குவனுடன்வானரங்களைப்பிணித்திடவுவணன்
விரைவினிரவம்விட்டுவானரங்கள்விளங்கியாண்டெழுந்திடவிபுதர்
தருமலர்சொரிந்துநடித்திடமுனிவர்சதுமுகனுடுந்துதித்தனரால். (கருச)

இரணியவரைபோலெழுந்துசெல்கலுழனிலகமாவுரகவெம்படையின்
முரணறுஞ்செயலையடைந்திடுந்தூதர்மொழிந்திடவிராவணன்முனிந்து
கருணைபற்றடருங்கரன்மகன்முதலாய்க்கடியவல்லரக்கரையேவத்
தரணியிற்கடல்போலெதிர்ந்திடுமிவரைத்தடிந்திடுமிரவிசேய்முதலோர்.

இரவிசேய்முதலோர்கரத்தினாலிமைப்பினெண்ணிலாநிருதர்வீய்ந்திடலு
மரனெனமுனிந்துவருணமாப்படையோடாசுகாத்திரத்தினைவிடுக்குங்
கரன்மகன்சிரத்தைக்கடுங்கணையதனாற்காகுத்தன்களைந்திடக்கண்டு
விரைபுரைகனகத்தருமலர்பொழிந்துவிபுதர்களடித்தனர்மாதோ. (கருசு)

கரன்மகன்முதலாய்நிருதர்கள்மடிந்தசெயலினைத்தூதுவர்கூற
நிருதர்கோன்விடுப்பவிராவணியனிகநிறைந்திடவரவிலக்குவமன்
வரிசிலைவலத்தாலறுபதுவெள்ளத்தரக்கரைவதைத்திடநோக்கிக்
கருகியமனத்தனயன்படைவிடுக்கக்கருதிவானகமிசைவந்தான். (கருஎ)

கருமுகிலிடையவ்விராவணிகரப்பக்கடியனுமகோதரநிருதன்
சுரர்பதிவிபுதர்மனிதர்களுருவாய்த்தோன்றிடவிலக்குவனுடனே
யரியினந்திகைக்குமளவினிலொளித்தவறனிலானயன்படைவிடுப்ப
வெருவிவிண்ணவர்களொருவிடவினையோன்விழுந்தனன்சவிக்குலமடைய.

விறலுடைநிருதன்விடுத்திடும்படையாற்கவிகளோடினையவன்விழலும்
நெறியுறுமிராமனடைந்தவணிரங்கிமயங்கிடநிகரிலாச்சாம்ப [றைதச்
னறையமாருதிபோய்ப்பசும்பொனின்வரையைக்கடந்தவுடதப்பருப்பதத்
சிறகுடைக்கலுழனெனக்கொணர்ந்திடலுமுயிர்வரத்தெளிந்தனர்வீரர்.

விரைவினினனுமானவுடதவரையைக்கொணர்ந்திடவுயிர்வரும்வீரர்
சுரர்மலர்பொழியவயங்கினரெனுஞ்சொற்றூதர்சென்றறைந்திடவரக்கன்
எரிசினமுறத்தன்சுதன்றனைநோக்கியினிச்செய்வதேதெனமாயக்
கருமமங்கியற்றிநிகும்பலைமுடித்துக்களைவனந்நரரையென்றுரைத்தான்.

தீயவனிவையையிராவணன்றனக்குச்செப்பிமாவுடதவரையை
யேயெனுமளவினவணிடையிருத்தியெய்தியமாருதிமுனரின்
மாயமைதுலியாயரற்றிடத்துணித்தவனப்புறமயோத்திமானகரிற்
போயதினுறுவோர்கிளையுடன்பொன்றப்பொருவனென்றேகினனம்மா.

தீயவன்வதைக்கச்சனகிமாண்டனளென்றிராமன்முன்மாருதிசெப்ப
வாயிரம்பெயரோனயர்ந்திடுமளவிலறிஞனும்வீடணனவணிற்
போயுயர்சனகன்புத்திரிதனைக்கண்டவையெலாம்புகன்றிடமகிழ்ந்து
மாயவாளரக்கனிகும்பலைமகத்தைச்சிதைத்தனன்சுமித்திரைமதலை. (கசுஉ)

வடதருநிழலிற்செயுநிகும்பலையாமகத்தினையழித்திடக்கனன்று
கடியவனயன்மாலரன்படைவிடுப்பக்களைந்திடுமிராகவற்கிளையான்
படியிசையவன்றன்கரமொடுசிலையும்படிந்திடத்துணித்தவன்சிரத்தை
நெடியவெங்கணையாலறுத்தனனமரர்நிறைமலர்பொழிந்தெழுந்தாட.(கசுங)

புரந்தரசெயித்துமடிந்திடத்தூதருரைத்திடவிலங்கையாண்மன்ன
னரந்தையுற்றரற்றியமர்க்களத்திடையினடைந்துதன்சிறுவனுக்கையினைக்
கருந்தடங்கரத்தாலெடுத்தவனகரிற்கடிதுசென்றேதிலதயிலம்
பொருந்திடவமைத்தாண்டிடருறுமளவிற்போந்தனமூலமாத்தானை. (கசுச)

சகசிரவெளமாயறைந்திடுமூலத்தானையையிராமன்மேன்முடுக
மிகவுநெஞ்சொல்கிக்கவிகள்பாறிடலும்வெருவலென்றங்கதனிறுத்த
விகழ்விலாவினையோயவர்களைக்காவென்றேவியேகன்னலேழரையிற்
பகலவன்குலமனுயிரம்வெளமும்பகழிமாமழைபொழிந்தறுத்தான். (கசுரு)

இரியும்வானரமாவினங்கள்மேலடர்ந்தவிராவணனிலக்குவன்மீதின்
விரைவினின்மோகாத்திரம்விடவதனைவீடணன்மொழியினாலிளவ
லரிபடைவிடுத்தேயறுத்திடக்கதமுற்றனுசன்மேலரக்கனேவயிலை
யுரமிடைதனிலேற்றுயர்சுழித்திரைசேயொல்லையினயர்ந்தனன்மாதோ.

வீடணன்றனைக்காத்துரமிசைக்கதிர்வேல்விலங்கவேற்றிடுமிலக்குவன்முன்
வாடிமண்மிசையின்விழுந்திடவரக்கன்மகிழ்வொடுதன்னகர்சேரப்
பீடுடையனுமன்மருந்துபோய்க்கொணரப்பிரிந்திடுமுயிர்வரத்தெளிந்து
கூடினனிராமன்றனையவனனுசனாகியகொற்றவன்மன்னோ. (௧௬௭

வேலினாலிராமனனுசனைவென்றமகிழ்வொடுமேவியவரக்கன்
மூலமாத்தானைக்கினியநல்விருந்தையளித்திடவழையெனமொழியக்
காலன்வாயவர்கள்விழுந்திடவிராமன்கணைந்தனனெனவொற்றர்கழற
வாலமேவிகராயிராவணன்கதமுற்றமர்செயப்புகுந்தனனம்மா. (௧௬௮)

மகபதியிரதமலருளோன்மொழியால்மாதலிகொணர்ந்துமுன்னிற்பக்
ககபதிமிசையின்வயங்கிடுமாயோன்கவினுறத்தேர்மிசையேறி
நகபதியெனவேயிலங்கிவந்தடருமகோதரனமனுலகடையச்
சிகிபதிவிசிகந்தனின்விசைசெய்தான்றேவர்கள்மலர்மழைபொழிய. (௧௬௮)

மந்திரியெனவேவயங்கியங்கெய்திமகோதரன்மடிந்திடமுனிந்து
வெந்திறலரக்கனிரதமேல்வரலும்விறலுடையிராமனுமடர
வந்தனதிசைகளாசினிவரைகளயனமர்ந்திடுநகரடங்கச்
சிந்தையினினையுமுனரெணில்சாரிதிரிந்தனர்சிலீமுகம்பொழிந்தே. (௧௭0)

தீயவன்முனிந்துசிலையினால்மாயச்சிலீமுகம்விடுத்திடவிராமன்
ஆயமாஞானக்கணையினாற்றுணிப்பநிருதனோர்சூலம்விட்டெறிய
மாயவனதனைச்சலத்தினுங்காலவலத்தினாற்றுசனுறநூறி
ஆயிரங்கணையாலரக்கன்றன்சிரங்கையதனையுமறுத்தனனம்மா. (௧௭௧)

கணையினால்விழுந்தசிரங்கரமனைத்துங்கடிதினிற்கிளைத்திடனோக்கி
யிணையிலாவிராமன்சிலையினால்விடுப்பவிலங்கியசதமுகாத்திரத்திற்
பணியணிமுதலும்பங்கயத்தவனுங்கொடுத்திடும்வரமெலாம்பருக
மணிதிகழ்கலன்களுறுமுரமுருவமண்மிசையிராவணன்மடிந்தான். (௧௭௨)

சுரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கத்தூயமாமுனிவர்கணடிப்ப
வரையெனத்தரையினிராவணன்மடியமயன்மகளரற்றியேமாயச்
சரியிலாவிராமனருள்வீடணன்றன்றம்முனையெரியினைவளர்த்தி
யருமறைநெறியாற்றிலமயமளித்தேயனகனையிறைஞ்சினனம்மா. (௧௭௩)

தினகரன்குலமன்னுரைத்திடுமொழியாற்சீருறுமாருதியேகிச்
சனகியையிறைஞ்சியிராவணன்மடிந்தநலன்றனைச்சாற்றிடமகிழும்
வனிதைநீர்படிந்துகலன்களுமணிந்துமறுவிலாவீடணன்மகளோ
டனகனைவணங்கவவன்கதமுறலுமனலிடைவிழுந்தெழுந்தனளால். (௧௭௪)

அரிமுனிக்கிடத்தானனலிடைவிழுந்தவரிவைதன்கற்பினுலந்த
வெரியிறைவெருவிச்சிரத்தினிற்சுமந்தேயிராமனையிறைஞ்சிநின்றேத்தப்
பரிவின்மைதவிலையமகிழ்ந்தருளிராமன்றனையுயர்பங்கயத்தவனு
மரனொடுமையிராபதத்திறைதுதிப்பவமரர்கள்மலர்மழைபொழிந்தார். (௧௭௫)

அயனகர்தனினுமமரர்கள்பணியவந்தரதுந்துமிமுழங்கத்
தயரதனணுகவிராகவன்வணங்கத்தனையனைத்தழுவினன்மருகிக்
கியல்புறுவசனமுரைத்திலக்குவனையனைத்திருந்தாதையையிராமன்
றுயருறுபரதனன்னையாமிவளைமுனிந்திடாதருளெனச்சொன்னான். (௧௭௬)

மாயவனுரைத்தயரதவரசன்மைந்தநீவனத்திடையேகத்
தியகைகேசியிவளைத்திடும்வினையாலவளுடன்சேயையுமிகழ்ந்தேன்
றாயவிவணீசொலுமொழியாலேயிவர்கள்மேன்முனிவினைத்துறந்தேன்
நீயுயர்வடமீனனையசானகியாளின்றுடன்வாழ்கவென்றான். (௧௭௭)

தாதையீதுரைத்துப்பெயர்ந்திடவிராமன்றமனிடப்புட்பகவிமான
மீதினிற்சனகியுடன்மகிழ்ந்தமரின்மடியவசந்தனையனுமான்
போதன்மாநகரிற்கொணர்ந்திடப்பருதிபுதல்வன்வீடணன்முதலானோ
ராதரவுடனேயமர்ந்திடக்கடலினையதாஞ்சேதுவையடைந்தான். (௧௭௮)

சேதுவைத்தனுவினுதியினற்கீறிச்சிறந்தவைதேகியைநோக்கி
மாதுநின்றுயரின்வருவதற்காகவருத்தவில்வாரியினையா
ராதவன்சிதைவைக்கலந்தகற்றிதியிற்படிவுவாரிதைத்திடமன்மம்
வேதியர்வதைசெய்தன்றியைமறக்கும்வியெனாமாய்க்கிடுமென்றான்.,

சுரர்கதிபயத்திற்றொய்த்துமாண்டவர்த்தொல்வினையாவையுந்தீரு
வரிவைநியமருமிடத்துநல்வெண்டியனைக்கிற்செய்துசேதுவினிர்
பரிவுடன்படியிலெருவுமென்றிவைசொல்பகர்ந்துபாரத்துவாசன்று
னுறுமறைமலியவமருமாச்சிரமத்தடைந்தவனடியினிற்பணிந்தான். (௧௮௦)

வரிசிலைக்குமரன்மனைவியோடடைந்துவணங்கிடமாதவனடிசில்
பரவையினமிர்தநிகர்த்திடவளிப்பவருந்துவோன்பவயின்மாருதியை
விரைவினிற்பரதன்மகிழவென்வரவுவிளம்புகென்றேவிடவிவன்போ
யெரியிடைவிழுவோன்றனைத்தடுத்திவணிராகவனெய்தினனென்றான்.

திருவுடனிராமனடைந்தனனெனுஞ்சொற்சிறந்திடமாருதிபுகலப்
பரதனெஞ்சுவந்துதிசையினைநோக்கிப்பணிந்தெழுமுனரின்முன்னவன்முன்
விரைவினின்விமானமிசையினிந்நிலத்தின்மேவிடவணங்குமினையவனை [தான்.
உரமுறத்தழீஇக்கொண்டனையர்தாளிறைஞ்சியோங்குசத்துருக்கனையனைத்

துயிறுறந்தருளித்தமையனைத்தொடர்ந்தசுமித்திரைசெம்மல்வந்திறைஞ்ச
வியல்புறுபரதன்மகிழ்வுடனழுவவனையர்தாளிறைஞ்சிலக்குவனை
மயலறுமவனைநிகர்த்தசத்துருக்கன்வணங்கிடமார்பினிலணைத்தான
புயலுறும்பரியார்புரந்தரசெயித்துப்பொன்றிடவென்றிடும்புனிதன். (௧௮௩)

கருமுகிலெனவேகவினுறுமிராமன்கனிட்டர்களுடன்சடைகழித்துச்
சரயுநீர்படிந்துமறையவர்துதிப்பச்சரியிலாவயோத்தியினெய்தி
யரிதிகழ்ந்திடுபொன்னவிர்கொளாசனத்தினமரர்கள்போற்றிடமிதலைத்
திருவுடனிலங்கவசிட்டமாமுனிவன்சிறந்திடுமெவுலியைக்கவித்தான். (கஅச)

மாருதியரியாதனங்கரத்தேந்தமதிநிகர்கவிகையைப்பரதன்
சீருறக்கவிக்கச்சுமித்திரைதனையர்சிறந்திடுங்கவரிகளசைப்ப
வாரியினிலங்குதிருவும்வெள்கிடவேவயங்குமைதிலியருகிருப்ப
வாரியன்கரியவரையின்மீதொளிருமலரிபோல்முடியுறவமர்ந்தான். (கஅரு)

திங்கள்மும்மாரிபொழிந்திடநலர்க்குந்தியர்க்குஞ்செய்மையோடணிமை
தங்கிடாதுயர்மெய்ஞ்ஞானிகள்புகழத்தாரணிபுரந்திடுமிராமன்
பங்கயத்தணங்கைப்பழித்தமைதுலிதன்பயோதரமணந்திடக்கருப்ப
மங்கைதன்வயிற்றினமர்ந்திடவரியாசனத்தின்மேல்வயங்கிடுநாளின். (கஅசா)

ஆதியாமாசனவனியின்மிலைசயின்விடுத்திடுமொற்றர்வந்துணுகி
யேதமாரிலங்கையிராவணன்கொடுபோயிருஞ்சிறையிருத்திடவிசழ்வாஞ்
சிதையைப்பினருமனைவியாயனைக்குமிராகவன்செய்கைநன்றென்றென்
றோதுவர்சனங்களெனவுரைத்திடக்கேட்டுளந்தகோவிலைமுயன்றனனால்.

அவனியினுறைவோரிகழ்ந்திடுவினையாலழுங்கியசனகியையிராம
னுவமையிலிளவலிரதமீதேற்றியுயர்ந்தவான்மீகிதன்வனத்திற்
கவ்விலயுற்றிரங்கவிடுத்திடப்பணிப்பக்கடுவினைகளையுமம்முனிவன்
பவமிலாவணங்கின்பருவரலகற்றிப்பன்னசாலையிற்கொடுசென்றான். (கஅஅ)

சுசியுறுமுனிவனிருப்பிடத்தமர்ந்தசுந்தரிகருப்பம்விஞ்சிடநற்
குசலவனெனும்பேர்வயங்கிடவிரண்டுகுமாரரைப்பயந்திடுபோழ்திற்
புசவலனுடையலவணனைவதைக்கப்போந்தசத்துருக்கனுமாசன்
வசையறுமறையோர்க்கெண்ணின்மாதானம்வழங்கினன்சாதகமுடித்தே.

சனகிதன்றனையர்முகக்கவினோக்கிச்சத்துருக்கனவணுருவி
வினையறவமார்வெருவவெஞ்சமர்செய்யிலவணன்சிரமறவீட்டி
யனகனையிறைஞ்சவவன்மகிழ்ந்தொருநாளந்தணனிரங்கிடவிறந்த
தனையனுக்குயிர்வந்தெழுந்திடத்தவஞ்செய்சம்புவைத்தடிந்தனன்மாதோ.

ஆதவனெனநீளவனியினீதியடைந்திடப்புரந்திடுமிராமன்
வேதியர்மகிழச்சுருதிநூல்நெறியால்விளங்கயமேதயாகத்தைத்
தீதறநடத்துந்தினத்தினிற்சனகிசிறுவராங்குசலவர்தமக்கு
மாதவன்சவுளமுடித்துபநயனஞ்செய்துநான்மறையறிவித்தான். (ககூக)

மறையையோதுவித்தும்வயங்குவான்மீகிமதில்கள்சூழ்ந்திலங்கியவிலங்கை
யிறைவனைவதைத்தசரிதையையறிவித்திடவவரிராமனையிறைஞ்சி
நெறியுறவிசையினிராகவன்கதையைநிகழ்த்திடமகிழ்ந்திடுபோதிற்
சுறைவிலம்முனிவனடைந்திவருனதுகுமாரரெனவுரைத்தனனம்மா. (ககூஉ)

முனியிவையறையத்தெசரதவிராமஞ்முந்திடுகளிப்பினுற்றனது, தனையனாய
னைத்துச்சனகியையழைத்துத்தழலிடைவிழுந்தெழுகெனலும், வனிதையா
ண்டிசையும்பொழுதினின்மலரோன்மொழியினல்வசுந்தராயெய்தி, யனகன்
முன்னணங்கைப்புவிகிழிந்திடத்தன்னங்கையினெடுத்தணைத்தகன்றாள்.

புவிகிழிந்திடநீளவனியின்சனகிதனைக்கொடுபோகலுமுனிந்து
தவர்வெருவுறத்தன்றனுவினைவளைத்துச்சாயகந்தொடுத்திடும்போழ்திற்
சிவனுடன்முனிவர்திசைமுகன்வலாரிதேவர்களிராமனையணுகி
நவையறுமிறைநீரருருத்தரித்தாய்நாங்களுய்ந்திடவெனநவின்றார். (கக௪)

மலரயன்முதலோரிவையெலாமுரைப்பமனதிடைச்சினத்தினையொருவி
நலனுறுமறையாற்றுரகதமேதமகத்தினைநடத்தியவிராம
னுலகினைவருடம்பதினோராயிரமுமுற்றிடப்புரந்திடத்தாயர்
நிலமிசையிறப்பவனலிடைவளர்த்திநெறியினாற்றிலமயமளித்தான். (ககரு)

தாயரங்கிறப்பச்சதுமறைநெறியாற்றடக்கையாற்பிண்டமங்கருளுந்
தூயவன்முனரின்மறலியந்தணனாய்த்தோன்றியேயானுனக்குரைக்கும்
வாய்மைதான்முகியுங்காறுமிவ்விடத்தொருவரும்வந்திடாவண்ணம்
நீயருளெனலுமினையவன்றனக்கிவ்வுரையினைநிகழ்த்தியுட்புகுந்தான். (ககசு)

எவர்களுமடையாதிலக்குவகாத்தியென்றுதன்வாயிலினிறுவு
முவமையிலிராமனமர்ந்திடமறையோனுதுவானுவப்பிலாவண்டம்
நவையறப்படைத்தாண்டழித்திடுமிறைநீநான்முகன்வேண்டலால்நரனு
யவனியினிருதர்குலமறப்பிறந்தாயெனுமொழியறைந்திடும்வேலை. (ககஎ)

விரைவினின்விடமாகியதுருவாசன்மேவலுமிலக்குவன்றடுப்ப
வரளெனமுனிந்துன்குலமறச்சபிப்பனெனவவனஞ்சியேகென்னச்
சரியிலாமனனிம்முனிவரமகிழ்வோடிறைஞ்சிடத்தவனவன்றனைநீ
பரனிவண்மனிதனுயினையெனுமுன்பாதியேகரந்தனன்மறலி. (ககஅ)

அரனிகர்முனிவனிவையுரைத்தகலவந்தணன்றனையிவன்காணுப்
புரவலன்றுருவாசனையிவண்விடுத்ததாரெனப்புகன்றிடவிராம
னுரையினைமறுத்தேனினிநிலத்தமரேனுயிர்விடுவேனெனவிளவல்
சரயுநீர்படிந்துநிகரிலாவனந்தனுருக்கொடுபரகதிசார்ந்தான். (ககக)

சரயுவிற்படிந்தாண்டிளவலேகியசொற்சார்தலுமிராகவனிரங்கி
யிருநிலமிசையினிலக்குவனிராமலிரேனெனக்குசலவர்தமக்கு
விரைவினின்முடியைக்கவித்துலகாளவிதித்தெழில்மாருதிதன்னைப்
பிரமநற்பதம்பின்பெறுகுதியதனாலிருத்தியென்றுரைத்தனன்பெருமான்.

பெண்களிற்கவினார்ந்திலங்குமைதிலியைப்பிரித்திடுமரக்கனைவதைத்து
வெண்களிற்றிறைவனிடரினைத்தவிர்த்துவீடணற்கரசினையளித்தோன்
எண்கினுக்கிறையைத்துவாபரயுகத்திலியாதவனாகியேயுனது
கண்களித்திடவேமுழையினுமெய்திக்கதியினைத்தருகுவனென்றான். (உ0க)

வீடணன்றனக்குவிமானமீதரங்கத்துறையும்வித்தகன்றனையுதவி
யாடகமிலங்குமிலங்கையினரசையாளுதியெனவிடையருளிப்
பீடுடைப்பரதன்பிறங்குசத்துருக்கனிவரிருவரும்பெருந்திகிரி
கோடெனவயங்கச்சரயுவிற்படிந்துகலுழன்மேற்றுலங்கினன்கோமான்.

இரவிசேய்முதலாயிரங்கியகவிகளெண்ணிலருடனயோத்தியினிற்
கரிமுதலுறவிகடையதாமுயிர்கள்கமலனன்னகரிடையடைய
வருளின்விண்ணமரர்மலர்மழைபொழியவந்தரதுந்துமிமுழங்க
விரசையைக்கடந்துசனகிவந்திறைஞ்சவிமலன்வைகுண்டத்தினமர்ந்தான்

வேறு. அராவணைதுறந்தடலரக்கர்குலமாளத்
தராதலமுமெண்டசரதன்றனையனென்ன
நிராசையுறவேநிருபனுகிதிலனுரு
பிராமனெனுமாதிசெயலீதெனவுரைத்தான். (௨௦௪)

துட்டர்களெலாமடியவேகணைதுரந்து
சிட்டர்களெலாமகிழவேசிலையெடுத்தா
னட்டதிசையெண்ணவருமாடவர்கள்கோமான்
வட்டமுலைநற்கவுசலைக்கினியமைந்தன். (௨௦௫)

தீயர்குலம்வீயவிலமீதொளிர்கோள்தேவன்
மாயவன்முராரியளவில்செயல்வகுப்ப
வாயுமறைநாலுமுகன்வாய்மையினடங்கா
தூயகமலத்திறைவியென்றுரைதொகுத்தான். (௨௦௬)

தவந்திகழுநாரதனெனுந்தகைமையோன்முன்
பவங்களறநன்கொடுபகர்ந்தவுரைகேளாக்
கவந்தனுயிர்கொண்டருள்செய்காளைபுகழுன்னி
யுவந்தருளுருக்குமணிமாமுனியொடோதும். (௨௦௭)

கோசலநன்னாடுடையவீரனருள்கொண்ட
தேசுநிறையுங்கவுசலைக்கினியசெம்மல்
வீசுபுகழெண்டிசைவிளங்கிடவளர்த்த
தாசரதியொக்குமவரார்தரணிமீதே. (௨௦௮)

வாசமலர்மேவுசனகிக்குமணவாளன்
தேசுவிறலன்வடிவுசேருநர்க்குங்
காசினியினெய்தியுயர்காவலருளாரோ
பேசுமெனநான்மறைபிறங்குமுனிசொல்வான். (௨௦௯)

வேலின்விழியாயமிர்தின்மீதினுறைமின்னே
பாலின்மொழியாயவிர்கொள்பங்கயமமர்ந்தாய்
கோலமுறுமன்றசரதன்குமரனைப்போற்
சீலமுறுசோதியுளனென்றுமுனிசெப்பும். (௨௧௦)

விற்றொழிலினல்வடிவினல்மிகுகுணத்தாற்
கற்றுநிறைநூலுணர்வினலருள்களாலு
முற்றுணரின்மற்றுநிகரோதுவமையில்லா
னற்றுவரைமன்னனெனநாயகிவிளம்பும். (உகக)

ஆரவனுதித்தகுலமேதரசுசெய்யும்
பாரொதுசெறுந்திறமையேதுபகரும்மப்
பேரொதுவிரித்தருள்செய்யென்றுபொறிபேசச்
சீரிதெனயாழ்முனிசிறக்கவுரைசெய்வான். (உகஉ)

இராகவப்படலமுற்றிற்று.
ஆ_ திருவிருத்தம் - உசருகூ.

---

## உங. வது—தேவகிப்படலம்.

ஆசிலாதறனருள்நெறிமறைப்பொருளுணர்ந்தே
மாசிலாமலர்மங்கைதன்மருணனவனே
ஈசனென்றறிந்தவன்பெயராயினவெல்லாம்
பேசுவாரடியாரெமையாட்கொளும்பெரியோர். (க)

செஞ்சொனான்முகன்முதலினோர்க்ககப்படாத்தேவ
னஞ்செனக்கொழுந்தென்னநீளவனியிற்றோன்றி
விஞ்சினனவன்புகழினைவிதர்ப்பர்கோன்மகளாங்
கஞ்சமஞ்ஞைநீகேளெனநாரதன்கழறும். (உ)

மாசிலம்புவியாள்கின்றமன்னர்கடனினும்
வீசுதொல்புகழ்வடமதுராபுரிவேந்தன்
ஆசையெங்கணும்பிறங்கியவிறலருளான்ற
போசனென்பவற்குக்கிரசேனனும்புதல்வன். (ங)

அன்னமன்னவனறநெறியருளெலாம்விளங்க
மன்னிநல்லரசியற்றமற்றவன்சுதன்மறமே
துன்னிவஞ்சகந்தொலைவிலாக்கொலையெலாஞ்சூழ
வின்னலோங்கிடுங்கஞ்சனென்றியம்பிடுமிகலோன். (ச)

மாயவஞ்சகம்பிறங்கவேவளர்ந்தனன்மனுநூற்
றேயமெய்யறன்சிதையவேதவழ்ந்தனன்றிரண்ட
நோய்களெங்கணுமுயரவேநடந்தனனுவலுந்
தூயநன்னெறிபழுதுறத்தோன்றியசினத்தோன். (ரு)

காலனென்னவுங்கடலிடையரவுமிழ்ந்தெழுந்த
வாலமென்னவுமருவினையுருவதாமெனவுஞ்
சீலமில்லவன்மறமெலாந்திரண்டெழுமுசுடன்
கோலமானதோர்குரகதமியற்றிடுங்கொடியோன். (சு)

தகுதிநீதியிறந்தவக்கிரனுயர்தலத்தோற்
சகிதனானசாலுவனுடன்சேதியாளதிபன்
சகிதனக்கெனமகிழ்கஞ்சனாகியசழக்கன்
மகதர்கோன்பெறும்வல்லியரிருவரைமணந்தான். (எ)

அன்னவன்பின்னோரெண்மரைப்பயந்தறனறியு
மன்னனுக்கிரசேனனோர்மகளிரைமையினாற்
பின்னவன்னெழிற்றேவகன்றவத்தினாற்பெற்ற
மின்னனைத்தன்றனையளாய்வளர்த்தனன்விறலோன். (அ)

பஞ்சணிந்துமேற்பரிபுரம்புலம்புபாதத்தாள்
நஞ்சுமஞ்சும்வேனயனத்தாள்முழுநிலாநகையாள்
கஞ்சமென்முகைப்பயோதரிகழையெனுந்தோளாள்
கொஞ்சுமஞ்சுகமாகியகொடியிடைக்கொம்பு. (௯)

நாரியால்வளைசராசனம்போன்றநன்னுதலாள்
காரினீடியேவெறிபுனைமலர்க்கருங்குழலாள்
பாரினேரிலாப்பசுங்கிளிபவளவாயமிர்தஞ்
சீரினல்வடமீனெனச்சிறந்தகற்புடையாள். (௧௦)

கிளரியாழினோடேழிசைக்கின்னரர்மயங்க
வளனுலாவவேயிசைத்தனள்மறுவறுபுராணந்
தளர்விலாவகைநிகழ்த்தினள்சததளமலிந்த
நளினமாதெனத்தேவகிவளர்தருநாளின். (௧௧)

இணையிறேவகிசவுந்தரியத்தெழினோக்கிப்
பணைகொளும்புயனுக்கிரசேனனும்பரிவாற்
குணமெய்நல்வடிவாற்றல்சீர்நலம்பொறைகொடைசேர்
மணவனார்மகட்கென்னமந்திரிகளின்மதியார். (௧௨)

சாருமாநெறிச்சாருகதேசமாடலைவன்
சூரசேனனற்சுதன்வசுதேவனாந்தோன்றல்
வீரவேனிலான்வெல்கிடும்வடிவினன்விண்மண்
ணூரும்நேரிலானவனிவட்காகுமென்றுரைத்தார். (௧௩)

அறைந்தமந்திரித்தலைவர்சொலரசனுமுணர்ந்தே
சிறந்தநல்வசுதேவனுக்கீதுவன்சீர்மெய்
நிறைந்தமின்னினையென்றுயர்நெறியெலாந்தழைப்பப்
பறையறைந்தனன்மதுரையிலமர்ந்தபார்த்திபனே. (௧௪)

இன்னகாலையினியல்வசுதேவனுக்கிசைந்த
கன்னிதேவகிதன்னையேமணஞ்செய்வார்கருதித்
துன்னினார்கள்மந்திரத்தவர்சூரசேனன்சொற்
றன்னையுக்கிரசேனனுக்குரைத்தனர்தழைப்ப (௧௫)

மந்திரத்தவர்மொழியும்வாசகத்தினான்மகிழ்ந்து
சுந்தரத்தொளிர்தேவகிசூரசேனன்செய்
கந்தரத்தினிலங்கலையெடுத்திடக்களிப்பாஞ்
சிந்துரத்தைநேரரசனுக்குரைமின்சென்றென்றான். (கசு)

வீரவுக்கிரசேனமன்விளம்பியநலைச்
சூரசேனனுக்குரைத்தலுமகிழ்ந்தவன்றுலங்குந்
தேரினில்வசுதேவனொடெழுந்துளான்றிரண்ட
சூரரோடியர்மதுரையுய்யானத்திற்சூழ்ந்தான். (கஎ)

மன்னவொண்வசுதேவன்றன்வரவினையுணர்ந்தப்
பொன்னினன்பதியிதுவெனமதுரையைப்புதுக்கிக்
கன்னலொன்றினிலுக்கிரசேனனுங்கடிதி
னின்னலில்லவனெதிர்நடந்தெழினகர்கொணர்ந்தான். (கஅ)

கொணர்ந்துநல்வசுதேவனுங்குமரனுண்மகிழ
வுணர்ந்துவேதியர்வகுத்திடுநாளின்மெய்யுருவ
மிணைந்ததேவகியிருகையாலெழில்கொளுந்தெரியல்
மணந்தழீஇயுறப்புயந்தனிலிட்டனள்மகிழ்வால். (ககூ)

மெய்யனும்வசுதேவனுமின்னும்வீற்றிருந்தே
செய்யினாகுதிகனவிடைச்சமித்துடனிறைத்துத்
தையல்கந்தரமங்கலநாணினைச்சாத்திக்
கையினாற்பொறிதேயுவினிறைத்தனர்களியால். (உ0)

நலஞ்செயும்வசுதேவன்கைநாரிதான்பற்ற
மிலஞ்சுபூங்குழலனமினாள்மிதித்தனளம்மி
வலஞ்செய்தேவர்துவாழருந்ததிகண்டுமகிழ்ந்தார்
நிலஞ்செய்மாதவநிரம்பிடவினிதிருந்தனரால். (உக)

ஆனைநாலுநூறணிமணித்தேர்முந்நூற்றறுப
தினமில்பரியேழாயிரட்டியாயிரமு
மானனேர்விழிமடந்தையர்திரளிருநூறுந்
தேனினன்மொழித்தேவகிக்களித்தனன்கஞ்சன். (உஉ)

வீதிமேவினர்நகர்வலம்வருதற்குவிழைந்தே
போதநீள்புகரிபங்கள்மாவிருதரும்பொலிய
மோதுபேரிகாகளஞ்சின்னமுழவொடுமுழங்க
மாதுடன்வசுதேவன்றேர்கவினுறவந்தான். (உங)

வேறு. கஞ்சனுநெஞ்சுகளித்துறுகைவேல்
விஞ்சவிலங்கியமன்னவன்மின்முன்
குஞ்சரமாமெனவேகுதிகொண்ட
கஞ்சனடுத்துமகிழ்ந்துறுமெல்லை. (உச)

அந்தரநின்றசரீரியரன்சேய்
கந்தனையேநிகர்கஞ்சன்முனாக
விந்தமடந்தைதன்மக்களிலெட்டா
மைந்தனின்னுருயிர்வவ்வுவனென்ற. (உரு)

பொங்கியவெங்கனலைப்பொழிகண்ணு
னிங்கிவளோபகையாயினளென்றே
யங்கையின்வாள்கொடுதேரினடைந்து
தங்கைநெடுங்குழல்பற்றுசழக்கன். (உசா)

கொல்லுறுமெல்லையில்யாதவர்கோமான்
புல்லினன்வாளொடுமார்புபொலிந்த
வெல்லையிலாவிறலெய்துதவத்தாய்
புல்லியர்செய்பழிபூணுதிபோலாம். (உஎ)

ஆவுயிர்செற்றவரந்தணர்தம்மைச்
சாவமுயற்றினர்பாலகர்தம்மை
நோவமடித்தனர்நுண்ணிடையார்த
மாவிசெகுத்தவராழ்நரகாழ்வார். (உஅ)

என்றுரைசொல்லியிதம்பெறுவானி
னின்றசரீரிசொலுமிசழாமற்
குன்றெனவேகுவவுப்புயனேயா
னென்றியதாகவுணர்த்துவகேண்மோ. (உகூ)

இங்கிவள்மைந்தர்களெண்மரைபுன்றன்
செங்கையின்வைத்திடுவம்மவர்சேர
மங்கவடித்துயிர்வாழுதியானின்
றங்கைதனுவியுணுதொழிதகவோய். (௩0)

மன்னவநின்னருளேகொடுவாழ்வம்
நின்னுயிர்போகநினைக்கிலநின்பின்
மின்னுதரத்தெழுமைந்தர்விளங்கி
யென்னபயன்றருவார்களெமக்கே. (௩க)

வல்லவனிவ்வுரைகூறமனத்தே
யெல்லையிலாநலனெய்தநகைத்துக்
கொல்லுகிலான்குழல்விட்டருள்கூர்ந்தே
புல்லினனன்பொடுபின்வருபொன்னை. (௩உ

எங்கையையானுயிர்கொள்கிலனாக
விங்கிதநல்லுரைசொற்றனையென்றே
வெங்கணன்மைத்துனன்மெய்தழுவித்தான்
பொங்கியவன்பொடுபொன்மனைபுக்கான். (௩௩

சிற்றியல்முன்னவர்தன்னெறிசீறிச்
செற்றுயிர்கொள்கிலதாய்வகைசெய்யுங்
கொற்றவனோடுயர்தேவகிகூடிப்
பெற்றனளோர்மகவைக்கவைபெற்றே. (௩௪)

அம்மகவைக்கொடுசென்றவடானும்
விம்முறுசிந்தையளாகமெலிந்து
தம்முனிருந்தபொன்மாளிகைசார்ந்து
கைம்மிசைவைப்பவுவந்துறுகஞ்சன். (௩௫)

பெருகியவன்புபிறங்கிடவேயென்
மருகனையின்றுயிர்வவ்விலனென்ன
வுருகியசிந்தையனொண்கொடியைத்தன்
னருகமரொன்றிருகையினமைத்தான். (௩௬)

மன்னவனென்மருகன்னிவன்வாடா
தின்னலெய்தாதுவளர்த்திடுகென்று
பின்னவள்கையினளித்திடவேபோய்
முன்னவனைத்தொழுதாள்கைம்முகிழ்த்தே. (௩௭)

இன்னலனெய்தியயாதவர்கோமான்
தன்னுடனற்கலவிக்கனிசார்ந்து
கன்னல்கொணாள்பலவுங்கழியச்சி
ரன்னமனாள்பினுமைவரையீன்றாள். (௩௮)

ஆறுமகப்பெறுமாயிழைநெஞ்சந்
தேறினனல்வசுதேவனுமன்பா
லூறியசிந்தையுரோகணிமாதை
மாறிலமாமணமேவிமகிழ்ந்தான். (௩௯)

பாரிதனோடெதுகுலம்வருமகிபன்
பேரிதமோடுறவேபெலன்மல்கு
மாரதனாகியகஞ்சன்மனைக்கே
நாரதன்மேவினனகர்துதிப்ப. (௪0)

வந்தமுனிக்கெதிர்மன்னியகஞ்சன்
கந்தமலர்க்கொடுகாலினிறைஞ்சிச்
சிந்தையுவந்துறுதீயவனுக்கே
முந்தியனாமுனிசொல்லமுயன்றான். (௪௧

கஞ்சவுனக்கொருகாரியமிங்ஙன்
விஞ்சவுணர்த்திடுவேனதுமெய்யுன்
னெஞ்சினமைத்திடுநீயெனவென்றும்
வஞ்சமிலாமுனியின்சொல்வழங்கும். (௪௨

உக்கிரசேனனுவந்தருடேவி
யிக்கிரதச்சொலியின்னமையென்னத்
தக்கவணீர்படியுஞ்சதுநாளிற்
புக்கனள்மண்டபமீதுபொலிந்தே. (௪௩)

பஞ்சணைமன்னியிருந்தவள்பல்கால்
விஞ்சுநலக்கலவிக்கனிவேண்டிச்
செஞ்சொலனுக்கிரசேனனையுன்னி
வஞ்சமில்மங்கைவருந்துறுமெல்லை. (௪௪)

கெந்தருவத்தருமன்கிளியன்னாள்
சிந்தையறிந்தவனுக்கிரசேன
னந்தவுருக்கொடுபோரினடந்தே
வந்திடமின்னுமகிழ்ந்தெதிர்கொண்டாள். (௪௫)

கொண்கனடைந்தனனென்றுகுளிர்ந்து
கண்கள்களித்தெழவேயுயர்கற்பாள்
பண்கொளுநன்மொழிபஞ்சணைமீதிற்
றண்களபத்தொடுதண்மலர்தந்தாள். (௪௬)

இன்பமுறுங்கலவிக்கனியெய்தி
யன்புடனன்னமணைத்திடுமெல்லை
தன்பதிசெய்குறிதாழ்ந்ததுகண்டே
துன்பமுழந்தழல்கண்ணினள்சொல்வாள். (௪௭)

செஞ்சொலனுகியவென்கொழுநன்னீர்
விஞ்சியநல்லுருவாகிவிளங்கும்
யஞ்சகவாரெனவானிடையேகி
நஞ்செனும்வெய்யவனின்றுநவின்றான். (௪௮)

என்கணவன்னெனவுற்றனைகற்பால்
நின்கணதாமகவுண்டெனநீசப்
புன்கணனாயவனின்னுயிர்போக
வன்கணநீயவனல்மடியென்றாள். (௪௯)

அன்றுறுகெந்தருவன்மகனீயாம்
பொன்றுகவென்றனையன்னைபுகன்றாள்
கன்றினனென்சுதனன்றெனவேகாய்
வொன்றினனுக்கிரசேனனிதுண்மை. (௫0)

வேறு. சீலமாகியவுக்கிரசேனன்றேவகன்போர்
வேலனென்வசுதேவனோடிவர்கள்விண்ணவர்கள்
மாலினோடடர்ந்துலப்பிலாச்சமர்செய்துமடிந்த
காலநேமியாமசுரனீகஞ்சனாய்ப்பிறந்தாய். (௫௧)

ஆதலாலிவையகாதியாயமரர்கட்கரா
ரேதலார்களாமென்னின்முன்பிறந்துபின்பிறந்த
போதுபோகுமோவழிப்பகை * பூதம்யானுணர்ந்த
நீதெலாமுரைத்தேனின்னமியம்புவதுளதால். (௫௨)

வேறு. அன்றியும்நின்னிளையாடனையர்க்குள்
வென்றிகொள்வானொருவீரியன்வந்தே
கொன்றிடுவானுனையென்றுரைகூறிப்
பொன்றலினாரதமாமுனிபோனான் (௫௩)

தூய்தவமாமுனிசொல்லுரைகேளாத்
தாய்பகைதந்தைமுழுப்பகைதங்கை
செய்பகையென்னிதுவென்றதிகைத்தே
பேயெனுமுன்னரெழுந்துயர்கஞ்சன். (௫௪)

தங்கைதன்னின்மனைபுக்கசழக்கன்
வெங்கனல்மல்கியகண்ணன்வெகுண்டே
யங்கவள்சேயறுவோரையுமாவி
மங்கவடித்தனன்வாயைமடித்தே. (௫௫)

காவலனுங்கணவன்றுயர்கண்டே
பாவமிதேவகிநெஞ்சுபதைப்ப
நாவலனுக்கிரசேனனடங்கக்
காவலியற்றினன்வஞ்சியகஞ்சன். (௫௬)

மானகுசன்னியுரோகணிமங்கை
யானகதுந்துமிகூறிடவாயர்
கோனகமேவினள்கோண்கனையுன்னித்
தேனகுமென்மொழிசிந்தையுழந்தே. (௫௭)

உக்கிரசேனனுருக்கொடுதன்னை
யக்கிரமத்தினளித்தபிதாவை
யுக்கிரவெஞ்சமர்செய்துயிர்கொண்டே
விக்கிரமத்தொடுமெண்டிசைவென்றான். (௫௮)

புனைந்தனனன்மகுடம்புனையத்தி
மனந்தனின்வஞ்சமறங்கொலைபாயத்
தினந்தினமும்வளைபோலெழுவேசெய்
பினந்துடர்கஞ்சனிருந்திடுமெல்லை. (௫௯)

தேவகிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௬௫.

* பூதம்-கடந்த விருத்தாந்தம்

இருபிறைகவ்வியேயெழுந்தமைவனை
வருசெயலாமெனவராகமாய்மனங்
கருகியவாடகக்கண்ணன்வீயவே
தரணியையிடந்தசக்கரனையேத்துவாம். (க)

நீதியில்நிசாசரர்நெறியினீங்கிட
மோதிமெசுரர்களரசர்முந்தியே
வேதனையுலகெலாம்விளைப்பமெய்ம்மலி
பூதலக்கிழத்தியும்பொறுமையாலரோ. (உ)

மெய்யெலாமெலிந்தனள்வேதஞ்சோர்ந்திடப்
பொய்யெலாங்கெழுமிடப்பொருமினுள்மனம்
வெய்யராங்கலிராக்கதர்கள்வேரறச்
செய்யெலாம்வகையினிச்சிந்திப்பாளரோ. (௩)

சூகரமாகியன்றவுணன்றேற்றிட
வாகையேபுனைந்தெனைமணந்தமாயனூர்
நாகனைமீப்பயோததியில்நண்ணுறும்
யோகமாந்துயிலுறந்துதவினன்றெனு. (௪)

பிரமனுமுனிவரும்பிறங்கனுதனுந்
தருவமர்ந்திடுநகர்ச்சசிதன்கொண்கனு
ரொனுறமிலேகருமுய்யவண்டமுண்
பரமர்தாளிறைஞ்சியான்பகர்வனீதெனு. (௫)

சாமளருபிநற்றரளமாலைசேர்
கோமளமென்முலைக்குதலைக்கோகிலம்
வாமனன்றேவிவாட்கண்ணிமல்லல்சால்
சோமன்மானனைத்தூயகற்பினள். (௬)

இடமதாயிருப்பநிற்பனவோடெண்ணிலா
உடல்கொடுதிரிவனபறப்பனவூர்வன
யடைவனபல்லுயிரனந்தமெய்தவு
மிடரறப்பரித்ததற்குணவுமீகுவாள் (௭)

வேறு. அம்பரநற்பதத்தினச்சுதானந்தனுமா
யம்பரம்பாரிரடியினுலளந்தோன்றன்றேவி
யம்பரங்களேழுமழகார்வருணமுறு
மம்பரங்களாய்க்கெழுமவேதிகமுமாரணங்கு, (௮)

சேடன்பணங்கவிகையாகச்சிறந்தவுடற்
பீடமதினேறிக்கவின்கொணிலப்பெண்ணமுதங்
கோடுடையவெண்களிற்றுக்கோமுனிவர்தேவர்களு
மாடுறமாமுண்டகத்தோன்வாழுலகெய்தினளால். (௯)

நாவினுறைமறைகளுளுந்திருத்தாளாய்
மேவுபொறைமெய்யாவிழியிரண்டும்நல்லருளாய்
வீவிலறங்களெல்லாமேனியுரோமமுமா
யாவின்வடிவாகியெய்திநின்றாளவனிமின்னே. (௰)

கோவுருவாய்நின்றவசுந்தரையாங்கோமளத்தைத்
தேவருடன்தேவேந்திரன்முனிவர்தாந்திரண்டு
பூவிலயனுடனும்போற்றியெதிர்சென்றினிதா
மாவலுறநான்மறைகொடேத்தியறையலுற்றார். (௧௧)

அன்னையவனியெனுமாரமிர்தேயன்புமிகும்
பொன்னேயகழ்வாரைத்தாங்கிப்பொறைநிறையு
மின்னேயுயிர்களுக்குவேண்டுமுணவருள்வாய்
தன்னேரிலாதநலத்தாமோதரன்றேவி. (௧௨)

பாரேயுருவாப்பருவரைகளேநகிலாக்
காரேகுழலாக்கடலேழுமாடைகளாச்
சீரார்சசியிரவிசேலோர்விழியிரண்டா
வேராரிளங்கொடியேயேழுலகுமீன்றமின்னே. (௧௩)

வேழ்விநிறையவிளைவயலாமெய்த்தவத்தோர்
சூழ்கைதவமொருவத்தூயநெறிபிறங்க
வாழுமுயிர்பதத்தின்வைகவருளளிப்பா
யாழிதிகழ்செங்கையமலன்றிருத்தேவி. (௧௪)

கோவமாநின்றெயிற்றிற்கொண்டேகுறளுருவாக்
காலினுலன்றளந்துந்தாங்கிக்கமடமதாப்
பாலனுயுண்டுமிழ்ந்தும்பையநடந்தேயிருந்த
மாவினுர்மாலாயணையுமடக்கொடியே. (௧௫)

என்றுதுதித்தார்மறைகொடேத்தியெழுந்திறைஞ்சி
மன்றன்மலரோன்விபுதர்மாமுனிவர்வாசவனு
மொன்றிமுலைப்பாலுதவுமாகண்டுளமகிழுங்
கன்றெனத்தாம்நெஞ்சுருகிப்பின்னுமவர்கட்டுரைப்பார். (௧௬)

வந்தகருத்தறிந்தாமண்மடந்தாய்வல்லசுர
ரந்தமென்றுமில்லாக்கரவடர்கடாந்துவன்றி
வெந்திறல்கள்செய்யமெலிவுற்றமின்னேயுன்
சிந்தையிடர்மாற்றுவதற்கெம்மாற்செயலரிதால். (௧௭)

தீர்ப்பானுங்கைதவங்களெல்லாஞ்செகமுழுதுங்
காப்பானுமூவடிதாவென்றவுணன்கைந்நிறைநீ
ரேற்பானுமேழ்பொழிலுமுண்டுமிழ்ந்தவெம்பெருமான்
பார்ப்பாரந்தீர்ப்பான்கடற்றுளைப்பைந்தொடியே. (௧௮)

ஆதலினல்மாயோனமர்பாற்கடலனுகப்
போதனலனென்னுப்புரந்தரல்புத்தேளிர்திர
ளதில்மலரோன்முனிவர்சித்தவித்தியாதரரும்
ந்தியுறுகிலமானொடுநெறிசென்றனரால். (ககூ)

சென்றார்பல்யோசனைகள்சேலுருவாத்தீயவனா
வென்றேகராவிசிப்பநொர்துவிதலையுற்றே
அன்றானைமூலமெனுமுன்வந்திடரகற்றி
நின்றான்றுயிலும்நெடும்பாற்கடலடைந்தார். (உ0)

வேறு. பெருந்தடவளையைநிறுவிநீளரவைப்பிணித்துறக்கடையயானளித்த
மருந்துபோலின்றுநுகர்ந்திடவேண்டாம்நினைக்கவேலைவுகுந்தத்திருத்தி
யருந்துனியொருவித்தன்னிறமாக்குமமிர்தரவினிற்கருவனமா
யிருந்ததென்மீறிற்காண்மினென்றியம்பவருவபோற்பயோததியெதிர்ந்த.

பவமெலாமறுக்கும்பருவரலகற்றும்பலசமையங்களின்முயங்கு
மவமெலாந்துறக்குமைம்பொறியடக்குமறநெறிபொறைபருளளிக்குந்
தவமெலாமுயர்த்துஞ்சக்கரத்தவன்றனிறைஞ்சிடச்சடக்கெனவருகென்
றுவமைநேரில்லாப்பயோததிகரத்தாலழைப்பபோற்றரங்கமுமுலாவ.

மன்னுரையிகழுங்கனகன்முன்னெழுவின்மடங்கலாயெழுந்துரம்வகிர்ந்து
மிகமெலிகயமன்றழைத்தசொற்பிந்தமுந்திதன்பதத்தினின்விடுத்தும்
நிகரில்வாரிதியைக்கடைந்தமிர்தளித்துநிருதர்வேரறுத்தருணமொல்
புகழெலாம்பரந்துபொலிந்தபோற்றிருப்பாற்புணரியுமெழுந்துபொங்கியதே

வெறிமலர்மகணன்புவிமகணிலையென்னுமேவல்விலோசனையுடனும் [ந்து
பொறியரவணையின்மிசைப்புயலெனவேபொருபடையைந்துடன்பொலி
சிறையுடைக்கலுழன்வலம்வரத்திருமாலென்வயிற்சேர்தலான்மற்றை
அறுவகைச்சலதியெனக்குநேரலவென்றார்த்தபோற்கலித்தபாற்கடலே.

புயறனையூரும்புரந்தரனுடனற்புண்டரீகத்தயன்புவியா
மயிறுயரறமுப்பத்துமுக்கோடிபுலவர்மாதவர்புடைசூழ
வியலினலடைந்தாரிவரிடரொருவவெழுகநீயென்றுமாறனையே
துயிலெழுப்புவர்போல்முழங்கியதரங்கம்பிறங்கிடத்துலங்குபாற்கடலே.

முப்பதோடிரண்டாமிலக்கம்யோசனையாமுடுகியபயோததிநாப்பண்
டொப்பராமணிகோமேதகம்வயிரம்புஷ்பராகந்துப்பநீலஞ்
செப்பமார்மரகதம்வயிடூரியம்பசுஞ்செம்பொன்னாலிழைத்த
வொப்பிலாவிமானம்யோசனையெழுநூறாயிரம்நீண்டகன்றொளிர. (உக)

நேரிலாவனந்தனுடல்மிசைவேற்கணிறைந்திடும்பலமலர்மலியுஞ்
சீருறுமுன்னூற்றொருபதாயிரயோசனைசிறந்தகன்றநீளணைமேற்
பேர்களாயிரத்தோன்வனசமாமலர்கள்பிறங்குநீலக்கிரிபோலு
மோருறவிருநூற்றைம்பதாயிரயோசனைத்தனைவடிவெழிலுறவே. (உஉ)

பாதம்யோசனைநூறுயிரயசுங்காலிருபத்தையாயிரம்பதுமப்
போதுநற்புனியாறைந்தினுயிரமன்பத்திரண்டாயிரம்போலிவுற்
றேதமிறுடையினகலயோர்கைந்நூறுயிரமெழில்கொளங்குலிக
ளோதினெவ்வொன்றுயிரமிருபத்தைந்தாயிரங்களவட்டமொளிர. (௨௮)

திருமுகவலையமுப்பதோரிரண்டாமாயிரம்யோசனைசிறந்த
புருவநேத்திரங்காதிவ்வகளுமொவ்வொன்றுயிரம்யோசனைபொருந்தச்
சரியில்வண்கொடிமூக்குயோசனையஞ்ஞூறெளிரமுந்நூறுயோசனைதான்
றெரிவுறுதிலகத்தூரியம்பிறைநேர்நுதலினிற்றிகழ்வுறத்துயில. (௨௯)

தூய்மையாந்தபனர்கோடிபேர்தன்னியெழுந்தபோற்றிகிரியுந்துலங்கத்
தேய்விலாக்குமுதசகாயன்வானகத்திற்றெறிந்தபோல்வலம்புரிசிறப்ப
மீமிசையண்டத்தப்புறத்திருளுந்துறக்கும்வாள்கதையொடும்விளங்கத்
தீவினையொருவப்பிறங்கியசார்ங்கந்திசைவிசும்பெங்கணுந்திகழ. (௩௦)

மீயுயர்மவுலிக்கவின்றிசையெல்லாம்விளங்கிடவிழிகளுமிலங்க
மாயிருவிசும்பினிவர்தமனியப்பூதரமெனவயங்கிடப்புயங்க
ளாயிரகோடிகாவதமளவாச்சிறக்குறைகாற்றுவந்தசைப்பத்
தூயமாக்கலுழன்றெழுதுபாற்கடலைச்சுற்றியேவலமதாய்ச்சூழ. (௩௧)

வானின்மீப்பிறழுங்கதிரொனமவுலிவயங்கிடவதனமுந்துலங்க
வீனமேயிலாதவிழிகளுமிமைக்கவிடரறநிலமளந்திடந்த
கோனணிந்தருளுந்தேன்மூரநெறியல்குணிந்தெழின்மார்பினிற்குலாவச்
சேனைநாதன்கைப்பிரம்பொளிதிகழத்திசையிருநான்கினுந்திரிய. (௩௨)

உரமதாற்றிருவெட்டெழுத்தைப்புள்ளிருத்தியுறுபகையறவருமோட
வரமதாற்றகருமயமெனத்துனிகளறுத்துயருந்தவமடையக்
கரமதாற்றொழுதுமெய்ம்மயிர்பொடிப்பக்கண்கணீர்புரளவேகளிக்கும்
பரமபாகவதர்மொழிந்தபல்லாண்டுபெரவையிலெனவியெனப்பரவ. (௩௩)

ஆரணனீயேயவனியும்நீயேயவனியன்றுண்டுமிழ்ந்தளந்த
காரணனீயேகனைகடல்நீயேகனைகடல்கடைந்தவனீயே
பூரணனீயேபொறிகளும்நீயேபொறிகளிற்பொலிபவனீயே
நாரணனீயேயென்றுரைவின்றுநாரதமாமுனிநடிக்க, (௩௪)

ஒருமுதலுணர்ந்தோரிருபிறப்பாளர்முப்பகைகடிந்தவூற்றத்தா
ரருள்செறிமறைநான்கறைபவர்வேள்வியைந்துசெய்யறுதொழிலாள
ரிருளெழுவிளமையிரியவெட்டெழுத்தையிதையத்துளிருத்துவோரேத்து
முரையினையமிர்தின்சுவைபழித்தமரர்செவியினுமுண்டுண்டேயுவப்ப.

தருவமர்நகராளியைத்தனையிட்டோன்றந்தையின்பஃறலைதடிந்தோய்
கரியுரிசெய்யுங்கணிச்சிவானவன்றன்கையினிற்கடிகமன்றொழித்தோ
யரியரியரியேசெயசெயவெனவேயருமறையிசைகொடுபகர்வார்
தருதருமலரேசொரிபவர்தாளந்தந்தத்தகித்தியென்றோத. (௩௬)

கிம்புருடாதிகருடகாந்தருவர்கின்னரர்கீதம்யாழ்கிளர்த்தத்
தும்புருதுதிக்கநாரதர்வீணையிசைத்திடத்துந்துமிமுழங்க
வெம்பராதிருவாழ்மார்பமராமாயாவென்றுதம்மிதையத்திலிருத்தி
நம்பியேநயனம்புனல்கொளுமன்பர்நாவினான்மறைப்பொருணவில. (௩௭)

கண்ணிணைமுகுந்தன்றிருமுகக்கவினைக்கண்டுளமகிழக்கண்களிப்பால்
விண்ணிறைமதியினிலவெனமுறுவல்விளங்கிடவளையொலிவிளைப்ப
மண்ணணங்குயருங்கமலமாமலரின்வரும்வடிவுடையவளாமப்
பெண்ணமிர்தனையரிருவருமமலன்றிருவடிசெங்கையாற்பிடிப்ப. (௩௮)

கருவரைமிசையினிறைகதிரொழிலைக்கனகமார்மவுலியேகாட்டப்
பெருவரைபிணித்தவரவெனப்புயத்தினணிவலையங்களும்பிறழத்
தருவெனத்திகழுந்தடக்கையிற்கவின்கொடரளநற்கடையமுந்தயங்கத்
திருவரையதனிற்செம்பொனின்கொடிகத்தழகுவான்றிசையெலாந்திகழ.

விண்டலத்திருண்டபயோதரத்திரண்டுமெருங்கினும்விரிகதிரிரவி
மண்டலமெழுந்துவயங்கியபோலவள்ளையாங்காதினின்மகர
குண்டலநிறைந்தெல்லுறுகுருமணியின்குழாங்கணற்கவினொடுங்குலாவி
அண்டர்கள்பெருமான்றிருமுகத்தழகுக்கலங்கிருதம்பெறவமர்ந்து. (௪௦)

தன்னுடைக்கரத்திற்சார்ங்கமுமிரண்டாய்வளைந்தபோற்புருவங்கடயங்க
நன்னிலவனையமுறுவலுங்கொடிமூக்கழகுடனயனங்கடிகழ
மின்னொளிபலவாய்விளங்கியேயிருண்டமேகமேலணைந்தமாண்பெனவே
துன்னுபன்மணியின்றொகைகணீடுளபமணிதிருமார்பினிற்றுலங்க. (௪௧)

தெண்டிரைக்கடலினெழுகதிரெனநற்கவுத்துவமார்பினிற்றிகழ
வெண்டவர்வலாரியிமையவர்பிறங்கலிருசுடர்மகோததியிலங்கு
மண்டமுமயனோடுதித்திடவிலஞ்சித்தடத்தினிற்புறப்படவலரும்
புண்டரீகத்தினிகழ்களினெழிலிப்புவனமெண்டிசையினும்பொலிய. (௪௨)

திருநயனங்களிரண்டுடன்பவளச்செய்யவாய்திருக்கரமலரு
மருவுமிழ்மணியார்மார்பமுமாமையரவிந்தநாபியினவிருந்
தெரிவையரிருவர்செங்கையோடொளிர்வீரக்கழலமர்திருத்தாளுங்
கருமுகிற்றடத்திற்கமலநற்காடுமலர்ந்ததோர்காட்சியைக்காட்ட. (௪௩)

கோகனகத்தேனிலமகணீளையென்னும்வேல்விழியொளிர்கொடியு
மோகையோடுறவேபயோததியிலங்கவுயர்மணிப்பஃறலைப்பகுவாய்
நாகணைமிசையிற்கருங்கடல்பரந்துகிடந்ததோர்நலத்தினையுறவே
யோகமாந்துயிலையுவப்பவன்போற்றன்கண்முகிழ்த்துறங்குவான்றன்னை.

வேறு. இன்னமெய்வனப்புறத்துயில்கொள்ளுமெம்பெருமான்
றன்னையெவ்வகைகாண்பமென்றார்கள்மாதவத்தோ
ரன்னவெண்ணிடையுயரிறையம்பரத்தும்பர்
பொன்னினன்னகரிறையொடும்போற்றிசெய்தனரால். (௪௫)

பச்சைமேனியபழம்பொருளாகியபரம
நச்சராவணைமிசைத்துயில்முகுந்தநாரணநின்
னிச்சையாலவதரித்திடுமிறைவவெம்மீச
வச்சுதாவனந்தாபள்ளியுணர்ந்தருளாயே. (௪௬)

வெற்பினைக்கடைமத்தெனவேலையுணிறுவிச்
சற்பம்வண்கயிறுகிடக்கடைந்தமிர்தத்தை
யற்பமாமசுரர்க்கிடாதெமக்குவந்தளித்த
வற்புதாவமலாபள்ளியுணர்ந்தருளாயே. (௪௭)

சீதமேயுறுநளினியினிடங்கர்வெஞ்சினத்து
மோதியேயொருதாளினையிசித்தவண்முடுகச்
சோதியேயெனுங்கறையடிதுனியறத்தோன்று
மாதிமூலவச்சுதாபள்ளியுணர்ந்தருளாயே. (௪௮)

சூதராமதுகையிடவரவர்கள்மெய்துணிய
மோதிநீள்கடறடசேலுருவாமெனமுளைத்து
வேதநான்முகற்கருளியவிமலவித்தகனே
ஆதியேயரியேபள்ளியுணர்ந்தருளாயே. (௪௯)

சிவனெனும்விறலுடையபொற்கண்ணனைச்சேர்ந்தே
யவனுடற்குருதிப்புனலளக்கரின்மடிப்பப்
பவனவேகவெங்கேழலாயெயிற்றிடைப்படுத்தே
யவனியன்றிடத்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. (௫0)

இருளகற்றியஞானமெய்ப்புதல்வன்சொல்லிவரு
தருளகற்றியவாடகன்கரத்திறலுறையும்
விரியுநன்மணியெழுப்பிளந்திடவவிர்விளங்க
வரியுருக்கொளுவாய்பள்ளியுணர்ந்தருளாயே. (௫௧)

மடிவிலாதுயர்மாவலிமூவடிவழங்க
நெடியனுயண்டமுகடுறநிவந்துபேரொளியாய்ப்
படியும்வான்றிசையடங்கலுமடங்குறும்படியீ
ரடியீனுலளந்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. (௫௨)

விடத்தையுட்பொதிகுணத்திராவணனகர்மேவுந்
தடத்தைநற்றிமாவருணன்மேற்சரங்களைத்துறந்து
படைத்தலைக்குழாங்கொடுகவியெண்கினுற்பரவை
யடைத்தமெய்ப்பொருளேபள்ளியுணர்ந்தருளாயே. (௫௩)

சீலமாகியபிரமகற்பங்களுஞ்செறிந்து
வேலையெங்கணும்பரந்தண்டம்விண்டிடும்வேலை
பாலனுயுலகேழையுமுதரத்துட்பதித்தே
ஆலின்மேற்றுயில்வாய்பள்ளியுணர்ந்தருளாயே. (௫௪)

கமலநாயகிகணவபீடுடையகாகுத்த
நிமலநேமியநெடியவநிசாசரர்கால
விமலகேசவசுத்தசாத்திகருணைவீர
வமலநாரணனேபள்ளியுணர்ந்தருளாயே. (ருரு)

இனையதானசொல்வழாமறைப்பொருளினாலேத்தி
முனிவர்வானவர்மகபதிமுண்டகத்திறையோ
டனைவரும்மமலாவிடரகற்றுவாயென்று
நினையுநெஞ்சினருருகினராலுளநிறைய. (ருசு)

எட்டெழுத்தையுமிதையத்துளிருத்தியேசமதா
யுட்டெளிந்திடக்கைதவமொழித்துயர்ஞானத்
திட்டியாலுயர்சிறந்தவேதப்பொருடன்னோ
டொட்டிநின்றதாம்யோகமாயுருகிடுமெல்லை. (ருஎ)

வேறு. செயலுறுமம்புயமலர்கள்சேர்ந்ததோர்
புயலொருகனகபூதரத்தையுற்றெனத்
துயில்பிரிந்தருளிநற்கலுழன்றோளின்மே
லியல்புறுகமலைமார்பிலகவெய்துவான். (ருஅ)

துந்துமிமுழங்கிடத்தூயபானுவு
மிந்துவுந்தயங்கிடவெழுந்தமேகம்போல்
நந்துசெந்திகிரியுங்கரத்தினண்ணநற்
சுந்தரமவுலியும்வயங்கத்தோன்றினன். (ருக)

அறந்தவமுதமாலனுகவார்வமுற்
றிறைஞ்சினர்கமலனோடெண்ணின்மாதவர்
நிறைந்தமெய்ஞ்ஞானியர்நயனம்நீருக
வறைந்தனராரணம்பாடித்துள்ளினார். (கூ0)

பாடினர்விளரியாழ்பலவும்பண்ணுற
வாடினர்முடிமிசையங்கைகூப்பினர்
பீடுறும்வைகுந்தப்பிரானைமேவியே
சூடினர்துளவங்கமலங்குதாண்மலர். (கூக)

ஊழியாயிரங்கடான்யோகமாய்நின்றே
சூழுமாவினையறுந்தவர்க்குந்தோன்றலான்
வேழமூலம்மெனவிரைவின்வந்தபோ
லேழையாமெமக்கிரங்கினனென்றுடினார். (கூஉ)

துள்ளினர்தரணிவானோங்கத்தூய்மல
ரள்ளினர்சொரிந்தனரானந்தக்களிப்
புள்ளுறப்பொடித்திடவுரோமங்கண்கணீர்
வெள்ளமொத்திழிதரவிளம்புவாரரோ. (கூங)

வேறு. ஈசனேமியவெம்பரனேயலை, வீசுபாற்கடல்மேவியவித்தக
மாசிலாமலர்மங்கைதன்னையக், கேசவாகெருடக்கொடியாய்நம. (௬௪)

சீரொணுவவுணன்றருசேய்விண்மண், பாரனுபரமாவெனவேத்தமப்
பேரொணுதவனுசம்பிளந்தனை, நாரணுதிருநாயகனேநம. (௬௫)

ஆதியேயமலாவிமலாவருட், சீதராமுகுந்தாசெகநுங்கிய
பூதநாயகமாயபுராதன, மாதவாமண்முகண்மதுனுநம. (௬௬)

பாவந்தானறப்பாரிருணீக்கிய, தீவந்தானெனச்சேணுயரண்டமுந்
தாவுந்தாளதயாபரசற்குண, கோவிந்தாகுறையேதமிலாய்நம். (௬௭)

துட்டனுனவிராவணன்றென்னகர், சுட்டவாசகன்சூழுவுடன்கடல்
கட்டியேயவ்வரககனைக்காய்ந்தருள், விட்டுவேவிதியுந்தருவாய்நம. (௬௮)

வேறு. மதிஞானமிலாமறமேகிறைபு, மதினுலடியோமுனைகன்கறியோங்
கதியாமுறநின்கழல்சீயருள்வாய், மதுசூதனமாயவனேநமவே. (௬௯)

வருமுக்கிரராவணனன்மவுலி, சிரமுக்கிடவேயுரமுஞ்சிதைய
வெரிமுக்குறுசாயகமெய்தருளுந், திருவிக்கிரமாதிருமார்பநம. (௭௦)

வேறு. காமனூர்தகமால்கியகாரண, வாமையாயம்புராசியமர்ந்துளாய்
சாமரூபசங்குசக்கராயுதா, வாமனுமறையின்பொருளேநம. (௭௧)

காதிகாதலன்வேள்வியைக்காத்துநீள், நீதுசாலிலங்கேசனைச்செற்றுளாய்
குதிராநெஞ்சர்தம்முனிற்றெற்றுவாய், சீதராதிருநேமியினாய்நம. (௭௨)

மருடவிர்ந்துமறைபொருணொன்கினின், பொருடெரிந்துனைப்போற்றிசெய்வா
கருடவாகனனேகதிராழிய, விருடிகேசவிறைவனேநம. [ர்க்கருள்

கதமொழித்துக்கயவர்களாகிய, வதன்மனத்துறந்தேயறநீங்கலார்க்
கிதமதாகியசிந்தையர்க்செய்துவாய்ப், பதுமநாபபழம்பொருளேநம. (௭௪)

வேறு. தீமோதியபோல்வினையேதிகழுங்
காமாதுரர்வஞ்சகமேகளைவோய்
தாமாதரவால்கினைசற்குணனே
தாமோதரனேதலைவாநமவே. (௭௫)

எனவேபலவேதமெடுத்துரைசெய்
தனையேயலதொன்றுமுரைக்ககிலா
மனமேயுடையோம்வினைமாற்றெனச்
சொனவானவருட்பிரமன்சொலுவான். (௭௬)

வேறு. இராவணனிரணியனிரணியக்கணன்
றராதலத்துயிர்களைத்தடிந்தெல்லோரையு
மிராவணமியற்றுவாரிராமற்போக்கிநு
யராவணைதுறந்துவந்தருள்றிலையனே. (௭௭)

என்னையும்படைத்தனை தானுன்னின்னரு
டன்னினுலெண்ணிலாவுயிர்கடந்தன்
னன்னவர்தமிற்கொடியவரைமாய்த்திடப்
பின்னைநானறிகிலேன்பெருமைநீயலால். (எஅ)

மகதனுந்தந்தவக்கிரனுமாயமே
மிகுநரகனுமுரண்மிக்ககஞ்சனும்
பகனொடுசேதிபன்பவுண்டரன்றிறல்
நிகரில்சாலுவனுடனிருதரும்பலர். (எகூ)

தீயெனவுருத்தனரறமுந்தேய்ந்திட
மாயமெண்ணிலாதனவஞ்சம்விஞ்சவே
நோயெனத்திரிந்தனருலகைநுங்குவார்
ஆயநான்மறைநெறிதிறம்பத்தோன்றினர். (அ0)

சூழ்வினைதழீஇயகஞ்சகத்தர்சுற்றிநல்
வேள்வியினவியையும்விலக்கியெம்மையும்
தாழ்வினிற்படுத்தியேதருக்கினார்கள்யாம்
வாழ்வினையொழிந்தனமாதவாவென்றான். (அக)

இருக்கினின்மறையவரிருகையாரவே
யருக்கியமளிக்கிலரறமுமோய்ந்திடத்
திருக்கறுமருக்கனற்றோர்செலாவகை
நெருக்கினரசுரர்கணேமியாயென்றான். (அஉ)

இன்னனபலபகர்ந்திடர்களேமுய
வன்னவர்தங்கள்வேரறுத்தெம்மன்னையா
மின்னிடைவசுந்தரையலக்கண்வீய்ந்திட
வுன்னுவாய்மாயவென்றுரைக்குமெல்லையின். (அங)

வேறு. தேனுவின்னுருவிற்சென்றபார்மகள்
மானையெய்தமதுணன்மலர்ப்பதந்
தானிறைஞ்சித்தழைத்தெழுமன்பினு
னினமில்வசனங்களியம்புவாள். (அச)

என்பொருட்டினிரணியக்கண்ணினு
னின்புருட்டினையெனமதாகியென்
னன்பவச்சுதவாழியங்கையயான்
றன்புழந்துவந்தேனெனச்சொல்லுவாள். (அரு)

நீசரானவரெங்குநிறைந்தனர்
பேசலார்கள்மெய்பொய்கள்பிதற்றுவார்
கூசலார்மறவஞ்சங்கொலைசெய்வார்
நாசமாகிலராய்மெய்நடுங்குவேன். (அசு)

துலங்குமாசயிலத்தைச்சுமந்தயா
னலங்கொள்வோர்செய்தநன்றியைக்கொன்றிடும்
விலங்குநாவினரொய்தமிடுக்கிலேன்
கலங்குவேன்விடங்கண்டவர்போலவே. (அஎ)

எல்லையற்றபிறங்கல்களேந்தும்யான்
சொல்லவல்லகொடியவர்தம்மினு
மில்லுளாளையிகழ்ந்துபிறர்மனை
புல்லுகின்றவர்தம்மைப்பொறுக்கிலேன். (அஅ)

எட்டுமால்வரையேந்துமெனக்குநற்
சிட்டரோடுமுற்றேசெல்வந்துய்த்தவர்
கெட்டபோதினின்விட்டகெடுமதித்
துட்டர்பாரஞ்சுமத்தற்கரியதால். (அகூ)

வேதபாரகர்தஞ்செயல்விட்டனர்
நீதிமாறினர்நீணிலமாள்பவர்
மாதர்கேள்வர்தம்வாய்மைமறுத்தனர்
தீதுசேர்கலரெங்குந்திரண்டனர். (கூ0)

உதவியாயினர்க்கொன்னலராயின
ரதன்மராயினர்பாரினையாள்பவர்
வதைகளேமுயல்வார்குருமாற்றமு
மிதமதாகவெண்ணார்வினையீட்டுவார். (கூக)

ஆவிழந்தனரந்தணர்கன்றினர்
கோவவெவ்வியவவ்வியகோற்றிடும்
பாவர்தம்மைக்கணமும்பரிக்கிலேன்
சாவெனைக்கருணாகரவென்றனள். (கூஉ)

செய்யமாதுக்கிடர்செய்ததீயனும்
வெய்யராவணன்வீழவேவாளிக
ளெய்தமாதவவென்னையிகழ்ந்திடி
னுய்யுமாறெனக்கில்லையென்றோதினள். (கூரு)

பாரியானநற்பாரணங்காளவள்
கோரமாங்கலரால்நொந்துகூறிய
சேரிலாவுரைகேட்டருணேமியான்
சீரிதாந்திருவாய்மலர்ந்தேசொல்வான். (கூச)

பாவகாரியர்யாவரும்பற்றறக்
காவலன்வசுதேவன்கணுகிய
தேவிதேவகிதானருள்செயதாய்
மேவுவேனிலனென்றுவிளம்பினன். (கூரு)

தேசுடன்புவிமாதுசிறந்தனள்
வாசவன்கமலாசனன்வானவ
ராசையெண்குமுனிவரோடாடினார்
வீசுநாண்மலரின்வெறிவிஞ்சவே. (௯௬)

கீதம்வீணையிசைத்தனர்கின்னரர்
வேதமோதினர்மெய்த்தவத்தோர்களும்
போதனோடெலாரிபுத்தேளிருஞ்
சீதமாமலர்வீசினர்திக்கெலாம். (௯௭)

இணையதாயகளிப்புடனெண்ணிலா
முனிவராகண்டலனயன்முந்தியே
யினியராகியிறைஞ்சினர்மால்பதம்
புனைதுழாய்மலர்சூடினர்போற்றியே. (௯௮)

போற்றிசெய்யுமவர்க்குப்பொற்பாரநா
வேற்றினுணையும்பரோடேகெனுச்
சாற்றியேபுவிதன்னைத்தெருமரல்
மாற்றியேவிடையீந்தருள்மாதவன். (௯௯)

அனந்தறீர்ந்தவமலன்றனன்பரா
மினந்தனேம்பயோததியெய்தியே
மனந்தனானினைந்தேமணிப்பஃறலை
யனந்தனார்க்கொருவாய்மையருள்செய்வான். (௩00)

கற்புமிக்கிடுந்தேவகிகாண்குறுங்
கெர்ப்பமாகியுரோகணிக்கிள்ளையாம்
பொற்பினுடன்வயிற்றுதிபோயெனச்
சற்பராசனைமுற்செலச்சாற்றினன். (௩0௧)

மாயைதன்னைவரவழைத்தாழியா
னுயொண்ணுமசோதைமகளெனப்
போயுதித்திடுதேவகிப்பொற்கொடி
சேயுரோகணிசேயெனச்சேர்த்திடே. (௩0௨)

திருவினாயகன்கூறிடத்தேவகிக்
கருவதாய்த்திங்களேழினைக்காட்டிமெய்
தருமுரோகணிதன்வயினுஞ்சிலஞ்
செருவலோனெனச்சேடனுதித்தபின். (௩0௩)

அரவின்வைகியவாழியங்கையன்பாற்
பரவைதன்னைப்பொதுவர்தம்பாடியிற்
சுரபியெண்ணிலதாகிமுற்றுன்றென
வுரைசெய்தானுயிர்தோறுமுறைபவன். (௩0௪)

அண்டமுற்றுமபின்றருளாழியா
னண்டர்தங்களைநோக்கியவனியி
னண்டநூன்முனிதன்மரபாகியே
யண்டவொன்னவவதரிப்பீரென்றான். (க0ரு)

ஆயகாலையினட்டவசுக்களிற்
றூயனானதுரோணனுக்குமவன்
சாய்விலாக்கற்பினுடைத்தேவிக்கு
மேயவன்புகழ்வேதனியம்புவான். (க0சு)

மாதவன்வசுதேவன்மதலையாய்ப்
பூதலத்தினுதிக்கும்புதல்வனு
யாதலானந்தகோபனசோதையாய்ப்
போதுமின்னிலத்தென்றனன்பூமகன். (க0எ)

திருவையுமுயர்தராணித்தேவையு
மருவுமானிலமீதினிலென்றுமா
லுரைசெயுக்கிரசேனன்பின்னோனவர்
தருளுமாதுதரத்தினமர்ந்தனன். (க0அ)

வேறு. தேவகியுதரந்திகழநற்கருப்பமாகியசீதரன்றன்னைப்
பூவின்மெய்த்தவனெண்கயிலையங்கிரிவாழ்புராரியும்வலாரியும்புகழ்சேர்
தேவர்கள்முனிவர்கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர்சூழ
நாவினான்மறைகொண்டுளமகிழ்களிப்பால்நயனநீருகநின்றுநவில்வான்.

ஏகபாதவத்திற்பலயிரண்டியைந்தமுப்பணைநாற்சுவையினிய
தாகியசிவமைந்தாறதாமுருவமமைந்ததோலேழெட்டுக்கவடே
யோகையாமூர்த்தியெனவொன்பதுபத்திலையுடையவ்விருக்கத்தின்
சாகையிலொருபுட்டிரிந்துதானுகருஞ்சான்றதாயொருபுட்பார்த்திருக்கும்.

ஒருமரங்குரம்பையதன்மதன்மங்களுறைத்திடுமிருபலமாகு
மருவுமுப்பணைசாத்திகவிராசததாமதகுணமூன்றெனவறைவ
ரிரதநற்சுவைநான்கறம்பொருள்காமமிணையிலாமோக்கமென்றிசைப்ப
ருரனுறுசிபமொண்சுவையொளிபருசமோசைநாற்றங்களோரைந்தே.(ககக)

உருவமாறெனவேபுனாக்குவதன்னையுதரத்திற்கருப்பமொண்டொழிந்தே
யிருநிலமிசையிற்சனனமாங்குயர்தலியவனமூப்புறுநாச
முறாறுதோலேழெனுமதேயுட்டோல்மூடுதோல்வள்ளுரதிறையுங்
குருதிமேதசைநீளத்திவெண்குடராகிணமெனக்கூறுவரன்றே. (ககஉ)

கவடிருநான்கென்றறைவனவுயர்ந்தகன்னமாசுகங்கனலயமண்
ணுவமையின்மனசுபுத்தியாங்காரமுடனிவையெட்டெனவுரைப்பர்
நவையறுநயனம்நவமெனவறிஞர்நவின்றதுநான்றெரிந்துரைக்கிற்
புவியிடைவிரசுஞ்செனங்கள்தம்முடலினவத்துவாரங்களாய்ப்பொலியும்.

தெசவிலையெனவேயறைவதுபிராணாபானநல்வியானமுந்திரள
விசையுறுமுதானசமானநாகன்கூருமன்கிருகரன்விளைந்தெழுந்தே
யசைவுறுதேவதத்தனஞ்செயமீங்கையிரண்டாமெனவறைவர்
வசையிலீர்க்கஞ்சஞ்சரிக்குநற்சிவன்மறுவிலாப்பரனெனுமிரண்டே. (௧௧௪

அந்தமாமரநீயறன்மறன்குணநீசுவைசிபமமர்ந்திடுமுருவ
முந்துதோல்மூர்த்திநயனநீளிலைசெய்முயற்சிநீசிவனீபரனீ
யெந்தைநீயெண்டிக்கேழ்கடல்வரையேழுலகநீயுந்தியினென்னைத்
தந்தநீதந்திக்குதவியேகராவைத்தடிந்தசக்கரக்கையனீயே. (௧௧௫)

பிறவியாமுலப்பில்பெருங்கடறன்னைப்பெருமவுன்றொழுநினைப்பா
மறுவிலாநாவாய்கொடுகடந்தேறிவானவர்மலர்மழைபொழியக்
குறைவிலாத்தீபநிறைதிசைவயங்கக்கொடிகுடைசாமரைதிகழ
நிறைவுசேர்பரமபதத்தினெய்துவர்கள்நின்னடியாரெனவாழ்வார். (௧௧௬)

ஐம்புலனடக்கியனிலமேயுணவாயருவரையேறிநீள்விசும்பி
னும்பர்கள்வெருவத்தழலினுப்பண்மெய்யோகமாயிருந்தவரெனினு
மெம்பரநின்றொழுநினைவறியாவேழையரிருநிலமுருக்கொள்
கொம்பிலாதுயரவெழுவபோல்வீழுங்கொடியெனமறுகிவீழ்ந்திடுவார். (௧௧௭)

அண்டமெணிலாதநின்வயிற்றடக்கியருளுவாயைம்பொறியடக்கு
மெண்டவர்நின்றொழுதுதஞ்சென்மவிருஞ்சிறையொருவுவரொன்றால்
முண்டகருடனெவ்வுலகமுந்தந்தமுராரியேயுனக்குமெய்ப்பிறவி
யுண்டெனவுரையாரறிஞருன்செனமம்வயிரியர்கோலமென்றுணர்வார்.

ஊரிலியுருவமிலிகுணமிலிபேரிலியிழைகருமமொன்றிலியா
லாருனையறிவாரறிந்தவர்பிறவியளக்கரினமிழ்ந்திடாவண்ணஞ்
சீருறுமீன்கூருமகிரியரிமான்குறண்மழுச்சிலையலாயுதராய்
நேரில்யாதவனுமிவணினிற்றோன்றிநிகரிலாக்கற்கியுமாவாய். (௧௧௯)

கஞ்சமென்மலரோனுருவெனவுலகம்படைத்தியாற்ககனமீதெழுந்த
வஞ்சனமேகமாயவுன்னுருக்கொண்டளித்தியாலளக்கரினெழுந்த
விஞ்சியநஞ்சநுகருவோனாகித்துடைத்தண்டம்விண்டிடுமேனா
ளெஞ்சின்மாவடத்தினிலையின்மேற்குழவியெனவமர்ந்தீறிலாதிருப்பாய்.

அச்சுதானந்தகோவிந்தநமவேஆயிரம்பெயரினாய்நமவே
பச்சைமாமேனிப்பரமனேநமவேபயோததிதுயில்கொள்வாய்நமவே
நச்சுமாதவர்கணாயகநமவேநான்மறைச்சோதியேநமவே
யிச்சையாய்நீயுண்டுமிழ்ந்தவிவ்வுலகிற்பிறந்தருளிறைவனேநமவே. (௧௨௧)

என்னும்வாசகங்களிருக்கெசுச்சாமவதர்வணவேதத்தினியம்பி
மன்னானகதுந்துபியருள்போசனருளியமகள்முனாந்தோன்றி
மின்னுநேமியனுன்வயிற்றிடையமர்ந்தான்விளங்கியதுலகமெம்மிறைவ
னன்னையாமணங்கெவாழியென்றயனுமருந்தவமுனிவருமகன்றார். (௧௨௨)

என்றுநான்முகனுமிமையவர்திரளுமேழைபங்காளனுந்தாரக்
குன்றினைகிராங்கரியுடைக்கோவுங்கொடியபொற்கண்ணனைக்கொன்றே
பன்றியாயெழுந்தன்றிடந்தபார்மகடன்பாரநீயொருவியேவாழ
வினறுமாநிலத்திற்றிருவவதாரஞ்செய்கெனப்போற்றியெனினரால். (கஉங)

மாதவனிமையோர்மலரயன்வலாரிமதிவளர்சடையிறைன்பிறரும்
போதலுமுராரிதிருவவதாரமுணர்ந்திருந்துபொலிந்தனன்கீழ்பால்
மீதலிறைந்ததாரகைவிளங்கவின்மிசைத்தருவெனமண்ணிற்
பாதவங்கனிகள்மலிந்திடப்பாலைவெம்மைபோய்மருதம்போற்படிய. (கஉச)

அறமெலாந்தழைக்கவமரர்கள்மகிழவானிறைந்சுரந்துபால்பொழிய
மறமெலாந்துணியமதியிலாவசுரசரர்வாளரக்கர்கடங்க
டிறமெலாமவியத்திரண்டவாமத்தோர்டித்திடத்திவினைமடிய
மறுவிலாவீரமகளுளமகிழமண்மகடவம்வளர்ந்திலக. (கஉரு)

அந்தரமிசையிற்றுந்துமிமுழக்கவமரர்கள்மலர்மழைபொழிய
நந்துசேர்மலர்க்கையுருப்பசியரம்பைதிலோத்தமைமேனகைநடிப்பச்
சுந்தரஞ்செறியாழ்நணுகுறவிசையாற்றும்புருநாரதர்பாடக்
கந்தநன்மலரினளாவியேவசந்தமுலாவிடக்கதிர்நிலாவெறிப்ப. (கஉசா)

வேறு. பொங்கிலாதவெட்டாந்திதிபோந்திடச்
சிங்காயிறுரோகணிசேர்ந்தநாட்
சங்கமேமிதரித்தகைதன்னுடன்
செங்கண்மால்சிறந்தேயுதையஞ்செய்தான். (கஉஎ)

தேவகிச்சோடியும்வசுதேவனுங்
காவலிற்றழைகாலிறகழன்றிட
வாவலின்னெழுந்தார்வமகத்துற
மூவரொண்ணியமூர்த்தியைப்பார்த்தனர். (கஉஅ)

வேறு. கஞ்சமென்மலர்க்கண்ணிணைதிகழ்வுறக்கண்டார்
விஞ்சுநன்மணிமவுலியும்விளங்கிடக்கண்டார்
எஞ்சலின்றொளிர்திகிரிகோடிருகையிற்கண்டா
ரஞ்சலென்றவாட்கரமுந்தண்டமர்கையுங்கண்டார். (கஉகூ)

சிலைகுனிந்தெனச்சிறந்தநற்புருவமுங்கண்டார்
மலிகவின்கொடிமூக்குடன்வதனமுங்கண்டா
ரிலகுகுண்டலங்காதினினுறுமெழில்கண்டா
ருலகயின்றருள்வாய்மலரொளியையுங்கண்டார். (கங0)

கந்தரத்திகழாரமுங்கலன்களுங்கண்டார்
மந்தரம்மெனக்குலவுத்தோள்வனப்பையுங்கண்டார்
சுந்தரஞ்செறிகவுத்துவத்தலங்குவகண்டா
ருந்திகண்டவருசாபத்தைத்தொளிகண்டார். (கஙக)

கோலமாங்கடிதடம்பொனினுடைமேற்குலாவக்
காலினூபுரம்பரியகந்தண்டைகள்கதிரை
யேலநல்லவிர்வீசிடவெழிலியைநிகர்க்கும்
பாலனாகிமெய்க்கவின்கொளம்பரமனைக்கண்டார். (௧௫௨)

பொன்னினன்மலரிமையவர்பொழிவனகண்டார்
துன்னுநற்றுழாய்முடிமிசைத்துலங்குவகண்டா
ரன்னையும்வசுதேவனுமத்தனும்ஞானந்
துன்னுசிந்தையாராடினரிருகையாற்றொழுதே. (௧௫௩)

சுற்றியேவலம்வந்தொளிர்தாளினைத்தொழுதே
யிற்றதாம்பருவரலெனவாடினரியல்பாங்
கொற்றமாகியயதுகுலமன்னனுங்கொடியு
மற்றைநாட்களிப்புற்றமையறைபவராரோ. (௧௫௪)

ஆயதோர்பெருங்களிப்புறமன்னையும்பிதாவுந்
தூயகேசவமுராரியேகனகன்மெய்துளைத்த
தீயமாகியபரமநற்பவளம்போற்றிகழும்
வாயநீமகவாயதேனெமக்கென்றுமகிழ்வார். (௧௫௫)

வேறு. சிற்றவ்வைசொல்லத்திருவுறச்சேர்த்தம்பியுட
னுற்றுயர்கானெய்தியிலங்கையுறுமொன்னலனைச்
செற்றுலகமேழுந்திருநாபியின்விளங்கப்
பெற்றவனைப்பெற்றனம்யாம்பெற்றவரம்பெற்றவரார். (௧௫௬)

கோலமெனமண்ணிடந்தகொண்டலோவன்றனை
மூலமெனவந்தருளிநின்றமுழுமுதலோ
வாலநிகர்வாரரந்தைதீர்த்தருளுமச்சுதனோ
பாலனெனவெம்முன்வயங்கும்பரஞ்சுடரோ. (௧௫௭)

என்றென்றுருகியிணைமலர்க்கண்ணருவியுக
நின்றுநினைந்துநெடியவனைத்தானோக்கி
யன்றிவ்வுலகுண்டருளுமாதிப்பரம்பொருளே
யின்றெம்மகவாய்வயங்குமாயமியம்புதியால். (௧௫௮)

வஞ்சனெனுங்கஞ்சன்மதியிலியோன்வந்திடுமென்
றஞ்சினம்யாமென்றறையவாழியான்கேட்டருளிக்
கஞ்சமலர்போன்றவிருகண்ணருளினனோக்கி
விஞ்சுதவஞ்செய்தவர்நீரொன்றுவிளம்பலுற்றான். (௧௫௯)

வேறு. தூயனுஞ்சுவாயம்பூமன்மந்திரத்திற்றோன்றியபிரமனுஞ்சுதவா
வேயதாந்தோளிபிருச்சனியென்னும்பாரியாமெல்லியலுடனு
மாயனுமெனைத்தாங்கண்டிடவிரும்பிவரையினிலெய்திவான்மழையாற்
தீயினால்வெயிலால்மெலிந்திடார்சருகுதின்றுமாதவம்புரிந்தனரால். (௧௬0)

வாயுவேயுணவாயிவ்வகைபன்னீராயிரமாக்தெய்வவருட
மோய்விலாதரியதவம்புரிந்திடலுமுற்றனென்யாவெளிதிகழத்
தூயமாதவனுந்தேவியுமென்னைத்தொழுதவர்பரகதிகேளார்
மாயம்யாணியற்றப்பிறவிகடோறுமெமக்குநீமதலையாகென்றார். (கசக)

பெருந்தவர்தமக்கன்றவ்வரமருளிப்பிருச்சனிகருப்பனுய்ப்பிறந்து
கருந்தடமுகிலம்போருகக்காடுபூத்தெனக்காட்சியாய்வளர்ந்தே
யருந்தினனென்றுயீய்ந்தருள்முலைப்பாலன்னையும்பிதாவுமுண்மகிழ
விருந்துமெல்லெனத்தான்றவழ்ந்தழகாரநடந்தவர்க்கின்பமாண்டளித்தேன்.

மற்றுமோர்பிறப்புக்காசிபனுகியதிதியாய்வந்துமாதவஞ்செய்
துற்றிடைக்குறளாயவரிடைத்தோன்றியுயர்ந்துமாபுராணவேதங்கள்
கற்றவனுகிமாவலியீந்தமூவடிதானங்கையேற்று
முற்றமூவுலகுமீரடியடங்கவளர்ந்தனன்முனிவர்கள்தொழவே. (கச௩)

ஆதலாலநாதிகாலமேதுடங்கியருந்தவஞ்செய்தெனைமகவாய்ப்
பூதலத்திருகாலுதவிடுமெவர்நீருமக்குநான்புதல்வனுய்வந்தேன்
மாதுலனுனகஞ்சனைவதைத்துமண்மிசைப்பாரமும்நீக்கி
மீதலத்துயர்ந்தகதியுமக்களிப்பன்விளம்புவதுளதிங்ஙன்கேண்மின். (கசச)

வேறு. அன்னையெனும்நின்வயிற்றினென்பாயலானமர்ந்து
பின்னையென்றன்மாயையினுற்போந்தேயுரோகணிப்பெண்
னென்னுமனையீன்றமகனுனசோதையெனு
மின்னின்மகளாய்ப்பிறந்தாளந்தரியாமென்கொடியே. (கசரு)

அஞ்சன்மினீர்கஞ்சனடைத்தகபாடம்வெளியாந்
துஞ்சினர்போற்காவல்செயும்வீரர்துயில்கொளுவர்
விஞ்சுபுனலார்நதியுமேகவழியும்விடு
மஞ்சுபடையுமெனைக்காக்குமெனவறைந்தே. (கசசு)

இந்தவிருளதனினென்னையிருகையேந்தித்
தந்தையெனுநீயேபொதுவர்பதிதான்புகுந்து
நந்தன்மனையாள்மகனுயுய்த்தவடனன்மகளா
மந்தரியைநீகொடுவாவென்றறங்கறைந்தனனுல். (கசஎ)

சோதியுனாகேட்டுத்தொழுதுபிதாவுந்தாயு
மாதியுருத்திண்டுதெற்கின்றஞ்சுவோமென்றறையத்
தீதில்வளையாழிசெறிந்ததிருக்கைத்தலமும்
பீதகநல்லாடைமகுடங்கரந்தபெம்மானும். (கசஅ)

தூயசிசுவெனவேதான்தொழுதுதோன்றுமவன்
மாயைதனில்மாயன்வடிவுமுரையுமறத்
தாயெழுந்துவந்துதடக்கையினுற்றுனெடுத்தாங்
கேயெனுமுன்மார்பினணைத்தேங்கியிவையுரைப்பாள். (கசகூ)

யாதவர்கள்தங்கள்குலமீடேறயானின்ற
மாதவமேநீலமணியேமரகதமே
நீதுயருங்கஞ்சனைத்தீண்டுதன்முன்னேவினையேன்
சாதனலனென்னுத்தழுவியணைத்தாடாயே. (௧௫0)

கையைநெறித்தாள்வயிற்றின்மோதினாள்கண்ணினீர்
பெய்யவுளம்பொருமிப்பிழையுறும்பெண்ணமிர்த
முய்யும்வகைகாணாதழலவசுதேவன்
றுய்யகுழவிதனைமோந்துளக்கமுற்றான். (௧௫௧)

என்மகனேஎன்னுயிரேஎங்கள்குலக்கொழுந்தே
நின்முகனுங்கஞ்சன்வினைசேருஞ்சமுட்டனைக்
கொன்மினெனவந்தாற்கொடியேனும்நின்றாயுங்
கன்மனதாய்நில்லோமடிவோமெனக்கழறி. (௧௫௨)

சிந்தைவெரீஇயின்பஞ்சிதையும்வசுதேவன்
செந்திருவினாயகனார்செப்பியசொல்நேருறவே
நந்தனுயர்மனையினற்குழவிதன்னோடு
முந்தவன்யானென்னமொழிந்தான்றன்றேவியுடன். (௧௫௩)

மன்னனுரைகேட்டமனமெலியுந்தேவகியு
மன்னதுவேசெய்கருமமென்றங்கழகொழுந்த்
தன்னிகரிலாச்சிசுவைத்தன்னாயகன்கரத்தின்
மின்னிடையாள்வைத்துப்பொருமினள்கண்ணலிவிழ. (௧௫௪)

கண்ணேமணியேகருணாயிறுபோல்வா
யுண்ணேயொழியவுனைப்பெற்றேனுவந்து
மண்ணோர்மகிழவளராமற்போக்குவனோ
பெண்ணாகயான்பிறந்துபிழையினைப்பெற்றேனே. (௧௫௫)

இன்னபலபன்னியெழுந்தாற்றியின்றவளா
மன்னையரந்தையுறவங்கைத்தலமேந்தி
மன்னன்குழவியுடன்வாயில்கடந்தேயமுனை
நன்னதியுமேகநெறிநல்கநடந்தனனால். (௧௫௬)

வேறு. பொன்னின்மாமலரிமையவரெங்ஙனும்பொழிந்தார்
மின்னின்வான்மிசையதிர்ந்துமேகத்திரள்பொழிய
மன்னுதாரைகள்மாயன்மேல்விழாவணஞ்சேடன்
றன்னுமாமணிப்பணத்திறைக்கவித்தனன்றுலங்க. (௧௫௭)

ஆறதாகியயமுனையைக்கடந்தெய்துமளவிற்
சிறுபேயினர்திரண்டெழுந்தரியினைச்சேர்ந்தே
யீறிலாதவைம்படைகண்டுகுலைகுலைந்திடைந்து
பாறிவீழுமாகாளிபாலடைந்திவைபகர்ந்த. (௧௫௮)

அயர்ந்தருந்தடனினியினிடங்காலயர்ந்தே
வுயர்ந்தகையெடுத்தோலமிட்டினையும்வெழுந்தின்
பயந்தவிர்த்தவன்பாலணுய்வர்தனனென்று
செயந்திவந்தடிபணிந்தெழுந்தாடினடிகழ. (௧௦௯)

நம்பர்தம்மொடுநடித்தவண்ணலியேயிப்பர
சம்புவின்பலமுவந்தருடேவகிதனைய
னிம்பருன்பெயர்தன்னிலுலியாம்பிறந்திடுநா
ளும்பருந்துதிசெய்யவீடளிக்குமென்றுரைத்தான். (௧௧௦)

சிதரன்னருள்செய்தலுஞ்செயந்திநின்றடி
யாதியோன்றனைப்புகழ்ந்தவனடிபணிந்தேக
மாதவன்செயுமாயங்களறிகிலான்மனத்திற்
பேதிமல்கிடவேவசுதேவனும்பெயர்ந்தான். (௧௧௧)

வேறு. விஞ்சுமணிமாடவடமாமதுரைமேவுங்
கஞ்சனிவணெய்துவனெனக்கடிதினேகி
யஞ்சியிருளூடுவசுதேவனமுகாரு
மஞ்சணுறுமாயர்பதிகண்மறுகில்வந்தான். (௧௧௨)

ஆயர்கணொல்லியிலராகியுடைவோர்தன்
ஞயகனெனப்புகழ்கொணந்தன்மனைகண்ணி
மாயையெனுமந்தரிவையவ்வசுதேவன்
ஆயினசோதையருகிற்சுதனைவைத்தான். (௧௧௩)

நந்தன்மகளென்னவருநங்கையையெடுத்தே
வந்துவடமாமதுரைபுக்குவசுதேவன்
சிந்தையயர்வுற்றெதிர்கொடேவகிகையினிப
முந்தியழுவெங்குழவியுண்டதழுவைப்பால். (௧௧௪)

குழவியழுமோசையதுகேடடகொடியோரா
மெழுவினுயர்தோளினர்விழித்தனரெழுந்தே
யுழுவைகொராகியடர்கஞ்சனிடையுற்றுத்
தொழுதுதுதிசெய்துபயமெய்தியிவைசொல்வார் (௧௧௫)

கொற்றவவுனக்கினியகோமளம்வருந்திப்
பெற்றனளருங்குழவியென்றவர்கள்பேசச்
செற்றநிறைநெஞ்சொடுதிடுக்கெனவெழுந்தே
யெற்றுவனெனக்கடிதினேகினனடந்தான். (௧௧௬)

தீங்குநிறைகஞ்சனினையாடனிடைசெல்ல
வேங்கினள்பெண்ணென்னமகவெட்டிதுடனென்றே
வாங்கினனடித்துணைபிடித்துமறவோனு
மேங்கியிருகைகொடுசுழற்றியுறுமெல்லை. (௧௧௭)

கரத்திடைசுழற்றியறையும்முனிருகாலா
லுரத்தினிலுதைத்துயர்விசும்பினிடையுற்றாள்
பருத்தகதையாழிவளைகேடகம்வில்பாணம்
விரித்தசுடர்வாளயில்கொளெண்கரம்விளங்க. (௧௬௮)

காலணிசிலம்பிலசநற்கனகவாடை
நூலிடைமருங்கினெழில்மல்கநுவல்கின்றாள்
சீலமறுகஞ்சவுனையேவதைசெய்வோனாய்
மால்குழவியாயினனெனாவவள்மறைந்தாள். (௧௬௯)

வேறு. அந்தரத்தெழுந்தஅந்தரியிவைவையையறைந்திடுமுனாயினாற்கஞ்ச
னார்ந்தனன்பகைஞன்வேறுளனெனவேநுண்ணிடைமடந்தையாமெங்கை
மைந்தரினெட்டாமதலைசத்துருவாமென்றசரீரிவான்மிசையிற்
றந்தசொற்பழுதாய்ப்பிறந்தபெண்டெய்வமாகிவான்றாவியதென்னோ.

அன்றுவான்மிசையினெழுந்தசரீரியறைந்தசொல்லசத்தியமான [ம்
தின்றியானுணர்ந்தேன்மெய்யெனநினைந்தேயெங்கைதன்மைந்தரையெல்லா
கொன்றுமாநிலத்திற்கொடுவினைசெய்தேனென்றுதான்பலபலகூறிக்
கன்றியசினந்தீர்ந்தெதுகுலமன்னையனுசியைக்காவல்விட்டனனால். (௧௭௧)

காற்றளையகற்றித்தேவகிக்கினிமைகழறியுன்மைந்தர்கடம்மைக் [ச்
கூற்றெனவதைத்தேன்பொறுத்தியாலென்று கொடியவன்றங்கையைத்தழுவி
சீற்றமில்மனத்தன்றுயர்வரத்திகைத்துச்சீர்வசுதேவனைச்சேர்ந்தே
யூற்றுநீரொப்பக்கண்கணீரொழுகவொற்கமுற்றிவையிவையுரைத்தான்.

ஓடுநீர்நதியின்வனத்துலர்மரங்களருவியோடொருமுகமாகக்
கூடியேபிரிப்பிற்கணத்திடைப்பலவாயொருவிடுங்கொள்கையேயொப்ப
வீடினர்மருகரிமையவர்தமக்கும்விதியினைவென்றிடவரிது
வாடியேதளர்ந்தால்வருவதிலூழிவருமதோவராதொரீஇவற்றே. (௧௭௩)

மண்ணினிற்பிறந்தமனுரகுநகுடன்மதிதயனன்மகள்கொழுன, னெண்ணருங்
காலமிருந்தவரிறத்தலல்லதிண்டிருந்தவருளரோ, பெண்ணருங்கலமேபின்வ
ருந்துணையேபிழையினைப்பொறுத்தியென்றறைந்து, கண்ணினீருகத்தானிறை
ஞ்சிமைத்துனன்றன்காலிரண்டையும்பிடித்தழுதான். (௧௭௪)

கஞ்சனும்வஞ்சனிவ்வகைபுலம்பிக்கபடநாடகக்கணீர்கலுழ
விஞ்சொலாற்றேற்றியிறைஞ்சலுமெடுத்தேயிணையிலாவெழில்வசுதேவன்
விஞ்சியவிதியேயுன்றனுலுன்றன்மருகரைவீட்டியவதற்கு
நெஞ்சுலைந்தழுங்கியிரங்கலையயநின்மனைக்கேகெனப்போனான். (௧௭௫)

பொன்மனைபுகுந்தோர்மண்டபநாப்பண்புதுமணியாசனத்திருந்து
துன்மதியானவமைச்சரைக்கூவியவருடனிகழ்ந்ததுசொல்வா
னன்மதிமுகத்துத்தேவகிபயந்தபெண்ணிருநாலுகையுடனே
யென்மதிமயங்கவாயுதம்பலகொண்டெழுந்துவிண்ணெய்தியேசொல்வாள்.

மாதவனுருவமாறிமீண்டின்னைவதைத்திடப்பாலனுய்வந்து
பூதலத்திழிந்தானென்றிடிபோலப்புகன்றவள்போய்மறைந்தனளால்
ஏதிதென்றுணர்த்திறொன்னுயிரனையிரொன்னுடைவாழ்வுமதன்றே
வோதுமினிதற்கேதுபாயமென்றியம்பவுருத்தெழுந்தறையலுற்றனரால்.

தேனுகன்பெலம்பன்கேசிசாணூரன்முட்டிகன்றிறலுடைச்சகடன்
மானகவிகராம்பகனகனிகர்துன்மந்திரியானவருரைப்பார்
வானகமண்ணெண்டிசையெலாம்வடவாவனல்வலைந்தென்னவுன்பகைஞ
னூனுகாதுண்போமெமக்குநேருலகத்தியாருளரொன்றுமின்னுரைப்பார்.

நீயுயர்சிலையையெடுத்துநாணேற்றிநெடியசாயகங்களைவிடுத்தாற்
றீயுமெவ்வுலகுமுனக்கெதிர்நிற்பார்செகதலத்திலையுனக்கஞ்சி
மாயவன்கடலுள்வைகியாண்டொளித்தான்மலையிடையுமாபதிமறைந்தான்
றூயமாமலரோன்றவத்துளோனலாரியிராவணிக்கன்றுதோற்றனனால்.

மாயனுக்கிதமாமுனிவர்வேதியராணிறைமகமறையிவையழியத்
தீயெனமுடிக்கியறைந்திடின்மாலின்முயற்சியுந்திறல்களுஞ்சிதையு
மாயிருநிலத்திற்சிசுவெனவந்தான்வளருமுன்மறைந்தியாங்கொல்வம்
நோயுறுபிணிமேலடர்வமுன்னருந்தமருந்தினுனுறுக்குவார்போல. (௧௭௦)

என்றவர்நயனமெரிந்துவெங்கதத்தாலிவையெலாமியம்பலுங்கஞ்ச
னன்றுநம்முயற்சிவின்றவிப்படியேநாரணன்றமனையேநாடிக்
கொன்றிளங்குழவியானவன்வளருமுன்னர் நீர்கடிதினிற்கொன்மி
னென்றவர்க்கினியவாடையாபரணமீய்ந்தினிதிருந்தனனிப்பால். (௧௭௧)

கண்ணன்திருவவதாரப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௯௭௯.

---

## ௨௫. வது—பூதனைவதைப்படலம்.

ஆரணனுமாயகிலமுற்றவுமயின்ற
பாரணனுமாயுயர்பதந்தனில்வயங்கும்
பூரணனுமாகியறுபூதமுதலாகும்
காரணனையேநினைமிறேனைவைகடூர. (௧)

மாதுயரின்மூழ்கிவசுதேவனெனுமன்னன்
தீதில்வடமாமதுரைசேருமுனசோதை
மாதவனைநாரணனைமாமகனெனத்தா
னாதரவினுல்முலைகொள்பாலெழவளித்தாள். (௨)

ஏந்தினனுறத்தழுவியின்பமெனும்வேலை
நீந்தினள்மகன்றனதுநீலமுகில்மேனி
மோந்துநளினத்துமுகையாகியமுலைப்பா
லீய்ந்தனனுவந்தனளதின்னதெனலாமோ. (௩)

தூயவடமீனெனுமுரோகணிதுலங்கு
மாயர்மடவாருடனடைந்துமகவைத்தா
னேயமுடனீலமுகில்நேர்வடிவைநோக்கி
மாயனிவனோமதனனோவெனமகிழ்ந்தாள். (௪)

பேரிமுரசந்திமிலைதுந்துமிபெருத்த
தாரையுயர்சின்னமலிசங்கமிவையெல்லாம்
வாரியொலியஞ்சிடமுழங்கியதுவானோர்
பாரினுறநன்மலர்பொழிந்தனர்பரிந்தே. (௫)

சிந்தைமகிழ்வோடிலகுசேடியர்களோடி
யந்தமிகுமைந்தனையசோதையெனுமாது
தந்தனளெனப்பதம்வணங்கியவர்சாற்ற
நந்தனலனெய்தியமுனாநதியினாடி. (௬)

பொன்மணியினிற்கடிதுசென்றுபுயல்மேனி
நன்மகன்முகக்கவினைநோக்கிநலனுற்றே
மன்மதனைத்தருமிவ்வள்ளலிவண்வந்த
தென்மரபினோர்கடவமாமெனவிசைத்தான். (௭)

பூமடலின்வந்துதிகழும்புனிதனைப்போ
லோமநிறைவேதியர்களுற்றனருவந்தே
மாமலர்மின்னாநிலன்வந்தருண்முகூர்த்தந்
தாமிசையவெண்ணிலனென்றுரைகடந்தார். (௮)

போதனுடனேழுலகளித்தபுயல்வண்ண
மாதவனிறைக்குயருமந்தணர்மகிழ்ந்தே
யோதுமறையாகுதிகளோமநிறையத்தாஞ்
சாதகமகஞ்செய்தியலாசியுரைதந்தார். (௯)

வேறு. திலதானமுநூறாயிரகோதானமுடன்சேர்
பலதானமும்வெயிலோனவிர்பரவுமரவுமிழும்
நலமாகியமணியோடிரணியதானமுநறுமா
மலரோனிகர்மறையோர்பெறநந்தன்வழங்கினனால். (௧௦)

தூயோனெறியருண்மங்கியநந்தன்றுணியுறவே
மாயோனிகர்வடிவாகியமைந்தன்பிறந்தனனென்
றாயோர்குலத்தனைவோர்களுமமிழ்துண்டவர்போல
வேயூதினர்குனித்தாடினரெழில்வீதிகளிடைந்தே. (௧௧)

வேறு. கதலிநிரைத்தனர்கொடிகளெடுத்தனர்கமுகுகள்நட்டனர்மா
றுதிகளுரைத்தனர்ஞிமிறுமுயற்றியதொடைகணிரைத்தனரால்
மதியையடர்த்தெழிலுடையமுகத்தியர்மயில்களெனத்திரிவார்
குதலைமொழிச்சியர்தெருவிடையுற்றனர்குழலரிசற்றிடவே. (௧௨)

ஆடினர்வீதிகளெங்கணுமண்டர்களன்புநிறைந்திடவே
யோடினர்வீழ்வர்களிப்பொடெழுந்தனருவகுற்றுமெய்தழுவுவராற்
சூடினர்தளவலர்குழலிசையளிகளெழுந்துதொடர்ந்திடவே
பாடினர்சோபனநலனுளவிழவொடுபணியணியாவைகலார். (கங)

பாலொடுசெய்ததியாயரிறைத்திசைபாடினராடினரா
லாலிலைபாமுதரந்திகழக்கலைமேகலையழகுறநற்
காலணிநூபுரமிசையெழவேவளையொலிகரமீதெழவே
வேலினைவயனியர்மகிணிடைசுண்ணம்நிறைந்திடவீசினரால். (கச)

வெண்ணெகரங்கொடுமெய்யினெறிந்தனர்வீதிநிறைந்திடவே
யெண்ணையிறைந்தனர்தாழியுடைத்தனரண்டர்களெண்ணிலராற்
சுண்ணிணையழகியபெண்ணினர்கொங்கையினணிமலர்கவினுறநற்
சுண்ணமிறைத்தனர்தீபமிசைத்தனர்தூபமிறைத்தனரால். (கரு)

அண்டர்களெண்ணிலர்வந்தருள்பெருகுமசோதைமகன்கவினைக்
கண்டனரன்பொடிசைந்தன்மெய்தழுவினரினிமகிழ்கழறினராற்
கெண்டையெனத்திகழ்கண்ணியர்களொளியாகியகுழவிதனைக்
கொண்டனிறத்தரியென்றிருகைகொடுதழுவினர்குழுமியரோ. (கசு)

வேறு. உந்தியிலயனெடேழுலகளித்தவுவமையில்பரம்பொருடன்னை
மைந்தனென்றுவந்துநந்தனுமசோதமங்கையுமற்றவர்கிளையு
மந்தரத்தெழுந்தவமரியினவர்கண்டலர்ந்தவம்போருகமெனவுஞ்
சிந்துவினமிர்தையுகர்ந்தவரெனவுஞ்சிறந்தினிதிருந்தாட்டன்னில். (கஎ)

வஞ்சகக்கஞ்சமன்னவனுறைக்குவருடாலந்தனிற்கொடுக்கும்
விஞ்சியகாட்சிக்களவிலாத்தந்துபால்வெண்ணெய்பிவையெலாங்கொண்டு
மஞ்சனையொருவாதிருந்தனமகிழ்ந்துமறுவிலாநந்தகோபால
னஞ்சகமனையசோதைதீமகனையகல்கிலாதிருத்தியென்றகன்றான். (கஅ)

நதியினிற்புனிதயமுனையைக்கடந்துவடமதுராபுரிநண்ணி
மதியெனத்துலங்குந்தனிக்குடைகவிப்பமருங்கினிற்சாய்மனாதிகழச்
சதமகனெனவும்வயங்கியகஞ்சன்முனினில்வணங்கியேநந்தன்
துதிமிகுநெய்பாலிழுதுடனிறுக்குந்தனமேலாமன்புடன்கொடுத்தான். (கக)

அரசனுங்கஞ்சனந்தகோபாலனளித்திடுங்காட்சிகண்டுவந்து
வரிசையாங்கலிங்கங்கொடுத்தபின்னினியதாகியவாய்மைகள்பலவு
முரைசெய்தேகின்னூர்க்கேகெனவுரைப்பவுவகைசால்நந்தகோபால
புரிசைசூழ்மதுராபுரியிற்றனமருமனைதனிற்புக்கினிதிருந்தான். (உ0)

நந்தகோபாலன்மதுரையினெய்தியிருந்தகல்வாசகங்கேளாச்
சிந்தையார்களிப்பின்றேவகிகணவனவன்வயிற்சேர்தலுமெழுந்து
முந்தியேசடைந்தவ்வாயர்நாயகனைமுகமலர்ந்திருகையாலணைத்தா
னந்நிரான்மலரினுலகுதாங்கோனையுதவியபுகழினையுடையோன். (உக)

இருகையாற்றழுவியிருவருமோராதனத்திருந்தினிமைகூறியபின்
பெருகியவுவகைபிறந்திடவரசன்பேசுவானந்தகோபால
சருகெலாமுணவாய்த்தவஞ்செய்வோர்பெறுததவமுனக்கெய்தியததனால்
முருகவிழ்தொடைசேர்முகுந்தனைநிகராமுகில்நிறக்குழவியைப்பெற்றாய்.

அனிலனலனலால்மாரியாற்சலியாதருந்தவஞ்செய்தவரொனினும்
பனியெலாமகற்றும்பருதிபோலாசில்புதல்வரைப்பயந்தவர்க்கல்லா
லினியமாபதத்தினணுகுவதரிதென்றியம்புவரியல்புடைச்சான்றோர்
புனிதமாதவரினதிகநீயாணுமென்றுளமகிழ்ந்திவைபுகன்றான் (௨௫)

சொன்னநல்வசனங்கேட்டுளங்குளிர்ந்தநந்தகோபனிவைசொல்வான்
என்னுயிர்த்துணைவனீயெனக்குற்றவேமமாநலனுனதன்றோ
மன்னவவென்றன்மதலையுன்மகவேயென்றுநல்வாசகங்கூறிப்
பின்னருமுரைப்பான்கஞ்சனுலாசபெருந்துயருழந்தனையென்றே. (௨௪)

தங்கையென்றுணராதுன்றனமவளைத்தளையில்வைத்தவடருந்தனையர்
மங்கமுன்னடித்துமறஞ்செய்தானந்தோவல்வினைக்கஞ்சன்மாபாவி
யிங்கிவையன்றிப்பிறந்தபெண்ணிராதாகாயமேயாகியதென்றாற்
பொங்கியேயடர்முன்வினைப்பயன்றன்னைப்பூதலத்தியார்கொலோகடந்தார்.

எனுமொழிவிளம்பியிருகணீர்விழவேதழுவியவண்டர்களிறையை
வினைவலிகடத்தலரிதெனவறியாவேழைபோல்மெலிவதுகடனோ
வனையனவெல்லாமுணர்ந்தநீயிடரையகற்றியேரோகணிபயந்த
தனையனையுன்றன்மகனுடன்வளர்த்தியென்றுபின்சாற்றுவானரசன். (௨௬)

உன்மகன்றனக்கிங்களப்பிலுற்பாதமுளவவைமேவிடாவண்ணம்
நன்னெறியறியும்நந்தகோபாலவெங்கனங்காத்தியோநவைசேர்
துன்மதியாளோரணுகிடாவகைநீயியற்றியென்றுனைவவென்றுனை
யின்னலெய்தாதுவளர்க்குதிநீயென்றியம்பினனியாதவர்பெருமான். (௨௭)

மன்னவனறைந்தவாசகங்கேளாமதிமறுகுற்றனனெழுந்தா
னுன்னினனிவைதானென்னகாரணமென்றறிகிலானுயிர்விடுமியாக்கை
யென்னமெய்நடுங்கியேங்கியேகடிதுசெல்வனென்றேகினனந்த
னின்னல்செய்கஞ்சன்முயற்சியாமாயவினைகளையாமறைகின்றாம். (௨௭

தீயினுங்கொடியவஞ்சகக்கஞ்சன்பூதனைதன்னைநீசென்றுண்
டேயெனுமளவில்லவனியின்மனைகளெங்கணுமேகியேயியங்கி
நோயினுமுடுகிச்சிசுக்களையெல்லாநொடிப்பினிற்கொல்லுதியென்ன
மாயையையியற்றிமறலியுமஞ்சமண்மிசைமகவெலாம்வதைத்தாள். (௨௮)

அம்புவியடங்கத்திரிந்தறனஞ்சவளப்பிலாமகவெலாம்வதைத்து
வெம்பியசினத்தோடாயர்தம்பாடிமேவியொண்வித்துருமத்தின்
கொம்பெனமடவார்திலதமேபோலக்குயில்மொழிப்பெண்ணமிர்தாறு
ளம்பிணைவனைவில்குமிழ்பிறைவள்ளையாம்பல்சேரானனமிலங்க. (௩௦)

காலினிற்கனகநூபுரம்புலம்பக்கரத்தினின்வளைகலித்திடவே
நூலிடைமருங்கிற்பொற்கலைதிவளநோக்கினாலருந்தவரடைய
மாலெழமாலையளியொடுகுழல்மேலலைந்திடமதிமுகம்வியர்ப்பப்
பாலுறுகும்பப்பயோதரமசையப்பையவப்படிமிசைவந்தாள். (௬௧)

நந்தகோபன்றன்மனையினிற்புகுந்தாலெனுமசோதையைநண்ணி
யிந்துநேர்வதனத்தேந்திழாய்வனசநிறைந்ததோரெழிலியைநிகர்க்கு
மைந்தனைப்பயந்தாயுனக்குநேர்விண்ணின்மண்ணினுமியாவருமில்லை
கந்தமார்தொடைசேர்குழலிநீவாழியென்றிருகரத்தினாலணைத்தாள். (௬௨)

அணைத்தவள்மருங்கினமுறவயங்குமச்சுதக்குழவியையெடுத்தே
யிணைக்கமலத்தினடிமருங்குந்தியிருகைதோள்முகத்தெழினோக்கித்
துணைக்கையாற்றழுவியுச்சியைமோந்துதூயவளாய்மனமுருகுங்
குணத்தினளேயமுகமலர்ந்தினிமைகூறியேயுளங்களிப்புற்றாள். (௬௩)

கருமுகிலெனவுமரகதமெனவுங்கவின்கொள்காயாமலரெனவு
முருவுடையவனையுததியினமிர்தையொத்தவிம்மதலையைப்பெற்ற
வருமையைநோக்காயனைவருங்காணினளவிலாத்திட்டியாமென்றென்
றுரைசெயாமகவின்முகமொடுமுகம்வைத்துகந்தொருதனிமனையுற்றாள். (௬௪)

மடிமிசையதனின்மதலையைக்கிடத்திவஞ்சகிவதைக்கவென்றெண்ணி
விடமுலைப்பாலையீய்ந்தனள்முகுந்தன்விழியினாலவள்முகநோக்கிக்
கொடியவணிலையிருகையாற்பற்றிக்குவிமுலைவாயில்வைத்தவட
னுடலிடையுயிருங்கனதனப்பாலுமொக்கவேயுறிஞ்சியுண்டிடவே. (௬௫)

கொடியவளுதரந்திமடுத்தெனவேகுடரெலாமறுகிமெய்குலைந்து
விடுவிடென்றரற்றவிட்டிலனவடனுடலினையுயிரின்வேரறவே
கடியுடைக்கமலவாயினாலுறிஞ்சியுண்டனன்கமலனார்படைத்த
நெடியபேரண்டத்தலகிலாப்புவனநிலையெலாமுண்டுமிழ்நெடியோன். (௬௬)

கடல்களும்வெருவக்ககனவான்முகடுமதிரவெண்களிறிரிந்தோட
விடிகளுமுடையவலறியோசனையினிடத்துறுபாதவமெல்லாம்
பொடிபடவிழுந்துகைகள்கால்கவிகள்கட்டியபுணரியினணைபோற்
படியின்மேற்கிடப்பப்பவளவாய்முலையைப்பற்றிமீக்கிடந்தனன்பரமன் (௬௭)

பதகிவாய்மூக்குவாமுழைநயனம்பயமிலாப்பாழ்மடுநிகரா
யுததிவெண்பிறைபோலெயிற்றினந்துலங்கவுயர்முலையோங்கலின்வயங்கப்
புதியவெங்கூற்றமனையவளியாக்கைபுயல்படர்பொருப்பினிற்பொலியச்
சதமகனயிலால்விருத்திராசுரன்மெய்தரணியிற்சாய்ந்தெனச்சாய்ந்தாள்.

கொண்டல்வாகனனுற்சிறகறுப்புண்டுகுலைந்துவீழ்மால்வரைபோல
வெண்டிசையதிரவிழுந்தபூதனைதன்வாயினாலரற்றியவிரட்டி
லண்டர்களண்டம்விண்டதுகொல்லென்றயிர்த்தனரளக்கரின்காரி
கண்டவானவர்போற்கண்புதைத்தலறியாயர்கள்கலங்கியோடினரால். (௬௯)

ஆயர்கள்மடவாருரோகணிமடந்தையறிவழிந்தலறினளசோதை
வேயிழையனலின்வீழ்ந்திடுபதங்கம்போலவேயுளம்வெதுப்புற்று
மாயவெம்பேயின்முலையிடமுண்டமணிவண்ணாவுய்தியோவென்னாத்
தீயுறுமெழுகுபோலவேயுடலுஞ்சிந்தையுமுருகிப்பார்வீழ்ந்தாள். (௪௰)

வீழ்ந்தவளெழுந்துவிம்மினள்மகனேவினையினேனுனைப்பெற்றநலத்தால்
வாழ்ந்தனனென்றுமகிழ்ந்தயான்மடியாதிரோனெனமயங்கிடும்வேலை
சூழ்ந்ததோகையர்கள்வஞ்சகிமார்பிற்றுலங்கியகுழவியையெடுத்தே [ல்.
யாழ்ந்தவன்பினராயசோதைகைக்கொடுப்பவணைத்துமோந்தழுதரற்றினளா

அன்னையாமசோதையிரங்கிடச்சிறியழுதுதேம்பினனருட்கண்ணன்
மின்னுநேரிடையாளுரோகணியுடனேவேறுளமங்கையரொல்லா
மன்னினார்குழவிமெலிந்திடவாலக்கிரகந்தான்பற்றியவாமென்
றுன்னிநற்கோவின்பால்கொடுசுழற்றியோட்டிமாமறையவர்க்கீய்ந்தார்.

ஆவினீரதனால்மஞ்சனமாட்டியதினுறுமண்கொடுவிளக்கிச்
சாய்வில்பன்னிரண்டுநாமமுஞ்சாத்திச்சதுமறையோர்தம்வேதியர்கள்
நாவின்மந்திரநீருடலெலாந்தெளித்துநவையில்கோதானமுநல்கிக்
காவிசோர்விழியார்சருப்புரதீபங்காட்டினர்கவினுறப்பலகால். (௪௩)

உச்சிநன்னுதல்கண்மூக்கிருசெவிவாயுவமையில்கழுத்திருதோள்கை
பச்சைமாமேனியுரம்வயிறுந்திமருங்கெழிலூருவன்பாத
மச்சுதனனந்தன்முகுந்தநாரணன்மாலரிமதுசூதனன்முராரி
நச்சராவணையோன்முதலியநாமங்காவென்றுநவின்றுகாப்பிட்டார். (௪௪)

அந்தவேலையின்வாய்நந்தகோபாலனுயர்தம்பாடியிற்சடிது
வந்துமாபூதமடிந்தபேரியாக்கைவரையினைக்கண்டனன்மயங்கி
சிந்தையார்பயத்தாற்றிகைத்துநின்றேங்கித்திருமகன்றனையெடுத்தணைத்தே
யெந்தைநீயிறவாதிருந்ததெவ்வாறென்றேங்குவான்பின்னருமியம்பி. (௪௫)

வருவதிங்கறிந்துமொழிந்தயாதவர்கோன்வாய்மையேநன்றுநன்றெனவாண்
டுறைசெய்தென்மகனைக்காத்தவன்பேயினுயிருண்டானுலகமன்றளந்த
கரியவனாமென்றிருகரங்கூப்பிக்கரைசெயற்கரியதோர்களிப்பா
லரிதிருவாராதனையெலாஞ்செய்வித்தந்தணர்க்கானிரையீய்ந்தான். (௪௬)

சிகரமேருவென்னமடிந்தவளுடலைத்தறித்துவெந்தீயினிற்கொளுத்த
வகின்மணத்தவளும்பரகதியடைந்தாளாருயிர்கொள்வதாயலகை
நகில்விடப்பாலையளித்திடவீதிநல்கினன்றனக்குநன்முலைப்பால்
பகலுநள்ளிரவுங்கொடுத்தவள்பயந்தாள்பெறும்பதம்பகர்வதற்கெளிதோ.

உலகயில்பவளவாயினூலுவந்திங்கிளநகையரும்பநீயுண்ட
தலகையின்கொடியவிடமுலைப்பாலோவன்றியேயவளுயிர்தானோ
விலகியசங்கோமலர்மகள்பூமானதரமோவண்டமோவெதுதா
னலனுறுசுவைநீயுணர்த்தியென்றுரைத்துநாண்மலர்பொழிந்தனர்வானோர்.

பூதனைவதைப்படலமுற்றிற்று. ஆ. திருவிருத்தம் - ௨௭௨௪.

கோடகமாகம்நூறுசெய்தான்கைகுலைந்திடவமரர்கள்வெருவ
வாடகக்குன்றமதிர்ந்திடமாதர்கருப்பங்கள்வெடித்திடவார்த்துச்
சூடகக்கையாற்பருதியைப்போலச்சுடருறுசூலம்விட்டதிர்ந்த
தாடகைதனைச்சரத்தினாற்றடிந்ததசரதராமன்றாள்பணிவாம். (க)

நந்தனன்றந்தன்வடிவினைநோக்கிநலனுறவிருந்தமாநாளின்
வந்தநன்மதலைபிறந்தநாளதனான்மறையவர்மந்திரவயத்தாற்
செந்திருமகன்கோனாகியாண்டிலங்குஞ்சிசுவைநீராட்டியேசிறப்ப
நந்துமிழ்தரளமுதனவமணிகள்வயங்குகோதானமும்நல்கி. (உ)

சுடரொளியெனமுண்டகத்தினிற்சுட்டிதிகழ்வுறநாமமுந்துலங்கக்
கடனிறவுருவன்காலினிற்றண்டைகலினுறக்கைவளைவயங்க
விடரறத்தொடையலேற்றவேகருதமெல்லையிலிரணியந்தாரம்
படமணியிழைத்தபலபலதொட்டில்பண்பினர்தந்திடும்வேலை. (ங)

பூதனைமடிந்தசெயலதுகேட்டுப்போசராசன்றருபுதல்வன்
வேதனைமிகுத்துப்பலவுருக்கொள்ளும்விடமுடைச்சகடவெய்யவனைச்
சாதனைமலிந்தகாலியாசுரனைப்பகைஞனைத்தடிந்தவன்குலத்தைச்
சேதனைசெய்யச்செல்லுநீயெனவத்தீயவர்முடுகியேசென்றார். (ச)

தன்மதிச்சகடனந்தகோபாலன்றூயமாமனைதனிற்புகுந்து
நன்மணியிழைத்தவிருடைச்சகடநாயகத்தொட்டிலாயிருப்ப
நின்மலக்கொழுந்தையதனிடையேற்றிநீதானமும்படகமுமுழங்க
மன்மதபாணமனையகன்னியர்கள்மங்களம்பாடினர்வாழ்த்தி. (ரு)

வீறியபேரிபடலிகைதாளம்விளங்கியகாகளஞ்சின்ன
மூறுவாருதியிசெளிகளுமஞ்சமுழங்கிடவும்பர்கடிரண்டு
நாறுமாமலர்கள்பொழியவேநந்தகோபனுமசோதையுநலத்தின்
மாறிலாதுயர்ந்தரோகணிமாதுமடந்தையர்பலர்களுமகிழ்ந்தார். (சு)

அறுசுவையடிசினந்தகோபாலனகத்திடையருந்தியேயாயர்
நறுமலர்நானமலயசங்கமழநகையருடன்மனைக்கேக
மறுவிலாவசோதையுரோகணிவேறோர்மனையுளார்நந்தனுமஃதே
யிறைவனுந்துயில்வான்போன்றனன்சற்றுமிடைச்சிறுமதலையாயிருக்க. (எ)

எல்லையில்வஞ்சச்சகடனுங்கொடியோனியாவருமில்லையென்றுணர்ந்தே
யல்லியங்கமலக்கண்ணனைவதைக்கவணுகினனவன்றிறமறிந்து
பல்லவமனையமெல்லியவடியாலடர்ந்தடர்ந்துதைத்தனன்பரம
னொல்லையிற்சகடனாரம்பெண்டுசிதைந்துமெய்யொடிந்தனன்மடிந்தே. (அ)

சகடன்மெய்பொடிந்துதரணியின்விழவேதாமரைக்கண்ணனும்விம்மி
மிகமிகச்சீறியழுதனனதுகேட்டசோதையுமெல்லியல்பலரு
மகமெலிந்தெய்தியணுகினராயர்பலருடனந்தனுமடைந்தான்
சிகரமொத்துருண்டவசுரன்மேற்றுலங்குஞ்சிறுவனைப்பற்றியங்கெடுத்தார்.

எடுத்தவரசோதைகரத்திடைக்கொடுப்பவேங்கியேவாங்கிமெய்யணைப்ப
வடுத்தடித்தழுதுதேம்பினனையனவளொன்றுமறிகிலாளந்தோ
கெடுத்ததுவிதியேயென்றுளைந்தரற்றக்கிளிமொழிமாதரார்பலருந்
தடுத்தனர்மதலைபிழைத்தனன்றளரேலெனவவர்சாற்றிடத்தெளிந்தாள். (௧௦)

தெளிந்துநன்முலைப்பாலீய்ந்திடச்சிறுவனுகர்தலுஞ்சிந்தைநோய்தீர்ந்தாள்
தளர்ந்துகண்ணருவிமலிந்திடநந்தன்றனையன்றனுச்சியைமோந்தா
னுளைந்துளைந்தழுதவுரோகணிபுதல்வன்றன்னையாண்டெடுத்துறவணைப்பக்
குளுந்தவானனமால்கண்ணிலுலவலைநோக்கியேயிளநகைகொண்டான்.

வேதமந்திரத்தாலுயர்திலவோமம்விளைத்தனர்வேதியர்நிறைந்த
போதொடுபுனலுஞ்சுழற்றிமானதியுள்விடுத்தனர்பொற்கொடிமடவார்
தீதுசெய்பூதம்பசாசுகளணுகாவகையரிநாமங்கள்சிறப்ப
வோதியர்ச்சகர்கள்காப்புமிட்டதற்பினசோதைமின்னுரத்தெடுத்தணைத்தாள்

ஏதிலவசுரனிறந்தனன்வானத்திடிவிழச்சிதைந்தவாபோலென்
றோதினனந்தனதற்கிளஞ்சிறுவருரைப்பக்கேளுன்மகனுதைந்து
பாதநற்சிலம்புபுலம்பிடவுதைப்பச்சகடநீளவுணனுய்ப்பட்டா
னீதுநிச்சயமென்றியம்பலுமவர்சொல்மெய்கொளாரொல்லரும்நகைத்தார்.

இவரிளஞ்சிறுவர்மழலையாமொழியொன்னறிந்திவ்வுரைபகர்ந்தார்
குவடுகளுருமிற்பிளந்ததுபோலச்சிதைந்தனன்கொடியவாளசுரன்
துவரிதழ்துடிப்பவழுமிளங்குழவியுதைத்திடமடிவனோசொல்லீ
ரவனியினிறும்பூதெனநகைத்தவுணப்பிணந்தனையப்புறத்தெறிந்தார். (௧௨)

சகடாசுரப்படலமுற்றிற்று.

ஆகு திருவிருத்தம் - ௨௭௩௪.

## ௨௭. வது—காலியாசுரப்படலம்.

பாததூளியினற்கருங்கல்லாய்க்கிடந்தாள்பண்டையினுருவமாயேகப் [தே
பேதைபாகன்றனெடுத்திடும்வில்லைப் பிடித்தொருகொடிப்பின்முன்னொடித்
போதினிலமிர்தினிருந்துபின்புவியினுழுதபொற்கொழுவினிற்றோன்றுஞ்
சீதையைவதுவைசெய்துவந்திருந்ததெசரதராமனைத்தொழுவாம். (௧)

மைக்குழலசோதைமற்றுமோர்தினத்தின்மதலைமெய்யணிகலன்வயங்க
வொக்கலையிருத்தியுவந்துசீராட்டவுலகிடந்துண்டுமிழ்ந்தொருவ
னக்கணத்தவடான்பரிக்கலாப்பாரமாகவேயவனியினிருத்தி
யிக்கனம்வருவானேனிவன்மாலோவென்றவணினைந்திடும்வேலை: (௨)

சீரிலாக்கஞ்சனுரையினைக்கேட்டுத்தீமைசெய்காலியாசுரன்வெங்
கோரமாங்கொடியனுயர்தம்பாடிகுறுகியேவெஞ்சினத்துடனும்
பாரொலாமுலையப்பருவளாயதிரப்பறவைகள்யாவையுமடியக்
காரொலாமிரியக்கடுவினைபோலக்காற்றுருவாகியாண்டடைந்தான். (௩)

வேறு. விஞ்சமாமரங்களெங்கணும்வேரொடேயுயர்விண்ணின்மேற்
பஞ்சுபோலெழவொன்றொடொன்றடிபடவொடிந்துபறந்தவான்
மஞ்சுநேரியதூகளினோடினவானுளோர்களிரிந்துநொந்
தஞ்சினாரிதுசண்டமாருதவேகமென்னவறைந்தனன். (ச)

வரைநெரிந்தனமரமுரிந்தனமறுவிலாமதவெங்கரித்
திரள்சுழன்றனகிருடிபொன்றினசினமுறும்புலியரிமரை
யிரலையெண்கினமிவைமடிந்தனவெழில்கொளும்பசுநிரையெலா
மிரியவண்டர்களலறிநொந்தனவிறுதிகாலமிதாமெனா. (ரு)

புழுதிமாமழைபொழியமாதிசைபுவனமேழ்கடல்மறையவே
யழுதவாடிமெய்துவளவோடினராயரோடவர்மாதரார்
சுழலுமாசுகமுருவதாயொருகடிதைக்குழவறைந்தநா
னெழுதொணாவடிவுடையமாலையெடுத்துவான்மிசையேகினான் (சா)

சாரநிங்கிடமுனிவரஞ்சிடவேகுதன்மதியாகமேல்
வரைவிழுந்தனபோல்வெய்தியபாரமெய்யுறமற்றவன்
றரணிமீதுறவிழவெதிர்ந்திடுவோனையேயரிதன்னிவர்
கரமிரண்டினுமிவரியங்குயர்கந்தரத்தைவளைத்தனன். (எ)

தாலமன்னியகால்கழுத்துறுசகடமென்னநிகர்த்தவன்
ஞாலமீதுறநெரியவாருயிர்நமன்முனண்ணமடித்தன
னாலமாகியடர்ந்துவீழசரோசன்மார்பினிலழுந்துறப்
பாலனாகியமாயன்மாலரிபரமன்வைகியிலங்கினன். (அ)

அன்னகாலையசோதைதங்கையலறைந்தவாயுவின்மணலினு
வின்னதென்றறியாதுகண்கண்முகிழ்த்துவிம்மினளோங்கியே
பொன்னின்மாமலர்நிறைபுமென்கொடிபோல்விழுந்தனள்புவியின்மேற்
கன்னலொன்றுகழிந்தபின்னரொழிந்தமீதறைகாலரோ. (கூ)

மாயமாகியவறந்துவாயுவகன்றபின்னரெழுந்துமான்
ஆயமாமணிவண்ணமாகியகுழவிகண்டிலடியருழு
வாயினீரறவலறியேசிறுகன்றுபோயுறமனமெலிந்
தோயுமாவெனமண்ணின்மீதுவிழுந்துநொந்துளமுருகினள். (க0)

ஏவினால்விழுமெல்கலாபமயூரமென்னவுமஞ்சியே
ஆவிபோயினவுடலிதென்னவுமறிவழிந்துமெய்சோர்ந்தனள்
காவிநேர்விழியாணடுங்கியகண்டுகண்களிலெற்றிநற்
கோவிமார்களெடுத்தபோதுயிர்வந்துகொம்புபுலம்புவாள். (கக)

பேயின்மாவிடமுலைநுகர்ந்துபிழைத்தபின்னரெடுத்தம்யா
னாயமாஞ்சகடத்தினுய்ந்தனைமைந்தவாயுவின்விசையினாற்
போயநீயினிவருதியோபுயல்போலுமேனியபுனிதநின்
வாயும்வான்முகவழகுமூரலுங்காண்கிலாதுயிர்வாழ்வனோ. (கஉ)

ஆர்த்தவேலையினந்தகோபனுமாயருமவர்மாதரும்
வந்தழிழ்ந்துபுலம்பினார்களெழுந்துமைந்தனைவவ்வியே
யிந்தமாயமியற்றவல்லவரியார்கொலோவெனவேங்கியே
முந்தியோடினர்தேடினார்திசையெங்கணுமுகில்வண்ணனை. (௧௩)

பாரின்மேலின்மடிந்தபாதகவசுரன்மீதுபரஞ்சுட
ரோரின்மல்கிடுகுழவியென்னவமர்ந்தகண்டவரெய்தியே
யூரிலேதவுரோகணிப்பெண்சோதையொண்குலவாயர்தன்
னாரிமாருயர்நந்தகோபனடந்துநண்ணினர்தாமரோ. (௧௪)

வேறு. மின்னெயிற்றிருகண்விரிகடலென்னமெய்வரைபோலவேகிடந்த
யின்னல்செய்யசுரன்மார்பினினீலமணியெனவிலங்கியகுழவி
தன்னையொண்மடவாளசோதையுஞ்சிறந்தநந்தனுமுரோகணிதானுந்
துன்னியபொதுவர்தோகையர்குழுவுங்கண்டவரிடருறச்சூழ்ந்தார். (௧௫)

இளநகையரும்பவணிகலனில்கவிந்திரநீலமேபோன்று
கிளரொளிநிகழக்கிடந்தவிக்குழவிதன்னையாண்டெடுத்திடுகிளரு
ளவிலன்புடனும்சோதைகைக்கொடுப்பவழுதணைத்துச்சியைமோந்து
உளமகிழ்களிப்பாற்றன்முலைப்பாலையளித்திடவுண்டனன்முராரி. (௧௬)

உரைசெயற்கரியகளிப்பினான்மகனையுரோகணியெடுத்துறவணைத்தா
டெரிவையர்பலருந்தழுவினர்சிறந்தநந்தனுஞ்சேர்ந்துறப்புல்லப்
பிரமனீன்றிகர்த்தமறையவராசிகூறியபின்னர்நீசெய்த
வரிதிருவாராதனத்திலுன்புதல்வனுய்ந்தனனென்றறைந்தனரால். (௧௭)

காலன்வாயகப்பட்டுய்ந்தவர்போலக்கதமுறுமலகையாற்சகட்டா
லாலநேராமிவ்வசுரனாறகுழவிபிழைத்ததுமச்சுதனருளே
மேலுமோர்வினைகள்வரினுமற்றவன்றன்விலக்கியேகாப்பனென்றுரைத்தான்
லேமேவிறைந்தநந்தன்மாதவன்மேற்றேவருமலர்மழைபொழிந்தார். (௧௮)

இனையநன்குற்றுமதலைதன்னுடனுமியாவருமேகியேயியல்மா
மனைதொறும்புகுந்தாரசோதையுமகனைமஞ்சனமாட்டியேவயங்க
வினமணியிழைத்தவிழையெலாமணிந்தாண்டிராப்பகலொருவிலாதுயிலிற்
கனவிலுங்காண்பளுணரினுமவனைக்கண்களாற்கண்டுளங்களிப்பாள். (௧௯)

சுடர்மணிச்சுட்டிநெற்றியிற்பிறழத்தூயநன்மதலையையசோதை
மடிமிசைக்கிடத்தவிளநகையரும்பவவன்முகம்நோக்கிவாய்திறப்பப்
படிமுகடண்டஞ்சசியுடுப்பருதிபவமிலெண்பாலர்பூமகனேழ்
கடல்வரைதீவுகட்செவியுலகங்கண்டுகண்புதைத்தனளடுங்கி. (௨௰)

சிறந்தபெருலகமியாவையுமவள்றன்றிருமலர்வாயினிற்கண்டு
நிறைந்தபேரொளியாய்நின்மலக்கொழுந்தாய்நின்றருள்சோதியாநெடுமால்
பிறந்தனனென்றேபேதைநெஞ்சுருகப்பின்னருமாயையாற்பிணிக்க
மறந்துதன்கொங்கையாரமிர்தூட்டிமகனெனமகிழ்ந்தனளசோதை. (௨௧)

காலியாசரப்படலமுற்றிற்று. ஆ. திருவிருத்தம்-௨௭௬.

தரணியிற்சமதக்கினிமுனிமாளத்தடிந்திபிந்தலையர்களுடனும்
கரமொராயிரத்தோன்றனையொருகரத்தின்கதிர்கொள்பூமழுவினால்வதைத்தே
அரசர்களிருபத்தொருதலைமுறையையறுத்தவராக்கையிற்பெருகுங்
குருதியிற்குளித்தோன்றனுவினைவாங்கிக்கொண்டவன்புகழினையுரைப்பாம்.

நற்கவினிறைந்தமதலையைநினைந்துநாடொறும்நைந்துநைந்துருகு
முற்குணமிகுந்தயாதவன்மகற்குநாமநீமொழிகெனச்செப்பக்
கற்கான்முனிவனெய்தவேயண்டர்தலைவனன்புடன்கழல்வணங்கி
யற்கியமியாவுமளித்தபின்றவிசினிருந்தவனுசிகள்பகர்ந்தான். (௨)

என்னநற்றவமோயான்தொழநீயென்னில்லிடையெய்தினையென்று
சொன்னபின்முனிவன்றன்முகம்நோக்கித்தூயநீகேட்டியென்மகனுக்
குன்னுணர்வுவந்தநாமநீயருளியென்றுகைகூப்பியேயுரைப்பக்
கன்னலம்புரிகவென்றருந்தவத்தின்கற்கனுமுனிவனுமறைந்தான். (௩)

அறைந்தநன்முனிவன்றன்னுடன்மொழிவானாயர்கோனியாதவன்றனக்குப்
பிறந்தபெண்ணுணையாற்றியனுங்கஞ்சனுரோகணிபெற்றசேய்தன்னை
யறிந்திடின்மறஞ்செய்தானியேமுயல்வனுதலாலருந்தவவிறைவ
மறைந்திவன்றனக்குநாமநீயிடுதியென்றனன்மதியினுயர்ந்தோன் (௪)

நந்தகோபாலன்மொழிந்தசொற்கேட்டுநான்மறைமுனிவனுமிசைய
வந்தபேருவகைமலியவேயாயர்மகிழ்ந்தனராவணம்வயங்கக்
கந்தனன்மாலைகதலிபூகந்தார்கன்னலுங்கவினுறநிறைத்தார்
செந்திருமகளையனையவர்வீதிசேர்ந்துசோபனமொழியறைந்தார். (௫)

துந்துமிமுழங்கச்சுரர்மழைபெய்யத்தூயமாமறைவலோர்சூழ
முந்தியபேரிசச்சரிதிமிலைமுரசுகாகளம்வளைமுழங்க
நந்தனோடசோதையுரோகணிநங்கைநலந்திகழாயர்கணண்ண
வந்தமார்வேதமறைந்துயர்கற்கனழலினெய்யாகுதிவளர்த்தான். (௬)

ஓமவாகுதியிற்சாதகம்பண்ணியுரோகணிபெற்றசேய்தனக்குத்
தூய்மைசேரிராமன்சங்கருடணனென்றுலகுளோர்சொல்லிடநவின்றான்
காமவேடந்தையாகியவரிக்குக்கண்ணனென்றோதியேபினருந்
தீமையோரறவேவளர்ந்தருள்வாசுதேவனென்றுரைத்தருள்சுரப்ப. (௭)

வேறு. பூமலரின்மழைபொழிந்தேயந்தரத்தினிமையோர்கள்போற்றிசெய்ய
வாமமலிமங்கையர்கள்மங்கலகீதம்பாடிமகிழ்ந்துவாழ்த்த
தேமலர்மின்னாயகற்குத்திருநாமகரணஞ்செய்வித்துநந்தன்
மாமறையோரெண்ணிலர்க்குமாதானங்கோதானம்வழங்கினானே (௮)

வேதநிகர்கற்கமுனிநந்தகோபன்றனைவேறழைத்துச்சொல்வான்
மாதவத்தால்நீபெற்றமதலைதனைமனிதனென்றுமனதிற்கொள்ளேல்
சீதரனுக்கொப்பனிவன்சிறந்தவசுதேவனுக்குமுன்னாட்சேய்கா
ணீதுணர்தியிடரொருவியுனக்கும்வீடெய்துவிப்பனென்றுசொன்னான். (௯)

எனுமொழிகள்பகர்ந்தவனடியிறைஞ்சியென்மகனீடேறிவாழ்தல்
முனிவுனதருளன்றோவென்றுரைத்துமுகமலர்ந்தவாயர்கோனுக்
கினிமையுடனாசிசொலியிருத்தியெனவேவசுதேவனார்க்குந்
துனிகளறுதேவகிக்குமிவையெல்லாந்தனித்துரைத்தான்றூயகற்கன். (௧௦)

பூதநிகழ்காலமுணர்கற்கமுனிபோயதற்பின்பொதுவர்கோமான்
தீதகலுங்கற்புடையவசோதைதனக்கருந்தவன்சொல்லெல்லாஞ்செப்பி
மாதவத்தாற்றான்பயந்தமதலைதனையிருபோதுமொருவாராகி
யோதையுறுமுததியமிழ்துண்டவர்போலிருந்தவர்தாமுவந்தநாளின். (௧௧)

வேறு. துன்னுமணியாலவிர்கொள்சுட்டிவதனத்தின்
மின்னவொளிராரவடமெய்யினின்வயங்கப்
பொன்னுறுசிலம்பொலிபுலம்பவிருதாளாற்
றன்னிகரிலாதவிறையோன்றவழுமந்நாள். (௧௨)

அக்கிரமமேவுமதுரைக்கரசனேவக்
குக்குடமெய்யாகியசுரன்குறுகமாயோன்
சக்கரமெடுத்தகையினாற்றலைபுடைப்ப
வக்கணமரற்றியுயிர்மாண்டவுணன்வீழ்ந்தான். (௧௩)

நந்தனுமசோதையுநடுங்கிமெய்குலைந்தே
யுய்ந்தமகனைத்தழுவியுச்சிதனைமோந்தா
ரந்தகனின்விஞ்சவுணனாக்கையையெடுத்துச்
சந்தநறுக்கியெறிந்தார்தரணிமீதின். (௧௪)

மாதவர்கள்மாமலர்பொழிந்தனர்கள்வாழ்த்தி
வேதியர்களோமநிறையாகுதிவிளைத்தார்
தீதகலநெய்யினுறுதீபவொளிகாட்டி
யாதரவினாலனையணைத்துமுலையீந்தாள். (௧௫)

சிங்கலில்சதங்கைகள்சிலம்பினுடனேசீர்
தங்கியுறுகாலிடைசலஞ்சலெனவேதான்
குங்குமகருப்புரநிறைந்தமெய்குளிர்ப்ப.
வங்குநிறைதோயவனையையநகைசெய்தான். (௧௬)

ஆடரவைவாவெனவழைக்குமதுபற்ற
வோடவழும்வீழுமழுமொன்றுமறியார்போல்
மாடவொளிதீபவெளியால்மகிழும்வானோர்
தேடரியசோதிசிறுமூரலெழமாதோ. (௧௭)

தாதவிழுமாலைதிவளத்தவழுவோனைப்
பீதியுறவோனெனவிருந்திறைபின்னோக்கி
யாதரவின்மீளவுமசோதைமடியேற
மாதுளமகிழ்ந்துமகனைத்தழுவினாள். (௧௮)

வீறியகருப்புரமெயிற்கரமணைந்த
சேறுநடந்துமடியேறியிடவேசி
றேறியவசோதையிறுகத்தழுவியின்புற்
றூறிநிறைகொங்கையமிழ்தூட்டினளுவந்தே. (௧௧)

குக்குடாசுரன்வதைப்படலமுற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௨௲௭௮.

---

## ௨௯. வது - நவநீதப்படலம்.

பகலவன்குலத்திற்றோன்றிப்பரதனுக்கரசையீய்ந்து
நிகரிலாச்சனகியோடும்நெடியகானகத்துமேவி
குகநெறியெனக்கியென்றுகூறியகொற்றவில்லி
புகழினையறைவோர்மைதிர்புதல்வருண்டாகிவாழ்வார். (௧)

துளைபலவுளவாம்பாண்டத்தமைகிலாத்தோயம்போல
வளிமலிமுகுந்தன்காதையறிஞர்கள்மொழியக்கேட்டு
முளமகிழ்ந்துட்கொளாதேயுறுபவம்விளைக்குநெஞ்சே
களவுடையாக்கைநில்லாதுயரரிகழல்வாழ்த்துய்ய. (௨)

காவியங்கண்ணினார்கள்கறந்தபாறதிநெய்பாரார்
மேவலார்மனையினென்றுமுன்னலார்விரைவின்வந்தே
யாவிளங்கன்றின்வாலைப்பிடித்திழுத்தன்பினோடு
மோவியவுருவினானைக்கண்டுளமுருகிநின்றார். (௩)

துணைவரோடேகியையன்சூழ்தனையரில்லி
னிணையிலாக்கறக்குமுன்னமிளங்கன்றைநுகரவிட்டான்
பிணையெனும்விழியினார்கள்பிடித்தனரடிக்கவெண்ணி
யணைகயிறெடுப்பநக்கானவர்மகிழ்ந்தணைத்துக்கொண்டார். (௪)

பழுதிலாவண்டரில்லினுறியிசைப்பாண்டந்தன்னி
னிழுதெலாமள்ளித்தானுந்நுகர்ந்திளஞ்சிறுவரெல்லாந்
தொழுதிடவளித்துப்பின்னுந்துயில்கொளுமாற்கந்தன்னை
யொழிகெனவடித்திட்டாயரெய்திடவோடிப்போனான். (௫)

கூறைதனிலேறியாயர்மனைதனின்முகட்டிற்கட்டு
முறியிசைக்குழிசிதன்னையுயர்ந்தகோலதனாற்குத்தித்
தரையிலோர்துளிவிழாமற்றன்னுடைவாயாலேற்றான்
மறைகளுந்தேடிக்காணுமலரடியுடையவள்ளல். (௬)

வானையோரடியிற்கொண்டோனசோதைதன்மகனாய்வந்து
கானமேசெடிசெய்மேனிநறுமலர்த்தொடைவயங்க
வானெய்யைத்தேடிக்காணுவாய்ச்சியரடிசில்கொள்ளும்
பானையைத்தகர்த்துத்தொட்டிற்பசலழக்கிள்ளிப்போந்தான். (௭)

களவுசெய்மால்காணுமற்கானமார்மனைகடோறுந்
தளவலர்நகையார்வைத்தவுறிதனைத்தடவிமல்கு
மனைநெய்பால்வெண்ணெயெல்லாமசோதைசெய்கலனார்தன்மெய்
யொளிவிழக்கவினைக்காட்டவுண்டையாற்றெரித்தேயுண்டான். (௮)

வேறு. மாதவஞ்செய்யாய்ச்சியர்கள்கூடியேநம்மனையினெய்பால்களவுசெய்
யுமவனைப்பற்றித், தீதகனுமசோதைமுனம்விடுவமென்றுசெப்பினவரில்கடோ
றுந்திருடமெல்லப், போதுமிறைதனைப்பற்றியெண்ணில்மாதரகந்தொறுமோர்
புதல்வனெனப்போந்துபின்னர், நீதியுறுமனைமூலைப்பாலருந்துவோனைநேரி
ழையார்நோக்கிவெள்கியொருவினரால். (௯)

வேறு. தற்பரனையசோதைமருடன்திருடித்தன்பங்
கொப்பியதுப்புவெண்ணெய்விலாவத்துக்குவந்தளித்துச்
செப்பிளமுலையாரெல்லாம்பின்பிடித்தேகச்சிறம்
சுப்பிரதீபம்போலத்திரிந்தனன்சுரர்கள்போற்ற. (௧௦)

சிலையெனுநுதலின்மாதர்சிறந்தவுன்மைந்தன்தோழர்
பலருடன்வந்தெம்மில்லிற்பாறயிர்பருகிப்பின்னு
மிலையிலையென்றுபோனனென்றனரவர்மருங்கிற்
கலையினைப்பிடித்துநக்கான்களித்தவரணைத்துக்கொண்டார். (௧௧)

சங்கருடணனுந்தானுந்தமருடன்யாண்டுமேகிச்
செங்கிடைபதரச்செவ்வாய்ச்சிறுமியருடனேகூடி
யங்கவர்வளையுடைத்துச்சிற்றிலையழித்துமண்ணை
நுங்கினனதனைக்கண்டோரசோதைக்குரைத்தலோடும். (௧௨)

உரோகணியுடனசோதைமகன்றனைப்பிடித்தீண்டுற்ற
திராமநீயியம்புகென்னத்தம்பிமண்டின்றானென்று
னராவணைதுறந்தவையனண்ணனேதின்றானென்னச்
சரோருகவதனத்தாயோடனைவரும்நகைத்தார்சால. (௧௩)

வெள்ளைநீர்வண்ணத்தண்ணல்மெய்யன்றிவிரகுசொல்லா
னுள்ளவாறனையாயாயருதியினெய்திருடியுண்ட
கள்ளநீமண்டின்வாயைக்காட்டெனவடிப்பக்கண்ணன்
மெள்ளவாய்விரித்தானன்னைவெருவியேயிவைகண்டாளால். (௧௪)

பிரமனைக்கண்டாளண்டகோளத்தின்பெருமைகண்டா
ளிரவியைக்கண்டாள்வானினிந்துவைக்கண்டாளெட்டு
வசுவினைக்கண்டாளேழுமகோததிதன்னைக்கண்டாள்
கரியிருநான்குங்கண்டாள்கனகமாங்கிரியைக்கண்டாள். (௧௫)

ஏருறத்திசையின்வைகுமெண்மரைக்கண்டாள்வானிற்
றாரகைக்கண்டாடேவதவத்தினர்குழாத்தைக்கண்டாள்
பாரினைக்கண்டாளாயர்பாடியிற்றன்னைக்கண்டாள்
சீருறுமகனைக்கண்டாள்சிறந்ததன்கைக்கோல்கண்டாள். (௧௬)

ஏதிவனியற்கையென்றுவேங்கினளிருகண்மூடி
யாதிபாயகண்டமெல்லாம்தன்வயிற்றடக்கிநின்ற
சோதியாமிவனேயென்னேயென்மகனென்றுசொல்லும்
பேதைமையென்னவென்றுபீதிகொண்டசோதைநின்ருள். (௧௭)

தூயவணெஞ்சிற்றேன்றுசுடரொளிஞானமெல்லா
மாயையால்மறைத்துப்பின்னும்வாய்விம்மியழுதான்வள்ள
லாயதுகண்டசோதையையநானடியேனென்று
நீயழேலென்றணைத்தாள்முன்கண்டதிலொன்றில்லாள். (௧௮)

வேறு. மின்னிடைமேனகைமுதலாமடவாரேத்தவிழுமியதுந்துமிமுழங்கவி ண்ணுளோர்கள், பொன்னின்மலர்மழைபொழியமுனிவர்வாழ்வோர்போற்றிசெ யத்தும்புருநாரதர்கள்பாடத், துன்னுமணித்தாவடங்கள்மார்பினுடத்துலங் கநகைத்தேநடிக்குஞ்சுதனைநோக்கி, யன்னைநவநீதமளித்துவந்துநித்தமளப்ப ரியவன்பினுடனமருநாளின். (௧௯)

நவநீதப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௭௧௯.

## ௩௦. வது-ததிபாண்டப்படலம்.

நிலநீர்காலனல்விசும்பாயுலகமெல்லா நீண்டுசுரர்முதலாகிவையாமத்தா லலைபாரும்பயோததியைக்கடைந்துதோன்று மமிழ்தினைவிண்ணவர்நிரைக்க ளித்துத்துய்ய, சிலையாலேயிலங்கைநகராளுமன்னன்சிரங்களொருவேரங்களற ச்செற்றுமீண்டு, மலர்மேவுசனகியுடனயோத்தியெய்துமாதவன்றன்மலரடி யைமனத்துள்வைப்பாம். (௧)

வல்லூறுபசுந்தசையைக் காட்டத்தானு மரமொருவியிழிந்தவன்பாற் சேர்தலேயச், செல்லூருந்திருமேனியெழில்கொளெம்மான்திருவடியின்கொ ழுகொம்பின்பற்றுவிட்டே, அல்லூருங்கருங்குழலார்கலவிகாட்டுமல்குறனில மூழ்கிநரகமைக்குநெஞ்சே, சொல்லூறுமிறைபெயராஞ்சுதையையுன்னித்து லங்கிடவுன்னிடத்தமைத்திதுயர்போயுய்ய. (௨)

அரியுறுநறுக்குழலலையமலர்கள்வீழவணிகாதிற்றேடிரண்டுமசையவிஞசும், வரிநெடுங்கண்ணிணையிலகவாசம்வீச மதிநுதலின்வெயர்வரும்பமணிகள்மின் னக், கிரியனையபயோதரங்கள்மிளிரத்தோளிற்கெழுமணிப்பூண்வயங்கவொ ளிர்இருகைதன்னிற், சரிவளைகள்கலகலவென்றொலிப்பமத்தாற்முழியினிற்றயிர் கடைந்தாளசோதைதானே. (௩)

தாழியினிற்றயிர்கடையுமசோதைதன்னைத் தனையனெனுங்கண்ணபிரா ன்முலைதாவென்றே, யாழியுறுங்கையினிலைமத்தைவீழ்த்தேயழுதிருகையால வடனகிலைப்பற்ற, வேழைவருமிளங்கன்றுக்கிரங்குமாப்போலெடுத்தணைத்து மனமுருகியுச்சிமோந்து, வேழமுறுளைஅழக்கவர்தமைந்தனுர்க்குவிம்முமுலை ப்பாலளித்தாள்விருப்பமிக்காள். (௪)

ஆலிலையிலன்றுதுயிலாதியோனுக்கழகியதன் முலைப்பாலையளிக்கும்போழ்தின், பாலுறுதீமூட்டிடவே பொங்கக்கண்டு பரமனைத்தானிலத்திருத்திப்பாறினாள்பின், நீலமுகில்மேனியின்வாய்துடிப்பச்சிறிதிலமத்தாற்றாழியினைப்புடைத்துமெல்லக், காலிலணிசிலம்பசையாமற்றானேகிக்கரந்துதனிமனைபுக்கான்கள்வனாகி. (௫)

உரல்தனையுருட்டிநிலவிறுத்திமேனின்றுயர்ந்தசிக்கந்தனையறுத்துவெண்ணெயள்ளி,வெருகினத்தினவளித்துப்பயந்தார்போலத்தாய்வரவுநோக்கிநின்றுவிழிக்கும்வேலை, யெரியவித்தும்பாலிறக்கியசோதைநங்கை யென்செய்தான்மகனெனவந்தெய்திக்கண்டாள், பெருகுததிநதியெனமண்ணிறைந்தேயோடப்பெருந்தாழிபலவோடாயுடைந்தவண்ணம். (௬)

முலையீய்ந்தேனிலையென்றுதாழிதன்னைமுனிந்துடைத்தானாமெனத்தான்முறுவலெய்தி, நலனுறுந்திருமகனைக்காணாளாகிநடந்தெங்குந் தேடிடவோர்மனையினுள்ளே, நிலவேபோலொளிசிறக்கும்வெண்ணெயள்ளிவெருகினுக்குநெடுநேரங்கொடுத்துநின்ற, வலரோனையுந்தியினிற்றந்தமைந்தன் தனையடிக்கக்கோலெடுத்தாளசோதைதானே. (௭)

அன்னைதனையடிக்கவருகின்றாளென் றுண்டகப்படாதேமுகுந்தனிலத்திலோட, மின்னிடையிற்கலைபசையக்குழல்மென்மாலைவீழ்ந்திடநல்விரிசிகையின்மணிகள்மின்னப், பொன்னின்மணிச்சிலம்பரற்ற வளைகளார்ப்பப் புகரிபக்கோடனையமுலைபாரமாட, வன்னமெனநடக்குமின்னாளோடியே யவ்வச்சுதனைப்பிடித்திடத்தானணுகுங்காலை. (௮)

விதிவேண்டவரமளித்துப்பூமிபாரம் விலக்குதற்குவடமதுராபிறந்துபின்னர், நதிதாண்டியசோதைமனைபுக்கநம்பி நற்றவங்கள்செய்துமுன்னாளழிந்திடாத, பதிவேண்டியறிவுடனும்பிறந்தேயாயர்பதியிருந்துபரமன்தன்வரவுபார்க்கும், ததிபாண்டனுறைமனையினெய்தினான்மற்றவனுமிவன்றாளிணையைப்பற்றிச்சொல்வான். (௯)

போதனுமாதவருமனேககாலம் பொருந்தியநற்றவம்புரிந்தும் வெளிசெய்யாத, ஆதியுனைக்கண்டுகொண்டேனருள்நீ வீடென்றறைந்திடலுமச்சுதனின்றருள்செய்வானா, மேதுரைத்தாயானந்தன்மதலையென்னையன்னைபிடித்தடிப்பதற்கீண்டெய்துகின்றாள், பேதையென்றன்கால்விடுதியென்றுகூறத்ததிபாண்டன்முறுவலித்துப்பேசுவானால். (௧௦)

நறுமலரினயன்முதலாநாதரெல்லாமிராசதமுந்தாமதமும்நண்ணித்தாங்களிறையெனவேயாங்காரத் திருக்கமாயமியற்றியபோ லெனையின்றுமயக்குவாயோ, வுறுவினையேன்றனக்குமெனக்குவந்தநாலேழில்லவர்க்குமியான்பிடித்தவுயர்தாழிக்கும், குறைவில்பதங்கொடுத்தருள்நீகொடாயேலுன்னையசோதைகரத்திற்காட்டிக்கொடுப்பேனென்றான். (௧௧)

எனுமளவிலசோதையனுகிடனுமாயோனியந்தனன்யானபரமகதிகீயம் புகின்ற, வனைவருக்குமுனக்குமுன்றன்கைத்தாழிக்குமடைதிரெனவச்சுதனு ண்டருளலொடு, முனிவர்தொழப்புதுமலர்கள்பொழியத்தேவதுந்துமிகள்பல முழங்கவண்டமிப்போ, யினியகெதியெய்தினர்கண ந்தன்மைந்தனன்னைகை யிலகப்படாதேகினுனல். (௧௨)

எழுநாலுமனையிலுளோரெவருந்தாழியுடன்றதிபாண்டனும்வான்மீதேகு ம்வண்மை, பழுதோயவருந்தவஞ்செய்யசோதைநங்கைபார்த்துமறந்தனண் மாயன்மறைப்பப்பல்கா, லழுதுசெனுந்தன்மகனைத்துடரமாறிலட்டமாயோ கிகட்குமகப்படாமல், முழுமாயஞ்செய்கின்றமுராரியன்பர்க்கெளியவனுருவ போற்றுய்முன்னின்றுனல். (௧௩)

முன்னஞ்சிகின்றமகன்கரத்தைப்பற்றிமுகில்போலுமேனியகீததிகொடா றி, பின்னஞ்செய்துறியறுத்துவெண்ணெயள்ளிப்பவனங்கள்பெறவளித்துப் பிழைகீசெய்த, துன்னெஞ்சிலுணர்ந்திலையோவில்கடோறு முற்றுமுனம்புரி தீமையுலப்பிலாத, வன்னெஞ்சப்பேய்முலையைகீயன்றுண்டமதத்தினுலோவி வையென்மைந்தாவென்ருள். (௧௪)

என்றுரைத்துமிகநகைத்தவசோதைமைந்தனிருகரமும்பிடித்திழுத்தும ஊயினெய்திக், கன்றுகள்வால்பிடித்திழுத்தும்பாரிலுள்ளகட்டெறும்பையத ன்செவியிற்கடிக்கவிட்டு, மன்றல்கமழோதியர்கள்வனைகள்சாடிமற்றவழுக்ஙள்சி ற்றிலையுஞ்சிதைத்திவர்ந்தே, யொன்றுமறியார்போலநிற்குங்கள்வவுன்னையினி யுலூகலத்திற்பிணிப்பேனென்ருள். (௧௫)

பெரியவுரலுருட்டியவன் முன்னர்வைத்துப் பிரமனுடனுலகுதந்தபெரி யோனறன்னை, யரியதவஞ்செய்துமகிழசோதைநங்கையழகியநற்கயிற்றைய வன்மருங்கிற்சேர்ப்ப, விருவிரல்மாத்திரம்போதாதாகப் பின்னரிடையர்மனை த்தாம்பெல்லாமெடுத்துக்கட்டத், திருமகன்றனிடைக்கதுவும்போதாதாகத் திகைத்தனள்வந்துரோகணியுஞ்சிரித்தகின்ருள். (௧௬)

அரிவையர்கள்மிகநகைக்கவசோதைநங்கையாயர்மனைத்தாம்பெல்லாமு டிந்தொன்றுக்கிக், கரியவனைக்கட்டிதனும்போதாதாகிக்கைசலித்துமெய்வேர் வுசொரியக்கண்டு, வரையினமர்யோகிகட்கு மறைநாலுக்கும் வானவர்கருக்கு வாசவற்குமலரின்வந்த, பிரமனுக்குமகப்படாப்பெரியோன்றுய்கைத் தாம்பி னுலுலூகலத்திற்பிணிப்புண்டானல். (௧௭)

ததிபாண்டப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௪௧௪.

## ௩௧. வது - அருச்சுனப்படலம்.

தரணியினினைவயற்றிற் றசமாந்திங்கடங்கியவ ளின்றதற்பின்மருடா னெய்த, விருநிலத்திற்கிடந்திருந்துதவழ்ந்துசாட்டியிலங்கநடந்தெழிலுறம ன்மதன்போலாகி,யரிவையர்கள்கலவியெனுமளக்கர்வீழ்ந்தேயருகினையத்தழு ந்தியுயிரிலையாவண்ணந், திருமகடன்னுயகனைத்துதிமின்றுய்யதினகரனுற்பா திமம்போற்பவங்கடர. (௧)

தினகரன்றன்சுடர்போன்றசுட்டிநெற்றி திகழ்ந்திடவேதிருநாமந்துலங்கக்காதிற், கனகமணிக்குண்டலங்கடிகழக்கையிற்கடகமின்னக்கந்தரத்திற்கலன்கள்மின்ன, வினைகளறவருதாளிற்சதங்கைகொஞ்சவிளங்கியபொற்பரிபுரங்கள்மிழற்றியார்ப்ப, வனகனுயருரலுருளத்தவழ்வான் முன்னருச்சுனமாயடைந்தவ்வாயறையலுற்றும். (௨)

அளகைநகர்க்கதிபதியாமியக்கர்கோமானருணளகூபரனுமணிக்கிரீவன்றனும், வளமையுறுமொருசயிலமருங்கின்வானநதியின்மடவார்சூழமதுவைத்தேக்கி, யுளமகிழுன்மத்தர்கணக்கினத்தராகி யொளிர்நளினமலர்கள்பறித்தெறிந்தேவீழ்ந்து, மிளநகைமின்னார்களுடனெழுந்துங்கையாற்றழுவியுமாண்டவர்விளையாட்டெய்தும்வேலை. (௩)

இயலினிசையறிதவத்தன் கரத்தின்வீணையேந்திய நாரதமுனிவந்தெய்தலோடுங், கயலெனிகர்கண்ணியர்கள்வெருவியோடிக் கனாயினெய்திக்கலிங்கமருந்துறத்தானிற்க, மயலினுழுதனபதிதன்சிறுவரானோர்வணங்காமனக்கினத்தராகிநின்று,ருயர்மறையையுணர்ந்தரியாயிரநாமங்களோதிமகிழ்வோனவருக்குணாக்கின்றனல். (௪)

தனபதிதன்சிறுவரெனுந்தருக்கானீங்க டருமநெறிதிறம்பிமதுபானம்பண்ணித், துனிகளுறுகாமத்தின்றுணைவராகித் தூயநதியினக்கினத்தராகித்தோன்றித், தினமுறுபல்காலங்கள்மரமேபோலச்செருக்கினீர்தெரித்திரத்தையடைந்தோரெல்லா, மனதிலுறுமாங்காரமிலராய்ப்பாவ மரமாகிப்பரகதியின்வாழ்வாரன்றே. (௫)

ஆதலினற்றெய்வவருடங்கணூறுமருச்சுனமாயறிவுடனீர்நிலத்திலோங்கி மாதவன்றனருள்பெற்றுவருவீரென்று மாமுனிவன்சாபவுரை வழங்கியேகப் பூதலத்தின்மருதிரண்டாயிரமென்னும் புனிதன்முனர்வயங்குமராமரங்கள் போன்று, தீதகற்றவுரலுடனேதவழும்வண்மைச்சீதரன்முன்பலசாகைதிகழ்கின்றார். (௬)

அளகைநகர்க்கிறைபுதல்வர்முனிசாபத்தா லடர்ந்தவிரண்டருச்சுனத்தினுப்பிணையன், வளமையுறுமுரலுடனுந்தவழும்போழ்தின்மலரடியினுந்திடவம்மரங்கள்வீழ்த்தாண், டிளமையுறுவடிவினராயெழுந்துதோன்றியிருவொருவஞானமுறவணங்கியாடி, யுளமகிழுங்களியுறவொண்கண்ணீர்சோரவுடல்புளகமாகினின்றேயுரைக்கின்றால். (௭)

நீரொரிகானிலன்வானமைந்துங்கூடவையைந்துதத்துவமாய்நிறைந்துநின்ற, பேருருவுங்கருமமுமாயுயர்ந்தசோதிப்பெருமையனைப்பிரமன்முதலாயதேவ, ராருமுனையறியார்களவர்தஞ்செய்கையறிதிநீயெனமறைகளறையாநிற்குஞ், சீரில்குணத்தீவினையோமாகினின்றேந் தேவவுனையெம்மாற்றான்றெரிக்கலாமோ. (௮)

பருதிகண்டபனியெனநீள்பவங்கடனைப்பற்றறுக்கும்நின்பாதபதுமமென்று, சுருதிமொழியறையுநலனின்றுடனிற்றேய்ந்துலகோர்பாவங்கடுணித்துமண்ணிற், பெருகியவானதியதிவள்கருங்கல்லானபெண்போலவருச்சுனமரம்வடிவம்போக்கின், டரியவிளைதவிர்த்தெழுந்தேமறிவோமென்றேயரியருளால்விடைகொடுப்பவவர்கள்போனார். (௯)

இடியெனவேயதிர்ந்துமருதிரண்டும்வீழ்யாவதுகொலென்னவஞ்சியண்டரொய்தக், கொடியிடையாளசோதையுரோகணியாங்கொம்புகோபாலர்நாயகனெல்லாருங்கூடி, வடிவுடையமைந்தன்மரத்தடிபடாமல்மாயவன்றன்காத்தானென்றுரைத்தப்பின்னர், படியின்மரம்வீழ்ந்திடுகாரணமேதென்னப் பார்த்துநின்றவிளஞ்சிறுவர்பகரலுற்றார். (௧௦)

கரியமுகில்வண்ணனிவன்றனைத்தன்னைக்கட்டிவைத்தவுரலுருளக்கடிதினேகி, மருதிரண்டுங்கெடுவிடைவெழுந்துகரால்மற்றதனையுதைத்திடலுமண்ணின்வீழ்ந்தின், டிருவருமாரதிறனெழுந்தாரிவன்றுடனிலிறைஞ்சியவர்யின்மீதிலேகினாரென், றுரைசெயவிவ்விளஞ்சிறுவர்கண்ணன்போலவுண்மையைப்பொற்சடமொழிந்தாரென்றுநக்கார். (௧௧)

சுட்டிநெற்றிதுலங்கிடநல்வதனம்வேர்க்கச்சுடர்மணிப்பூணணியிலகவசோதைதன்னைக், கட்டிவைத்தவுரலுருளத்தவழும்வண்மைகண்டுகந்தன்கறையினிடைக்கயிற்றைவாங்கி, விட்டிடலுநகைத்தெழுந்துகடித்துப்பாடிமெல்லமெல்லநடந்துபின்னர்விசையிலோடச், சிட்டர்புகழாயர்குலதிலதனுமோவாளசோதையுரோகணியிவர்கள்சிரித்தாரன்றே. (௧௨)

தூயபலம்விற்பாளைவள்ளனுக்கிதோகைநல்லாய்விலைதருவேனென்னையார, நீயிடுதியோகனியையென்னக்கொண்டுவாவெனத்தானெல்லையிருகையாலள்ளி, யாயர்திருவீதிதனிற்சிந்திப்போக வவள்முறத்தில்வெறுங்கைவைத்துமுகத்தைப்பார்த்தா, னேயமுடனவளளித்தகனியையெல்லாந்தமர்களுக்காங்குவந்தளித்தானெடியமாயோன். (௧௩)

காலினமர்சிலம்புகலின்கலினென்றார்ப்பக்கவினகொளரைக்கிண்கிணியுதைமோங்கக், கோலமுறுங்கரவளைகளொலிப்பக்காதிற் குண்டலங்கடிவளமுகக்குறுவேர்வரச, நீலமுறவிருண்டகுழலலையச்சுட்டிநெற்றியினிலங்கமணிவடங்கடாழ, ஞாலமிசைத்தாளெடுத்துக்கரத்தைநீட்டிநவநீதத்தாதரவானடிக்கும்காலின். (௧௪)

நந்தனுடனுபநந்தனவில்வானையாநம்பதியிற்றுன்னிமித்தம்பலவாய்த்தோன்று, மைந்தனுயிர்கொள்வதற்குவஞ்சப்பேயாய்வன்சகடாய்க்குருக்குடமாய்வாதமாகி, யிந்தநிலத்தினின்மருதாய்ப்பட்டதவெல்லாமெரியின்வீழும்விட்டிலைப்போலிறந்துநீங்கி, யுய்ந்தனனின்மதகையரியருளாலென்றேயுலாந்தினனாயியம்புவதுண்டென்றுசொல்வான். (௧௫)

யாமன்னியிருந்தபதிவிட்டெல்லோரும்யமுனையெனுநதிக்கரையிலிலங்குகின்ற, பூமன்னும்பொழில்விருந்தாவனத்தினெய்திற்புல்லுண்டுகனிகாய்கள்புனல்களுண்டா, மாமன்னுமிடமமைத்துமாடகூடமண்டபங்களாலயங்களழகாய்ச்செய்யிற், காமன்னனைகொனவேபாங்காமென்றுகேட்டுரைப்பநந்தனதுகருமமென்றான். (௧௬)

நந்தனஃதுரைத்திடலுமாயரெல்லாம்நலனாகவெழுந்துபலசகடுதன்னிற் கந்தமலர்க்குழலியர்களொண்ணில்மாதர்கலன்களிழைமணியிலசக்கடுகிப்போனா, ரந்தரதுந்துமிமுழங்கப்பேரியார்ப்பவசோதையுரோகணியாரமணிகள்மின்ன, மைந்தரிருவரும்வயக்கமணித்தேர்மீதின்வானவர்கள்மலர்பொழியமகிழ்ந்துசென்றார். (௧௭)

ஆனிரைகளணிமணிகள்கறங்கியாடவாவிலிளங்கன்றினங்கடுள்ளியோட, நானநறுமலர்த்தொடையல்கமழநந்த னவமணித்தேர்மிசையினண்டர்திரள்கள்சூழ, மானதியாகியயமுனைக்கரையில்வீதி யமைத்துயர்ந்தமனைகளெல்லாம்வயங்கமாழைத், தேனுறுபூம்பொழில்விருந்தாவனத்தினெய்தித்திருவுறவாண்டினிதமர்ந்தான்செல்வமோங்க. (௧௮)

ஆயர்களெல்லாமகிழ்ந்தகோபனருட்கமலக்கண்ணனையுமவன்முன்னோனுஞ், சேயினையுந்தமருடனுங்கூடச்சென்று சிறந்தவிளங்கன்றுகளைமேய்மினென்றான், றூயவிளஞ்சிறுவருடன்பாலின்வண்ணன்றலங்கிடநற்காயாம்பூவண்ணனெய்தி, வேயினிசையூதியெங்குங்கவணிற்கல்லைவீசியவன்சொற்படியின்மேய்க்குநாளின். (௧௯)

அருச்சுனப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௮௬௬.

## ௬௨. வது—பெகாசுரன்வதைப்படலம்.

சருவிடையிற்சிறையிருந்துகலங்கவேண்டாகாசினியிற்பிறந்துபின்னர்ப்பிணிகளாலும், நரைகடருமூப்பினுமெய்நலியவேண்டாம்நல்குரவாமளக்கர்விழுந்தழுந்தவேண்டா, மிருகிலத்திலிறந்துகடுஞ்சமனூர்தன்னி லிருந்தரியகொடுநிரயத்தழுந்தவேண்டா, மரியினுயர்திருப்புகழையறைமின்றொண்டரழியாதபரமபதத்தடைகுவீரே. (௧)

மாயமிகுசகடனுடல்சிதைந்தவாறும்வாயுவெனவடித்திடுவோன்மடிந்தவாறு,மாயவெல்லாங்கேட்டுமிகக்கனன்றகஞ்சனருவினையாம்பெகனைகன்கன்ருசும்நீசன், றீயனையவிவர்களைத்தானோக்கிநந்தன்சிறுவனைநீர்கடிதேகித்தெறுமினென்றான், றுயிரையுங்கொல்லவல்லதறுகணாளர்சமனில்விருந்தாவனத்திற்சார்ந்தாரமாதோ. (௨)

இனியதமருடனேகிக்கண்ணன்மேய்க்குமிளங்கன்றினிரையுடனேதானுங்கன்றாய்த், துனிகளறுமனத்தினிலனெங்குந்துள்ளித்தூயமுகில்வண்ணனைத்தாளுடுங்காலை, வினையமெலாமறிந்துநகைத்தையன்மெல்லவிளையாடியவுணக்கன்றினைக்காற்பற்றிக், கனியுதிரவெறிந்தனனக்கபித்தம்வீழக்கடியவனுங்கருவரைபோல்மடிந்துவீழ்ந்தான். (௩)

இளங்கன்றாகியவவுணன்கபித்தத்தோடுமிடியெனவேயிரட்டலுறமடிந்துவீழக், களங்கனியாகியவண்ணன்செயலைக்கண்டுகடிமலர்கள்பொழிந்தனர்கள்களிக்கும்வானோர், விளங்கனியெல்லாமெடுத்துத்தமரோடேகிவிளையாடிக்கன்றினம்வீதியின்கணோட, வளங்கொளண்டரில்கடொறுமேகிக்கன்றுவந்ததிதோவென்றுரைத்துமனையிற்புக்கான். (௪)

கனிவிழவேயாவினிளங்கன்றைப்பற்றிக்கண்ணனெறிதலுமவுணனாகிமாண்டு,பனிவரைபோல்நிலத்துருண்டானென்றுகையிற்பழங்காட்டியிளஞ்சிறுவர்பகர்தலோடு, மனமெலிந்துநந்தனுடனசோதைநங்கைமார்பினணைத்தேமகனைக்காப்புமிட்டுத், துனிகளுறுமவ்வனத்தினேகாதேநீதூயவிளங்கன்றினைமேய்த்திடுதியென்றாள். (௫)

என்றவளிவ்வுரைபகரத்தமரோடேகியிளங்கன்றினங்களைத்தான்மேய்த்துநிற்பக், கன்றியசிந்தையினவுணன்பெகரூபாகிக்கயிலையெனக்கடிதினெய்திமூக்காற்கொத்தி, யன்றுலகமளந்தவனைவிழுங்கலோடுமெரியாகிச்சுடமீளவுமிழ்ந்தபோதின், மன்றல்கமழ்துளவினன்விரணத்தைக்கீறுமாறெனவேவாங்கிப்பிளப்பமாண்டுவீழ்ந்தான். (௬)

வாயால்வீழ்குருதிநதிங்கராயோடவடவரைபோல்மாண்டுவீழப்பெகனைக்கொன்ற,தூயோனைத்துதித்தனர்கள்முனிவரெல்லாஞ்சுருதியுறத்தும்புருநாரதர்கள்பாட,வோயாமல்மலர்மாரிசொரிந்தார்வானோருயர்தேவதுந்துமிசங்கொலிப்பவெய்தி, ஆயோர்கள்நந்தன்மகிழ்வெய்தப்புக்கானசோதையுரோகணியாகத்தணைத்தாரன்றே. (௭)

ஆகமுறவணைத்துருகியுச்சிமோந்தாங்கசோதைநங்கையழுதழுதுவிம்மிச்சொல்வா, டோகையர்காள்வினையேன்றன்பயந்தமைந்தன்றோன்றியநாள்முதலாகத்துடர்ந்தடர்ந்த, வேகமிகுபேய்சகடுகுக்குடங்கால்வீறுகன்றுகொக்காகிவினைசெய்தாரா, லேகனிவன்விதிவழியாலுய்ந்தானின்னமிடர்வருவதறிகிலேனென்றுநைந்தாள். (௮)

இரங்கியிவையுரைத்தநலவசோதைதன்னையெழிலுடையரோகணிதான்றேற்றிச்சொல்வா, டரங்கமுறுசாகரத்தில்வங்கந்தன்னைச்சாயாமற்காற்றுதவித்தந்தாற்போல,வருங்கடியவினைக்கடலைக்கடக்கவுன்றன்மதலைதனக்கருள்புரிவான்றெசக்கிரீவ, னுரங்குடையவாளிதொட்டவொருவனென்றேயுரைத்திடலையகற்றவவளுவந்தாளன்றே. (௯)

பெகாசுரன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௮௪௨.

## ௩௩. வது — அகாசுரன்வதைப்படலம்.

விரிவுறுகயத்துளிடங்கர்மாவலிப்பவெருவித்தன்மெய்தளர்ந்தொதுங்கக்
கரிபொருகரத்தையெடுத்துயர்முதலேகாத்தருளென்றுரைகழறப்
பரிவுடன்கருடன்மிசையினிலெய்திப்பருதியைநிகர்த்தவாளியினால்
வரைநிகர்கராவைவதைத்திபத்திடரையகற்றிணோன்மலரடிதொழுவாம். (௧)

வேறு. மகவினுக்குப்பாதயமுங்கட்டியீய்ந்து வருவினையையொருவியெய்தி
வாழ்தியென்றுபுகலுமன்னைமுகம்நோக்கிமுறுவல்செய்துபோதுவர்கன்றினி
னமேய்க்கப்போனான்வள்ளல், பெகனிறந்தசெயல்கேட்டுச்சிந்தைநொந்துபி
றையெயிற்றன்பிலவாயனகனுநீசன், சிகியெனவெங்கடுஞ்சினத்திணோடிநந்த
ன்சிறுவனையான்வதைப்பனெனச்சேர்ந்தானன்றே. (௨)

வரையாகவுடல்சிரம்வண்குவடதாகவாய்பிறங்கல்முழையாகவாரிதன்
னுள், னெரியாகநயனவிணையெயிறுகுன்றி னிலங்குபிறையிரண்டெனவான
றைகால்போல, விரிவாயமூக்கதனிலுயிர்ப்புவிஞ்சவிளங்கியொருகாவதமாநி
லத்தினீண்ட, வரவாகித்தான்கிடந்தானறனிலாதவறக்கொடியவகனுயவசுர
னம்மா. (௩)

ஆயர்தங்கள்சிறுவரெல்லாம்வியந்துநோக்கிபருவரையின்முழையிதென்
றுகாணலாலே, வாயுவனல்வீசியதாமென்றுபாம்பின்வாயிடைப்புக்கார்கள்க
ன்றின்பந்தமோடு, மாயதெல்லாமுணர்ந்தருளியசோதைமைந்தனதின்வாயி
னருக்களவாகிநீண்டான், றீயுமிழுமவனுடல்பிளந்துசிவன்சிரம்வெடித்
தாண்டகிடலுஞ்சிதறிவீழ்ந்தான். (௪)

படியின்மிசையுததியெனக்குருதியோடப்பகுவாயினெயிறிரண்டும்பரந்
துவீழ, வுடலொடிந்துபிளந்துவிழுமசுரன்சிவ னுயர்ந்துசுடர்ச்சோதியென
வெழுந்துகண்ண, னடிமலரிற்புகுதுதலுங்கண்டவானோர்ந்தரநந்துமிமுழங்
கவாடியேதண், கடிமலர்கள்பொழிந்தனர்கள்வீணையேந்திக்கந்திருவர்நாரத
ரேழ்கானஞ்செய்தார். (௫)

அந்தரத்தின்மிகவயங்குஞ்சோதியாகி யசுரனுயிரடியிணையினெய்தக்க
ண்டே, யிந்திரியமவித்துயர்ந்தமுனிவர்வானோரொழுந்தாடியிணையடியினிறை
ஞ்சிநின்று, செந்திருவினுபகனியயனிவேணிச்சிவனிமண்ணிவிண்ணிசிறந்ததி
நீ, வந்தறையுமனிலனிவானியெம்மைமதியாமல்மயக்குகின்றமாயனியே. (௬)

அண்டமுநீயதினுறையுஞ்சீவனீயேயறிவுநீமருளுநீயருளுநீயே, யெண்டி
சைநீயுறவுநீபகையுநீயேயிரவியுநீயிந்துவுநீயெல்லாம்நீயே, தொண்டனும்நீத
லைவனுந்தருமம்நீயேதுனிகளுறுபாவமுநீசுருதிநீயே, யெண்டவநீபுனக்கிடர்
செய்யவுணனுவியிலங்குபெருஞ்சோதியெனவெழுந்தாய்நீயே. (௭)

என்றுதுதித்தகவசுரன்றனக்குநல்கு மிணையடியையென்றெமக்குமருள்
வாயென்றே, யொன்றியசிந்தையராகிமுனிவரும்பருவர்திறைஞ்சிப்போயபி
ன்னரொப்பிலாதான், கன்றினங்களுடனுயர்சிறுவரோடுங்கடிமலர்சால்பொ
ழிலமர்காளிந்தியாற்றிற், சென்றுயர்ந்தவாலுகங்கள்மலியவோங்குஞ்செழு
ம்புளினத்துறவிருந்தான்சேர்ந்துமன்னோ. (௮)

அகாசுரன்வதைப்படலமுற்றிற்று. ஆ திருவிருத்தம் - ௨௮௰.

மாதவன்பரமன்வாமனன்முகுந்தன்மாயவன்மலர்மகள்மணாளன்
சீதரன்முராரியச்சுதானந்தகோவிந்தன்றெசரதகுமாரன்
யாதவன்மதுசூதனன்பரமேட்டியிருடிகேசனுபேந்திரன்மா
லாதிவிண்டரிகேசவனயன்றந்தையமலனென்பவரடிதொழுவாம். (௧)

வேறு. துணைவர்தமைநோக்கியருள்சுரந்தநெஞ்சன் றூய்மையுறுபாதயம்ய
மருந்தவேண்டு, மிணையில்பொழிலகநிக்கவின்களிருந்தபாரொன்றிடக்கைத
னிலனையார்திரளையேந்தித், தண்ணவிரறேறுங்கைகறியைவைத்துத்தன்னரை
யிற்குழல்செருகிக்கோலக்கொம்பு, பணைசௌடித்தோளிரண்டினிடுக்கியு
ண்டான்பரமனிடைச்சிறுவருமப்படியேயுண்டார். (௨)

கண்ணனவர்தமைநோக்கியென்கைதன்னிற்கறிச்சுவையையறிதிரொன்று
ண்டவர்வாயிட்டே,யுண்மகிழமகத்தவிசுநுகருமையனுவந்துதுதித்திரளையுண்
ணுங்காலைதன்னி, னண்ணியிவைநோக்கியிறைசெய்கைநன்று நன்றெனவே
மொழிந்துகன்றின்குழுவையெல்லாம், விண்ணின்மிசைக்கரந்தனனெண்ட
வர்கட்செல்லாமேலாயாலங்களுநுறவிதாதாமன்றே. (௩)

கன்றினங்களதிதூரமேயக்கண்டுகண்ணபிரான்றதித்திரளைக்கையாலே
ந்திச், சென்றுவனத்தெங்கணுந்தேடிக்காணான்றிரும்பவுமுன்சிறுவர்தமை
யொளித்தான்வேதா, னென்றின்வெயிலால்மேனியெல்லாம்வேர்ப்பவெய்திய
ண்டார்தனையர்தமைமீண்டுங்காணு, னின்றுபின்னர்நான்முகன்வஞ்சகந்தெ
ல்லாம்நினைந்துநெறியறிநெடுமால்முறுவல்செய்தான். (௪)

ஆயர்தங்கடனையர்திரளெண்ணிலாதாரவர்கள்திறம்வடிவுகுணமறையுஞ்
சொற்ச, வேயமுடனவருறுங்குழல்கள்கன்றினிரைமேய்க்குங்கோலாவின்
கொம்புபூண்ட, தூய்மையுறுமணிசலன்கடுகிலின்வண்ணந் துள்ளுமிளங்கன்
றினங்கள்மெய்யிற்றோற்ற, மாயவைகளெல்லவையுந்தானேயாகுனளப்பில
ண்டந்தாவாற்கரிதோவம்மா. (௫)

அந்தமுறுமைந்தர்கள்கன்றினங்களோடேயச்சுதனுமுறத்தந்தாமனையி
னெய்தித், தந்தையுடன்முன்றினத்திலுரையைச்சாற்றித்தாய்க்குமுன்னுள்ம
றைத்தவைகளெடுத்துக்காட்டச், சிந்தைமகிழ்ந்தெடுத்தணைத்தேஉச்சிமோந்
துசிறந்தவன்றுமுதலிரட்டியன்பரானார், நந்தனூடனசோதைபெருந்தவத்தை
ப்போலநன்மகவையவர்கள்பெறினலம்பெறுமரோ. (௬)

ஆலிலையினமர்ந்தருள்வோனயன்கொண்டேகவழகியகன்றினத்துருவா
யமர்ந்துதோன்றிச், சிலமுறுமாவினங்கடந்தங்கன்றுசேர்தலுமேவாலெடுத்
துமோந்துநக்கிக், கோலமுறுமுலைகொடுத்துக்குளிர்ந்தமெய்யாய்க் குழைந்
துமனமுருகியிருகண்ணுஞோக்கிப், பாலிரட்டிசுரந்தளிக்கச்சிறக்கும்பாரிற்ப
சும்புல்லும்பதின்மடங்குதுளிர்க்குமாதோ.

இன்பமுறுமைந்தர்கள்கன்றினங்களாகியெழிற்சோதியொருவருடமெய் துங்காலை, பன்மரங்கள்பழநிறையவுயர்ந்தகோவர்த்தனகிரிமேற்பசுநிரையை யாயர்மேய்க்க, வன்பினுடனசோதைமகன்குழலையூதுமளவின்வந்தேயாவினங்கண்முலையிற்பாலை, யென்புருகியிளங்கன்றுக்களிக்கவாய வொய்திமைந்தர்த மையணைத்தாண்டிருக்கும்வேலை. (௮)

இனியதமர்கன்றினினம்வருடமொன்றுமிறையென் செய்தானென்றே யெய்திநிற்ப, வனசவிறைவான்கரந்தவெண்ணில்கன்றுமைந்தர்களுமானிலத் திற்றிகழக்கண்டா, னனகனசஞ்சலன்விமலனமலனுதி யருபியரிபரமேட்டி யானேன்றன்னைத், தனிகளடரிராசதமாங்குணத் திறலேசோதியெனவறிந் திலனேனென்றுசொல்வான். (௯)

யாவருமில்பாழ்ங்காலத்தண்டம்விட்டேபோகவெள்ளமாகவடவிலைமேற் றேன்றுந், தேவனும்நீயுலகமெல்லாம்வயிற்றுள்வைத்துத்திருநாபிக்கமலத்தி லென்னைப்பெற்ற, வீவில்பரஞ்சோதிநீயறியாதுன்னை வினையேன்றனிகழ்ந்த வெல்லாம்பொறுத்தென்றன்னைக், காவெனவேதுதித்திறைஞ்சியெழுந்துபின் னுங்கைதொழுவோன்மண்ணினிவைகண்டானன்றே. (௧௦)

தூயசுடராழிவளைகதைவாள்சார்ங்கந்துலங்கிய கைநாலிலங்கத் துளவ ஞ்சேர, மீயுயருமவுலிகதிரொளிபோற்றேன்றவிலையில்கவுத்துவமார்பின்வி ளங்கிக்காட்டப், பாயுமிளவெயிலெனப்பொன்னுடைகுழப்பச்சைமுகில்போ விலங்கும்பரமன்றன்போ, லாயரிளஞ்சிறுவர்கன்றினினங்களெல்லாமழகுற நான்முகன்றியங்கிமயங்கினனால். (௧௧)

வெயில்பரவுங்கதிரொளியைகிராமென்றுமின்மினிதான்பார்ப்பதுபோல் வினையேனுன்றன், செயலறியாதிழைத்தபிழைபொறுத்தின்றன் றிருநாபித் னிற்பிறந்தசேயானன்றே, புயலனையமேனியனேமதலைகாலாலுதைத்தாலும் பொறுக்கிலளோவன்னையைய, வயருமெனக்கருடியுன்றன்வடிவமாயருள் புதல்வரோகன்றினமோவார்நீ. (௧௨)

பூதமைந்துபுலன்களைந்துபொறிகளைந்துபுகல்கருமேந்திரியமைந்துசிவ னைக, பேதமுறுமாங்காரமனமான்மூன்று பிரகிருதியுடனுமிருபத்தஞ்சென் றென், றோதியதத்துவங்களுநீவேதாந்தத்திறுபனிடத்தி னுறுபொருணீயுன் னையேத்து, மாதவர்கட்கெளியனுநீமாயைநீயேமாயைதனைமாயையினுல்மயக் குவாய்நீ. (௧௩)

அண்டரண்டமனந்தமெல்லாமுன்றன்மேனியழகியரோமத்தினுனியமர் ந்ததாலென், றெண்டவர்கள்வேதாந்தமறையுமென்றேயியம்பிவொர்தம்மை யுநீமயக்காநிற்பை, யுண்டினக்குப்பிறப் பிறப்பென்றேதுமோர்க்கவுணர்விலிய ருன்வயிற்றினுலகமேழுந், கண்டனன்மாற்கண்டனெனு முனைகேளாரோ தேர்த்துத்தாவுன்மாயைகடவாதாரோ. (௧௪)

குற்றவுமிதனைக்குற்றுற்பயனிலாதகொள்கையைப்போற்சோகனைகைகே
ள்வாவுன்னை, யுற்றிலர்களருந்தவஞ்செய்துழிகாலமியோகிகளாயிருந்துழன்
றுமுயல்வோரொல்லா, மெற்றியசந்தகம்பாரின்வீழ்வபோலவெழில்வானிற்ச
வர்க்கமெய்திப்படியின்வீழ்வர், பெற்றநினைமேய்த்தருள்வாய்நின்பாதத்தை
ப்பேணினரோமீளில்பதம்பெற்றுவாழ்வார். (௧௫)

பூதனைதன்முலைப் பாலுமுயிருங்கூடப்புயல்வண்ணநீநுகரப்புன்மையா
ளு, ளேதமறவாக்கையகில்கமழவென்று மீறிலாப்பரகெதியையடைந்தாளெ
ன்றால், மாதவனேநீயருந்தும்வெண்ணெய்பால்நெய்வரும்வழியில்மண்செடிவா
யூதுமால்வேய், நீதிவிளங்கன்றுதனைமேய்க்குங்கோலாக்கொம்பிவைகள்செய்
ததவமார்செய்வாரோ. (௧௬)

நாதநமநாரணனேநமவேதத்தினற்பொருளேநமவான்றுயர்ந்துநீண்ட
பாதநமபரமாநமவுலகமேழும்பயந்தபரமேட்டிநமவெவர்க்குமேலா, மாதிநம
வனந்தநமவண்டமெல்லாமீன்றருளுமாயநமவுயர்ந்துமேதான்றுஞ், சோதிந
மவென்றிறைஞ்சித்தொழுதானுவின் மகளுடனற்சுருதியெல்லாஞ்சொரியுஞ்
சொல்லான். (௧௭)

என்றுதுதித்தயனிறைஞ்சிவெருவிநிற்பவிறைவடிவெல்லாமொருவியே
கனுகிக், கன்றினங்கட்டேடிமுன்னுட்செல்லுங்காட்சிக் கவினுறவேதத்திர
ளைக்கையினேந்திச், சென்றவனத்தோடிடலுமகிழ்ந்துபாரிற் சேர்ந்துவலம்
வந்துதிருவடியின்மீதி, லொன்றியபணிறைஞ்சினன்கன்றினங்காண்டருந்தவ
மிளஞ்சிறுவரொல்லாமுவந்துசூழ. (௧௮)

வந்தெதிர்ந்ததுணைவர்தமைபணியிரேருடுமார்புறத் தானணைத்தருளிமல
ரோன்தன்னைச், செந்தளிர்க்கைமலராலேலெனவேகாட்டித்திருநயனத்தருள்
சுரந்துசிறந்துநோக்கச், சிந்தைமகிழ்ந்தெழுந்தாடியிருநாலாகித்திகழ்கண்க
ளாநந்தவாரிசோர, வுய்ந்தனன்யானென்னிறைஞ்சியெழுந்தானன்பினுடல்
புளகமாகவயனும்பர்புக்கான். (௧௯)

அயன்விடைகொண்டேகியபினசோலைமைந்த னவ்வனத்திற்றிரிந்தெ
ங்குந்தேடிக்கண்டே, வெயிலொளியால்மேனியெல்லாம்வெயர்ப்பக்கன்றினி
னங்களொடுமீளவருவானேபோலக், கயலுகளும்யமுனைநதிக்கரையில்வந்து
கரத்தேர்ந்துந்ததித்திரளையவர்க்குக்காட்டித், தயிர்செறியுமன்னமிவைநுகர்வீ
ரென்னவருந்தினமென்றார்களிறைதானுண்டானால். (௨௦)

வனசமுனிவான்மிசையின் வருடமொன்றுமறைத் ததெல்லாமறந்தவர்
களவள்ளலோடு, மினியவிருந்தாவனத்திலிடையிற்கன்றினங்களொடுமெ
ய்தியிலிற்புகுந்தாரின்று, துனிகளுறுமசுரனரவாகிமேகந்தோய்வரைபோற்கி
டந்தான்வாய்புகுந்தோந்தூய, வனகனவனுடல்பிளப்பவுய்ந்தோமென்றேய
ரிந்தவெல்லாநந்தனுக்கன்றவர்கள்சொன்னார். (௨௧)

நந்தனுடனசோதையுரோகணியாநங்கை நயனங்கணீர்சொரியமெலிந்
துவாடி, மைந்தனைத்தாமார்பினுறத்தழுவிமோந்துமஞ்சனநீராட்டியமிர்தூட்
டிவண்மைக், கந்தமுறுஞ்சந்தனமெய்க்கணிந்துநாளக் கமழுநறுங்கடிமலர்
சேர்தொடையல்சூட்டி, யந்தவனத்தெய்தாமல்யமுனையாற்றினடைதியென
த்தமர்ோடுமணுகுங்காலே. (௨௨)

வற்சாபகாரப்படலமுற்றிற்று.
ஆ திருவிருத்தம் - ௨௪௭௨.

## ௩௫. வது—தேனுகன்வதைப்படலம்.

நிலையிலையினமைதனமுயர்சுவர்க்கமென்பதுநிச்சயமதனாற்
சலமுறுகுயிழியெனவெழுகுரம்பைசாய்ந்துயிரலையுமுன்றெண்டீர்
மலைகளினமுவச்சலதியையடைந்துமதிளிலங்காபுரிமன்னன்
றலைகளைத்தடிந்தோன்புகழினைத்துதிப்பஞ்சமனிலாவீடுபெற்றுய்ய. (௧)

பெகனகன்கன்றுமகரவிவனைமாயன்பெருவனத்தில்வதைத்ததெல்லாங்
கஞ்சன்கேட்டு, மிகமுனிந்துதேனுகனையழைத்துநீபோய்விரைவின்விருந்தா
வனத்திலெய்திவெய்ய, ககபதிகட்செவியதனைத்தெறுவபோலக்கண்ணனைநீ
கணத்திடையிற்றெறுவாயென்று, சிகியெனவெயிருநயனஞ்சிவப்பச்சொல்ல
த்தேனுகனுந்தாலவனஞ்சேரும்வேலை. (௨)

வேறு. ஆயர்மைந்தர்களாவினங்கன்றுக, ளேபால்வண்ணனோடுந்தாலங்களே
நேயமோடெய்துமாதர்நிறைந்திட, மாயனெய்தினன்மன்மதனுமென. (௩)

வேயிசைத்தனன்வீதிகடந்துபோய், மாயனெய்தினன்வண்டிசைபாடவே
தூயதண்மலர்துன்னுமுய்யானத்திற், பாயும்வாளைபரந்தநதியின்வாய். (௪)

தாங்குவாரியின்றடோகுந்தாமரை, பூங்குமேவுநல்லோதிமமுற்றிடப்
பாங்கிருவலர்பாடலிதாமென, நீங்கிலாவளிநீதிநிறைத்தன. (௫)

அயநிறைந்தலைவீசிக்கொழித்திடக், கயல்கள்வாளைகலந்தெங்குந்துள்ளின
வியல்பிருலலர்தாமரையின்கணின, றுயிறுறந்தெழுந்தூவியன்னக்குழாம்.
ஓய்விலாதுபரந்தெங்குமோடியே, பாயுமந்திகளாற்பன்மரத்திடைக்
காயுநன்மலர்க்கொம்புகடாழ்வன, மாயன்றன்னைவணங்குவபோலவே (௭)

தொண்டைவாய்மடவார்துலங்குங்கண்போற், கெண்டையோடக்கெ
ளிறுகிளர்ந்தெழப், புண்டரீகங்கள்பொலிந்தாடிய, வண்டுபாடுமதங்கியர்
மானவே. (௮)

மேகமெங்கணுமேவியசோலையிற், கோகுலங்கள்மகிழ்ந்தெங்குங்கூவிய
நாகமாமலர்வாசங்கள்நாறிடச், கேகயங்கள்கிளர்ந்துநடிக்குமால். (௯)

விழையுமாதவஞ்செய்கிலமெல்லியல், குழையுந்தாமரைக்கோலவடியுற [மால்.
மழைபொருந்திருமேனியின்வண்மையை, யுழையினங்கண்டுவந்தெதிர்நோக்கு

தூயநன்னதிவண்மையுஞ்சோலையின், வியினங்கள்விளங்கியதோற்றமு
ந்தியர்மைந்தரனைவர்க்குமாதியா, மாயவன்மொழிந்தேமகிழ்வேலையின்.

மாயவன்மறலியீயுமதலைதன்னுடனுமெய்தித்
தூயசாந்தீபினிக்கச்சுதன்றனைக்காட்டலோடு
மாயுமாமறைவல்லோனுமகமகிழ்ந்தாசிகூறி
நேயமொடமிழ்தளித்துநின்னகரிடத்தேகென்றான். (௭)

அன்னதுசொன்னசாந்தீபினியடியிறைஞ்சியையன்
றன்னிகரிலாதமுன்னோன்றன்னுடன்மதுரையெய்தி
மன்னவன்வசுதேவன்றன்மலரடிதொழுதபின்ன
ரன்னைதன்னடிவணங்கவவளணைத்துச்சிமோந்தாள். (௮)

ஆயர்தம்பதியைவிட்டீண்டலாயுதனன்னையெய்த
மாயவன்றன்னையீன்றாளுடன்வசுதேவனுக்குத்
தூயதேவியர்களானோர்பதினெண்மர்துலங்கிச்சூழச்
சேயிருவோர்களோடுஞ்சிறந்தினிதிருந்தானம்மா. (௯)

வீயவெவ்வினைகணீதிவிளங்கிடவுதையமான
மாயவன்றன்னைநோக்கிமகிழுந்தேவகியாமங்கை
தூயமேனகையுநாணுஞ்சுபத்திரைதன்னையீன்று
மாயிருஞாலந்தன்னில்வயங்கியேயமருநாளின். (௧௦)

குருதட்சணைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௪௫௫

## ௫௧. வது—உத்தவப்படலம்.

வேலையைவரையாற்கட்டிவிலங்கலோடிலங்கைமேவிச்
சூலியைக்கயிலையோடுமெடுத்ததுன்மதியோன்சென்னி
ஞாலமேற்றுணிந்துவீழநல்லபல்லத்தையேவி
நீலமால்வரைபோல்நின்றானடியிணைநெஞ்சுள்வைப்பாம். (௧)

மாதவன்மதுரைதன்னின்வைகியிந்தினத்தோர்நாளின்
நீதியுத்தவனைநோக்கிச்செப்புவானெனக்கன்பாய
தாதையாநந்தனுமொன்றாயனுளசோதைநேய
மாதராமொன்னையோவும்வருத்தம்நீயகற்றவேண்டும். (௨)

என்னுயிர்த்துணைவநீயேயிக்கணமேகியாயர்
தன்னகரதனிற்பின்யான்வருகின்றதன்மைசாற்றி
யன்னையைப்பிதாவைத்தேற்றியாயர்கள்மடவாராய
மின்னனாரிடாநீக்கிமீள்தியாலென்றுரைத்தான். (௩)

இந்நிரைகொழுநன்கூறவிரதமீதுத்தவன்போய்ச்
சிந்தையின்மகிழ்ச்சியோடுமாயர்தம்பதியைச்சேர
நந்தன்வந்தணைத்தேயின்சொல்நவின்றன்னமருந்துவித்துச்
சந்துதண்மலரளித்துப்பின்னிவைசாற்றலுற்றான். (௪)

வேறு.மாயவன் முனிநிதினிருந்தானோவீண்டுவருவனோவடமதுரைமருவினு னோ, தாயெனவேயசோதைதனைநினைப்பனோதன்றந்தையென்றேயென் மேலிற்றயாவைப்பானோ,ஆயர்தங்கள்சிறுவரையுமறந்தானோதானன்பினு றுமரிவையரையெண்ணிலானோ,தூயபசுத்திரளுடனேதோன்றக்காணேன் றொல்வினையேனென்செய்கேன்சொல்வாயென்றான். (௫)

தீயாலுமழையாலும்விடையினாலுஞ்சிறியெழுமரவாலும்பரியினாலு,மா யாமலெனைக்காத்தான்வருகிலானோ வனத்தினுறுகோக்களெல்லாமவனை யுன்னி, மேயாதுவெருண்டோடும்வரையிற்கானில்வெறுநிலத்தினதிமண லின்விளங்கியெங்கும், காயாம்பூவண்ணனடிகாணுந் தோறுங்கனவினுறு மெழுகாவேனென்றுசொல்வான். (௬)

வேயோசைகேளாதசெவியினாலும்விளம்பியசொல்லழல்நாராசம்போற் றைக்கும், காயாம்பூமேனியனைநோக்காக்கண்கள்கமரினுறுகுழியெனவே காணுதோன்றும், பேயாகித்திரிகின்றேனென்றுநைந்துபெருந்தாரையாய் நயனம்புனல்கள்வீழ, வாயாலொன்றுரைக்கிலனுள்வெதும்பிவிம்மிவாய்வி ட்டங்கரற்றியவனிரங்குங்காலை. (௭)

அன்னநடையாகிய மின்னசோதையெய்தி யாயர்குலநாயகனைநோ க்கினால,மன்னவனும்வடமதுரையெய்திவாழும்வஞ்சனைக்கஞ்சனைவதை த்துமகிழ்ந்துபின்ன, ரன்னையெழிற்றேவகியாய்த்தந்தைதானு மருள்செ றியும்வசுதேவனுகிப்போனாற், கென்னவுன்னியிரங்குகின்றாயரசர்மைந்த னிடையர்சுதனுகுவனோவென்றுசொல்வாள். (௮)

உத்தவனேகேட்டியென்றன்மைந்தனென்னையுவந்துமுலைதாவென் றுகடையுந்தாழி, மத்தினையேபிடித்துநகைசெய்தவாயின்வசனமுகங்கண் காதுமார்புகானே, னித்திலத்தாவட மசையச்சிலம்புமார்ப்பநிருத்தமிடு தாள்காணேன்வெண்ணெயேந்துங், கைத்தலத்தினெழில்காணேன்கறை யினார்த்தகயிற்றுடனுந்தவழ்ந்துசெலுங்கவானைக்காணேன். (௯

கன்றினங்கடனைமேய்க்குங்கோலுமீதேகறையினின்யான்கட்டிவை த்தகயிறுமீதே,சென்றுதாழியையுடைத்தமத்துமீதேசிகைமிசையின்வயங் குமயிற்பீலியீதே, தன்றுணைவர்மருங்குறப்பார்மரங்களெல்லாந்தழைத்தி டவேதானூதுவேயுமீதே, யென்றனையுமறந்துவடமதுரைக்கேகுமென் மகன்றான்வருகிலன்யானென்செய்கேனே. (௧0

இனையனவெலாமொழிந்துமைந்தன்மேனியெழில்நினைந்து விளையாடு ந்திறத்தையுன்னித்,தனமுறுபால்பெருந்தாரையாகியோடத்தடமலர்க்கண் ணீர்முலையிற்றதும்பியோட, மனமுருகியுளம்வெதும்பியுருகுகின்றமங்கைத் னைநந்தனெனுமறிஞனோக்கி, யனநடையாயம்மதலைக்கழுகின்றாய்நீயறிவ் வியோதுயரொழிதியென்றான்றே. (௧௧

நங்கையழக்கொழுந னெய்தித்தபெப்பின்னர் நந்தனிரங்கும்போழ் திலசோதையான, மங்கைதுயரொருவுகெனமாறிமாறிமாயவனுமிறையை யுன்னுமவனைநோக்கிச், செங்கைகுவித்தேதொழுதுமறைக்கும்யோகீசுர ர்தமக்குமெட்டாததேவதேவ,விங்கிவர்க்குச்சுதனுமியன்னைமீய்ந்தாயென் றுரைத்தேயுத்தவன்முனியம்பலுற்முன். (௧௨)

அருவரையின்மிசையினெய்தியனந்தகால மங்கலமுணவாகவளப்பில் லாயோகம், பெருகுதவத்தினர்கள்பெறுமின்பந்தன்னைப் பெற்றவர்நீ ரும்பெருமைபேசுவார்கள், நிரையமகலுயர்சுதியேயடைவாரீதுநிச்சயமா மென்றுரைத்தானுத்தவன்று, னிருதயத்திலிருவர்களுமாயன்சீரையெண் ணியெண்ணியிராமுழுதும்விழித்தாரன்றே. (௧௩)

மறுவில்பரமேட்டிபுகழ்பாடியாடிமனம் வேறுவைக்கிலராமன்பர்த ங்கள், பிறவியெனுமிருளொருவுஞ்சோதியெய்தும்பெற்றி யெனக்கங்குல நக்கதிரோன்ருேன்ற, நிறைததியைநிலமத்தாற்கடைவோரெல்லாம்நெடு மாயன்கீர்த்தியினைக்கீதம்போல, வறைபவர்கள்குரலோசைசெவியினுரும மிழ்தெனவேகேட்டனனுத்தவன்முனம்மா. (௧௪)

இரவியெழவாவணத்தினெய்துமாதரிரதமிசைவந்தனர்யார் முன்ன ரெய்தி,யரசரிலக்குரூரனென்றேபெயருமாகி யச்சுதனைப்பிறிவித்துக்குரூர ஞ்செய்த, விரகனிவன்மீளவந்ததென்கொலென் றுவிளம்பினர்க்கேயறிந்த வருத்தவன்வந்தானென், றுரைசெய்யவரிவையர்களெல்லாங் கூடியுத்த வன் முடனில்வணங்கியுரைப்பதானர். (௧௫)

அரியுன்னைவரவிடுத்தகருமமேதிங்கன்னைபிதாவின்பாலினேவினுனோ, வெரியுருகுமிழுதெனவேயுருகுமெம்பெண்ணினைநினைக்கிலானமேதுமறிவா ம்யாங்கள், விரிமலரின்மதுவில்லாதொருவும்வண்டுவெறுமையினைவெறுத் துவிடும்வேசிதானுந், திரள்கனிகளுதிர்மரத்திற்பறவைதானும்போலவெம் மைச்சீதரனும்நினையானென்ருர். (௧௬)

பூதனையினுயிர்கவர்ந்தமாயன்றன்னைப்பொருந்தியவெம்மாவிகொள்ள வருகிலானே, தாதையுடன்னனைதனைமறந்துவேந்தர் தம்பதியிற்சார்ந்தவ ன்முனரசர்பெற்ற, மாதர்தமைமணஞ்செய்வதல்லாலெம்மைமதித்திடுவ னோவிருந்தாவனத்திலன்று, சூதுநினைந்தும்மைவிட்டுப்பிறியேனென் றுகு னுறவுசெய்தவன்றன்றூதாசொல்வாய். (௧௭)

கைகொடுகைகளைக்கோத்துக்குரவையாகக் களித்தாடிப்பாடித்தன்க டைக்கண்ணுலே, மையல்விளைத்தும்மையலால்மாதராரைமனத்தாலுமுள் கிலன்யானென்றுதானே, மெய்யுரைப்பார்போலிதங்கள்மொழிந்துநீண் டவிளங்குவிருந்தாவனத்தினெம்மைவிட்டுப், பொய்யுரைத்துப்போனவன் முனுகந்தன்னிற்பூமகள்பெட்புறவென்கொல்பொருந்தினுளே. (௧௮)

என்றரிதன்புகழ்பாடிக்களிப்பார் பின்னரிரங்கிவேர்நகைத்திடுவரிறைவன்மேய்த்த, கன்றிதுவாமெனவிணைப்பரிழுதுபால்நெய் கடத்தினுளவிவைதிருடுங்கள்வன்றன்னை, யன்றுமுதலின்றளவிப்பதியிற்கண்டோமென் பரடர்மழைகாத்தேயங்கையேந்துங், குன்றினைத்தான்றொழுவர்கருமேகங்காணிற்குடமாடுகூத்தனெனவெழுவரம்மா. (௧௯)

உத்தவனைநோக்கியரிமயலினாலேயுருவறியாதயர்ந்துலகமெல்லாமுண்ட, வத்தன்விடுதூதுவனுமளியேகேளாயாரமதிவசந்தமெல்லாமனலாய்வீசுஞ், சித்தசன்வந்தெய்கின்றானவன்றன்கையிற்சிலையினாறுநாணன்றோ நீயுமந்தோ, நித்தன்விருந்தாவனத்திலாவோடெம்மைநினைப்பதுண்டோ பொய்யின்றிநிகழ்த்துவாயே. (௨0)

அளிகேளாயரியெம்மேலாசையில்லையஃதறிந்தோமவனன்பைவிடுதுமென்றால், வினைவானமயல்கடல்போல்வளைந்துசூழமீண்டுமவனுருவையுள்கிமெலிவதாகி. யுளம்வேகக்கலைசோரநாணமேகவூதுகுழலிசைகேளாவுடனைகின்ற,வெளியேன்றம்முச்சியிற்றன்பாதம்வையானிவன்புருடோத்தமனோதெங்ஙனென்றார். (௨௧)

நீதேதுமில்லாததெரிவைமார்கள்செயலினைக்கண்டுத்தவன்றான்றெரிந்துநோக்கிப், பூதானங்கோதானங்கனகதானம்புரிந்துபுவியின்வேள்வியைந்துஞ்செய்து, மாதானம்வழங்கிபருந்தவங்கள்செய்தமாதவத்தோர்பெறுதநலநீயிர்பெற்றீர், தூதாகியெனைவிடுத்தவிறையும்மேலிற்சுரக்குமருடேயோனீண்டடைவனென்றான். (௨௨)

நந்தனுடனசோதைசுதனென்றுநையநாரியர்களுயகனென்றேமோகிப்பச், சிந்தைமகிழ்ந்துத்தவன்றானாலுதிங்கள்சிறந்தாயர்பதிதன்னிலிருந்தபின்ன, ரிந்திரைதன்கொழுநனுடன்றந்தையன்னையிலங்கியவாய்ச்சியரிவரையிறைஞ்சியேத்தி, யந்தமுறுமிரதமிசையேறிநின்றண்டன்பினுடனிவையிவையேயறைகின்றானல். (௨௩)

அன்றுலகமளந்தான்றனடிகடோயுமவனிநமசெடிகணமவவன்றான்மேய்த்த, கன்றுநமவாவுநமமயல்கொள்மாதர்கழலிணையிற்றூள்கள்நமகரத்தினேந்துங், குன்றுநமவெழில்மடவார் கலைகொண்டேறுங்குருந்துநமவென்றென்றேதொழுதுகூறி, மன்றல்மலர்பொழில்சூழமதுரையெய்திமாய னுடனிவையெல்லாமொழிந்தான்மாதோ. (௨௪)

சீதரன்றான்கேட்டருளிநகைத்துவந்துசீர்மையுறுமுத்தவனோடிரவிற்சென்று, மாதவஞ்செய்கூனிமனைவாயினெய்தவணங்கியவள்மாழையுறுவிதானந்தோன்றச், சோதியுறுதீபநிறைவயங்கத்தீபதூபமெழுமணிமாலைதுலங்கப்போற்றித், தாதவிழுமாலைநிறைமண்டபத்திற்றமரைத்தாள்பன்னீரால்விளக்கினாளால். (௨௫)

குங்குமங்கத்தூரியுடன்பனிநீர்சேர்த்துக் குழைத்துநிறைசந்தனமெய்குளிரக்கொட்டிச்,சிங்கலில்வெண்பட்டாடைபுனைந்துகாஞ்சிதிகழ்ந்திடவேதனத்தினணிகலன்கள்யின்னத், தங்கமுறுசெங்கைதனிற்கண்ணனேதோனிருந்துதண்மலரைம்பான்மீச்சூட்டி, யங்கையுறவணைத்திரதிசமழ்க்கமேவியனுராகக்கலவிசெய்தாளரம்பையன்னாள். (௨௬)

உத்தவப்படலமுற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௩௪௮௧.

---

## ௬0. வது—பாண்டவப்படலம்.

திருமகளும்புவிமகளுஞ்நீளமின்னுந்தேவியராச் சிறந்திடமாமதனன்றன்னே, டருள்செறியுங்கமலபிரான்சுதனுமாகவண்டமெல்லாந்தன்னகட்டுளடக்குமையன்,கரமுடிதாள்விழிபெயராயிரமேயாகக்ககபதியின்வாகனமாய்ப்படையைந்தேந்தி, யுரகமுயர்மெல்லணையிலிலங்குகின்றவொருமுதலாமவன்புகழையுரைத்துய்வோம்யாம். (௧)

மாயவனுங்கூனிதனை மகிழ்ந்தணைத்துமனையிருத்தியென்றவளையொருவிக்கேழற், றூயவனுமுத்தவனேடைக்குரூரன்றுலங்குமிடத்தேகுதலுமவன்வந்தெய்தி, நேயமுடன்வணங்கியடிவிளக்கியந்தநீர்சிரத்திற்றெளித்துமணியவிர்களான்று, பாயுமெழில்மண்டபத்திலமர்த்தியென்றன்பாவமறவுயர்ந்தனன்யான்பரமவென்றான். (௨)

காந்தினிதன்சுதன்களித்துக்கழறுவானைக் கண்ணபிரான்றழுவியுடனிருத்திப்பாரின், வேந்தன்வசுதேவன்றன்கோத்திரத்துள்மேவியநீயென்றனக்குத்தந்தையன்றோ, பாந்தளுயர்த்தோனகரிற்குந்திதேவிபாண்டவர்களோடெய்தியிருந்ததன்மை, யாய்ந்தவர்களிடரொருவச்சேறியென்றேயரிமனையினெய்தவவன்விரைவிற்சென்றான். (௩)

வேறு. இரதமீதேறித்தூயவக்குரூரன்றானேகிச்
சரதநான்மறையோர்சேருமத்திமானகரிற்சார்ந்தே
விரதமாத்துரோணன்றன்னைவிதுரன்வீடுமனைக்கண்டு
சுருதிநூல்வழாதகுந்திசுதர்கள்பாற்சென்றானன்றே. (௪)

தருமனேடைவரெய்தித்தாடனிவிறைஞ்சலோடு
மருகனைத்தழுவிக்குந்திவணங்கிடமலர்க்கைதன்னு
விருகணீர்சோரவேதானணைத்தபின்னெழிலாலோங்குந்
தெரிமணிமண்டபத்திற்சேர்ந்தினிதுரைக்கலுற்றான். (௫)

குந்தியுன்முன்னேன்றன்னைக்கொடியனுங்கஞ்சன்செய்த
வெந்துயரங்கள்வீயவிரலுடைமாயன்றான்றிச்
சிந்தையின்மகிழ்ச்சியெய்தத்தீயவன்றன்னைச்செற்றே
யந்தமாமதுரைதன்னிலமர்ந்தனனென்றானன்றே. (௬)

ஆயவைவயெல்லாங்கேட்டாண்டமுதுபின்மகிழ்ந்துகுந்தி
பாயும்வெவ்வுழுவைசேரும்பழுவத்திற்பாண்டுவேந்தன்
மாயவேகளைகனில்லாவல்வினையேனும்வாடிச்
சேயிவனாவரோமெிந்தமாநகரிற்சேர்ந்தேன். (எ)

பாதகனனபாந்தளுயர்பவன்பயத்தினுள்ளே
யேதமார்கழுவைநாட்டியெழில்கொள்வீமன்கழுத்தின்
மீதுறுமரவைக்கட்டிவியாளலோகத்திற்றள்ளி
யோதனத்தருநஞ்சிட்டானுய்ந்தனர்விதியாலென்றாள். (அ)

கொடியகானகத்திற்செந்நாய்க்கூட்டத்திற்குரங்கம்போல
விடவரவுயர்த்தோன்செய்யும்வினையினுளிருந்தோம்வெய்ய
கடியனுங்கஞ்சன்றன்னைக்களைந்தவன்களைகணுகி
யிடரினையகற்றிலுய்வோமென்றுதானிரங்கினாளால். (கூ)

அவ்வுரையெல்லாங்கேட்டவக்குரூரன்றானுந்து
நவ்விபோல்விழியினாளோநாரணனருளினாற்றால்
வெவ்வினைசெய்வோர்மாண்டுவீழ்குவர்நிரையந்தன்னிற்
கவ்வைநீயொழிதியென்றுபின்னருங்கழறலுற்றான். (கo)

மாயவன்மொழிந்தகேட்டிவஞ்சனைநும்மைச்செய்யும்
தீயவர்சிறிதுநாளின்மடிகுவர்திண்ணஞ்சிந்தை
நோயினையொருவுகென்றுநுவல்கின்றனெங்காய்நீயுன்
சேயினரோடுமாலைமறக்கலைதினமுமென்றான். (கக)

இந்தநல்லுறுதிசொல்லியெங்கைநீயிருத்தியென்று.
வந்தனைமரசன்பாலினக்குரூரன்றானெய்தச்
சிந்தையின்மகிழ்ச்சியோடுமாதனஞ்சிறப்பவீய்ந்தே
யிந்திவைகொழுநனன்கோடிருந்தனனேவாண்டென்றான். (கஉ)

என்றலுமக்குரூரனியல்பிலாக்கஞ்சன்றன்னைக்
கொன்றவன்தாய்தந்தைக்குக்கோலமாமகுடஞ்சூட்டி
என்றுதையத்தைப்போன்றெம்மிடரெலாமொருவமாயன்
வென்றிசெய்திருந்தானென்றுபின்னரும்விளம்பலுற்றான் (கங)

இருநிலமதனிற்செல்வமிளமையிவ்வுடனில்லாது
தருமபாவங்களிந்தத்தரணியுள்ளளவுநிற்கு
மரசநீயஃதுணர்ந்துன்னனுசன்றன்புதல்வர்தம்மை
வரிசையால்வளர்த்தியென்னமன்னவனுரைப்பதானான். (கச)

அறனெலாமறிந்துசொன்னயக்குரூராவதெல்லா
மறையுறுவாய்மையாமுன்மருகரென்மைந்தரன்றே
குறைறவிலாவரசநீதான்கூறவேண்டுவதோவென்றங்
கறையுமந்தனைத்தானீங்கியைவனாகிறுத்திப்போனான். (கரு)

பாண்டவப்படலம்.

பரிபுரவைய மீதிற்பழனஞ்சூழ்மதுரையெய்தி
யரியினைவணங்கிக்குந்தியருள்செறிபுதல்வரோடு
மூரகமீதுயர்த்தோன்செய்புமுயருமஞ்சனையினுய்ந்தே
தெரிசிலாநயனனூரிலிருந்தனர்செல்வவென்றுன்.

மைத்துனரோடுங்குந்திவருந்துறுவசனமெல்லாம்
நத்துறுசெங்கையையனகையுடன்கேட்டுத்தீய்மை
யித்தலத்தியற்றினர்களிருநரகடைவரென்று
வித்தகன்மதுராதன்னில்விளங்கியேயமரும்நாளில்.

பாண்டவப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௪௯௮.

## ௯௧. வது—சராசந்தனபசயப்படலம்.

இம்பரின்வரைபோலோங்கியெதிர்ந்திடும்பிரவிசேயை
யும்பர்கள்வெருவத்தோளினெருக்கித்தன்னூரின்மேவுங்
கும்பகன்னன்றன்கைகால்குறைத்தவன்சிரத்தைநீரு
மம்பரத்திடையினிட்டவழகனைவணக்கஞ்செய்வாம். (௧)

சித்தசன்றன்னைத்தந்தோன்கஞ்சனைச்செற்றசெய்கை
அத்தியும்பிராத்திதானுமத்தனையணுகிவீழ்ந்து
கைத்தல்முதரத்தெற்றிக்கண்ணினீர்சோரச்சொன்ன
ரத்திறங்கேட்டமன்னனழலெனக்கொதித்தானன்றே. (௨)

மருகனைக்கொன்றமாயன்றன்னையான்வதைப்பனென்னுக்
கருகியசினத்தனுகிக்கரிபரியிரதமெல்லாந்
தருகுதிரென்றுவெய்யசராசந்தன்கூறலோடும்
பெருகியவாரிபோலப்பெயர்ந்தனவனீகவீட்டம். (௩)

சங்குகள்பணவம்பேரிசச்சரியிடக்கைதக்கை
மங்குலினிடிகளஞ்சமுழங்கிடவயவரெல்லாம்
பொங்கினரிறுதிகாலத்தனையவரும்பொன்றத்தோன்று
மங்கைபங்காளனென்னமகதனுமெழுந்தான்மாதோ. (௪)

கரியினம்வரைகளோலக்கண்டைகள்கலிப்பச்செல்லப்
பரியினம்பவனமேயப்பார்மிசைப்பரந்துதாவ
விருநிலத்தக்குரோணியிருபத்துமூன்றுசூழத்
தெரிமணியிரதமீதிற்சென்றனன்மகதர்கோமான். (௫)

அதிரதர்சூழப்பேரியறைந்திடுமமலையெய்த
வெதிர்கிகர்தோளின்மாதர்வெண்மையார்கவரிவீசக்
கதிரவன்றுேற்றநாணக்கனகமாமவுலிமின்ன
மதுரையைவளைந்துசூழ்ந்தான்மகதராசன்தான்மன்னே. (௬)

ஆதவர்போசரெல்லாமாலங்காணிமையோரோலப்
பீதிகொண்டிரியும்வேலைப்பிறங்கலால்வருடங்காக்கு
மாதவன்முறுவல்செய்துமதிவண்ணனோடுந்தேரின்
மீதுசென்றடர்ந்துவிஞ்சுமீளிபோற்றாக்கினானால். (எ)

நீதியில்மகதராசனெடுவரைபோலநின்று
சீதரன்றன்னைநோக்கிச்சிறியனுமிவனோரல்லன்
பூதலத்தென்னோடேநீபொருதியோவிராமவென்ன
மாதவனகைத்துக்கஞ்சன்மாமனுக்கிவைசொன்னானால். (அ)

உன்னுடைமருகன்கஞ்சனுயிர்கவர்ந்தோனும்யானே
யென்னுடன்பொருவாய்நீயென்றியம்பியேயிலங்குகின்ற
தன்னுடைக்கரத்துச்சார்ங்கம்வளைத்துயர்சரங்கள்கோடி
மின்னுடைமேகம்போலப்பொழிந்தனன்வீரர்வீரன். (கூ)

அன்னதுகண்டுநெஞ்சமழன்றுயர்மகதன்சேனை
துன்னினர்கணையின்மாரிசொரிந்தனர்திசைகடோறும்
பொன்னெடுவரைபோற்றேன்றும்புகரிபம்பரித்தேர்தூண்டி
மின்னகுவேலும்வாளும்விட்டெறிந்தார்த்தாரன்றே. (க0)

இடிகளும்வெருவப்பேரிமுழங்கிடவிலக்குசங்கந்
துடியொடுகெறங்கச்சின்னங்காளந்தலங்கியார்ப்பக்
கொடிகுடைகவரியோங்கக்கொடியவரொதிர்ந்துவானம்
வெடிபடச்சிலைநாணோசையுறச்சரம்விடுத்தார்மாதோ. (கக)

சக்கரமுசண்டிகுந்தந்தண்டியர்பிண்டிபால
முக்கிரமிக்கசூலங்கற்பணமுலக்கையொள்வாள்
கொக்கரித்தெறிந்துவெய்யகொடுங்கணைபொழிந்துசூழ்ந்தார்
நக்கனுன்முகன்வலாரிநாட்டங்கள்புதைத்தாரன்றே. (கஉ)

வேறு. முரசறைந்தனதிமிலைவளைமுழங்கினமுடுகி
யரசர்வெஞ்சினமடையவளவில்வெங்கணைபொழிய
விரதமுந்தியவரிதன்னெழில்கொள்வெஞ்சிலைவளைய
வுரகனஞ்சிடுபகழியுலகமெங்கணும்விசிற. (கங)

வீரர்தஞ்சிரமுருளவீறுவெங்கரியிடைய
மூரிவெஞ்சிலைமுரியமுளுவெம்பரிமுடுகு
தேரினங்களுமழியவீடுசெம்புனறிரைகொள்
வாரிமண்டிடவெழில்கொள்மாயன்வெங்கணைமுடுக. (கச)

காமிழந்தனர்சிலர்கள்கதையிழந்தனர்பலர்கள்
குரமிழந்தனகுதிரைகொடியிழந்தனரிரதர்
சிரமிழந்தனர்வயவர்சிலையிழந்தனரரச
குரமிழந்திடுகரிகளுயிரிழந்தனகடிதின். (கரு)

கொடிதுணிந்தனகுடைகள்கடிதொடிந்தனகுதிரை
யடிதுணிந்தனவுடலமறவிழுந்தனகொடிய
கடமிடைந்திடுகரிகள்கதமிழந்தனநெடிய
படிபரந்தனகுருதிபரவையெங்கணுநிறைய (கசு)

வயவருந்தினவிரதமழியவன்சினமுடுகு
கயமடிந்திடவுதிரமுவரியின்கடிதடைய
உயரும்வெண்கொடிதுணியவுருளும்வண்டில்களொடிய
வயமுருண்டிடவெருவியரசரெங்கணுமிரிய. (கஎ)

இரிவைகண்டடர்மகதனிரதமூர்ந்தினன்முடுகி
யரிமறைந்திடநெடியவழலும்வெங்கணைபொழிய
வரிநெடுஞ்சிலைவளையமழைவணன்பொழிபகழி
யரவைநுங்கியகலுழனெனவரிந்தனவதனை. (கஅ)

நெடியவன்கணைசொரியநெறியில்வஞ்சகனெடிய
கொடிமறிந்தனவெழில்கொள்குடையொடிந்தனவிவுளி
யடிதுணிந்தன்வலவனுடறுணிந்தனநெடியின்
மடியவெஞ்சிலைமுறியவெருவிநொந்தனன்மகதன். (க௯)

மகதனஞ்சிடவெதிரும்வரிநெடுஞ்சிலையயவர்
சிகிதருங்கணர்பரியின்வெரிநின்விஞ்சினர்சிலவர்
நகைதரும்புகைமிடையநகமெனும்பரிகரிகள்
செகதலங்களுமதிரவடரவந்தனர்சிலர்கள். (உ0)

எழிலியஞ்சிடமுரசமிலகுதுந்துபியறைய
மழுமுசுண்டியொடயில்கள்வளையும்வெங்கதையெறிவ
ருழுவையென்றிடவடைவருலகமெங்கணுமறைய
மழையெனும்படிகணைகள்பொழிவர்வந்துறமறவர். (உக)

மணிகணின்கணினனமும்மதமுறுங்கரிமிசையி
னணிகலன்கதிரொளிரவயடரவந்தனர்சிலவ
ரிணையில்வெம்பரிகடவியிருபிலந்துகளுறமொய்
கணைபொழிந்தனர்சிலவர்கமலனும்பர்கள்வெருவ. (உஉ)

வேறு. மங்குனிகர்வெங்கரியின்விஞ்சியெழுமொன்னலர்கள்வந்தடராலுஞ்
சிங்கமுழையின்கணினகன்றுவெளியெய்தியடர்செய்கையெனவே
சங்குநிறவண்ணனிரதந்தனிலெழுந்தொளிர்தடக்கைதனிலே
சங்கணமிலங்கிடவடர்ந்துயர்கலப்பைகொடடித்தனனரோ. (உ௩)

ஒடிந்துபடியிற்றுகளெழுந்தவிரதங்களுயருங்கொடியொடுங்
கடந்தருகரித்திரள்கள்கோடுகைசிதைந்துகடிதிற்புரளவே
மிடைந்தெதிரடர்ந்தவுரகந்துடைதுணிந்துமெலிவுற்றுவிழவு
மடிந்தனர்கள்வெஞ்சிலைபிடித்துவருமொன்னலர்கள்மண்ணின்மிசையே.

ஆடினகவந்தமெணிலாதவலகைத்திரளடர்த்தவணி
னேடினநிலத்தினுறுசெங்குருதியாறுநதியொத்தலையெழ
வீடினபிணக்குலைவகள்மேகமுறவெங்கணுமிடைந்தவிமையோ
ரோடவிழுமாமலர்பொழிந்துமறையரசிகளியம்பினரரோ. (உ௫)

பரித்திரள்கரித்திரள்படைத்தலைவரின்னவருணத்தினர்களென்
றுருத்தெரிகிலாவகையுருத்துயர்கலப்பைகொடுறக்கியடியா
நெரித்துடலினிற்றசைகள்மூளையெழுசெங்குருதிநீருகநிலத்
தரைத்தனனுருத்திரனுடைந்தகனுமஞ்சமதிவண்ணனமரின். (உ௬)

இரைத்துவருசேனையிருபத்திருேமூன்றுதொகையக்குரோணியி
னுருத்தருமுயாவகையுருத்திறதியுற்றிடுமுருத்திரனெனப்
பருத்துயர்கலப்பைகொடுவீரர்களிமாவிவைபடச்சமர்செயுந்
திருத்தமதுகண்டுதுதிசெய்தனர்கடேமலர்கள்சிந்தியிமையோர். (உ௭)

கண்டுமசதன்கொடியகாலனெனவேயிரதமீதுகனல்வா
னெண்டிசையுமஞ்சவளையூதிவிண்ணெழுந்தெழிலிபெய்வதெனவர்
னண்டர்கணடுங்கவில்வளைத்துநெடுவாளிகளாநந்தம்விடலும்
விண்டலமறைந்திருள்பரந்துயரவும்பருதிவெய்யிலகல. (உ௮)

அதிர்த்தெழிலிபெய்வதெனவாசுகம்நிறைந்திடவழற்கணுறவே
கொதித்துயர்கலப்பையொருகைகொடுசுழற்றிவருகொல்கணையெலா
முருத்திரதமாமடியமாவலவனென்புகவொடிந்துபடியிற
பதைத்திடவடித்தனனெதிர்த்தமகதப்பகைஞனஞ்சியிடவே. (உ௯)

அலத்தினடியாலிரதமாவினொடுசூதனுமழிந்துயிர்விடச்
சலத்தொடுமிழிந்துமகதன்கொடியதண்டுகைபிடித்தெதிர்தலும்
நலத்துறுமுரோகணிதன்மைந்தனசைசெய்துயர்கலப்பைகொடுதன்
வலத்தொடுமறைந்திடமணிக்கதைபிளந்துதுகளாயினதரோ. (௩0)

அடற்கதையொடிந்துபொடியாயுதிரவேயழலுறுங்கணரச
னுடற்கனலவந்தெழிலாயுதனுரத்திடைபுடைத்திடலுநீள்
கடற்குள்வடவாவனலையொத்தமகதன்கதிர்முடித்தலைதனைத்
தடக்கையினிழுத்துவதைசெய்யுமுன்முராரிதடைசெய்தனனரோ. (௩க)

வேறு. சிதரணிராமன்றன்னைநோக்கியேசெப்புவானம்
மாதுலன்மாமன்றன்னைவதைசெய்யலாகாதையா
வேதமிலக்குரோணியிருபத்துமூன்றுமாள
வேதனையெய்தினானைவிடுதிநீயென்றுசொன்னான். (௩உ)

மாயவனியம்பலோடுமதிவண்ணன்மகதன்றன்னை
நீயுயிருய்ந்துபோதியெனுமுனாநிகழ்த்திவிட்டான்
றூய்மையில்நெஞ்சினனுந்துயரமுநாணுமெய்த
வேயெனுமுன்னர்தான்வாழெழில்நகர்க்கெய்தினனல். (௩௩)

தரணியாள்மகதராஜனபின்னருந்தாரின்வெள்ள
மிருபிலத்தக்குரோணியிருபத்துமூன்றுங்கொண்டாண்
டரிதனையடரச்சுற்றுஞ்சேனையையனகன்கொல்ல
வெருவியேவலனுமஃகிமீளவும்வென்னிட்டானால். (௬௪)

சினமுறுமகதனிவ்வண்பதினெழுசமாஞ்செய்தே
யனிகமூர்நூற்றுத்தொண்ணூறரென்றதாமக்குரோணி
தினகரன்பனியைச்செற்றசெய்கைபோல்வசுதேவன்றன்
றனையரால்மாளவெள்கித்தனியனாய்வெருவிப்போனான். (௬௫)

கதமுறுமகதராஜன்கரிபரியிரதஞ்சூழப்
பதினெழுசமரஞ்செய்துபடையெலாமாளவெள்கிச்
சதுரெலாமழிந்துதானுந்தரணியில்வெருவியோட
மதுரையில்வசுதேவன்றன்மைந்தர்கள்மகிழுநாளின். (௬௬)

சராசந்தனபசயப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௫௬௪.

---

## ௬௨. வது—சிரகாலன்வதைப்படலம்.

ஆழிமன்வெருவவாளியடரவிட்டிலங்கைமேவிப்
பாழிசேர்புயநாலைந்தோன்படைஞராமூலவெள்ளம்
வேழமுன்னனேகவையமிடையவோர்வில்லாற்கன்ன
லேழனையளவிற்செற்றவிராமனைவணக்கஞ்செய்வாம். (௧)

பீதகவாடைதோன்றப்பிறங்கியகிரீடமோங்கச்
சோதிசெய்கலன்கள்மின்னத்துளவநற்றொடைவிளங்க
வாதனந்திகழவேதியச்சுதனமரும்வேலை
மாதவர்வனத்திருந்துமண்டபந்தன்னிற்சார்ந்தார். (௨)

தீதகல்முனிவர்தாளினிறைஞ்சிநற்சிதரன்று
றுதனமீய்தலோமாசிகள்மொழிந்துசொல்வார்
மாதவதீயர்தம்மைவதைத்தருள்செய்யவந்தா
யாதலின்யாங்களெய்துமருந்துயர்கேட்டியென்றார். (௩)

கரவீரபுரத்தின்வாழுங்கடியவனசுரர்கோமான்
சிரகாலனென்போன்தேவர்திரளெலாமழிக்கும்வெய்யோ
னூரநாகர்பதியினாலுமழிப்புண்ணுயிர்கட்கெல்லாம்
வருகாலனனையானெங்கள்வனத்தினையழித்தானென்றார். (௪)

திருந்துநல்வேள்விதன்னைச்சிதைத்தெங்கள்செபமிதெல்லா
மிருந்தையாகிடத்தியிட்டேயெண்ணில்பாதவத்தைப்போர்த்துக்
கருந்தடங்கண்ணினார்தங்காமமாங்கடுவைப்பொலெம்
மருந்தவமழித்தான்றன்னைச்செற்றிடரகற்றியென்றார். (௫)

விஞ்சியமுனிவரிங்ஙன்விளம்பியேயிடருற்றுரை
யஞ்சன்மின்னீயிருங்களருந்தவமழிப்பான்வைகு
மிஞ்சிசூழ்நகரினெய்தியிமைப்பின்முன்னவனைக்கொல்வே
னெஞ்சின்மாவனத்தினெய்துமென்றரியியம்பினானால். (௬)

மாதவன்முனிவர்தம்மைவனத்துநீரேகுமென்று
தீதுசெய்சிரகாலன்றன்சேருகோசரத்தினெய்த
ஆதுகாகளங்கள்பேரியுவரிபோற்கறங்கவோங்கும்
யாதவன்சேனைசூழவிராமனோடேகினானால். (௭)

தாருகன்றடந்தேர்தூண்டச்சார்ங்கங்கையிலகித்தோன்றப்
பூரியன்பொருந்திவாழுங்கரவீரபுரத்திற்செல்ல
வாரியனெய்துந்தன்மையறிந்துமசுரர்கோமான்
வாரிபோற்சேனைசூழவந்தெதிர்தாக்கினானால். (௮)

கரிகளுங்கரிகடாமுங்கனன்றெதிர்தாக்கவேதாம்
பரிகளும்பரிகடாமும்பாய்ந்துவெஞ்சமரின்மூள
முரசுகாளங்கள்பேரிமுகிலெனமுழங்கவெற்றி
யரசருமசுரர்தாமுமடர்ந்துபோர்செய்தாரன்றே. (௯)

மழுவயில்நேமிதண்டுமுக்கரம்வலையங்குந்த
மெழுமுனையீட்டியெல்லாமெறிந்துவெங்கணைசொரிந்தே
யுழுவைகள்போலத்தாக்கியுடல்சிரந்துணியவெய்ய
கழுதுகள்சூழயாண்டுங்கவந்தங்கணடித்தவன்றே. (௧௦)

தேரினிற்கரிகள்மாயச்சிலையறவிவுளிசாயப்
பாரினிற்குதித்துவெய்யகேடகங்கட்கம்பற்றித்
தேருறத்தாக்கிக்கைகாறுணிந்திடநிலத்தின்வீழ்ந்தார்
வாரிபோலுதிரவெள்ளமடுத்திடக்கழுதுமாட. (௧௧)

பரியினுமிரதமீதும்படைத்தலைவீரர்மேலுங்
கரியினுங்கடியவாளிகதுமெனச்சொரிந்தங்கார்த்து
வரிசிலைவலத்தினாலேவாளெயிற்றசுரர்கொல்ல
விரிகின்றசேனைநோக்கியிருவருமெதிர்த்தாரன்றே. (௧௨)

கயிலையும்நீலவெற்பும்வயங்கியகாட்சிபோலப்
புயல்வணன்முன்னோனும்பொருசிலைவளையவாங்கி
யயிலெயிற்றசுரரேறுமிரதங்கள்வெய்யவாசி
கடமெலாமடியயாண்டுங்கணைமழைபொழிந்தாரன்றே. (௧௩)

சிலையறக்கொடிகள்வீழத்தேரினமுறியவீரர்
தலையறப்பரிகள்சாயத்தந்திகளுருளவோங்கு
மலையெனவசுரராக்கைமண்ணுறக்கறையின்வாரி
நிலமிசைநதியாயோடநிறைந்தனகவந்தமாடி. (௧௪)

வேறு. சிவர்சிவமுறப்பலிசெங்கைநீக்கிய, நவர்நவநீதமுண்ணுதராசுகந்
தவர்தவலொருவுறத்தரணியெங்கணும், பவர்பவமடிந்திடப்பாாந்தவாமரோ.

ஐயிலையயன்வில்லளவுமாசுகம், நொய்தெனநொய்தினுழைந்துதோலயம்
வையமீவையமாய்வீரர்மாளவே, துய்யதுய்யாரழலெனத்தொடர்ந்தவால்.

கிரியிவர்கிரியெனநிலனைக்கீண்டரு, எரியரியாகியவவுணர்மாளவெம்
பரிபரிவுறக்குரந்துணித்துப்பார்விழக், கரிகரியாயிறக்கணைகள்பெய்தனன்.

சிந்துரமியத்தணைதுயிலுஞ்செங்கணன், சிந்துரங்கரஞ்செவிசிதறவாசையிற்
சிந்துரங்காலறத்தெவ்வர்சாடரஞ், சிந்துரப்புனலுகச்சிலீமுகம்பெய்தான்.

வேறு. உடலறக்கரிகள்வீரருரமறவுயர்ந்ததேரி
னடியறவலவன்மாளவயங்ளைவாலுமற்றே
துடையறக்கொடிகள்விழத்துவசங்கள்வீழக்கண்டே
கடிமலர்பொழிந்துவானோர்களித்தெங்கும்நடித்தாரன்றே. (௧௯)

வருகரியிரதம்பாய்மாவாளெயிற்றசுரர்வீழ
விருவரும்பொருததன்மைகண்டனலெரியுங்கண்ண
னுருளுமாவிரதமீதினுற்றுயர்சிரகாலன்முன்
பொருசிலைவளையவாங்கிப்புயல்வண்ணன்மேலெய்தார்த்தான். (௨௦)

தீயவனெய்யும்வாளிதிசைகளைமறைப்பக்கண்டு
மாயவனதனையெல்லாம்வாளியாற்கொய்துகீழ்த்தே
யேயெறுமுன்னர்வானமறையவாசுகங்களெய்தா
னுயவையறுத்துவெய்யவசுரன்வின்னொங்கவார்த்தான். (௨௧)

சொரிகாலவருடமேலத்துலங்கியபல்லங்கள்கொண்
டிருளாலம்நடுங்கவார்த்தேயெய்துநின்றுனைநோக்கி
யரிகாலன்படையைவாங்கியருச்சித்துவிடலும்வெய்ய
சிரகாலன்சிரத்தைதள்ளிச்சென்றதுதெய்வவாளி. (௨௨)

துந்துமிமுழங்கவானிற்சுரர்தருமலர்கடுவி
யிந்திரனயன்றன்னோடுமேத்திவிண்ணிறைஞ்சினார்கள்
சிந்தையின்மகிழ்ச்சிமேவுமுனிவர்கடிரண்டுவாழ்த்த
நந்தொளிர்வண்ணனோடுநாரணன்மதுரைபுக்கான். (௨௩)

தீயவல்லசுரன்றன்னைச்செருக்களத்தவியநூறி
மாயவன்மதுரையெய்தித்தந்தையைவணங்கிப்பின்னர்
தாயினையிறைஞ்சிநீதிதருமஞானங்களோங்கத்
தூயநான்மறையோர்சூழத்துலங்கியேயமருநாளின். (௨௪)

சிரகாலன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௫௯௮.

நீடுடையசோதிபெருமானமரர்பேணுஞ்
சேடனினமர்ந்தவிர்கொடேவைவினைதோறு
மாடியவனன்பெயர்களாயிரமுமன்பாற்
பாடிமகிழ்வோர்பரமபாகவதராவார்.

மாலயன்மதிச்சடையன்வந்தமர்செய்தாலும்
ஞாலமிசையென்றுமடியானலனிலாத
காலயவனுமசுரன்முன்வினைகளைந்த
சீலமுறுநாரதனடைந்திவைகள்செப்பும்.

உன்னுடையதோழனுயரும்மசதராஜன்
மன்னன்வசுதேவனருள்மைந்தரொடுமூண்டே
யிந்நிலமதிற்றசமொடேழுசமர்வென்னிட்
டின்னுவமுன்னோடியதுனைக்கவெளிதன்றே.

ஆதலினுயர்ந்தவசுரர்பதிநீயேகில்
மாதவனிடைந்திடுதறிண்ணமெனும்வாய்மை
யோதிமுனியேகலுமுருத்திரனையொத்தே
தீதுசெறிகாலயவனெஞ்சுசினமிக்கான்.

ஆடல்வயமாகரியின்மீதவுணன்மூன்று
கோடிபடைநாயகர்கள்கூடிவரவேமுன்
னீடுகொடிசூழிரதமேறிநெறியில்லான்
காடுகள்கடந்துபலநாடுகள்கழிந்தான்.

வடமதுரையெய்திமதில்சுற்றுறவளைத்தே
கொடியவசுரன்னுடல்கொதித்திடவுமார்ப்ப
நெடியவனவன்றிறலறிந்துநெறிசேருங்
கடலரசன்மானகரினிற்கடிதுசென்றான்.

மாதவனடைந்திடலுமேவருணராசன்
சீதமலர்தூவிதிருசேவடியிறைஞ்ச
ஆதியிவண்வந்தகருமத்தடைவையெல்லா
மோதுதியெனப்படியளந்தவனுரைப்பான்.

காலயவனனவசுரன்கடிதினெய்திச்
சீலமுறுமாமதுரைசேர்ந்துறவளைத்தான்
ஞாலமிசையெய்தியிடம்மன்னகாமில்லைக்
கோலமுறுவண்பதிகொடுத்திடுதியென்றான்.

மாயவன்மொழிந்திடமகிழ்ந்துவருணன்று
னேயமுடனேஞ்சனைதுவாதெசநிறைந்த
வாயமுறநீளமகலம்மழுகிதாகத்

அயனருளவூரனவர்கடச்சனவணெய்தி
மியல்பினுறுமாளிகைகளெண்ணில்சிகரங்க
ளுயருமவிர்மண்டபமொண்வேதிகைகள்வீதி
கயமுறுவவோளிகளெலாங்கடிதமைத்தான். (௧௦)

அருணவயமாயிரமலங்கிருதமான
வருணமுறுபாசிழைவருக்கயவாடை
தருணமுறுதந்திகடயங்குமணியெல்லாம்
வருணன்மகிழ்சிந்தையொடளித்தனன்வயங்கி. (௧௧)

எண்ணெதிரில்சாய்மனையிலங்குருடையெண்ணில்
வண்ணமுறுநன்மணிவயங்கியிடுமாழை
கண்ணியகலன்கள்கதிர்போலொளிர்கிரீட
முண்மகிழ்விறேடளகையுற்றவனளித்தான். (௧௨)

சந்திரவிமானமெனவேதரளமல்கிச்
சுந்தரமணித்திரள்கொடோணனிதுலங்க
மந்தரநிகர்ததயருமண்டபமகிழ்ந்தே
யிந்திரனளித்தடியிறைஞ்சினனிவந்தே. (௧௩)

வாரியின்வயங்கியிடுமானகரைநோக்கிச்
சீருறுகுபேரனகர்தேவர்பதியெல்லா
மேருறுபகீரதியிலுவிழிவையெய்தும்
பார்நதியையேலுமெனவேயுரைபகர்ந்தார். (௧௪)

எதிரில்மடவார்புருடர்யாருமிரவின்கண்
மதுரையினுறங்கியரிமாயையியற்றக்
கதிருதையமாகுவமுனேகடிதெரிந்து
ருதநியின்விளங்குநகருற்றபின்விழித்தார். (௧௫)

வடமதுரைவைகுகரிமாமநுடர்மாதர்
கடலினுறுமானகர்தனிற்கடிதுமேவி
யடையவரிதாஞெருவனேயடன்மிகுத்த
கொடியவசுரோசன்முனரிற்குறுகினின்றான். (௧௬)

ஏறுபுரிவானெனவெதிர்க்குமசுரோசன்
சீறியரிதன்னையமர்செய்திடுதியென்ன
நாறுமலர்தண்டுளவினற்றொடையணிந்தோன்
பாறினனகைத்துவிசையோடுபடிமீதே. (௧௭)

வேறு. அரியமாதவர்களரகியளப்பிலாவூழிகாலந்
தரையினின்றின்வெய்யதழலிடையோகஞ்சாதித்
திருவினையகற்றித்தங்கள்மனங்கொண்டுபிடிக்கவெட்டா
வொருவனைப்பிடிப்பதாகவோடினனசுரன்மாதோ. (௧௮)

எதிர்நின்றுசமர்செய்யாமலேகின்றாயிடையாவுன்றன்
மதியெலாமிஃதோமண்ணின்வானெங்கும்பாதிப்பின்ன
ருததியினொதுங்கினாலுமுன்னையான்பிடிப்பனென்னாப்
புதியவெங்கூற்றம்போலப்பூரியன்றுடருங்காலை. (௧௯)

மனுவின்றன்மதலையிக்குவாகுவின்மரபில்வந்தோன்
முனிவரொண்மாந்தாதாவின்சுதன்முசுகுந்தனென்போன்
றுனியகல்சுரர்கோனுக்காய்த்தூய்மையிலசுரரோடே
சினமுறப்பொருதுநின்றானாயிரந்தெய்வவாண்டு. (௨௦)

மறனுறுமசுரரெல்லாமடிந்திடவென்றுநின்ற
திறனுறுமரசன்றன்னைநோக்கியேதேவர்கோமா
னுறுகெதிபரமனீய்வதல்லதிங்கொருவராலும்
பெறுவதரிதென்றிப்போதுபெறுவவெல்லாங்கேளென்றான். (௨௧)

ஆயிரநயனவேந்தனருள்செறிந்திங்ஙன்கூறத்
தூயனுமாந்தாதாவின்சுதன்முசுகுந்தன்சொல்வான்
தீயராமசுரரோடுசெருச்செய்தவருடமெல்லாம்
மாயிருஞாலத்தேயான்றுயில்கொளவரமீயென்றான். (௨௨)

வேறு. அரசனிவ்வரம்வேண்டலுமமரர்கோன்முனிவர்
தரணியின்னுயர்வரையினிற்கந்தரஞ்சார்ந்தே
யிருகணிற்றுயில்கொளுமுன்னையிடையின்வந்தெழுப்புந்
துரிதரக்கணமெரிந்திடுவாரெனச்சொன்னார். (௨௩)

அந்தநல்வரம்பெற்றுயர்முசுகுந்தனணுகிச்
சிந்தையின்மகிழ்ந்தோங்கல்ற்கந்தரஞ்சேர்ந்து
சுந்தரஞ்செறியுருவினன்றுயில்கொளாகரத்திற
கந்தநன்மலர்க்காவினுட்கண்ணனுங்கரந்தான். (௨௪)

கடிதினிற்றுரந்தோடியேகடுந்திறலவுணன்
படியினின்வரைமுடுக்கரிற்புகுந்துயர்பரமன்
வடிவுறத்துயில்கொள்கின்றான்றன்னைமாலென்று
கொடியவன்னவனுரத்தினிற்புடைத்தனன்கொதித்தே. (௨௫)

தெழித்துரப்பியேதீயவன்புடைத்தலுமரசன்
விழித்துநோக்கலும்விடையன்முன்வேளெரிந்தாற்போ
லிழைத்தமாதவயோகிகளிருக்குமாச்சிரம
மழித்தவெய்யவன்சாம்பராயவனியின்மாண்டான். (௨௬)

துயிலையோவியேயெரிந்திடுந்துட்டனொன்று
பயிலுவானவண்பரஞ்சுடர்மரகதமலைபோ
லியல்பினாழிசங்கெழிற்கதைசார்ங்கம்வாளேந்தி
மயிலெனுந்திருமார்பினின்வயங்கவந்தனனால். (௨௭)

கண்டனன்கருணாகரவடிவினையமிர்த
முண்டதாமெனக்களித்திறைஞ்சவன்மிகவுவந்தே
யண்டர்நாயகவுனதடியார்க்கடியவனாந்
தொண்டனேன்வினைதொலையமுன்றோன்றினையென்றான். (௨௮)

அன்பினானந்தநயனநீரவனியிற்புரள
வின்பமாகமெய்புளகமுற்றேத்தவான்றன்னைத்
தன்பெருந்தடந்தாமரைக்கண்களானோக்கித்
துன்பமோவினாய்வேண்டுதிவரமெனச்சொன்னான். (௨௯)

விந்தைசேர்புயனியம்பிடமுசுகுந்தன்விளம்பு
மிந்தமானிலத்தின்பம்போலிடருறுதும்ப
வந்தனாகிப்பாழ்ங்கூவலினழுந்தியவென்னை
யெந்தைநீகெதிக்கேறெனுநெறிசொலுவென்றான். (௩௦)

வேறு. காய்ந்தவெங்கனலைக்காலுங்கட்செவியிலங்குகின்ற
வீர்ந்தநுண்வேலைக்கவ்வியெயிறுநாவீழ்ந்தாற்போன்றே
யாய்ந்திடுமுணர்விலாமலத்திரச்செல்வமாற்றிச்
சாய்ந்துவெந்நரகின்வீழ்வர்தரணியினறிவிலாதார். (௩௧)

ஆதலினடியேனிங்ஙனைம்புலன்றனக்கேயாளாய்த்
தீதுசெய்திடுவேனுன்னைச்செல்வமேவேண்டிப்பெற்றால்
வேதனைநரகின்வீழ்ந்துமீளவும்பிறந்திறந்து
பூதலத்துழல்வதல்லாலென்னையான்பொருந்துவேனால். (௩௨)

போதனோடமரர்வானுள்புரந்தரன்முதல்வராய
மாதவர்தம்மைநீயேமயக்குமாயன்றானுன்றன்
பாதமேபற்றினேனைப்பற்றுமோபரமமூர்த்தி
யாதிநீயருள்செய்துன்றன்பதமெனக்கருடியென்றான். (௩௩)

இவையுரைத்திறைஞ்சியேத்தியிருகணீர்சோரநின்ற
நவையகல்நெஞ்சினானைநாரணனருளால்நோக்கி
புவமையில்மறையோனாகிப்பிறந்துயர்வதிரியுற்றுத்
தவமுயல்யானேயெய்தித்தருகுவன்கதியையென்றான். (௩௪)

என்றுரைத்தின்பமெய்திமுசுகுந்தன்றன்னையேவிப்
பொன்றியவசுரன்சேனைக்குழாத்திடைப்புகுந்துதன்கை
யொன்றியவாளில்மூன்றுகோடிபேர்சிரமுருட்டி
நின்றிடுமளவின்வந்தானிகரிலாமகதர்கோமான். (௩௫)

தீமுந்துநயனனானைமகதர்கோன்சேர்தல்கண்டே
யாமந்தைக்கன்றுபோல்வானவனியிற்கடிதினோடிக்
காமந்தீயடரவேடர்கணிப்பருங்குழாங்கள்சேருங்
கோமந்தவரையின்மீதிற்றுவட்டினிற்சரந்தான்மாதோ. (௩௬)

மாயவனோடக்கண்டமகதனுங்கடிதினெய்தி
யாயனீமீடியென்னுவருவனாயிடத்தினெய்தி
வாயுவின்படையுந்தேயுவழங்கியபடையும்விட்டான்
தீயொடுவாதங்கூடித்திசையெலாம்நடுங்கச்சென்ற. (௩௭)

வரையினைமுற்றுஞ்சுற்றிவாயுவுங்கனலுங்கூடி
யரணுயர்தேரினேறியமர்செயவிமைப்பின்வெந்த
திரிபுரத்தவர்கள்போலத்தீயராஞ்சவரர்மாள
வெரியுயர்வானைமுட்டியெழுந்தனபுகையுமெய்த. (௩௮)

அறனுறமறையையோம்புமருந்தவர்க்கிடர்கள்செய்யு
மற்னுறுமெயினரெல்லாமடிந்திடநகைசெயதாங்கே
யிறைவனப்பிறங்கலுச்சியிரண்டைந்தோடொன்றுகூட
வறையும்யோசனையினின்றுமவனியிற்குப்புற்றனால். (௩௯)

கரியரிமயிடமெண்குகவிபுலிகனலின்மாள
வரையினிலுச்சிநின்றுமகதராசன்றன்காண
வெரியினின்விழுந்தாற்போலக்குதித்திறையேகியேதார்
பரியிரதங்களின்னுந்துவரையம்பதியிற்சேர்ந்தான். (௪௦)

மன்னவன்வசுதேவன்றன்மலரடிவணங்கிப்பின்ன
ரன்னையையிறைஞ்சிபபோசனடியினிற்றொழுதுவந்தே
முன்னவன்றாளில்வீழ்ந்துமுனிவரந்தணர்களேத்த
வென்னையாளுடையவையனினிதுவீற்றிருக்குநாளின். (௪௧)

காலயவன்வதைப்படலமுற்றிற்று.

ஆ_திருவிருத்தம் - ௩௱௩௧.

## ௩௪. வது—இரேவதிப்படலம்.

காலினுண்டுகளாற்கல்லைக்காரிகையாக்கிக்கால
காலன்வில்லிறுத்துத்துய்யகமலையைமணஞ்செய்தோழ்
காலங்காந்தாரத்தெயதிக்கம்புத்தோன்றன்னைவீட்டிக்
காலருள்சுதனோடுண்டகண்ணனைவணக்கஞ்செய்வாம். (௧)

அறநெறிவிளங்கமுந்துமுசத்திறனரததேசத்
திறையவன்மொய்ம்பால்மிக்கவிரேவகனென்னுமன்னன்
மறுவில்பூமடந்தைநேராமிரேவதிமாதைப்பெற்று
நெறியுறமறையோராசிநிகழ்த்திடமகிழுநாளின். (௨)

மன்னவனிரேவகன்றன்மகளெழில்பொருவமண்ணி
னின்னலின்மருணன்றன்னையெங்கணுநாடிக்காணன்
மின்னிடைமடவாளோடும்விண்மிசையிரதமேற்போய்
நன்மலர்க்கிழவன்வாழும்நற்சபையதனிற்சேர்ந்தான். (௩)

பொன்னவிர்தரளம்நீலம்பொலிவுறுபதுமராகம்
நன்மணிவயிரங்கோமேதகம்விவர்மரகதங்கள்
மினவயிடூரியங்கள்வித்துருமங்களெல்லாந்
தன்னுறுமெண்ணில்கோடிதுலங்குமாமண்டபத்தின். (௪)

இந்திரனியமன்வாயுவருணனோடெழிற்குபேரன்
முந்தியநிருதிதேயுமுக்கணன்றொழவுநாகர்
சிந்தையின்மகிழ்ந்துசித்தர்வித்தியாதரர்கடேவர்
சந்திரனிரவிதுய்யசாரணரியக்கர்சார. (௫)

கெருடகாந்திருவரோங்குகின்னரர்திரளினோர்கிம்
புருடர்தம்புருவோர்கிதநாரதர்பொலிந்துதோன்றப்
பொருடருமறையாறங்கஞ்சாத்திரம்புராணநீதி
மருடவிர்ந்திடவிதெல்லாம்வடிவுகொண்டேத்திவாழ்த்தி. (௬)

வளரொளிக்கிரீடந்தோன்றக்கேயூரம்புயத்திலங்க
வளருமுந்நூலுமார்பின்வயங்கிடமாமையேய
வொளியுறுமேனியோங்கவுலகெலாமுண்டானுந்தி
நளினவாதனத்தின்மீதுநான்முகனிருந்தானமாதோ. (௭)

ஆயவன்றிருவோலக்கத்தனைவர்க்கும்விடையீய்ந்தாங்கே
தூயவன்கோயிறன்னுட்டுலங்கிடமேவும்வேலை
வேயுறுதோளியாள்விரேவதிமின்னினோடுந்
தீய்மையிலரசன்சென்றுதிருவடியிறைஞ்சினனால். (௮)

இறைஞ்சியவரசன்றன்னையெண்கணனோக்கிநீயீண்
டுறைந்ததுமொழிதியென்னவுவந்தியான்பெற்றமங்கை
சிறைந்தவிவ்வடிவுக்கொத்தமணாளனைநிலத்திற்காணு
தறந்தவருதவையவடைந்தனனின்பாலென்றான். (௯)

இவையெலாங்கேட்டவெண்கண்ணிறையவனகைத்துநீதான்
புவியினையொருவியென்பாற்புகுந்தவவ்வுகமும்போயே
நவையகல்மன்னவிங்குத்துவாபரத்தந்தநண்ணிற்
றுவமையிலிராமநம்பிக்களித்திநீபோதியென்றான். (௧௦)

இரணியகர்ப்பன்கூறவிரேவதனிறைஞ்சியோவித்
தரணியின்மகடன்னோடுமிழிந்துநறபனன்விஞ்சங்
கிரணமேல்வெருவுசெம்பொன்கிளர்மணியினங்கள்சூழ்ந்து
வருணமாளிகைகளோங்குந்துவரையினடைந்தான்மன்னோ. (௧௧)

துவரையினடைந்தமன்னனுரோகணிசுதனைநோக்கி
நவையொரீமலரோனென்னோடுரைத்தநல்வாசகத்தாற்
புவிதனினிகரிலாதபொற்கொடியாளைன்பெற்ற
வுவமையில்மின்னையீந்தேனுனக்கெனவுரைத்தானன்றே. (௧௨)

மன்னவனுரைத்தலோடுமுரோகணிமைந்தனோக்கி
முன்னுறுமுகத்திற்றோன்றுமுறைமையாலுயரநீண்ட
வன்னவடோளினீண்டவலாயுதம்பூட்டிவாங்க
மின்னிடைசிறியாளானாள்விண்ணவர்மலர்கடூவ. (௧௩)

துந்துமிமுழங்கவானிற்சுரர்கள்மாமலர்கடூவ
மைந்தனைத்தழுவியன்பான்மகிழ்ந்தனன்வசுதேவன்றன்
னந்தொளிர்கரனுமன்னைமார்களுங்கலனையுற்று
ரந்தணர்முனிவரெய்தியாசிகள்பகர்ந்தாரன்றே. (௧௪)

பணவமாமுரசுபேரிபடலிகைமுழங்கப்பொன்னு
ரிணையில்காகளங்கள்சின்னமிலங்குகின்னரங்களார்ப்ப
மணமலிபூகங்கன்னல்வாழைவண்டுவசமோங்கக்
கணையிணைநகுகண்மாதர்கா[illegible]த்தனர்வீதிதோறும். (௧௫)

தோலிரதங்கடூயவிவுளிகளெங்குந்துன்ன
வேலொளிர்வீரரெல்லாங்கவினொடுமிடையச்செம்பொன்
பாலிகைநிரைத்துமாதர்சோபனம்பாடினார்கள்
மாலைகணிறையத்தீபம்வழங்கியவீதிதோறும். (௧௬)

அராவுருத்தவிருமையன்றன்னொடுமணங்கின்மிக்க
விரேவதியிலங்கித்தோன்றவிருக்கறைகற்கனெய்துப்
புராதனமுனிவர்வேதம்புகலுமந்தணர்களோடே
தராதலமிசைக்கவோமத்தழலினாகுதிநிறைத்தான். (௧௭)

கங்குனேரளகநங்கையிரேவதிகந்தரத்திற
சங்கொளிர்வண்ணன்செங்கைதன்னின்மங்கலநாண்சாத்தி
மங்கையர்மகிழவம்மிமிதித்துத்தீவலமாய்வந்தே
யங்கண்வானதனிற்றோன்றுமருந்ததிநோக்கினால். (௧௮)

அந்தணராசிகூறவருந்தவர்மகிழ்வாலேத்தத்
தந்தையைவணங்கித்தாயாந்தேவகிதாளின்வீழ்ந்து
நந்துறுகரத்துமின்னுரோகணிநற்பாதத்தி
னிந்துநேர்வண்ணன்றேவிதன்னொடுமிறைஞ்சினானால். (௧௯)

சீயமேபொருவுந்தாலகேதனன்றேவியோடுந்
தூயபொற்கலத்திலன்னமருந்திநற்சுகந்தநான
மாயுநன்மலர்களோடேயணிந்தின்பப்பெருமையாக
நேயமோடினியசெல்வம்நிறைந்திடவிருந்தான்மாதோ. (௨௰)

இன்னலனெய்துமுன்னோன்றன்னுடனிலோகர்வாழ்த்தத்
துன்னுநன்மணிசேர்மாடத்துவரையினிலங்கிமாயோன்
மின்னுபொற்கவிகையோங்கவிருந்தனன்விதற்பன்பெற்ற
வன்னமேயென்றுதூயநாரதனறைந்தானன்றே. (௨௧)

இரேவதிப்படலமுற்றிற்று. ஆ திருவிருத்தம் - ௩௬௨௰.

நீலமுங்காயாம்பூவுநிறைந்தறைகடலுந்தூய
ஞாலமெண்டிக்குமஞ்ஞைக்கந்தரநிறமுநாணுங்
கோலமோடாழிசங்குசார்ங்கம்வாள்கதைகொண்டோங்கு
மாலினைநினைந்துவாழுமடியர்தாள்மனத்துள்வைப்பாம். (௧)

ஆலின்மேலமருமையன்புகழெனுமமிர்தந்தன்னைச்
சீலமார்விதர்ப்பனகோம்புசெவியினாற்பருகித்தேக்கி
மாலினால்மனமோடாங்மற்றவன்றனைப்பற்றக்
சோலைவாவியம்போல்வைகுங்கோதைக்குமுனிவன்சொல்வான். (௨)

வேறு. காளமேகமொளிர்வானநீலவரைமானுமேனிகமலங்கள்கை
தாள்களுந்திநயனங்களிந்துநிகர்சங்குசெஞ்சுடர்தயங்கியே
நீளுமாழ்கதிர்பொருவுநன்மணிநிறைந்தபொன்முடியிலங்குமா
லாளுமவ்வானுலகமேழுநீயுணர்தியார்கலிக்குளமிர்தாமினே. (௩)

வீரஞ்சியுறவேயெதிர்க்குமவன்வெதிரினின்னிசைகளூதுவோன்
மாரனஞ்சுகவின்மேனியன்றதிசெய்வைத்தவெண்ணைதன்வயிற்றிடுஞ்
சோரனஞ்சைநுகர்தூயசேவினமர்தோகைபாகர்சொலுமாயிரப்
பேரனிஞ்சொலரிசெயல்கள்கூறரிதுபெருமையுற்றகமலப்பெணே. (௪)

வில்லின்மல்லினுயர்தம்பியின்பரிவிசித்ததேரிலயவேதநூல்
வல்லமாவிருடிகேசன்மாயனுயர்மாதவற்குவமையாகவு
மல்லிமாமலரின்வந்துபாரினுறுமன்னைநின்னைநிகராகவு
மில்லையேழுலகின்விஞ்சுபேர்கடமிலியாருமெவ்வெழிலிலங்குவார். (௫)

கன்றினால்விளவெறிந்தசோதியுரகாரிமீதிலுயர்கருமுகி
லன்றுபாலனெனவண்டரண்டமவையயிலுமாதியமரோர்பிரான்
குன்றினால்மழைதடுத்துவென்றிபுரிகோவலன்புகழ்கள்கூறுறு
தென்றுநாரதன்மகிழ்ந்துபுண்டரிகவிந்திரைக்கிவையியம்புவான். (௬)

முன்னர்மாமிதிலைவில்முறித்தமிர்தின்முந்துசீதையெனுமுண்டக
பின்னிரேடிலகுவள்ளலென்னநெறிவிஞ்சுமாசிறுவரைப்பதி
மன்னர்கோன்மகிழ்வொடெய்தியேயுனைமணம்புணர்ந்தருள்வன்மாமட
வன்னமேயெனமொழிந்துநாரதனிருக்கிஞசியுமறைந்தனன். (௭)

செஞ்சொலொண்டவனியம்புசொல்லிருசெவித்துளைக்கமிர்தமாகவே
யெஞ்சினன்முனிவனைப்பணிந்துநின்னிருக்கைசேறியெனவுரைசெய்து
விஞ்சுநஞ்சுறுகளத்தனேல்கமதைவிழவிடும்விமலன்மாலுறும்
வஞ்சிகொஞ்சுகிளிகஞ்சமாமலரின்மங்கைபொங்கமிர்தின்வந்தமின். (௮)

அருந்தவத்தினர்கடங்களாச்சிரமமடையவாவினிளைகாத்துநீள்
குருந்தினூற்றிடையர்மாதர்தங்கடுகில்கொள்ளைகொள்கொழுனன்வரவெணு
வருந்தினுள்கலையிழந்துசோர்வுறவயங்குமேகலைவசுந்தரா
பொருந்தமெல்லமளிமீதுசன்மலர்பொரிந்துவெந்துபொடியாகவே. (௯)

விளவகுபூணைமுலையிலங்குவெண்டரளமாலையும்வெடிவெடித்திடத்
துளங்குமாதின்மெயின்மீதுகோதையனல்சுற்றிடச்சுறுசுறுக்கெழக்
களங்கமெய்யின்மணிகருகவம்பொனணியுருகவெள்வளைகள்கழலவே
யுளங்கொள்மால்வடிவையுள்கியேமயலினுலுருக்குமணியுரைசெய்வாள். (க0)

வேறு. பண்ணார்மொழியார்கலைகொள்பரமா, கண்ணகருணைகரகார்முகிலே
விண்ணுருரகாரிவிலோதனவென், னுண்ணோவுதவிர்ந்திடவந்துதவே. (கக)

வேயூதிபவித்தகவித்தரும, வாயாதுவராபதிமன்னவனே
காயாமலர்மேனியகன்றினமே, யாயாவெனையஞ்சலையென்றணையாய். (கஉ)

கற்கொண்டுபலாவினைகாத்தருளி, மற்கொண்டமர்தோளொடுமாமதுரை
விற்கொண்டுமுறித்தருள்வீரியமாஞ், சொறகொண்டெனுருயிர்சுந்தரனே.

தானேவருகூனிதன்னுகமுறக், கூனேநிமிரத்தழுவுங்குமரா
தேனேகனியேதிருவிக்கிரமா, வானோரமிர்தேயெனவேமொழிவாள். (கச)

ஆரஞ்சுடுமென்னுமையாக்கும்விழும், வீரன்றிறமுள்ளும்விரும்பியெழு
மாரன்கணையேவமயங்கிடுமோற், சீரஞ்சகமாகியதேன்மொழியே. (கரு)

வன்னெஞ்சளமாரன்மலர்க்கணையா,லென்னெஞ்சுறுமால்கடல்போலெழவே
கன்னெஞ்சினையோவெளிகாணலை, னுன்னஞ்சனமேனியினுற்றணையாய்.

கரியாருயிர்கொண்டருள்கண்ணவெனும, விரிவாயரவைப்பிளவீரவெனு
மரியாகியவச்சுதனேயெனுமா, றரியாதெழுமாலுறுதாரகுழலே. (கஎ)

பாலேகவர்வாய்பலமாயைவலா, யாலேயமர்வாயலைவேலையுளாய்
மாலேதருவாய்வந்தேயணையாய், கோலேகொடுகோவனைகொற்றவனே. (கஅ)

வளையுங்கழலும்மயலுந்திடவே, விளையுங்கனகங்கனல்மேனியெலா
முளையும்மனமோர்கணமேழுகமா, யளையுங்கனிநீருளமிழ்ந்திடுமால். (ககூ)

சோரும்மெழுமாவிதனுக்கெனுமா, லாருந்துணையில்லையனங்கனெயச்
சேருங்கணையாலுடறீயுமுனே, வாருங்கவினுற்பலவண்ணவெனும். (உ0)

வல்லாய்பலமாயைகள்மாதவனே, புல்லாயிருகொங்கைபொருந்திடவே [ல்.
லில்லாய்மறையாதுயிர்விற்கும்வகை, சொல்லாயெனமாமயில்சோர்ந்தனளா

சோராவணைமீதுதுயர்க்கணுற, மாராவமுதாளையணைத்தனராற்
காரார்குழல்காரிகையார்கள்பனி, நீரார்களபம்மெய்நிறைத்தனரால். (உஉ)

அன்னேகமலத்துறையாயிழையே, யென்னேயிவையேதெனவேயிடருற்
றுன்னுப்பனிநீருடல்மேல்விடலு, மின்னுருயிர்வந்துவிளம்பினளால். (உங)

உறியார்நெய்யுருட்டியுவந்தருள்வோன், சிறியேனிருகண்விழிசேருமவன்
மறிமால்கடல்போல்பவன்வந்தனனு, லறிவீரெனதாருயிராமடவீர். (உச)

ஈன்றாய்விளவன்றெறியுங்கையினான்
குன்றால்மழைகாத்தருள்கொண்டல்குவா
லொன்றாயதினப்புறமும்முயர்வா
னின்றானெனமுனீரறியீர்மடவீர். (௨௫)

புயலின்னளினம்மலிபொற்பினவன்
மயல்தந்தவன்வந்துநகைக்குமவன்
செயலொன்றலவேபலதேர்வரிதா
லயலின்மடவீரவனாரெனுமால். (௨௬)

வளையார்கையினார்துகில்வாரியுமே
விளையாடியகையினென்மெய்தழுவி
யளையாயிருகொங்கையினச்சுதவென்
றளையாவுயிர்சோர்ந்தனளொண்குடியே. (௨௭)

அளியார்குழலாளயரப்பனிநீர்
துளியாவெழவீசியதோகைநல்லார்
மிளிர்தாமனைமேலுறைமின்னினுளந்
தெளிவாயுறவேயிவைசெப்பினரால். (௨௮)

மானேயனமேமயிலேகுயிலே
தேனேயமுதேதிருமாமகளே
யேனீயயர்வாயிடர்நீயொழியாய்
வானோர்பெருமான்மணமேபுரிவான். (௨௯)

துயர்நீயொழியத்துவராபதியி
னுயர்மாதவன்வந்தணைவானுனையே
யயரேலெனவம்மடவாரறையக்
குயில்நேர்மொழியாளிவைகூறினளால். (௩0)

வேறு. செஞ்சொல்நாரதன்மொழிசெவியிற்சாரவென்
நெஞ்சுளைந்தரிபுகழ்நிறைந்துநிற்பினுங்
கஞ்சநாபன்றனைக்காண்கிலேனெனிற்
றஞ்சுமென்னுடலினைத்துறந்துபோமுயிர். (௩௧)

ஆதலான்மையலாலலக்கணெய்துவேன்
சாதருனுறுதுசெய்சதுருண்டாமெனில்
மாதரீரிதற்கொருவாய்மையின்னல
னோதுவேன்கேண்மினென்றுரைக்கலுற்றனள். (௩௨)

புயலினம்போருகமலர்கள்பூத்தெனச்
செயல்பெறுந்திருவுருத்தெரியவேபடத்
தியல்புறவரையவல்லீர்களென்னிலென்
னுயிருடல்மேவுமின்றெனவுரைக்கவே. (௩௩)

பங்கயத்தவளிவைபகரப்பாங்கியா
மங்கையெள்ளுதலிலாமதனவல்லிநீள்
வெங்கயந்தனைத்தெறும்வீரனவ்வடி
விங்கிதத்தெழுதுவன்படத்திளென்றரோ. (ருச)

மருதிறவுரலொடுதவழுமாமையுங்
குரவையுங்குருந்துறுங்கொள்கையுங்குழல்
மருவவேமதனகோபாலனுமெழிற்
றெரியவும்படத்தினிற்சித்திரிக்கவே. (ருரு)

திகிரிசங்கங்குசபாசந்தேனின
மிகவிரும்பியமலர்விசிகமிக்குவில்
சகவுயிர்மயங்கிடச்சத்திக்குங்குழல்
நிகரிலொண்கரந்தொறும்நிறைந்திலங்கவே. (ருசு)

கரும்பெனச்சிலைமலர்கணைகள்காமர்நாண்
சுரும்பெனக்கலன்களுந்தலங்கவண்டள
வரும்பெனச்சிறுநகைதிகழவண்டரும்
விரும்பியமதனகோபாலன்விஞ்சவே. (ருஎ)

குண்டலம்விளங்கிடமதனகோபன்மெய்
கண்டனளுருகினள்சகியென்னுயி
ருண்டவனிவனிவனிவனென்றேயொளிர்
முண்டகத்திறைவியுமொழிந்துசோர்ந்தனள். (ருஅ)

உயிரிலையெனவுடலுருகிமாழ்கிய
வயல்நிகர்வனிதைதன்னயர்வுநீங்கிட
வயில்விழிமங்கையராலவட்டத்தா
லுயிர்வரக்கமழ்பனிநீர்சொரிந்தனர். (ருகூ)

எழுந்தனள்மதனகோபாலனீயுமா
லழுந்தியமின்னவளடியிரண்டினு
முழுந்துருளுவமுனமுற்றுநற்றிரு
விழுந்தனளேமுறனுற்றுவெம்பியே. (சo)

உடலிடையுயிரிலையெனவுமோய்வுறுந்
துடியிடைமங்கையைச்சூழுமாதரார்
கடியுடைக்குங்குமக்கலவைமேனிமேற்
றடவிடத்தெளிந்தபின்சாற்றுவாளரோ. (சக)

வேறு. எய்வீரெனநின்றருளிக்குவிலீர், கொய்வீரெனதாருயிர்கோகநகக்
கைவீரியரேகலவீர்கடிகோல், பெய்வீர்மதனன்சமர்பின்னிடவே. (சஉ)

குன்றுதுயர்கோடிவில்வேளுருவை, வென்றீரமிர்தாமெனவேவெளியி
னின்றீரடியேனைநினைந்தொருகா, லொன்றீரணையீரருளீருளையே. (சங)

துய்யீரிடைமங்கையைச்சொல்வபோல், வையீரடியேனையுமாமணமே
செய்யீர்கலவிக்கடல்சேர்கிலிரென்,மெய்யீர்வுறுமையல்விளைத்திடுவீர்[ரோ

பிணையேர்விழியாயர்கள்பேதையர்கா, லிணைநீர்முனிறைஞ்சியெழுந்திலி
துணைநீரெனவேதொழுவேனையிங்ங, னணையீரிவையென்னவருக்கிறைவீர்

எதிராய்வருகூனியரம்பையென, மதுராபுரியார்மகிழ்த்தழுவுஞ்
சதுராவடன்னினிகழ்ச்சியளோ, கதிராழியநானுமோர்கன்னிகையே.

ஏடார்தொடைமார்பினர்வாருமெனப்,பீடார்கைபிடித்திவைபேசியெனைக்
கூடாதிவணூடினர்கொண்கரென,வாடாமலர்மங்கைமயங்கினளால்.(௬௭)

பின்னேரிடையாளணைமீதயர, வென்னேயிவளுய்வகையேதெனவே
பொன்னார்முலைமேற்பனிநீர்பொழிய, வெந்நீரெனமாறுவெதும்பிடவே.

மாலேநிறைமங்கைதுயர்க்கடலே, தாலேதணியும்மெனவேதையலார்
மாலாமிறைவந்தனளுமெனவே, வேலேவிழிமாறுவிழித்தனளால். (௬௯)

தோழித்திரளோரிருகைதொழுதே, யாழித்திரளாரமிர்தேயனமே
தாழித்திரள்சாடரிதன்னுடனீ, வாழத்திரளுந்துவவாறுளதால். (௭௦)

படத்தேயுறுரூபினிளென்னபயன், றிடத்தேநெறியோகிகள்சிந்தையெனு
மிடத்தேயுறுமாலுனதேந்துமுலைத்,தடத்தேபுணரக்குறிதானுளதால்.(௭௧)

ஆமேமொழிவோமெனநீர்நினையா, தேமாமுனிநாரதர்செப்பியசொற்
போமோபழுதேபுயலேருருவா, மாமாதவனின்னைமணம்புணர்வான்(௭௨)

ஆமாமவையையமிலாரமிர்தே, நாமேமகிழச்சொலுநற்கெவுளி [னே
பூமாதுதெளிந்துகொள்பொற்றுவரைக், கோமான்மணமின்னொருகூடுவ

எனவேபலதூய்மொழியேதுவட, னமேதுயராறெனவேயறைவார்
தனமேலிழைமேலியதையனலா, ரினமாமலர்தூவியிறைஞ்சினரால்(௭௪)

மையார்விழிமங்கைநலார்வசன, மெய்யாகவிரும்புவிதர்ப்பன்மக
ளுய்யாவுயிருய்த்துமிருந்தனளால், செய்யாளெனவந்தருடெள்ளமுதே.

பொன்னின்குடைசாய்மணியும்பொலியத்,துன்னும்மலருந்தூய்சந்தனமு
மின்னும்மணியாரமுமெய்யிலக, வன்னார்துயராறியமர்ந்தனளால். (௭௬)

தன்னேர்பிறிதில்லவடாரணியென், பொன்னாரமிர்தம்புணரித்திருவா
மின்னாளமர்வேலவிதர்ப்பனெனு, மன்னுதரவாலுள்குமாறறைவாம்(௭௭)

படங்காண்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௯௭௭.

## ௬௯. வது—விதர்ப்பராசன்மந்திரப்படலம்.

செங்கமலஞ்செறிமேகமெனத்திருமேனிதிகழ்ந்தெழவே
சங்கொடுசக்கரம்வாணிவர்தண்டெழில்சாபமமர்ந்திலகு
மங்கைகள்மார்புறுமங்கைகவுத்துவமம்பொனிணுடையெழிற்
கங்கையுதித்துயர்பாதமுமென்னிருகண்ணிணைநண்ணினவே. (௧)

துன்னுமணித்திரள்வில்லிடுதூணணிகோடிதுலங்கியெழும்
பொன்னினிழைத்தவிர்மண்டபமீதரியாதனமேபோலியக்
கன்னல்மொழிக்குயின்மங்கையர்வீழுமியகவரிகள்கொண்டெழவே
மின்னுசுடர்க்கதிர்மவுலியுறத்திருவெய்தும்விதர்ப்பர்பிரான். (௨)

அந்தணருமறைமுனிவரனேகர்களாசிவிளம்பிடவே
யிந்திரனென்னவிருந்தனன்மைந்தனுருக்குமனென்பவனும்
வந்திடமுந்தியபருணிதர்பழையவர்மந்திரிமார்களுறச்
சிந்தைமகிழ்ந்தரசெய்திநிறைந்தவிதர்ப்பனெனுந்திறலோன். (௩)

அம்பெனும்நீள்விழிகாதடருந்திருவாகியவாய்வளையைக்
கொம்பனையீர்மணிமண்டபமீதுகொணர்ந்திடுவீரெனலு
மும்பரொடேழுலகீன்றவள்சேவடியைப்பணியொண்மடவா
ரெம்பரனீவருகென்றனளென்றனரிந்திரையின்புறவே. (௪)

அந்தமொழிக்குமகிழ்ந்தவுருக்குமணித்திருவனனமனு
னைந்துறுவெண்டரளத்தொடுபொற்பமர்நற்கலனும்மிலகக்
கந்தமலர்க்குழல்வண்டெழநீளிருகண்ணிணைகாதுறவே
வந்தனள்பொய்யிடைகொண்டுவிதானநிழற்றனின்மாமயில்போல். (௫)

மற்குடையாமல்மலைந்தவனைத்தலைசாடிமறந்தருகஞ்
சற்குடையாதவன்மார்புடனென்புதகர்ந்திடநின்றுயருங்
கற்குடையாகவெடுத்தவன்மீதுறுகாதல்நிறைந்தெழுமின்
பொற்குடைசாமரைமல்கிடவேகிநடந்தனள்பூமிசையே. (௬)

துன்னியநவமணியுறுகனகம்பிறைதூசிடைதுயில்வரவம்
பொன்னமர்கிண்கிணிநூபுரமவிர்கொள்பதங்கடமிற்பொலிய
வன்னமும்வெள்கிடவேமயில்கூசிடவாரமிர்தாமெனவே
மன்னனிருந்தவைகாணவிருப்புறுமாதுநடந்தனளால். (௭)

ஓதமெழுந்துறுநேமியின்முந்தியவமிர்தினுதித்தமினோ
சீதமெழுந்தலர்செங்கமலத்தினமர்ந்துறைசெந்திருவோ
பாதம்விளங்கியஞெகிழிமிழற்றிடுபரியகமின்னவரு
மாதிவண்மண்மிசையேகியதென்னெனவுன்னினர்மாதவரே. (௮)

அண்டர்கள்வந்துதுதித்திடவானினரம்பையுநாணிடவே
தண்டைசிலம்புகலின்கலினென்னநடந்தருடாளிலகக்
கண்டவர்நெஞ்சுகளிக்கமரத்தொடுபுல்லுயர்கல்லுருக
மண்டபமெய்தினள்கெண்டைகளஞ்சமதர்த்தடர்வாள்விழியாள். (௯)

வந்தனளந்தணர்மாதவர்பாதம்வணங்கியெழுந்துபினுந்
தந்தையையன்பினிறைஞ்சிமுனோனடிதாழ்ந்துயர்தாமரையாள்
சிந்தைமகிழ்ந்திருகண்கள்களித்திடுதாதைமருங்குசிறந்
தந்தமலிந்திடுமாசனமேறியிருந்தனளாரமிர்தே. (௧௦)

பண்கொளுநன்மொழியாமலர்பங்கயமீதமர்பாவைமுனாள்
மண்கொளுமச்சுதன்வேயிசையூதினனெனநினைவாணுதலாள்
பெண்களின்விஞ்சியகவினுடையாளுயர்பெருமையினணிறையுங்
கண்கள்களித்தெழவுடல்புளகம்முறுகாவலர்கோன்மகிழ்வால். (௧௧)

மாதவர்நான்மறையறைபவர்பண்டிதர்மந்திரிமார்களுட
னீதியினுயருங்குணவீடுமெனிவைகள்நிகழ்த்திடுவான்
காதுறுநீள்கயலென்னும்விலோசனிகவினைநிகர்க்குமவ
னேதமிலாதகுலத்தினினல்லவனியாவர்கொலோவெனவே. (௧௨)

முரசறைமுன்றிலினிருபரிடுந்திறைமுகிலளவாய்வளரக்
கரைசெயலரியதொர்மகிழ்வொடுமெதனிறைகறையடிவெரினின்வரு
மரசனுரைத்தலுமஃதுணர்முனிவர்களந்தணர்மந்திரிக
ளுரைசெயலுற்றனர்புரவலவெம்மனமுறுபொருள்கேளெனவே. (௧௩)

வேறு. அலகைகளெழக்குருதியாறெனமடுப்பச்
சிலைகொடுதெவ்வர்கள்செருக்கறவெதிர்த்தே
யிலகுமுடிமன்னவமகட்பெறுவரேனு
முலகுதனினல்வரனுணர்ந்தருள்வர்கற்றோர். (௧௪)

அளவில்விபவங்களுறவேண்டுமெகிழன்னை
கிளைஞர்கள்குலத்தினலனுற்றவர்கிளைத்தே
தளர்விலுயர்கல்விதனையோருமுயர்தாதை
யுளமகிழ்வுறுங்கணியுருபவனையுன்னும். (௧௫)

ஆதலின்மகட்பெறுகையல்லறருவிக்கு
மோதரியமெல்லியலுருக்குமணியாகு
மாதுளமகிழ்ந்தருளநல்லமணவாளன்
யாதவர்குலத்தினுளனென்றுபின்னிசைப்பார். (௧௬)

உத்தமகுணக்குரிசிலோதுவமையில்லா
வித்தகன்வனப்பினுடன்வேயினிசையூது
மத்தனெழில்பச்சைநிறவண்ணனடலாழி
நத்திறைவைத்தகரநாரணனுமாவான். (௧௭)

கஞ்சனைவதைத்திகல்செய்காலயவன்மாள
வஞ்சகமியற்றியிடைமாதர்துகில்கொள்வான்
நெஞ்சின்மதனஞ்சும்வடிவன்னெதிரிலாதான்
விஞ்சுமதில்சூழ்துவரைமேவியமர்வீரன் (௧௮)

யாதவர்குலத்துள்வசுதேவனருளம்மான்
மாதவன்முராரியரிவாமனனுமாவான்
றீதையகல்கற்புடையதேவகிதன்மைந்த
னேதமறுசோதிநலனேதெரியதெம்மால். (௧௯

மன்னன்வசுதேவனருண்மைந்தனெழில்மாயோ
னன்னமெனுமென்னடையுருக்குமணியாகு
மின்னின்மணவாளனெனவெய்தியிடவீர
முன்னுன்மரபோர்செய்தவமாமெனமொழிந்தார். (௨௦)

என்றுமுனிவோர்களொடுமந்தணரிசைப்பக்
கன்றுநிறையோடுசெறிகாளைபுகழ்கேளா
வென்றிபுனைமன்னவன்விதர்ப்பனுண்மகிழ்ந்தே
நன்றுரைசெய்தீரறிஞரென்றுரைநவின்முன் (௨௧)

ஒவியமுயிர்ப்புடனிருந்ததெனவோங்குங்
காவிவிழியாளையுயர்காமணிகர்கண்ணற்
கீவமெனவெம்முடனியம்பினன்விதர்ப்பன்
பூவினமர்பொற்கொடிதன்மெய்புளகமாக. (௨௨)

பரவைவருநல்லமிர்தெனப்பகர்சொல்லாற்று
முருகினர்கணீதிமுயலுத்தமர்களெல்லாங்
கருகினனுருக்குமனனெஞ்சுறுகடுந்தீப்
பெருகுசினம்விஞ்சினபிருகுமுனியொத்தே. (௨௩)

மடித்தனனடர்க்குமனல்வாயுறநிலத்தி
னடித்தனனகைத்தனனவைக்கணரஞ்சத்
துடித்தபுருவத்தனுருமும்வெருவுசொற்கள்
வெடித்திடவழற்கணுறவெய்யவன்விளம்பும். (௨௪)

அருந்தவர்சொல்நன்றுமறையாய்பவர்சொல்நன்று
பொருந்தியவமைச்சருரைநன்றுபுகழ்வெய்தித்
திருந்தநிலனாளுமிறைசிந்தையதுநன்றென்
றெரிந்தெழுமனத்தினனுருக்குமணியம்பும். (௨௫)

வியந்தெழுமறைப்பொருளுணர்ந்துவினையில்லா
துயர்ந்தவரெனத்தகையமாதவருமொத்திங்
கயர்ந்துமதிதப்பினவரென்றெணவறைந்தீர்
நயந்திணையுமில்லவனையேயுமதுநாவால். (௨௬)

நீர்சொலுமிடைக்குலமடைந்துநெறியில்லாற்
காருறவுகூறுகுலமேதவனடர்த்த
வீரமெதுநல்லுருவமேதவன்விளங்கு
மூரெதுபகர்ந்திடுமினென்றுமறிகில்லீர். (௨௭)

ஆயர்குலம்வந்துததிவெண்ணெய்நெய்யருந்திப்
பேயின்முலையுண்டடியுமுண்டுபிணியுண்டு
காய்கனிகொடேனிஞெடுகெந்தமுறுகானிற்
போயுடல்வளர்த்தவனையோபுகலுவீரே. (உ௮)

மாதர்திரடங்களுறிவைத்தததிபால்நெய்
யாதரவினுதரமல்கிடவருந்திப்
போதுமுனர்கண்டவர்கள்போகவெனவோடிப்
பீதியுறுபேதைதனையேபெரியனென்றீர். (உ௯)

ஒள்ளியமனைக்குளுரலேறியுறிதாவி
மெள்ளவுயருங்கலமிழிச்சியதின்வெண்ணெய்
யள்ளிநுகர்மிச்சில்வெருகும்பெறவளித்த
கள்ளனையும்வள்ளலெனவேசழறுவீரோ. (௩0)

தெருத்தனிவிடைக்குலமடக்கொடிகள்சீராய்
நிரைத்தெழவொளிச்சைவளையெல்லவுநெறித்தே
சிரித்தவர்கள்மார்பினிநகக்குறிகள்செய்யுந்
துருத்தனையுருத்துயனெனச்சொலுவதென்னே. (௩௧)

நீரினுறுமாதர்துகில்வாரிநிறைபோதின்
காருறுகுருந்தின்மிசைநின்றுகரைமீதின்
வாருமிருகைகடொழுமென்றவரைமால்செய்
சோரனையுமாரணிகரென்றுரைதொடுப்பீர். (௩உ)

மஞ்சுபுனைமாடவடமாமதுரைமன்னுங்
கஞ்சனெனுமாதுலனையேகருணையின்றி
நஞ்சமெனவந்துவதைசெய்யுநலனில்லா
வஞ்சகனையிஞ்சொலினனென்றுரைவகுப்பீர். (௩௩)

சிலமுசுகுந்தனிடைசென்றவன்விழிக்க
வாலமெனவங்கைதனின்மோதியவணீருய்க்
காலயவன்மாளவிகல்கண்டுநகைசெய்மெய்
நீலனையுமாலெனநிகழ்த்திடுவதென்னே. (௩௪)

ஊதுகுழலோசைதனினுலுழையுமாயர்
மாதர்புளினத்தினுறமாலெழுமயக்கிச்
சூதுநிகராகுமுலைதோறுமனைதோறும்
நீதிநெறியில்லவனையென்னெனநினைத்தீர். (௩௫)

அடருமகதத்திறைவனுற்றறனிலாற்றுன்
றடவரையொளிப்பவனல்சுற்றுவதுதப்பிக்
கடலிடைவயங்குதுவராபதியைக்காக்கு
மிடையனையும்வத்துவெனவெண்ணுமுறையென்னே. (௩௬)

யாதவர்முடிக்குரியரல்லரிதுவன்றி
நீதியிலிடைப்பதிவளர்ந்துநெறியில்லாச்
சூதனவநீதநுகர்சோரனையெம்மின்னு
மாதுமணவாளனெனநீருரைவகுப்பீர். (௩௭)

ஏதுகுலமறிந்திடையனென்பதுமுணர்ந்து
மதிமுகமடந்தைதனையீய்வமெனும்வாய்மை
யுதவுமுனிவோர்களுயர்மந்திரிகளோர்ந்தை
மூதுமதியின்வந்ததெனவேபலமொழிந்தே. (௩௮)

மாதவமுழந்தெனதுதந்தைபெறவந்த
கோதைதனையாவரெனினுங்குழலிசைத்தாற்
றீதுமெனவோதினர்களுவையிருவாளாற்
சேதனைசெய்வேனெனமொழிந்தனனிசீறி. (௩௯)

எங்கள்குலமுய்யவருமாரமிர்தமென்றன்
றங்கையெனுமுத்தமிதனக்குநிகராகத்
திங்களவிர்வெண்குடைகவித்தசிசுபாலன்
றுங்கமரபாளனுளனென்றுரைதொடுத்தே. (௪௰)

சேதிபர்சடங்கள்குலதீபசிசுபாலற்
கோதுகவுருக்குமனனேலயினையெங்கள்
ளாதுதனையீவனிவணிற்கடிதுவாவென்
றீதுறவரைந்துபலதூதுவரையேவி. (௪௧)

உருக்குமனலர்க்குளமருத்தமியைநாளைச்
செருக்கொடுசிறந்தசிசுபாலன்வரவேநான்
பொருக்கெனவளித்திடுவெனென்றுபொறையில்லான்
பெருக்குமுரையாற்சபதமானவைபிதற்றி. (௪௨)

மதகரிகடேர்நிரைகள்மாவினணியெல்லாம்
விதமுறவலங்கரிமுன்வீதிதொறுமேவிப்
புதுமைபெறவேவிபுதர்தங்கள்பதிபோல
வதிசயவேதமுரசம்மறைமினென்றான். (௪௩)

என்றவனெழுந்தினமேறவெதிரெங்கும்
நின்றவர்நடுங்கவெரிகண்ணனெறிநில்லான்
குன்றெனவுயர்ந்தமதயானைமிசைகொண்டே
யென்றுதவழ்மாளிகையினெய்தினனிருந்தான். (௪௪)

உன்மதமெடுத்துநெறியொன்றுமறிவில்லாத்
துன்மதியுருக்குமனனிவ்வுரைதொடுப்ப
மன்மதிகலங்கினன்மறைத்தவர்திகைத்தார்
நன்மதிமுகத்தவணடுங்கியுளம்நைந்தாள். (௪௫)

மாதவர்கடந்தமிடம்வைகிடவிதர்ப்பன்
கேதகிளைசெஞ்சோதிகிரீடமுடிதாழ
வேதகமில்மாளிகையினெய்தினனமர்ந்து
போதிலுறைமாதுமணிமாடமிசைபோனாள் (௬௬)

ஏதமில்விதர்ப்பன்மொழியுஞ்சிறுவனென்பா
னோதியதுமற்றுமுயர்நீமையுமுணர்த்தார்
மாதவருக்குமணிவேதியினைமால்பாற்
றூதெனவிடுத்தருளுமாறதுதொடுப்பாம். (௬௭)

விதர்ப்பராசன் மந்திரப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௧௭௨௪

## ௬௭-வது. தூ தே வு ப ட ல ம்.

விராதன்விரல்சேர்கரன்விசாரவுழையேழு
மராமரமும்வாலியும்நிசாசரருமன்று
மிராவணனும்வீழவொருவாளிதனையேவிச்
சராசரமுமானவரிதாளிணைதுதிப்பாம். (௧)

முன்னவனறைந்தமொழியால்முளரிமாதா
மன்னனடையாளனுளமாழுமவர்போல
வென்னிதெனவுன்னியிருகண்கள்புனலெய்த
மின்னினொளியாலயர்வியாளமெனவீழ்வாள். (௨)

எழுந்தனளிவ்வெய்யவுரையேதெனமயங்கி
விழுந்தனளிடர்க்கடலிலுற்றனள்வெதும்பி
யழுந்தினளரற்றுமிவளாயுமியல்வேதக்
கொழுந்தினினைந்துணர்வுகூடியிவைகூறும். (௩)

வஞ்சகமனக்கருணையற்றமறமுன்னோ
னஞ்செனமொழிந்தவுரையாலுளம்நடுங்கித்
துஞ்சுமுயிரெங்குமுனரிற்றுடரநீவந்
தஞ்சலெனவேயுதவுவாய்துவரையாள்வாய். (௪)

ஆயுமறைவேள்விதனிலேயரிகொளன்னம்
நாய்கவரவெண்ணுமதுபோலநலமில்லாப்
பேயினர்முயன்றுபுரிவஞ்சனைபிரிந்து
மாயவிடர்போனகலவாதுவரைமன்னே. (௫)

கண்ணவெனுமாருயிர்களைந்திடவயர்ந்து
மண்ணின்விழுமீண்டெழுமதிக்குமனதாடே
யென்னுநினைவோடழியுமாமெனவிரங்கும்
வெண்ணெய்நுகர்வோய்கடிதுமேவுகெனுமின்னே. (௬)

வருந்தினளிவ்வெவ்வுரையினென்னுயிருமாயா
திருந்ததுவென்னோவெனவிரங்குநனிநஞ்சை
யருந்தினர்படிந்துனியிதாமெனவயர்ந்தே
பெருந்தடமெனுங்கணிணையாளிவைகள்பேசும். (௭)

மூளும்வினைவஞ்சகமுயற்றிசெயுமுன்னர்
காளமுகில்போலெழில்கொள்கண்ணனெனைவந்தே
யாளுகிலனுகிலுடல்கொண்டுயிருமார
நாளையுமிருந்துழல்வனோவெனநகைக்கும். (௮)

தந்தைவலியில்லனெனதாயினுமைசெல்லா
வந்தமில்முனோணறனிலாதவதிபாவி
வெந்ததுடல்சொந்ததுயிர்வேறுதுணைகாணே
னந்தனருள்மைந்தவெனைநண்ணியணைநல்லோய். (௯)

கையிணைநெருக்கும்வயிறெற்றுமலிகண்ணீர்
மெய்யினுறவேமுலையின்மீதுறவுதிர்க்கு
மைம்முகில்நிகர்க்குமணிவண்ணனெனுமால்கொள்
செய்யதிருமங்கைதுயர்செப்பவெளிதன்றே. (௧௦)

வானின்மதிவாவெனவருந்துமவர்போன்று
ஊனமுடவன்சிமையமுற்றபிறகுமுன்
பேர்னிமிர்வபோலுமொழியொத்துவினையென்பா
ரானிளமடக்கினையுன்னிலவனையான். (௧௧)

காளமுகில்போலுமவனெய்தும்வகைகாணே
நாளையதிபாதகமியற்றுவமுனேனோன்
மாளுவதுவேகருமமென்றுமனவெந்தீ
மூளவுயிர்மையைமுளரித்திருவயர்ந்தாள். (௧௨)

அன்னமனலுற்றதெனவேயணையில்வீழு
மின்னினுயிரொன்னவருதோழியர்கள்மேவி
யென்னெனவிரங்கியிருகண்களிடையெற்றித்
துன்னினர்கள்மெய்தழுவினார்கடுளிசோர. (௧௩)

நொந்துகனலாகியெழுமேனிதனைநோக்கிச்
சந்துபனிநீர்புழுகுதந்துமெய்விடுத்தா
ருய்ந்தமலரிந்திரையையஞ்சலெனவோடி
வந்தனளழைத்தனளம்மன்மதனவல்லி. (௧௪)

மாதினிவருந்தல்வளர்பொற்கொடிவருந்தல்
போதமருமுத்தமிவருந்தல்புவிவானி
னோதமகனற்றிருவருந்தலெனுமின்சொல்
லோதினளுருக்குமணியொற்கமகலத்தான். (௧௫)

அன்னமயிலாரமிழ்தமானமடமானே
மின்னினிடையாய்கயலைவென்றவிழிமாதே
புன்றுயிரெனத்தகையபொற்றுவரையுற்ற
மன்னன்வரல்வகைவகுப்பனவைகேணீ. (௧௬)

நீதிநெறிநூல்வழிதிரம்பிமெய்யுணர்ந்தே
யேதமுளயாவையுமகற்றிவளரின்சொல்
லோதுமவனாகிவலனுய்ப்பவனுமாகுந்
தூதுவனையேவியருள்சுந்தரனிடைக்கே. (௧௭)

பொற்றுவரைமன்னனிடைபோகவிடுதூதா
யுற்றவனுரைக்குவமுனூரிரதமேறிச்
சிற்றினமதானவர்கள்மாளவமர்செய்தே
கொற்றவனுனைப்புணர்வனீயுணர்திகோதாய். (௧௮)

ஐயனுரையன்னமொழியாவதுமகற்றும்
வெய்யவனுமுன்னம்வருவீரன்வகைவேறு
செய்வனிலைநீகடிதுதூதுவிடுதேனே
யுய்யுநலனாகியவுபாயமிதுவென்றாள். (௧௯)

என்றுமொழிமன்மதனவல்லிதனையின்புற்
றொன்றவுயிராரமெய்யுறத்தழுவியின்பா
லின்றுவருபேருதவியேழ்கடலின்விஞ்ச
மன்றல்கமழோதியெனவேமகிழ்வொடோதும். (௨௦)

மின்னுமுகிலேகிலவன்மேனியின்முயங்கு
மன்னமுறின்மன்கையமர்சங்கினியர்க்குந்
துன்னுமணியேகிலிறைதூயசிகைசேரு
மன்னவரிபாலினிதினேகுமவர்யாரே. (௨௧)

எய்துமவராரிவணெனைத்துயரின்மூழ்கச்
செய்பவர்கள்செய்கையுமெதிர்ந்தசிலைவேளின்
வெய்யகணையால்வெருவுகாதலும்விளம்பி
யுய்யும்வகைசெய்கணவனென்னுழையுறத்தான். (௨௨)

ஏதெனமனத்தினினையாவிடர்துற்ற
மாதினையணைத்தினியமன்மதனவல்லி
போதனிகராகியபுரோகிதனருட்செய்
வேதமொழிமானவனையேவெனவிரித்தாள். (௨௩)

அங்கிவனையேவியிடினல்லிமலர்மானே
சங்கொளிகொள்கையனுறைநற்றுவரைசார்வான்
செங்கமலமன்னகழல்வீரனொடுசேர
விங்குவருவானயரலென்றிவையுரைத்தாள். (௨௪)

உரைக்குரலமன்மதனவல்லியையுவந்தே
இருக்குமுதநாலுமறையோதுமவனேயத்
திருக்கறுநெறிக்குளமர்செல்வனைபெண்முன்னர்ப்
பொருக்கெனவழைத்திடுமினென்றுரைபுகன்றாள். (உ௫)

மாதிவைமொழிந்திடமகிழ்ந்தருளுமாதர்
வேதமொழிநாவினனைமேவினர்பணிந்தே
நீதசலுருக்குமணிசேருமணிமாட
மேதமகல்பூசுரவெழுந்தருள்கவென்றார். (உ௬)

கொஞ்சுசுகமன்னவர்கள்கூறுமுரைகேளா
வஞ்சமகல்கஞ்சமலர்மாமுனிநிகர்த்தே
விஞ்சுமறைநல்வடிவுகொண்டெனவிளங்கிப்
பஞ்சியடிவஞ்சியமர்பைம்பொழிலடைந்தான் (உ௭)

நூலொளிருமார்பினனுணங்கவருநன்னூ
ருலுமறைநாவினனலந்திகழுமெய்யன்
பாலினுறுநாரமகலப்பருகுமன்னம்
போலமலிஞானமுறுபுண்ணியன்மகிழ்ந்தே. (உ௮)

ஏசகலுருக்குமணியென்னுமடமின்மேல்
வாசமலர்தூவிமறைநாலுமலிவாய்மை
யாசிகள்பகர்ந்திருகணூர்வுறுகளிப்பா
னேசமலிநெஞ்சினெடுநின்றுததிசெய்தான். (உ௯)

உருக்குமணியோதுமறையோன்மிகவுகப்ப
வருக்கியமளித்துமணியாதனமிசைக்க
ணிருக்கறையுநாவினனிருக்கெனவிதஞ்சொல்
முருக்கிதழின்வாய்மொழியாள்பலமொழிந்தாள் (௩௦)

மால்பிரமனேற்றில்வருவோன்மகிழ்வொடெய்த
நாலுமறையோதிபதினற்பொருளெனத்தான்
கோலமுறுவேள்வியனல்கொண்டவருவப்பச்
சீலவமுதம்பருகிடும்படிசெய்விப்பீர். (௩௧)

திங்களின்மும்மாரிபொழியச்செகதலத்திற்
றங்கியுயர்தேவதைகள்மூர்த்தியொடுசார
வெங்குமருள்மெய்யினரியைந்தெழுவவெல்லா
முங்கள்மறையால்வருவதல்லதுவுமுண்டோ. (௩௨)

வேந்தரதிபாதகம்விடும்படிவருப்பீர்
சாந்தமுறுசாத்திகருணத்தினெடுசார்வீ
ரோர்ந்துயருநாலுமறையுள்ளபொருளெல்லா
மாய்ந்தமுதலாமிறையறிந்தருளுவீரோ. (௩௩)

உத்தமகுலத்துதயமாகியொளியுள்ளீர்
கைத்தலநெலிக்கனியெனப்பொருள்கள்காண்பீர்
சித்துறுமறைக்குருபர்சீரினையறிந்தே
நித்தலுமனற்பிறழும்வேள்விகணிறைப்பீர். (௧௪)

எண்கணனுநும்பெருமைகூறவரிதென்று
லிங்கினிநிகழ்த்துமவர்யாரெனவிசைத்தே
சிங்கலின்மறைத்தலைவனன்பொடுசிறப்ப
மங்குலென்னநீள்குழன்மடந்தையிவைசொல்வாள் (௧௫)

மன்னவன்விதர்ப்பன்மகளாகியவென்முன்னோன்
சொன்னநெறியில்லவசனங்களவைசோர
வென்னிடரறத்துவரையிஞ்சியினின்விஞ்சி
மின்னகரினிற்கடிதுசென்றுவரல்வேண்டும். (௧௬)

ஏகிவரலேதுகருமத்தெனவிசைக்கிற்
பூகநிரைசூழ்கழனிப்பொற்றுவரையுற்ற
மாகமுகில்வண்ணன்மதுசூதனனெம்மாயோன்
யாதவன்முராரியரியாயர்குலம்வாழ்வோன். (௧௭)

ஆரவனெனக்கருதுமையவுரைகேண்மோ
வீரனவன்யாதவர்குலத்துவருமெய்யோன்
மாரன்வெஃகுமேனியினன்மாதவன்முகுந்த
னாரணன்முராரிநவநீதனுகர்நல்லோன். (௧௮)

கண்ணன்மணிவண்ணனுயருங்கனகவெற்பு
மண்முழுதுமுண்டுமிழுமாலிருடிகேசன்
வெண்ணெய்நுகர்கள்வனொலிவேலைதனின்மேவு
மெண்ணரியசோதிபுகழ்கூறவெளிதன்றே. (௧௯)

காலயவன்மாளவகைசெய்தகரியோன்றன்
பாலின்வருநற்கருமமேபகரின்முன்னோ
ராலிலையமர்ந்தவனென்னெஞ்சிலகலாத
மாலினைவிளைத்தனன்வளத்துவரைமன்னன் (௨௦)

கஞ்சனுயிர்காயுமிறைகாளமுகில்காயா
வஞ்சனமுநாணுமெயிலங்கவரிவந்தென்
னெஞ்சுநிறையக்கணின்முனிற்பனுறவாரா
னெஞ்சில்வசுதேவனருள்செம்மலினையில்லான். (௨௧)

வினாகமழ்துழாய்பிறழுமேனியிறையென்முன்
வருவனுடனேமறைவன்மாதர்தருநெய்பால்
பருகினவனெண்ணில்குணமென்மனதுபற்றி
யுருகுமுயிரன்னவனையல்லவைகருதேன். (௨௨)

அன்னவனெனுவிகணிநெஞ்சினகலாத
மன்னவனையுன்னியவன்மார்பினெழினத்து
மென்னையறியாதுநவையெய்திடவேயென்
முன்னவன்மறத்தினுறுதுன்மதிமுளைத்தே. (௪௩)

அரியையெஃகலாக்கியலவன்களையருந்து
நரியைநலனென்றுரைசெய்நன்கிலர்கள்போலக்
கிரிகைகொடுகோநிரைகெடாதவகைகாத்தோன்
பெரியபுகழிற்சிறிதுபெட்புமில்பசாசன். (௪௪)

சேதியர்கடங்கர்குலதீயசிசுபால
னேதமுறுவான்றனையளிப்பெனிளையாளா
மாதினைமணஞ்செய்திடநாளைவருகென்றே
தூதுவனையேவினன்விதர்ப்பனருடோன்றல். (௪௫)

ஆயவனுரைத்தமொழிகேட்டவெனதாவி
மாயுநொடியின்முனரதற்குளொருவாய்மை
யாயுமறைநாரதனறைந்தமொழியாலே
தூயமணிவண்ணன்வருமென்றுடல்சுமந்தேன். (௪௬)

அறிந்தருள்மறைத்தலைவபாரினடர்கன்றை
யெறிந்துவிளவின்கனியுதிர்த்தவரியென்பா
லுறுந்தவமிலாதொருவினுனையுதயத்தே
யிறந்திடுவனிங்கிறைவனுனையிதையெண்ணி. (௪௭)

அற்பர்கள்செருத்தொழிலடக்கிநிலனோடே
விற்பெருமையெங்கணும்விளங்கவினையேன்றன்
கற்புமகலாதவகையிற்கடிதினேகிச்
சற்பவனையச்சுதனையெற்குதவுதக்கோய். (௪௮)

ஆயுமறையந்தணவெனாருயிரலந்தே
யோயுமுனரிற்கடிதினெண்டுவரையுற்று
மாயவனுநாளையுதயத்துவருவண்ண
நீயுதவிசெய்தருளுகென்றுபினிகழ்த்தும். (௪௯)

நளனெனுமகீபன்மொழியாலனநடந்தே
யளவிலுயர்கற்புநிறையெங்கள்குலமாறும்
வளமையுறுகன்னிதமயந்தியெனுமாதி
னுளமகிழவேயுரைசெய்தூதுமுணர்வாயே. (௫0)

மாதவனருட்படியின்வாரிதிகடந்தே
மீதுயரிலங்கைநகர்மேவிவினைவீடச்
சீதையுயிருய்யவொளிராழிகொடுசென்று
தூதினைசெய்வாயுசுதனன்மையுணர்தூயோ (௫௧)

# தூம்தவுபடலம.

ஆதலின்மறைத்தலைவனியறனதிர்சோப்
மாதுயரின்மூழ்குமென்மறுக்கமதுதீர
யாதவனிடைக்கடிதினேகுமுதவிக்கிங்
கேதுநீகரில்லையெனவிந்திரையிசைப்பாள். (௫௨)

இன்றுதுவரைப்பதியினேகியெழில்சேருங்
குன்றெனநிவந்ததொருகோபுரநல்வாயில்
சென்றுபிறமன்றவர்கடேவர்களிலங்க
வன்றிவுலகுண்டருளுமாதியையடைந்தே. (௫௩)

எஞ்சில்குணமாயவமுராரியெனவேத்திச்
செஞ்சொன்மறையோதியரிசித்தமகிழ்வித்தே
யஞ்சுதலிலாமலெனதாவிநிறைகாதல்
விஞ்சியெழுமாறதனைமெல்லெனவிரிப்பாய். (௫௪)

கோவியர்கள்காதலெழவேகுழல்கொடூது
மோவியமுநாணுமுருவாவுனதுமாலின்
மேவியவுருக்குமணியானமடமின்னின்
றேவியுயிருய்யவருளென்னுமுரைசெய்வாய். (௫௫)

சிற்றினமதாகவருதீயசிசுபாலன்
சுற்றமொடுநாசமுறவேதொடரவேகி
விற்றெழில்வயங்கிடவுருக்குமணிமின்னை
யுற்றுமண்நீபுணருவாயெனவுரைப்பாய். (௫௬)

கூனிவருவாணிமிரவங்கைகொடுகோதின்
மேனிதழுவுங்குமரனுக்குயர்விதர்ப்பன்
மானனதுதேவியெனவேவரமளித்தா
லானியிலையென்னுமொழிநீயுரைசெயையா. (௫௭)

சிங்கமெனவந்துசெருவென்றவசன்மூன்
றெங்கள்குலவிந்துமதியோடுமணமெய்தித்
தங்கணகருற்றுயர்தவாவலியெனத்தா
னங்கைபிறழ்நேமிவரவேயருள்செயையா. (௫௮)

இலங்கைநகரின்மிதுலைமாமயிலிருந்தே
கலங்கும்வகைசெய்தநிருதன்னுயிர்களைந்து
வலங்கொளுமிராமனெனவந்தருளிவீரந்
துலங்கியுறமன்னனெனைமன்னும்வகைசொல்வாய். (௫௯)

காலனெனவந்தடர்கராவினலைகைம்மா
மூலமெனவன்கலுழன்மீதுசென்முராரி
சீலமெனவென்வினைகடீரும்வகைசெய்ய
நீலமுகில்வண்ணன்வரவேதுவறிநீயே. (௬0)

இன்னபடி சொல்லுமுறையென்னவறியாதேன்
சொன்னமொழிதன்னுணலனுள்ளதுதொடுத்துப்
பின்னுமிதமானவசனங்கள்கொடுபேசி
மன்னனெனைவந்தணையுமாறுரைவகுப்பாய். (௬௧)

நீரொடும்வளர்ந்துநிறைசெந்நெலொடுகன்னல்
காரொடுமுலாவுகதலித்திரள்கள்காணுஞ்
சீருடையபூகநிரைசேர்கழனிசூழு
மூர்களிருநூறுமகிழ்வோடுதவுவேனுன். (௬௨)

வீசுகதிரின்சுடர்விளங்குமணியீட்ட
மாசின்மதிபொன்னினம்வயங்கியுறுமாரந்
தேசுமிகழாபரணமாடைவிடுதேர்கள்
வாசியிபமோடருள்வனீகடிதுவந்தால். (௬௩)

சேறியுறுகாதலுரைசெய்துதிருமாலோ
டறினலனெய்தவருவீர்கொலெனவிற்றைக்
கூறுமிருணூறுகதிர்கேட்டிசையுதிக்குங்
காறுமெனுடற்குளுயிர்காணுமறிகற்றேய். (௬௪)

வாயுவெனவேகமலிவாசிநிரைபூண்டே
யேயெனுமுனெய்தவதிலங்கியவிமான
மாயதொருதேரின்மிசையேறியருளையா
மீயுயர்கடற்றுவரையேகியிவண்மீள்வாய். (௬௫)

இன்றுதுவரைப்பதியினேகிநெறிநாளை
மன்றல்கமழ்கூந்தளவமாயனொடுவந்தா
லென்றனுயிருமொழிவதில்லையதுபோற்செய்
நன்றியிலையென்றுரைசெய்நாயகிநினைந்தே. (௬௬)

மழைமுகிலின்வண்ணனருள்மாறுமறைமுன்னேன்
விழைகருமரும்பலவுமோலையின்விரித்தே
புழையின்விழியொத்தகணிமாதவளையுள்கித்
தொழுதகையினியமறையோனுமிவைசொல்வான். (௬௭)

அன்னநடையாகியொளிரன்னையயரேனீ
சொன்னநலனையதுவராபதியில்வாழு
மன்னவனுனைப்புணரவேவரவுரைத்துன்
முன்னம்வருவேனெனமறைத்தவன்மொழிந்தான். (௬௮)

மறைமொழியிளுசிகள்வழங்கினன்மகிழ்ந்தே
யுறுபுரவிபூணிரதமுற்றனனுவந்தவ்
விறைவியுமெழுந்துகடிதேகெனவிசைத்தங்
கறைவதன்முன்வானயனமாகிடவுயர்ந்தான். (௬௯)

வேறு. அம்பொன்மாமணிவிஞ்சதேரினனந்தணாளர்குலக்கொழுந்
தும்பர்மீதினெழுந்துசெங்கதிரோடிமேல்கடலூறவே
யிம்பர்மாவொடுகடவுசாரதியெழிலிமேல்விடவியன்மறை
நம்புநாவினன்வரைகள்காடுகளகலநாடுகளெண்ணியே. (௭௰)

வாரிதிக்குளெழுந்துமாருதம்விசியோடுமேரக்கல
னேரெனக்கடுவிசைகொடேயிரதத்திலேசெறியேகிவான்
காருறைத்துறுகோடரத்துயர்கதலிகைத்திரள்கவினுறச்
சிருதித்தமர்துவரைமாநகரணுகினன்றிகழ்வேதியன். (௭௧)

அண்டரிந்திரரந்தரத்துவிமானமோடுமமர்ந்துற
வெண்டவத்தினர்நிலவுநம்மிறையிரணியப்பதியிலகவே
முண்டகத்துறைமாதுமார்பன்முராரிமேவுதிருப்பதி
கண்டனன்விழிகளிகொளச்சதுமறையையோதுகருத்தினன். (௭௨)

செம்பொனாலவிரெயில்கள்சூழகன்வேலைசின்றுசிறந்தெழு
வும்பர்வானினுயர்ந்தகோபுரமண்டபங்களுமொளிகொள
வம்புராசியெனத்திரண்டனவணிசம்வீதியினடையவே
வம்புலாவியவளகவாணுதன்மாதர்வாழ்துவராபதி. (௭௩)

மின்னுமாமணிமிளிர்வகோபுரமும்பரவானின்விளங்கியே
நன்னிலாவவிர்தரளமாளிகைநிரைகள்வில்லிடுநகர்தனிற்
புன்னின்மால்வரைகயிலையங்கிரிநிலவெற்பணிபொற்பினாற்
றுன்னுவீதிகடோறுமல்லல்பிறங்குநன்மைதுலங்கவே. (௭௪)

தேவர்மாமுனிவோர்கள்வந்துதிரண்டுமாமலர்சொரியநற்
பூவிலோனரனேடுமிந்திரனமரர்மாதர்கள்பொலியவே
நாவினுன்மறையறையும்வேதியர்நாவலோர்துதிநவிலமா
மூவராமொருமுதல்வன்வாழ்பதிமுரசினோசைமுழங்குமால். (௭௫)

வீதிதோறுநெருங்குமாபரிதேர்கள்வேழம்விளங்கிடச்
சோதிவாள்கதைவின்முசுண்டிதுலங்குகையினர்சூழநற்
கீதமெல்லிசையாணர்வீணைகளத்தினார்கிளிபோலவே
மாதரார்களிலங்கிவாழ்துவராபதித்திருமாநகர். (௭௬)

சந்துபாடலமகிழ்பலாமுகிழுவபூகநிறைந்தெழு
மந்தமாநகர்முந்துமாமறையந்தணாளனடைந்துபின்
றிந்தமாபுரியியையுமாபதியெந்தலோகமுமிலையெனச்
சிந்தையாரநினைந்துதேரினில்வந்துவீதிசிறந்தனன்.

வீதிநண்ணியமைந்ததேரினெழுந்தமாமறைவேதியன்
சாதுரங்கமிடைந்துகாகளமோடுபேரிதழங்கிட
மாதவன்கருணாகரன்கருமேகவண்ணன்மகிழ்ந்துவா
ழேதமின்மணியதிர்கொள்கோபுரவாயிலெய்தினனெழிலுற. (௭௮)

ஆயுரான்மறையந்தணாதிபன்வாயில்வந்தமர்வேலையின்
மாயனயன்முராரிமாதவன்வாமனன்றிருமாலரி
வேயினூதியவாயனச்சுதனச்சராவணைமேவுவோன்
ஆயமாமுகில்வண்ணநாதனிருந்தவாறுசொல்வாமரோ. (௭௯)

விளங்குமாமணிநீலமாரவினங்கள்வித்துருமங்களுங்
களங்கமில்வயிரியம்வயிரங்கள்மின்னுறுகங்கணந்
துளங்கவில்லிடுபதுமராகமன்மரகதங்கடிதைந்திட
வளங்கொடோரணிகோடிமீதுயர்மண்டபத்தின்மருங்கரோ. (௮௦)

வேறு. பொன்னின்குடையுயர்சாமரைபொலியக்கதிரவிர்பொற்
றன்னுமெழின்மணியின்றிரடாளத்துடன்றுலங்க
வன்னந்திகழரியாதனமிசைமாமுகின்மான
மின்னுஞ்சுடர்ப்படையாழியனிருந்தான்றிசைவிளங்க. (௮௧)

நீலத்தடவரைமேலவிர்நிறையுங்கதிர்பொருவக்
கோலத்துறுமவுலிச்சுடர்திசைவாலொளிகொள்ளப்
பாலைத்தருமதரத்திகள்பலகாலுறநோக்கும்
வேலொத்தகண்மிளிர்மெய்யெழில்விபுதர்க்கிறையொப்ப. (௮௨)

மின்னிலுமணியாரமுமினிராபரணஞ்சூழ்
முன்னுறிகழ்திருமார்பமுமுளரித்திருமுகமு
நன்னுதலிழ்ந்திடவில்லிடுநன்னித்திலநகையும்
பொன்னுடையிற்பிறழுங்கடிதடமுங்கவின்பொலிய. (௮௩)

காதிற்பிறழ்மகரக்குழைகதிர்பொன்னொளிகாட்டச்
சோதித்திருப்புருவத்தெழில்குனிவில்லெனத்துலங்கித்
தீதற்றநற்றிருவாய்மலர்திகழ்துப்பெனச்சிறப்பப்
பாதத்தணிவீரக்கழல்படிவானவிர்பரப்ப. (௮௪)

அலருங்கதிரவனென்மணியின்றிரளமரும்
வலயங்கவினுறுதோளிணையுயர்மந்தரமான
வலையும்புனல்குடைந்தேறியவரிவைத்திரடொழவே
கலையன்றருள்கரமீதணிகடையம்பொலிவுறவே. (௮௫)

அம்போருகமலராமெனவருட்கண்ணிணைசிறப்பக்
கம்பாரமுமணியும்பிறழ்களமுங்கவினுறவே
யம்பாசிழையொளிவீசிடவணிமார்பினிலழகாய்
வம்பாணிறைதொடரோடணிதுளபத்தொடைவயங்க. (௮௬)

கருமாமுகில்காயாமலர்கடலஞ்சனமெனவே
திருமேனியையுடையானவிருடையான்செகமுடையா
னருளாளனமுயர்கேசவனமரர்க்கிறையமல
னுருவாகியுமருவாகியுமுயிர்தோறமரொருவன். (௮௭)

பண்ணேர்மொழியார்சோபனப்பல்லாண்டிசைபகா
விண்ணோர்சதமகனென்டவர்விரிஞ்சன்மலர்பொழியச்
கண்ணூரமுதச்சோதியன்கருணாகரன்றிருமால்
மண்ணோர்தொழவிருந்தான்மரகதமாமலைமான.

சந்தார்பொழிற்றுவராபதிச்சதுவேதனும்வியவா
வந்தேயுறக்குடபாலினின்மறையோர்புனலிறையாக்
கொந்தார்துளவணியும்மெதுகுலதீபகமன்னன்
செந்தீபமுமிருபாலெழவின்றன்றிசையிலக.

அன்றனைமுன்வருமச்சுதனழகார்முகிலெனவே
நின்றேயருளும்வேலையினிறைவேதியன்வரவை
யென்றேயுடித்தவழ்கோபுரவணிவாயிலொரியம்பக்
குன்றன்மழைதடுத்தானிவண்கொணர்மின்னெனக்கூற.

மதுசூதனன்மொழிகேட்டியர்மணிவாயிலினமர்வோர்
சதுமாமறைநிறைவேதியததிபாலிழுதயிலு
மெதுவாகுலவிறையோனுனையழையென்றனனெனவே
யிதமாயுடல்புளகம்முறவெழுவேதியனெய்தி.

வேறு. கண்டனன்மணியவிர்கனகமண்டபத்
தண்டருமுனிவருமந்தணாளரு
மெண்டிசைத்தலைவருமகிழ்வொடேத்திடும்
புண்டரீகத்தரும்புரவலன்றனை. (கஉ)

திருவளர்மார்பனைத்தேவதேவனை
மருடருபிறவிதீர்மருந்தைமாயனைக்
கருமுகில்கமலங்கொண்டெழுந்தகாட்சியா
முருவனைநிறையுமுத்தொளிருமெய்யனை. (கங)

சுத்தசாத்திகுணத்தொழிலினான்றனை
யத்தனையருச்சுனமொசித்தவையனை
வித்துருமத்தெழில்விளங்குவாயனை
நத்துறுநித்திலநகைமுகத்தனை. (கச)

விதியொடெவ்வுலகமும்விதித்தாபனைச்
சுதைதருமொழியனைத்தூயசோதியைப்
புதிதலரரவிந்தம்பொருந்துங்கண்ணனை
மதியெனவயங்கியவதனத்தான்றனை. (கரு)

மகரகுண்டலம்பிறழ்காதின்வள்ளலைத்
திகிரிசங்கமர்ந்துளசெங்கையான்றனை
நிகரிலாமுராரியைநீலவண்ணனைப்
[illegible]

களவினில்வெண்ணெய்நெய்கவருங்கண்ணனை
யொளிகொளுத்தரிகத்தினுடனுலாவிய
துளபமுமாரமுந்துலங்குமார்பினின்
மிளிருமுந்நூலணிவித்தகன்றனை. (௯௭)

திவளுமாழைத்துகிறிவளுவான்றனைக்
கவளமார்கரிநடைகாட்டுஞ்சோதியைத்
தவளமார்தளவுடன்சாதிமஞ்சரி
குவளையோடிலங்கியகுஞ்சியான்றனை. (௯௮)

பணவரவணைமிசைப்பதுமநாபனை
யுணவுளவுயிர்தொறுமுறைகுவான்றனைக்
யணிகலன்பிறழ்வுறவருக்கனுமெனா
மணியுடைநாண்செறிமருங்கினான்றனை, (௯௯)

பொலன்கொள்பீதாம்பரம்புனைகுவான்றனைக்
கலங்குறவேலையைக்கடைந்தமந்தரம்
விலங்கொளுவகைசெறிவியாளமாமெனத்
துலங்குகேயூரங்கொடோளினான்றனை. (௧௦௦)

அண்ணலையமலனையாதியோன்றனை
வெண்ணெயைநுகர்ந்தருள்வித்தகன்றனைப்
புண்ணியவிதர்ப்பர்கோன்புரோகிதன்மகன்
கண்ணினாற்கண்டனன்களிக்குஞ்சிந்தையான். (௧௦௧)

உளமகிழ்வெய்தவென்புருகினானுவந்
தளவிலன்புளநிறையர்தனாளனும்
வளையொடுதிகிரிசேர்மன்னன்மைமுகி
லொளியெழுமேனிகண்டுவந்துபோதுவான். (௧௦௨)

சீதராவாழிசிராமவாழியெம்
மாதவவாழிமாமாயவாழியெம்
யாதவவாழியெம்மிறைவவாழியென்
றோதியேமலர்சொரிந்துவந்துபோற்றினான். (௧௦௩)

சூழ்ந்தவிர்மணியணிதுலங்குமார்பனை
யாழ்ந்தெழுமன்பினோடாசிகூறியே
தாழ்ந்தனனிருவினைதருமமோங்கிட
வாழ்ந்தனன்மரகதவடிவவென்றனன். (௧௦௪)

சிந்தைநற்களிப்பெய்தத்துதிசெய்வான்றனை
வந்ததென்கருமமார்வரவிடுத்தபே
ரந்தணவுரைநகரறைகுவாயென்றான்
செந்திருமகளுறத்திகழுமார்பினான், (௧௦௫)

ஈதரன்கவினுறுங்கமலச்செங்கணு
னேறியநலமெழுமுரையினல்மகிழ்
வேதியன்புளகமெய்யெழவிரும்பியே
யாதவகேட்டியென்றியம்பலுற்றனன். (௧௦௬)

குண்டினபுரத்தரசியற்றுங்கொற்றவ
னெண்டவர்வியப்புறும்விதர்ப்பனென்பவன்
பண்டுசெய்தவத்தினற்பயந்தபைங்கிளி
தெண்டிரைக்கடலமுதனையசெந்திரு. (௧௦௭)

உத்தமகுணத்தள்கற்புயருமோதிமஞ்
சித்திரங்கவின்கெடச்சிறந்தமேனியா
ணத்துறுவித்திலநகையள்நன்மதி
யொத்தொளிர்திருமுகமொளிருமொண்ணுதல். (௧௦௮)

மின்னெனுமிடையினள்வேய்கொடோளினள்
அன்னமென்னடையினளாம்பல்வாயினள்
பொன்னவிர்மேனியாள்புயல்கொள்பூங்குழ
றன்னிகரிலாதவேற்றடங்கண்மாமயில். (௧௦௯)

விற்புருவத்தினள்வீணையாழெனச்
சொற்பகர்கிளியனள்சோதியாயெழுங்
கற்பகக்கையினள்கமலமாமுகைப்
பொற்புறுபயோதரமிலங்குபூங்கொடி. (௧௧௦)

மல்லலார்வடவிலைநிகர்வயிற்றினு
ளொல்லையினேடுநீர்ச்சுழிகொளுந்தியா
ளல்லிசேரணிச்சமெல்லனத்தின்றூவிசெம்
பல்லவமுறுத்திடச்சிவக்கும்பாதத்தாள். (௧௧௧)

வேறு. தாதவிழுசெங்கமலபீதினுறுதையல்
பூதலமுயர்ந்தபுவனங்கடிசையெங்கு
மாதவநிறைந்துறவமர்ந்தருளுமங்கைக்
கோதியவியற்பெயருருக்குமணியென்பாள். (௧௧௨)

அன்னவள்விடுக்கவருதூதனலையாழி
தன்னினிவர்பொற்புடையநற்றுவரைசாரு
மன்னவசுதேவனருள்மைந்தவுயர்வானின்
மின்னுமுகில்மேனியவெனவுரைவிரித்தான். (௧௧௩)

வேதியனுரைத்தநலமிக்கமொழிகேளாத்
தீதகலுருக்குமணிசிந்தையினினைந்தே
யேதுனைவிடுத்தகருமத்தினியவெல்லா
மோதெனவலைகடலினுற்றவனுரைத்தான். (௧௧௪)

வேயினிசையூதியருள்வித்துருமமொத்த
வாயனிவைகூறமறைவல்லமறையோனு
மாயமுகில்மேனியவனந்தவருளாள
தூயமதுசூதனவெனுவினிதுசொல்வான். (௧௧௫)

வேலெனும்விலோசனியுருக்குமணிமின்னி
னீலமுகில்மேனியெழினெஞ்சினினிறைந்தே
மாலெழமயங்கிமனனொந்துமெய்யுமாழ்கி
வேலையொலிமீதெழமெலிந்துளம்வெதும்பி. (௧௧௬)

நிறையுமுகிலொத்தவிர்சொணின்வடிவுகண்கண்
டறிகிலன்விருப்பமுறுநின்செயலினூர்வ
முறமயலெழுந்துயிருமோயுமுடல்சோருஞ்
சிறியவள்படுந்துனிதெரிக்கவரிதையா. (௧௧௭)

விழியினுறுநீர்களலைவேலையெனவோட
வழுமலரணைக்குள்விழுமாவியுடல்சோரு
மழைமுகில்கணேர்வரினின்மேனியெனவாடித்
தொழுமெழுமுழைக்குமயல்சொல்லவெளிதன்றே. (௧௧௮)

கீதவிசைகற்கிலள்கிளிக்குணாபயிற்று
ளோதிமலர்சூடுகிலளூசல்மிசையாடாள்
காதலெழமின்வளைகள்கைகழலநொந்தே
யோதுவதுநின்பெயரலாதுபிறிதோதாள். (௧௧௯)

கந்துகமடிக்கிலள்மதன்கணைகளேவ
நொந்துடல்வெதும்பியுநுடங்கிவிளைகாதல்
வந்துறநெடுந்துனிகடூரும்வகைகாணுள்
சிந்தையினிலுன்றனைநினைந்துருகுசெய்யாள். (௧௨௦)

அன்னமும்விரும்புகிலளாடுகிலணீருந்
துன்னுமலர்சாந்துபனிநீர்மெய்சுடுமென்னு
மின்னுமுகிலஞ்சனவிலங்கலொளிர்காயா
நன்மலரெனத்திகழுநின்வடிவைநாடி. (௧௨௧)

பேயினுயிர்பாலினொடுமுண்டபெரியோனே
யாயர்குலம்வந்தருளுமையவனேயென்றே
யோயுநகில்மீதினிழையுள்ளவைகளெல்லாந்
தீயுமுருகுங்கருகுமுள்ளமயல்சேர. (௧௨௨)

மருதிறநடந்தருளுமாயவெனுமாரன்
பொருதுறவெழுந்தமயல்போகவணைமீதின்
மருவியணையாதவமுராரிதிருமாலென்
றுருகியெழுவாடுயரமோதவரிதையா. (௧௨௩)

குழவிசைகொடியருள்கொண்டலெனுமாவி
பழனுழுவலமேலணிகலன்களுளயாவு
மழவெழவெரித்துபொடியாகிடவயர்க்குங்
கழைபொருவுதோளிதுயர்காணவெளிதன்றே. (கஉச)

ஓதுவதுமுன்பெயர்களுள்ளுவதுன்மேனி
நேரவுன்மாநகர்சிறந்திடுதிசைக்கண்
காதலெழவேயுடல்கரைந்துயர்கரத்தால்
மாதுதொழுமச்செயல்வகுக்கவரிதையா. (கஉரு)

கோவியர்களுணவவர்கூறைகொடெழுந்தே
காவுயர்குருந்தின்மிசையேறியகளுமின்
ணுவியினுநெஞ்சிடையுமம்பகவிணைக்கு
ணுவினுநெமக்குமுளையென்றுமுளைநல்லோய். (கஉசா)

உன்னவரிதானகவின்மாதவவுன்வீரத்
தன்னிகரிலாதசெயலின்மயறழைக்கு
மன்னம்வடமீனனையவாரமுதணங்கா
மின்னுனதுதேவியெனவேநலன்விரும்பும். (கஉஎ)

அற்புதமுகுத்தவரிகேசவவனந்த
சற்பவணையச்சுதசழக்கர்தலைசிந்த
மற்பொருதமாயவுனதாசையின்வருந்துங்
கற்புடையகன்னிகைகருத்தையுணராமல். (கஉஅ)

ஏதநிறையுங்குணனுருக்குமனனென்போன்
றீதுமுயல்வோனெறியில்சேதிபனிடைக்கே
யோதரியவொண்கொடியையீவனெனவுன்னித்
தாதுவனையேவினனறங்கள்மறைசோர. (கஉகூ)

சீலமில்முனோனுரைசெவிக்குறுதலோடுங்
காலன்வரவேயுயிர்கலக்கமுறுவார்போல்
வேலின்விழியாள்விதலையுற்றுவியல்வேலை
யாலநுகர்வார்தமினுமஞ்சினளயர்ந்தாள். (கஙo)

அஞ்சலெனவேறுதுணையற்றவளவாழி
விஞ்சியுறுநாகவணைமேவியருளில்லாக்
கஞ்சனுயிர்செற்றகருணகரவெனுவி
தஞ்சமுனம்வந்தருள்செய்யென்னுமுரைசொல்லி. (கஙக)

மாதினைவருந்துமவளென்னைவருகென்றே
யாதவனென்னுயகனிடைக்கடிதினேகித்
தீதுமுயல்வோர்கள்செயல்செப்பெனவுரைத்தா
னாதியெனவோதமுறுமந்தணனுரைப்பான். (கஙஉ)

முன்னையுகமெண்டிசையுமூவுலகுமஞ்ச
வின்னல்செயிராவணனிலங்கைநகர் தன்னில்
மன்னவனிராமனைநினைந்துளம்வருந்து
மின்னெனவிருந்தனள்விதர்ப்பன்மகள்வீர. (க௩௩)

என்றுரைபகர்ந்தவனுருக்குமணியென்னுந்
துன்றுகுழல்மாமயிலுரைத்தசொலையெல்லா
மொன்றுமொழியாமலுலகங்களையுமுண்டால்
மென்றளிரின்மீதுதுயில்வானுமிவிரித்தான், (க௩௪)

கழைகொடிசையூதியருள்கண்ணவுனைநாடித்
தொழுதுமயலெய்திமெலிசுந்தரியுனக்கே
யெழுதியநலோலையிதுவென்றுகையினீந்தான்
மழைமுகிலின்மேனியிறைவாங்கினன்மகிழ்ந்தே. (க௩௫)

வாங்கியருளோலைதனைவாசகமவலான்கை
யீங்கிதனையோதுதியெனக்கடிதினீயத்
தீங்கிலமறைப்பொருளுறத்தெளியுமின்சொல்
லோங்கியிடமூதறிவுணர்ந்தவவனோதும். (க௩௬)

வேறு. திருசெயுருக்குமன்செயலினாலுறும்
வேதனைகடுவெனவிளையவெண்ணெயுண்
சோதிமுன்னுருப்பிணித்தோகைதன்றுய
ரீதெனவெழுதியமொழியியம்புவாம். (க௩௭)

மாயவமானவமதுரைமன்னவ
வாயநீகேட்டிவந்தருணின்றேவியாந்
தூயகுண்டினபுரத்தோகைகாதலா
லோயுநாளெழுதியவோலைவாசகம். (க௩௮)

விண்ணவரிறைவிடுவருடமிஞ்சவே
மண்ணுறுபொதுவர்கள்மகளிராவுயக்
கண்ணகன்வளையினைக்கவித்துக்காத்தருள்
புண்ணியவொன்றுநீபுகலக்கேட்டியால். (க௩௯)

சுருதிகடெரியவுமரியதோன்றனின்
கருமுகிலெனக்கவின்காட்டுஞ்சோதிசெய்
யுருவினின்மயலெழநீயுருமையால்
வெருவுவென்காணெனைவேதத்துள்ளுளாய். (க௪0)

கண்ணுனைமனத்துனைகாண்கிலேனுனை
யெண்ணுமுன்வருகுதியருளுமீகலாய்
வெண்ணெயுண்கள்வவுன்விரகெலாமொரு
பெண்ணுடன்வளர்த்தியோபெருமையானநீ. (க௪க)

# தூதேவுபடலம்.

குருந்தமேலேறியங் குரவைகோத்தும்வாய்
பொருந்துவேயூதியும்பொதுவர்வெண்ணெய்பா
லருந்துநீயடியனேனுள்ளமாடவே
யிருந்தனைகாண்கிலேனென்னமாயமோ. (கசஉ)

ஆயர்தம்பாவையர்க்கமுதமாகநல்
வேயிசையூதிமுன்விளங்கினின்றநீ
வாயுநேர்படக்கடல்வங்கம்போலவே
யோயுமென்முன்னிலாதொளிக்குமாறென்னே. (கசங)

துலைவிலாப்பொதுவர்தந்தோகைமார்க்குநற்
கலவியுமளித்தவர்களிப்பவாழுதி
யிலவிதழதரமீந்தெனையணைக்கிலாப்
புலவியென்னருடியைம்பூதநாயக. (கசச)

சேணிலனுளனிறையென்றுசெம்மருன்
காணுதியெனக்கனல்கனகன்கையறை
ஆணில்வந்துதித்தநீயென்முன்றோன்றலா
வீணினையுரைத்தருள்விளங்குநேமியாய். (கசரு)

கஞ்சமாமடுவினிற்கராவினாலைய
ரெஞ்சிரோலமழைக்கமுன்னெய்தினின்றநீ
பஞ்சபாணத்தினாலையும்பாவியேன்
றஞ்சிடாதொல்லையிற்றோன்றுதூயவ. (கசசு)

ஆனாவாயுன்றிருவடியினன்றியே
மீளாத்துணியென்மேல்விளைத்துலைக்கினும்
காளமாமுகினிறக்கண்ணநீயலா
ஞாளிபோன்றவரைநானத்திலேனரோ. (கசஎ)

உன்னையென்னுயிரெனவுள்குநெஞ்சொடு
நின்னிருதிருவடிநெகிழலாதய
ரென்னினைவறிகிலாணீதியெண்ணிலா
னின்னலொன்றிடுமுருக்குமனென்முன்னவன். (கசஅ)

பாஞ்சுறுகதிரொளிதனிலும்பாரினில்
மேஞ்சுறுமின்மினிவிழுமிதாமென்றும்
ஆஞ்சுறுகற்பகத்தழகையன்றென்றே
காஞ்சிரநலனெனுங்கயவர்போலவே. (கசகூ)

நெறித்திறன்றிறம்பியநீசனாகியே
மறத்திறனுறுசிசுபாலமன்னன்கைக்
கறத்திறங்கெடவெனையளிப்பனென்றன
னிறத்துளவுதவுவர்க்குதவிநேமியோய். (கரு௦)

நன்றியிலானுரைசெவியினண்ணநான்
பொன்றிலாதிருந்ததுபுயலின்மேனிநா
ளன்றலர்தாமரையமைந்தமேனியா
மூன்றனைக்காணலாமென்னுமூற்றத்தால். (கடுக)

உயிர்சுமந்துழன்றனனுலகுணேமியா
யயர்வொழிந்தடியனேற்கஞ்சலென்றதோய்
தயிரளைகைகளாற்றமியளேத்தழீஇத்
துயராறுத்தாளுதிவந்துதோன்றியே. (கடுஉ)

பாரிலானிரைக்குமொண்பாவைமார்க்குநீள்
கோரவெம்பருவரல்குறுசவந்திடில்
வீரியரமர்செய்துவிலக்குமெய்ந்நெறி
யாரியவறிந்தநிற்கறையவேண்டுமோ. (கடுஙு)

அரக்கனதுற்றெனவளக்கரிற்கவிழ்
மரக்கலமெனவடியேன்மெய்வாடுமுன்
பொருக்கெனவருகலையென்னிற்பொன்றுவன்
பரக்கழியுணக்குறும்பதுமநாபனே. (கடுச)

உடலிடையென்னுயிரொருவுமுன்னொலி
கடலிடையமருவாய்கடிதினெய்தியே
யிடமுடையுனதுமார்பணைத்திடாயெனிற்
கொடியனேனுயிர்நமன்குறுகுங்காண்டியால். (கடுரு)

நானைவந்தெனைமணநண்ணிலாயெனில்
மாளுவனெரிதனில்விழுந்துமாண்டபின்
மீளுமோர்பிறவியின்வினையினேனைநீ
யாளுநல்வரமருளமலவச்சுத. (கடுசு)

ஆதலிலச்சுதவடியனேனிங்ஙன்
சாதலின்முன்னம்வந்துதவிச்சார்வுறுஞ்
சேதிபன்சிரங்களைந்தெதிர்திசெய்யகண்
மாதவவுன்றிருவடிவணங்கினேன். (கடுஎ)

வானுநீமண்ணுநீமற்றுமுற்றுமே
யானநீமதுரைமாநகரினங்கையாற்
றுனுவந்தாரமுறத்தழீஇக்கொணற்றவக்
கூனியாய்ப்பிறந்திலேன்கொடியளாயினேன். (கடுஅ)

நெடியவமாதவநிலமளந்தரு
ளுடையவவானிரையுவந்துமேய்த்திடு
மடவியிலுன்றிருவடியிலூர்வுறும்
பொடியகாய்ப்பிறந்திலேன்பன்மையாயினேன் (கடுகூ)

அலையுலாநதிகுடைந்தன்னம்போனடை
நலனுலாமகளிர்நக்கினத்தராகியே
மெலியவாண்டொல்லையின்மேவிநீகவர்
கலையதாய்ப்பிறந்திலேன்கவலையுள்ளத்தேன். (௧௬௦)

ஆயர்மாமடநல்லாரார்வமோடெய்தச்
சேயமான்புலிகரியாவுஞ்சேரநின்
வாயினுலிசையெழமகிழ்வொடூதுநல்
வேயதாய்ப்பிறந்திலேன்மலினமேவுவேன். (௧௬௧)

குணங்கெடுங்கருதலர்குரகதங்கரி
பிணம்படக்குருதிகள்பெருகநீடுபேய்க்
கணங்குதித்தாடவேபொருதுகாத்தெனை
மணம்புணர்ந்தருளவாவாசுதேவனே. (௧௬௨)

ஏழையேனறைந்தபுன்மொழிகள்யாவையு
மாழியாய்பொறுத்தியாலடியனேனைநீ
சூழவாநாளையென்றுனியினுற்பல
வூழியாங்கடிகையொன்றறிதியுத்தம. (௧௬௩)

இனையனபொருடரவெழுதும்வாசக
மனையவுமொழிந்திடக்கேட்டவாழியா
னினையவுமரிதிவள்கற்புநீணில
வனிதையர்திலதமென்றுளமகிழ்ந்தனன். (௧௬௪)

நாயகியெழுதுவாசகத்தினன்குறத்
தீயுறுந்துப்பெனவுருகுசிந்தையான்
றாயகம்பிரிந்திடைப்பாடிசார்ந்தவன்
பேய்முலையுண்டபீதாம்பரத்தரி. (௧௬௫)

துய்யபாற்கடலிடையமுதிற்றோன்றிய
செய்யவளாமெனத்திகழுஞ்சிந்தையான்
மையில்மாணவக்குறளாகிவானுளோ
ருய்யவேமுலகளந்தருளுமூழியான். (௧௬௬)

செந்திருமகளெழுதனையசெய்கையால்
வந்திடும்புளகமெய்ந்நிறையுமாதவன்
சிந்தையிற்களிப்புறும்வாசுதேவமா
லந்தணன்றனக்குரையருளினனரோ. (௧௬௭)

அருந்ததியனையவளலையினுயிழை
யிருந்துழிநாளையேயெய்திநன்மணம்
பொருந்துவன்பாணியாதிரதமீதுபோய்
வருந்தலைமின்னெனவுரைவழங்குவாய். (௧௬௮)

விண்ணவரெதிர்க்கினும்வேலைசூழ்ந்திடு
மண்ணவரெதிர்க்கினுமலைந்துமாமணம்
புண்ணியத்தணங்கினைப்பொருந்தவேன்மலர்ப்
பெண்ணெணுந்தத்துறலொழியப்பேசுவாய். (சகக)

இப்பொழுதிரவினிலேகியந்தண
துப்புறுமதரமின்றுணிகடர்ந்திட
வுப்புடைக்கடலிடையலரியோங்கிடு
மப்பொழுதணுகுவோமறைதியாலென்றான். (கஎ0)

இனிமொழியணங்கடைக்கெண்ணடையங்கணி
யுளமகிழ்ந்திடமூன்றுலகளந்தவன்
வளமுறுமணிகலனவிர்கொள்மார்பினிற்
றுளபமல்கியமலர்த்தொடையுமீந்தனன். (கஎக)

வாங்கினன்மதுவுகுந்துளபமாலையை
வீங்கினன்குவவுத்தோள்மகிழ்ச்சிவிஞ்சவே
யோங்கியமறையினூலேத்திஞானுளந்
தீங்கிலோனறநெறிதெரிந்தவேதியன். (கஎஉ)

கதிரவனவிரெனக்காட்டுநற்கல
னுதநியிற்சலஞ்சலமுதவுமாரமு
மதரினிமென்மொழிமறையவனுக்கீந்துமாக்
கதியுறுமிரதமுமருளிக்கார்வணன். (கஎ௩)

ஓடுயிய்விரதமேலேறியொண்கொடி
வாடுவமுன்னரென்வரவுசொல்கென
வாடினன்மகிழ்வொடுபாடியந்தணன்
வி்டயவினையெனவிளம்புவானரோ. (கஎச)

ஆரியவாழியென்னமலவாழிபோர்
வீரியவாழிநீயெனவிளம்பியே
சீரியமாயனைவிடைகொண்டேதிகழ்
தேரின்மீதேறினன்மறைதெரிந்துளான். (கஎரு)

இரதம்வானெறியுலவெழிலிதாவுறப்
பரிதனைமுடுகுகோல்வலவன்பார்வையாற்
கருதுவோர்மனத்தினுங்கடுகியேகினன்
சரதநான்மறையறிந்தவர்களெண்ணுவான். (கஎசு)

இவ்வழிதுவரையினெந்தைபாலெய்துஞ்
செவ்வழியந்தணன்செய்கைசெப்பினு
மவ்வழிவிதர்ப்பர்கோன்புதல்வியன்னமென்
னவ்விபோல்விழியினுள்செயனடாத்துவாம். (கஎஎ)

அதேவுபடலமுற்றிற்று. ஆ-திருவிருத்தம்-ருகoக.

## ௬௮-வது. அலங்கற்படலம்.

சூழவர்தருதுளியறத்துலங்கியகதைநீ
ளாழியோடுகோடாதவச்சார்ங்கம்வாளமர
லூழியாயிரமொருகணமாகவேயுலகம்
வாழ்வாழிமேலமருவோன்மலரடிதொழுவாம். (௧)

வேறு. மறையவன்வையமேல்வல்லையேகவாண்
டிறைவியம்பகமிமையாதுநோக்கியே
மறைதலுமலரணைமேவிவாரிதி
யுறையரிவடிவினையுள்குவாளரோ. (௨)

நீலமால்வரையினம்போருகந்நிறை
சோலமாய்க்குருமணிகுலவுமெய்யொளிர்
மாலினுறிவர்கொலோவருகின்றனர்
வேலைநேர்விழியினீர்விளம்புவீரெனும். (௩)

கண்ணின்முன்னெய்துவான்கரங்களாரவே
யெண்ணிருல்வினையினேன்றழுவவெய்திறன்
வெண்ணெயுண்கள்வனும்விரகன்வித்தக
னுண்ணயமிலன்கொலோவுரைமினீரெனும். (௪)

மன்னவன்றவளாவாழ்வாசுதேவன்யா
னுன்னுமுன்னென்னுயிருருக்கியுண்டவன்
பின்னரும்வந்தனன்பிரிந்துபோயின
னின்னவனின்னமுமென்செய்வான்கொலோ. (௫)

எனுமுரைபற்பலவியம்பியேந்திழை
மனமயல்மல்கிடமலர்க்கண்முத்துகக்
கனலுறநகிலின்மேற்கலன்கடந்திட
வனநடையெனுமிளணையிற்சோர்ந்தனள். (௬)

சோருமின்மயலுறுந்துணியைநோக்கியே
வாருறுமுலையின்மேன்மணங்கொளும்பனி
நீருறவிடுத்தனர்நிறைந்தசந்தனம்
வாரிமெய்பூசினர்மங்கைமார்களே. (௭)

ஏங்கினர்பொருமினரிருகண்ணீர்விழப்
பாங்கியர்பருவரற்பரவையின்னுறப்
பூங்குழல்மடமயிலெழுந்துபூவணை
நீங்கினணடந்தனணிறைந்தசோலைவாய். (௮)

பாடலமாதவிபனசமார்நிழற்
கோடுடைநாகமாமலகங்கோங்கொடு
பீடுடையாசினிபிண்டிபூகம்வா
னீடியதாழைசண்பகநிறைந்தன. (௯)

அற்புதமலர்மலிதுணர்களான்றெழும்
பொற்பெழவெழிலிமேற்பொலிந்ததாமெனுஞ்
சொற்பெழவிபுதர்தம்பதிதுலங்கிய
கற்பகமரநிரையெனவுங்காட்டுவ. (௧0)

நாகமேற்கேகயநடிக்கநல்லிசை
பூகமேலளிசெயச்சூதம்பொற்பெழக்
கோகிலங்கூவவஞ்சுகங்கள்கொஞ்சவே
யூகமாங்கனியுதிர்த்தோடுய்யானத்தில். (௧௧)

காவியுங்கமலமுங்கடிகொள்பானலு
மேவியேயலர்ந்தெழவிளங்குந்தன்மையாய்த்
தாவிநற்கயலெழத்தரங்கம்வீசிய
வாவிமீனிறைந்தொளிர்வானம்போன்றதே. (௧௨)

குரண்டநற்கொக்குறவயதுட்கூடிற்றென்
றரண்டுசேலினஞ்சரிவளையையண்டின
மருண்டுவீழ்றவொடுபிறவிமானவே
கரண்டநீர்முழுகிமீதெழுந்துகாட்டின. (௧௩)

ஓதிமந்தாமரையுறங்கச்சீகரங்
கீதமேமொழிந்திடக்கிள்ளைபேசவே
நீதியால்மகிழ்நனைத்தெய்வமாய்நினை
மாதரார்மனமெனத்தெளிந்தவாவிநீர். (௧௪)

வளையினமதிர்த்தெழவாளைதாவநல்
லளியினமரற்றிடவலையுந்தாமரை
களியனந்துயில்விடக்கயல்கள்பாயவே
யொளிகொடண்புனலலைகடலையொத்ததே. (௧௫)

பொன்னெழிற்படியெலாங்கெழுமிப்பொற்புற
மின்னவிர்மணியெலாம்விளங்கப்பித்திகை
துன்னியபங்கயஞ்சூழக்கோடுகள்
மன்னியதந்தமார்வாவிநீருற. (௧௬)

நீலமும்வயிரமுநிறைந்தவென்றெழி
லேலுமாமணிகளுமிரணியத்திழை
கோலமாந்தூணணிகோடிதுன்னவே
மேலெலாஞ்சந்திரகாந்தமின்னிய. (௧௭)

கந்தனார்தந்தைவாழ்கயிலையாமெனச்
சந்திரனார்பதந்தரணிவந்தென
விந்திரனுருறுவிமானமீதெனச்
சந்தமார்மண்டபந்தயங்காப்பணே. (௧அ)

ஆரநீள்சாலினிக்கமர்ந்திலங்கமீ
மூரியேரரம்பையிற்றமாலமூடியே
வேரிமாமலர்மலிவிதானம்வீக்கிநீள்
வாரியார்தரளமாமாலைநாற்றினார். (௧௯)

எல்லையில்கருப்புரமிழைத்தசந்துட
னல்லகுங்குமவெறிநாறமோடுறப்
பல்லவம்படுத்துமீப்பங்கயத்தினின்
மெல்லியதளவமாமலர்விரித்தனர். (௨௦)

தண்பனியயர்தனைத்தெளித்துச்சாதியும்
பண்புறமௌவலும்பரப்புமெல்லணை
மண்பவமரவருவனப்பினிந்திரை
யொண்பவளக்கொடிபோலவுற்றனள். (௨௧)

மேவினள்வெறிகமழ்மலரின்மெல்லணை
யாவியுங்குரம்பைவிட்டகல்வதாமென
வோவிலங்காந்துயர்கனலையுற்றயர்
தாவிநல்லனமெனத்துளக்கமெய்தினாள். (௨௨)

மதிகலங்கிடுமெழுமையல்விஞ்சிட
விதிகொடிதோவெனவிளம்பும்வாய்வெரீஇத்
திகளவாடுவாய்தமியளேனைநீ
வதுவைசெய்தணைத்திடவாவென்றோதுவாள். (௨௩)

கூனிவாவெனக்கரங்கொண்டுமற்றவள்
மேனிமாமணமுறத்தழுவும்வித்தகா
தேனவாவொடுமலர்தேடும்வண்டென
நானவாவெய்தநீநணுகிலாததென். (௨௪)

இன்னனகூறிநொந்தரந்தையெய்தவே
யுன்னுமால்வடிவினையுயிருமோய்ந்திட
முன்னையூழ்வினையெங்ஙன்முடியுமோவெனா
வன்னமானடையினாளயரும்வேலையில். (௨௫)

அகிலம்வானளந்தவனணைகிலாமையொண்
ணகையிலாநங்கையைநணுகுகாமத்தின்
சிகையநல்பரவமெய்சிவப்பச்செல்வபோற்
ககனமீதலறிமேற்கடலின்மூழ்கினான். (௨௬)

அனைத்துலகும்பெறுமாதிமூர்த்தியை
நினைத்திவனேபரனென்றுநெஞ்சினாற்
றினைத்துணையாகிலுந்தெளிகிலாதவர்
மனத்தினைப்பொருவினவளர்ந்தபேரிருள். (௨௭)

வெய்யவன்சுடரொளியொருவவீங்கிருள்
வையகந்திமிர்ப்பிழம்புறவளைத்திடச்
செய்யவடிசையெலாநோக்கிச்சிந்தையி
லுய்வகையிலையெனவுள்கிக்கூறுவாள். (உஅ)

வளைந்தனைநிலம்விசும்பருந்துமாறென
விளைந்தனைகங்குலேவிழையுமென்னுளை
முளைந்திடக்கருநெருப்புதவினுயென
வளைந்தனள்பருவரற்கடலுளன்னமே. (உகூ)

சந்தனங்கரிந்துகத்தரளமாமணி
வெந்துகமையலாலுளம்வெதும்புவாள்
நொந்தனடிசைதொறுநுழைந்துவந்தெழு
மந்தியிற்பசலையுற்றயரும்வேலையில். (௩௦)

வேறு. அம்பரக்கயற்பதாகையரிபரிவசந்தன்வைய
மும்பரிணிந்துகொற்றக்குடையெனவுருவமாருஞ்
சம்பரன்பகைஞனுக்குச்சராசனத்தரிநாணேற்றி
வம்பவிழசோகவாளிமலர்மகள்கருத்திலெய்தான். (௩௧)

வேறு. அல்கிளர்வருசதாகதியருப்பின
வில்கிளர்மலர்க்கணையுந்தவாய்வெறீஇ
மல்கியகருமணிவடிவவாவென
வொல்கியவொண்கொடியுறைக்கலுற்றனள். (௩௨)

காளமாமுகிலெனக்கமிவந்நெடுமை
யாளவேயஞ்சலென்றணைத்தியைங்கணை
மாளனாணறவில்லுமண்ணில்வீழ்ந்திவண்
வேளினூர்விறலொரீஇவென்னிட்டோடவே. (௩௩)

கங்குலேழுகமதாக்காதல்விஞ்சயான்
மங்கிலாமுன்னம்வந்துதவிமாதவ
சங்கிராமத்திநின்முசண்டர்ச்சார்ந்திட
வெங்கும்வாளிகடொடுத்தெய்துவாயென்றாள். (௩௪)

அணிகலனகலவாயிழையும்வாடவான்
திணியிருளகலநெய்த்திபந்திதெனப்
பணமணியுமிழவான்பருதிபோன்றொளிர்
மணிவிளக்கெடுத்தனர்மாதரார்களே. (௩௫)

செறுக்குறவேனிலான்சிலையின்வாளிக
ணெருக்கிமெய்யுறமயனிகழவேதென்றல்
பெருக்கவச்சுதன்கவினிணையும்பெட்பினு
ளுறக்குமற்கிளையவனுளையும்வேலையில். (௩௬)

உலகயில்மாதவனுதவுமாலினும்
மெலிகொடிசெயலினைக்காணவேண்டியே
யலைகொளுமாக்கரியமர்ந்துநோக்கிய
நிலமகளெழின்முகமிகர்த்ததிக்குவே. (௩௭)

கொள்ளியும்விள்ளலாக்கொடியகங்குலை
யள்ளியுள்விழுங்கிவானகன்றபாரிடை
வெள்ளியையுருக்கியேவிரித்தல்போன்றது
தெள்ளியநிலவினைப்பரப்புந்திங்களே. (௩௮)

உடுக்களுமுட்கிடவிருளுமோய்வுற
மிடுக்குறக்குமுதங்கள்விதாப்பர்கோன்மகள்
நடுக்கமுற்றெளிர்மதன்கணையினையவே
யிடுக்கணுற்றிடவிளங்கியதுதிங்களே. (௩௯)

அல்லியங்கமலம்வாய்குவியவாம்பல்க
ளொல்லையிலுருமதிவரவெழுந்தன
நல்லறிவினர்களையொதுங்கவன்கிலாப்
புல்லறிவினர்கடாநிறைந்தபோன்றன. (௪0)

மெல்லமாவிடமெனப்பரந்தவெண்ணிலா
வல்லிமாமலருறையன்னம்போன்றொளிர்
வல்லியாகந்தனில்மதனனம்பொடுஞ்
செல்லவேயுளமனாலுறுத்தத்தேம்பினள். (௪௧)

வேறு. சோமனுல்லினையுந்திமெய்சுறுக்கிடத்தோமில்வாசத்
தாமமோடாரமெல்லாந்தழலதாயிருந்ததாகக்
காமவேள்சரத்துக்காற்றாக்கன்னிகையுயிராக்காக்குஞ்
சேமமாண்டிலாதுவிஞ்சுந்தெருமரலுறவேசொல்வாள். (௪௨)

வேறு. அந்திதந்தவனலெழவைங்கணை, சிந்திமன்மதனுஞ்செருச்செய்திட
வெந்தசிந்தையளாய்மெலிவேனென்மே, லிந்துவந்தெரிவீசினையேயென்றாள்.

சீதளந்தருதெள்ளமிர்தோடுநீ, யோதவெற்கடலில்லுதித்தாயெனும்
நீதியென்னளவேயொழித்தாய்நிறை, வேதனைப்படவெங்கனல்வீசினாய்.

நயமிருந்தவர்போலவுநண்ணினா, யபயரவெங்கனல்வீசினையன்பிலா
லுயருமொள்ளியர்போலுள்வினைமலி, கயவர்சிற்றியல்காட்டினைவெண்மதி.

நெடியமாதவனுன்னைநோக்கிலா, விடமறிந்தெரிசிந்தினையிந்துவே
கொடியையாயினையென்னளவிற்குளி, ரடையநோக்கிலையென்றயர்ந்தாளரோ.

அம்பிறைக்குமரிக்கொண்கனுசைமா, லம்பிறைக்குங்கனுள்கொண்டனங்கவே
ளம்பிறைக்கவுளைந்ததுமன்றிவா, னம்பிறைக்குடல்வாடியலைந்தனள். (௪௭)

மதியினாலுமுன்னோன்மனத்தெண்ணவ, மதியினாலுமதன்கணைவந்துறு
மதியினாலுமெலிந்துளம்வாடினள், மதியினார்குண்டினபுரிமாமயில். (௪௯)

பாலினார்வண்ணர்பின்வந்தபார்த்திபன், பாலின்மாலெழப்பைந்தொடிமாரன
பாலும்வெண்மதியாலும்படர்கனற், பாலைவேலியுட்பைங்கிளியொத்தனள்.[ம்

கரனைவென்றருள்கார்முகிலேயச்சங், கரனிருந்தகையிலையன்றேந்திய
கரன்முரண்களைந்திரிக்குக்கார்முகக், கரனெய்யாவகைகாத்தருள்வீரெனும்.

சிலையெடுத்துத்திரள்மழைகார்த்தரன், சிலையெடுத்தொடித்தாயெனைச்சேரச்
சிலையிதென்னரவிந்தங்கள்சேரும்பா,சிலையடுத்துறுமேனியசெப்பெனும்

வாலிகாலன்றன்மாலெழமாருதி, வாலினாலெரிமாநகர்போலமெய்
வாலிலங்குமணியிழையேகுநோ, வாலினாவுறவாடினள்மாமயில். (௫௨)

கரியவண்ணனினைவினிற்காரிகை, கரிநகர்ந்தவிளங்கனியாய்க்கர
னரியுறுஞ்சிலைநாணுமிழம்புள, வரியையொர்ந்தரந்தைக்கடல்மூழ்கினாள். (௫௩)

காஞ்சனங்கன்கடுங்கணையேவமெய், காஞ்சனம்பெறக்கண்ணினைநீருகப்
பாஞ்சசன்னியமேந்தும்பரமன்மால், பாஞ்சரிந்திடநொந்தனள்பண்மொழி.

கஞ்சமாமலர்மேவியகாரிகை, கஞ்சமாமனைக்காய்ந்தவன்மாலினா
லஞ்சினாளனங்கன்விடுமம்புக, ளஞ்சினாலுமழல்மதியாலுமே. (௫௫)

புலியினாலலையும்பொழில்போலவம், புலியினால்மெலியும்மலர்ப்பொற்கொடி
கலையும்பார்விழவேகதிர்வீசுமே, கலையுமேயுருகிக்கரியாயின. (௫௬)

தீயின்மேன்மெழுகாகியசிந்தையா, ளோயுமாலினுருகுமுளைக்குமால்
வேயினூதியவித்தகவாவெனச், சாயும்பாயலிற்றுமனையன்னமே. (௫௭)

வேறு. வளையும்வளையாழியையொத்தெழுமால்
விளையும்விளையாட்டொருமெல்லியலா
ளுளையும்முளையுந்துறவுள்ளுயிர்பித்
தளையும்மனைவெண்ணெயருந்தியெனா. (௫௮)

மலையும்மலைமீதில்வசந்தமலா
தலையும்மலையாழியமர்ந்தவனென்
றலையும்முலைமேன்மெழுகாயுளமே
கலையுங்கலையுங்குலையக்கவலா. (௫௯)

மதிவந்தனல்வீசியமாதுவரா
பதிவந்தபரம்பொருள்பாரெனுமாற்
றதிமுந்தியருந்துதடக்கைகொடே
யெதிர்வந்தணையென்னுமிளங்கொடியே. (௬௦)

மையார்கடலின்வருமாமதியும்
வெய்யோனெனவேயனலேவிசிறு
மையாதுவராபதியாயடியே
னுய்யேனினிவந்துதவாயெனுமால். (௬௧)

வேறு.
வாசுதேவவாமனுமுகுந்தமாதவாவெனு
மாசைபாசமேலிந்தவென்னையஞ்சலென்றணைத்திடாய்
நேசனானசேதிராசனின்னைகவாவிரன்னிரு
னாசமாகவேயடர்ந்தென்முன்வினைப்பகாரனு. (௬௨)

அந்தியானுமன்றிலானுமாயர்வேயினாலும்வே
ளேந்தவாளியானும்வீசுதென்றலானுமும்பரி
னிந்துமூடிலவினாலுமீடழிந்தவென்னையுன்
விந்தைசேருமார்பிலுற்றணைத்திடீரியாவெனும். (௬௩)

முண்டகங்கலந்தெழுந்தமங்குலேமுகிலெனக்
குண்டலங்களலைபவீசுகுங்குமங்கள்மேனிமேல்
மண்டவண்டலம்புமாலைமார்பின்மாமணித்திரள்
மிண்டியண்டமுண்டகண்டவீரவென்னைமேவியாள். (௬௪)

கஞ்சமன்னனைக்கடிந்தகாளைபாலிலேகுமென்
னெஞ்சுவந்துரைத்திடென்னைநீமறந்துமீள்கிலா
வஞ்சமென்னமல்லடர்த்தவாசுதேவனுன்னையும்
வெஞ்சிறைப்படுத்தினன்கொலென்றயர்ந்துவிம்முமால். (௬௫)

பாருமேருவும்பரந்தவானமுண்டபெண்டொரால்
சேருமாருநேரிலாதுவீசுவாசுதேவரோ
வாரும்வாருநீரளித்தமால்வளைக்கவேயெனை
பாருமார்பினணையுமென்பயோதரம்பணைக்கவே. (௬௬)

வள்ளல்வாசுதேவனுமுகுந்தமாதவன்னிவண்
கள்ளனாகிவந்துநின்றுகண்ணுளேகரந்தெனை
துள்ளமேவிமாலிழைத்தெனுயிருநாணுமனமொடே
கொள்ளையாடியேகினானிதென்னமாயைகொண்டனன். (௬௭)

கலைகழன்றவளைகழன்றவிழைகழன்றகாமவேள்
சிலைகழன்றவாளிவீசுதென்றல்வந்தடர்த்திடத்
தலைகழன்றுகயமன்வீழவேதடிந்தமாயன்மால்
வலைகழன்றபோதெனுதென்மனமொடாவியென்னுமால். (௬௮)

அனங்கனெஞ்சழன்றுசிந்துமைந்துவாளிமேலவா
மனங்கனன்றுசிந்தைநொந்தயர்ந்துவாடுமென்னிரு
தனங்கடம்மினியணைந்துவாழ்திசாரும்வானரத்
தினங்கள்கொண்டிலங்கைவேரறுத்தவீசவென்னுமால். (௬௯)

புண்ணியப்புரோகிதன்குமாரபோகவென்றயான்
விண்ணுயர்ந்ததேரினேகிவேய்கொடேதுமேகமார்
வண்ணர்தம்மொடெய்தினான்மகிழ்ந்தவாழமதியிலேன்
யெண்ணினெண்ணமேபிழைபிறந்ததென்றுபேசுமால். (௭0)

வேறு. அமிழ்ந்தும்வீழுமெழுமபலாறொனும், வெயர்வுசேர்வுறவேலைகவிதிர்க்குமா
னுயருமாமதிவெய்யதென்றேதிடுந், துயரவாரியின்மூழ்கியதோகையே. (௭௧)

திக்குறக்கண்டிடுக்கெனுந்தன்னிரு, பக்கமுற்றனன்பாரளந்தானெனுஞ்
சக்கரக்கரன்றனணைத்தானெனு, மக்கணம்மகன்றனெனுமன்னமே. (௭௨)

எல்கிளர்ந்தவெழிற்றிருமாலெனைப், புல்கவல்லையிற்போதுவனோவென
மல்கிடும்புனற்கண்ணினள்மாலினா, லொல்கியொல்கித்தெருமராலுற்றனள்.

மின்னுநன்முகில்மேனியன்மால்மனம், துன்னவிண்மதியுஞ்சுகியாகவே
யின்னதென்றறியாதயர்வாளெழுந், தன்னமும்பலபன்னியறைகுவாள். (௭௪)

ஏகுமாமறையோனிரதத்தினிற், போகுவான்றுவராபதிபுக்கபின்
நாகமேனடித்தாற்குநலனுறா, யாகயான்படுங்காதலறைவனோ. (௭௫)

காதல்கேட்டென்கருத்துமுணர்ந்தரு, ளாதிபோன்றனையெண்ணிலனோமெனுந்
தூதுபோகியதூய்மறையோன்வரும், போதுமாயினதென்றுபுலம்புவாள்.

அந்தணாளன்விழைவுறமாரணச், சந்தையோதிடத்தாழ்த்தனனோவுயர்
விந்தனோடுவெருவினனோவென, நொந்தமாமயில்பின்னுநவலுவாள். (௭௭)

சிலைகொள்மாயன்றிருநகர்சேர்வுறு, மலைகொளாழிகண்டஞ்சினனோவெனு
முலைகொள்பாலுயிர்தானெருமூச்சினா, லலகைவீழவருந்தினன்றேவியே. (௭௮)

தூயதேவர்கடும்புருநாரத, ராயுநான்மறைமாதவரந்தணர்
நேயமானிருபர்கடுன்னிய, வாயில்காணமயங்கினனோவெனும். (௭௯)

நிறையுந்தேவர்கள்வந்துநெருக்கலா, லிறைவன்மாதுவராபதியேந்தலுக்
கறைகுவாரிலரோவறிவாலுயர், மறையினோனிவண்வந்திலனென்னுமால். (௮0)

முதிருநூலறிவோன்மொழிகேட்டவச், சதுரன்றாமரைக்கண்ணினன்றாழ்விலா
பதனுறும்வடிவுகொண்டான்றனக், கெதிரிலானென்றியம்பினனோவெனும்.

விரியுநான்மறைவேதியன்சொல்லினாற், கரியமாயனென்கண்ணிணைகாணவே
வருவனோவெனக்கூடல்வளைக்குங்கண், ணருவியாலதழிந்திடமாழ்குமால்.

சுழிக்குங்கூடறுனியுறக்கண்ணினீ, ரழிக்குமூர்ச்சிக்குமேங்குமரற்றுமா
லுழைக்குமாயவவந்துதவாயென, வழைக்குமேற்றிசைபார்த்தயரன்னமே.

கொடியவஞ்சகமுன்னவன்கூறிய, விடமெனும்மொழியுள்ளுவள்மெய்யெலா
நடுங்கியநன்னுதல்கண்ணிறைப், படியினின்குடக்கின்றிசைபார்க்குமால்.

சாதலோகொடிதென்றமக்கண்ணன்பாற், றூதுபோனவன்வந்திலன்றன்மதி
நீதனாகியசேதிபனெய்துமுன், சாதலேநலனென்றுரைசாற்றுமால்.

எங்குமேயுமிருக்குமெழுமனை, நீங்கிமேற்றிசைபார்த்தொல்கிநிற்குமால்
பாங்கிமாரிருக்கமுஞ்சூழ்வுற, வீங்குமாதுவருந்திவிளம்புவாள். (௮௬)



வேறு. அரிகரியமேனியன்முகுந்தனருளாளன்
வரவிலையெனப்பருவரற்கடலின்மாழ்குந்
தெரிவையுடல்கொண்டுழல்கிலேன்மயர்வுதீர
வெரியினிலிறந்திடுவனென்றுரைசெய்வேலை. (௮௭)

உம்பர்கள்விரும்புதுவரைப்பதியையுற்றே
யெம்பரமனச்சுதனிதத்துடனளித்த
வம்பவிழுமாலைகொடுவேதியனும்வானின்
வெம்பரிகள்பூணிரதமேல்விரைவின்வந்தான். (௮௮)

கரிந்தெழுமனத்தினனிராவணிகனன்றே
சொரிந்தபிரமன்படைதுளக்கவயர்வெய்தும்
பொருந்தகையிராமனிளையோனிடர்கள்போக
மருந்துகொடுவந்துதவுமாருதியையொத்தான். (௮௯)

மின்னுமணிசேரிரதமீதுவருநூலோன்
முன்னின்வருமுன்னர்முகில்மேனியரிமுந்தி
யென்னைமணமேவவருமோவலனெனுமுன்
உன்னுமுனமின்னினருகெய்தினனுவந்தே. (௯௦)

மாதுமுனர்வந்துமலர்தூவிமறையாலே
யோதுமுயராசிகளுரைத்தனனுவந்தே
யாதரவினாடியெழுமந்தணனையன்ன
சீதரன்வருஞ்செயல்கள்செப்பெனவுரைப்பாள். (௯௧)

வந்தனனருட்கடல்முராரியரிமாயோன்
வந்தனனுனக்குநலனீயுமணவாளன்
வந்தனனரன்கைவரிவில்லிறவளைத்தோன்
வந்தனன்மலர்த்திருமனத்திடைவருந்தல். (௯௨)

நீயெனவிடுப்பநெறியேகிநெறிகுழூந்
தூயதுவராபதிதுலங்கநெடுவானிற்
போயவிர்கொள்கோபுரமிலங்குமெயில்பொன்னால்
மேயுமணிமாடமொளிர்வீதிதனில்மேவி. (௯௩)

அண்டர்முனிவோரரசரந்தணர்நடந்தே
மிண்டியுறும்வாயிறனைமேவிமணிமின்னும்
மண்டபமதிற்கரியமேனியனைமாலைக்
கண்டனன்மகிழ்ந்தெனதுகண்ணிணைகளிப்ப. (௯௪)

வின்மருவுகையனெழில்வேய்மருவுவாயன்
நன்மையுறுசொல்லன்மறைநாலுமுணர்சோதி
மின்முகிலுநீலமவிர்வெற்புநவையில்லா
வன்மதனுநாணுமவனுண்வடிவில்மானே. (கரு)

தூயதுவராபதியடைந்தொளிகொள்சோதி
தீயநிருநாதிபனைவென்றுதிறல்மிக்க
மாயன்வடிவின்னலமகிழ்ந்தினிதுநோக்க
வாயிழையுனக்குவிழியாயிரமும்வேண்டும். (கசு)

அன்னவனைநின்னுளமமர்ந்தவனையாழி
தன்னுளமர்பொற்புடையநற்றுவரைசாரு
மன்னவனைமாதவனைமாயவனைவானோர்க்
கின்னமிழ்தமானவனையெங்ஙனமுரைக்கேன். (கஎ)

மாதவன்முராரியரிமாமுகில்வணற்குன்
காதலளவில்லதுணையுங்கழறியப்பாற்
றீதுமுயல்வோர்கள்செயலுந்தெரியவோரா
ளுதினனதன்றியுமுனோலையுமளித்தேன். (கஅ)

ஓதலுருவாசகமுவந்தருளியுன்பா
லாதரவினுலலைகொளாழியமணாயன்
மாதினோமணம்புணரவேமகிழ்விளேடும்
போதுவன்விதர்ப்பநகரென்றிவைபுகன்முன். (கக)

மன்னவர்கடேவர்திரள்மாதிரமடைந்தோர்
துன்னியமர்செய்யினுமுடித்தலைதுணித்தே
பொன்னலர்களோடவொரிமைப்பின்முனமுற்று
மின்னினைமணம்புணர்வனென்றுரைவிரித்தான். (கoo)

வேலையினினீளரவமெல்லணையமர்ந்தோன்
சூலிகையுறுங்கடிகைநூறியருபோ
னீலமுகில்மேனியனணிந்தலர்நிறைந்த
மாலையிதுகொள்ளெனவளித்தனன்மகிழ்ந்தே. (கoக)

அந்தணனுரைக்குமமிழ்தஞ்செவியினூரச்
சிந்தைமகிழ்வெய்தியவுருக்குமணிதேனூர்
கந்தமலர்மாலைகையின்வாங்கினள்களித்தாள்
வெந்தவுடல்வந்துயிரைமேவினர்கள்போல. (கoஉ)

கரத்தினமர்மாலையிருகண்களினுமொற்றிச்
சிரத்தின்மிசைசூடமெய்சிறந்தகரிதன்னை
யுரித்தவனைவிட்டவுணர்மாளவுயர்மாயோ
னரித்தருளஞாலமன்ரன்றெழுவபோல. (கoங)

தேறினர்முனிவர்பருவரற்பரவைதீர
வாறினர்முராரியெனைவந்தணையுமென்றே
யூறினர்மகிழ்ச்சியுயர்வேதியனுவப்பக்
கூறினளவிதர்ப்பனருள்கோகனகமாதே. (௧0௪)

வீரியமுராரிதிருமார்புறவிளங்கும்
வேரியுறுமாலைகொடுநீவிரைவின்வந்தென்
னுருயிர்கொடுத்தெனதுகற்புமகலாத
சீரினையளித்தனைசிறக்குமறையோனே. (௧0௫)

கங்குலிலிலங்கைநகர்சென்றுகடிகாவிற்
றங்கியுயர்சானகியுயத்தயரதன்சே
யங்குலிதழீயருளையனெனத்தான்
மங்குலதன்முன்றுளவமாலைகொடுவந்தாய். (௧0௬)

ஆயனருணற்றுளவமாலைகொடெனவி
யோயுமுனம்வந்துதவுநன்றியையுரைக்கிற்
போயுயருமண்டமுதலியிலதுபோதா
தூயமறையோயெனவுரைத்தருள்சுரந்தே. (௧0௭)

ஆய்ந்துநலனுகமணியாரமுடனம்பொன்
வாய்ந்தகவினுபரணமானவகையெல்லா
மீய்ந்தருளவந்தணனுமாசிகளியம்பிப்
போந்தனனிலங்கியதன்மாளிகைபொலிந்தே. (௧0௮)

அந்தணனையேகவிடைநல்கியருளாலே
சிந்தைமகிழ்வெய்திநிறைசேடியர்கள்சூழ
வெந்துயர்கள்வீழவிழையின்பமெழமேவி
நந்தன்மகன்வந்தணைவனென்றுநலமுற்றாள். (௧0௯)

கொங்கையிணைவிம்மியெழவுண்மகிழ்வுகூறத்
திங்களையடர்த்தவதனத்தெழில்சிறப்பச்
சங்குதருவெண்டரளவெண்ணகைதழைப்பப்
பங்கயமலர்க்குள்வருபாவைமகிழ்வுற்றாள். (௧௧0)

சந்துபனிநீர்புழுகுகானமலர்சாதி
சிந்தினர்கள்மெல்லணையின்மீதெழில்சிறப்ப
நந்தணிகரத்தினர்கணற்கவரிவீசிச்
சுந்தரிமகிழ்ச்சியுறவேதுதிகள்செய்தார். (௧௧௧)

தோழியர்கள்சேடியர்கள்சூழ்ந்தனர்களிப்பா
லூழிமுதலாயுரகமெல்லணையிலுற்றே
யாழியிலிலங்குமருளாளன்மகிழ்தேவி
வாழியெனநன்மலர்கடூவினர்வணங்கி, (௧௧௨)

ஆதியையசஞ்சலனையச்சுதனையாழி
மீதரவின்மேவியருள்வித்தகனைவிண்ணோர்
நாதனைமனத்தினினினைத்துநளினத்தின்
மாதமிழ்தருந்தவதுபோலமகிழ்வுற்றார். (ககங)

ஆதிதருமாலிகைகொடந்தணன்வரச்சீர்
மாதினிதிருந்தருளுநன்மொழிவகுத்தாம்
நீதியிலுருக்குமன்விடுப்பநெறிசெல்லுந்
தூதர்சிசுபாலனுடனோதியதுசொல்வாம். (ககச)

அலங்கற்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-சுoகரு.

---

## சாகூ-வது. சேதிபராசப்படலம்.

அருளாளன்முகுந்தனசஞ்சலனுங், கருமாமுகிலாகியகண்ணபிரா
னொருமாமுதலுத்தமனூழியுளான், திருமாலிருசேவடியேதொழுவாம். (க)

உருமேறெனநின்றவுருக்குமனச், சுருளோலைகொடெய்தியதூதவரும்
மருளோடியருஞ்சிசுபாலன்மகிழ், திருநாடுகெள்சூழ்நகர்சென்றவர்தாம். (உ)

விரிமாமணிமண்டபமீதிலகு, மரியாசனமேறியவண்டர்பிரான்
சரியாயமர்சேதிபனைத்தரையிற், பரிவோடுவணங்கியிடப்பகர்வான். (ங)

யாரோவிடவெய்தியதும்மரசன், பேரோதுபெருந்தகைவைகியுறு
மூரோதுமையின்னெனவோதினனுற், சீரோதுமிலாச்சிசுபாலனரோ. (ச)

கொடிவானுறுகுண்டினமாநகரான், விடையோனெனமாதிரம்வீசியெழு
முடைவாளனுருக்குமனேவிடவுன், னிடமேவினமோலையிதென்றனரால். (ரு)

தருமோலைமகிழ்ந்துதராபதியு, மருளாலிதுவோதுமினென்றறையப்
பொருளார்வுறவேயுயர்புந்தியினோர், மருளாதுமொழிந்தனர்வாசகமே. (சு)

உயர்வீரனுருக்குமனோலையினை, யயிலோர்சிசுபாலனறிந்தருள்க
மயிலேசிகரெங்கையைநீமகிழ, வியல்பாகவழங்குவன்யானெனவும். (எ)

இருளார்செயினக்கரிபெங்குமெழப், பொருவீரர்கள்மாவணிபோதரவே
யுருடேர்மிசைநீயுதயத்துமுனர், வருவாயெனவாசகமோதினரால். (அ)

உளைசெய்திடலும்மகிழ்வோடுமுயர்ந், தளைசெய்தியசேதிபனுனைகொடோர்
திரள்வெம்பரிவீரர்கள்சென்றிடவே, முரசம்மறைகென்றுமொழிந்தனனால்.

அரிதேர்சிசுபாலனறைந்திடவே, புரிவாயொலிமாமுரசம்பொலியக்
கரிதேர்பரிவீரர்கலந்தனரால், விரிவாகியெழுந்தடர்வேலையென. (கo)

சராசந்தன்வருதினிதாரணியில், விராய்வந்திடவீறிரதம்மிசைய
மரேசன்னெனவந்ததுகண்டனனுற், றுராசன்செயிர்துன்னியசேதிபதி. (கக)

மருளார்தசனம்முழுவக்கிரனுந், திரள்மாகரிநேர்வினைவீரருடன்
வருமாரதுகண்டுமகிழ்ந்தனனால், அருணீதியிலாச்சிசுபாலனரோ. (கஉ)
திசைபார்விறன்மாகரிநேர்கெழுக், கசைகோல்கொடுசாரதியேகடவ
விசையோடுநுழைந்தனன்மெய்யினனாற், சிசுபாலனெனத்தகுசேதிபதி. (கங)
காளங்கள்வலம்புரிகள்ளையுடன், மூளங்கடறங்கியமாமுரசம்
நீளுங்கடலோசைகிளர்ந்தனவா, மூளுங்கனபேரிமுழங்கியதால். (கச)
கரிசென்றனகாரினமொத்திரதந், திரள்சென்றனசேணின்விமானமெனப்
பரிசென்றனபாய்திரைபோமெனவிற், கரர்சென்றனர் சித்திரகாயமென. (கரு)
மதியொன்றுமில்சேதிபன்வந்திடவா, னுதிரங்கள்சொரிந்தனவெய்யமரு
முதிர்வெங்கனலோருமுன்வீழ்ந்தனவீ, யதிர்கின்றனபாரரவம்புரள. (கசு)
மேகங்களினீளிரதக்கொடிமேற், காகங்கள்கலந்துமிடைந்தனவால்
வேகங்கனொழிந்தனவிஞ்சுபரி, நாகங்கள்குறுக்குநடந்திடவே. (கஎ)
இவையாகியதுர்க்குறிதாமெழவே, யவையாவுமுணர்ந்திலனந்தமிலான்
புவிமேன்மலிபூசம்வளர்ந்துயர்ந, டவையாவுமகன்றினிதேகினனால். (கஅ)
மறைவிஞ்சியகுண்டினமாநகரி, னுறைவன்கடிதென்றுயர்தேரின்மிசை
நிறையும்பரிவீரர்நெருங்கிடவே, மறமொன்றியசேதிபன்வந்தனனால். (கக)

வேறு. தூதுவர்களோடியவைதுன்னினர்கண்மன்னுஞ்
சேதிபதிவாசிகரிதேர்கள்வருசெய்கை
யோதுதலுநெஞ்சினினுருக்குமனுவந்தே
யாதரவின்மாநகரலங்கரியுமென்றான். (உ0)

ஓதுதலுமாமுரசறைந்தனருவந்தே
மாதர்திரடோர்விணைகள்வாசிகரிமன்னர்
வீதிதொறுமேவினர்கண்மின்னுமணிதுன்னிச்
சோதியெழுமாளிகைகள்வீதிகமேல்ங்க. (உக)

துன்னியவரம்பைகமெலங்கியுறுகன்னல்
மின்னுமணியாரமொடுவீதிகணிரைந்தே
பொன்னவிர்கொள்மாடநிவர்வேதிகைபொருந்தி
யுன்னவரிதாயவமராபதியையொத்த. (உஉ)

மாறிநிவர்பூகநிரைவீதிகளில்வைத்தார்
நாறுநனிகோதைகணைலந்திகழநானச்
சேறுசெய்தசந்துபனிநீரினொடுசேர
வாறெனவிறைத்தனர்களன்னநடைமின்னார். (உங)

கும்பமிசைபாலிகளிலங்கியனகோலச்
செம்பதுமமென்னவொளிர்தீபநிரைசேர
வும்பருலகாரவிலகுங்கொடியுலாவ
வம்பரவிதானமவிரான்றனவசைந்தே. (உச)

கோலமுறுமாளிகைகள்மீதுகொடிதுன்ன
ஞாலமிசைபூகமிரைாநற்கதலிமான
வேலின்விழியார்களமுழுருவும்விளங்க
நீலமுகில்போற்குழனெருங்கிடமிடைந்தார். (உரு)

துன்னியுறுயாணர்மணியெண்ணிலதுலங்கும்
பொன்னகருநாணியுறவேபொலிவுமன்னு
முன்னரியகுண்டினபுரத்திஞெளிகாணு
மன்னவன்விதர்ப்பனருள்மைந்தன்மகிழ்வுற்ருன். (உசு)

உத்தியினைநேருமணிக்த்திஞடனுற்றே
மதியில்சிசுபாலன்வரலும்மகிழ்விஞேடு
மதிரதர்கள்சூழவணியாபரணமின்ன
வெதிர்கொளவெழுந்தனனுருக்குமனனென்போன். (உஎ)

எழுந்திரதமேறியெதிர்செல்லுமவனின்பக்
கொழுந்தெழவுயர்ந்தசிசுபாலஞெடுகூடி
யுழுந்துருளுமுன்னமவனைக்கடிதினுற்றே
யழுந்துறவணைக்கவவனும்முறவணைத்தான். (உஅ)

அணைத்தசிசுபாலனவனுக்கினியசொற்க
ளுணர்த்தினனுருக்குமனுவந்தினியதேரிற்
பணைத்தமதமாகிரைகள்பாய்பரிகள்சூழக்
கணக்கில்வயமன்னர்கள்களிப்பவினிதேகி. (உகூ)

திண்டிறல்மிகுத்தசிசுபாலஞெடுசேர
வெண்டிசைபரந்தெழுவருதினியோடேகிக்
குண்டினபுரங்குறுகியேகொடிகள்மிக்க
மண்டபமடைந்தனர்மகிழ்ந்தினிதிருந்தார். (ஙo)

வேறு. தருக்குசிந்தையன்சராசந்தன்றந்தவக்கிரனு
மருக்கொளுந்தொடைச்சேதிபராசனுமகிழ்வோ
டிருக்குமிக்கவர்மண்டபமீதினிதிருந்தா
ருருக்குமன்னருக்கியங்களுமுதவிடவுவந்தே. (ஙக)

மற்றுமேபலவளாகத்துமன்னவர்பலருஞ்
சுற்றமோடுவந்தெய்தினர்சுடர்மணிதுலங்கக்
கொற்றமுற்றிடுசாலுவன்பவுண்டரக்கொடியோ
னெற்றுமாகயமிரதமாவுடனுமெய்தினரால். (ஙஉ)

அந்தணாளர்கடிரண்டெழுந்தாசிகள்கூறி
வந்துமாமணமின்றெனவுரைத்தனர்மகிழ்வாஞ்
சிந்தையாற்சிசுபாலனுஞ்சேதிபராசன்
முந்தியேகடிக்கொத்தனயாவையுமுடித்தான். (ஙங)

இணங்கியேறணங்கினையெதிர்தெழுந்துவேதாளக்
கணங்களாடவேதாறுமொடுபலன்கமலத்
தணங்கைமாதவன்றேவியென்றறிகிலனறிவான்
மணஞ்செய்கோலமேபுனைந்தனன்சேதிபமறவோன். (௩௪)

வேறு. வெண்டுகிலுடுத்தனன்விளங்குநித்தில
மண்டபமிரவிநேர்மணிகள்சேரிழை
மிண்டியமெய்யினன்கிரீடமேற்றிகழ்
கண்டனன்கொடியசேதிபவெங்கண்ணினான். (௩௫)

கண்ணெடும்புயமிடந்துடித்துக்காட்டவும்
விண்ணிடைக்குறைக்கொள்ளிபரந்துவீழவு
மெண்ணிலவுலகமீரொழுமின்றிடும்
பெண்ணினைவிழைவுறும்பேயினானரோ. (௩௬)

இவ்வழியுறுமணக்கோலமெய்தினன்
வெவ்வுளைமலிசிசுபாலன்விஞ்சிய
வவ்வெழில்கண்டவனுருக்குமன்றன
செவ்வழியொருவுமவ்வியங்கொள்சிந்தையான். (௩௭)

வந்தபேருவகையானுருக்குமன்மருட்
சிந்தையானெழுந்துதாய்க்கினையசெப்புவான்.
சுந்தரமாகியவதுவைதூயதா
யிந்துநேர்முகத்தியையழையுமென்னவே. (௩௮)

புதல்வனுண்டொத்திடும்புன்மையானசொல்
விதமறவன்னைதானின்றமின்னுறை
மதுகரந்துதையுமாமலர்கொள்சோலைவாய்க்
கதுமெனவெழுந்துபோயணுகுங்காலையில். (௩௯)

மாதுநற்றுவரைவாழ்மன்னன்வந்துழுக்
காதலினுருகுவாள்கடியணுகிய
சேதிபன்வந்தனனென்றதீச்சொலால்
வேதனைமிகுத்ததுவிடமுண்டாலென. (௪௦)

எரியுறுமுடலெலாமிருகணீர்விழ
வெருவிமெல்லணைமின்மேல்வீழுமேற்றிசை
வரவுளவோமதிட்டுவளைமாக
ரரியெனவெழுந்துபார்த்தரந்தையாகுவாள். (௪௧)

துஞ்சினளெனமனந்துளங்குஞ்சேதிப
வஞ்சகனடைந்தனன்றுவரைமன்னவா
கஞ்சனைக்களையுநீகளைகணாகவந்
தஞ்சலென்றணைகுவாயென்னுமன்னமே. (௪௨)

சேதிபனடைந்தனன்செருக்கினாலவனை
யீதலும்விரும்பினனெனக்குமுன்னவ
னாதலினிலைசெயலனவில்வீழ்ந்தியான்
சாதனன்றெனுமொழியுணாக்குந்தையலே. (சங)

மறந்தருசேதிபன்வரவினால்மன
முறுந்துனிதனிலெரியுற்றமாண்டபி
னறந்தவிராதமாலிவணடைந்தபோ
திறந்தனையோவெனவிகழுமோவெனும். (சச)

மருவுமென்னுயிர்விடாதிருக்கில்வந்துறுந்
திருவிலிசேதிபன்றீயிலாழ்வனே
லருளிமுனியுமென்றஞ்சுமென்னுள
மிருதலைக்கொள்ளியினெறும்பையேயலவே. (சரு)

என்றுமெய்யுருகும்வீழ்ந்தெழுமியாதவர்
மன்னவமுகுந்தனீவருவையின்றெனச்
சொன்னசொலென்னதாந்தோன்றுவாயென
வன்னமுள்வெதும்பிடவெய்திருளனை. (சசு)

எய்தினள்மண்டபத்திருந்தமாமயில்
உய்திறமிலையெனவுடலுமோய்குவாள்
கைதனின்மகடலையணைத்துக்கண்ணினீர்
பெய்திடவைதனள்சுதனைப்பிழையால். (சஎ)

மோந்தனள்முகத்தினைமுளரிக்கையினாற்
சாந்தொடுந்தண்பனிநீருந்தையல்மெய்ப்
தோய்ந்துறவிடுத்தனடோமுற்றேயுயிர்
மாய்ந்தெனவரந்தையால்வாடுமன்னமே. (சஅ)

அன்னையுமிருகணீராறுபோலெழ
மின்னிலையனைத்தனள்விளம்புவாளுயர்
மன்னவன்றுவராவாழ்மாயனெய்தியே
யுன்னையின்றணைகுவனெற்கந்திர்தியால். (சகூ)

கனவுகள்கண்டநற்குறிகள்காட்டியே
சொனகலைப்பல்லியந்தாயதாதலி
னினைவசுதேவன்றன்செம்மல்வந்துறும்
துனியொருவன்னமேயென்றுசொல்லுவாள். (ருo)

அந்தரியம்பிகைதுர்க்கையாமிவ
ளிந்தமாநகர்தனில்வரங்கள்யாவையுஞ்
சிந்தையினினைக்குமுன்னளிப்பள்சீருறு
மிந்திரைதத்துறலொழிதியென்றனள். (ருக)

துன்பமின்றொருவிடத்துற்கையாமிவட்
கின்பமாவதுவரமியற்றிவேண்டவுன்
னன்பனுயோதனைத்துழவரக்கிடத்
தன்பெருந்தேரின்மேல்வருவன்றையலே. (௫௨)

அஞ்சலீயன்னமேகராவினாலிலை
குஞ்சரங்காத்தருள்குழகனெய்திநீ
விஞ்சிடவிணைகுவன்விதியினாமெனச்
செஞ்சொலாலவளுந்தான்றேற்றினாளரோ. (௫௩)

தேற்றினாடிருமகள்சிந்தைவெந்துயர்
மாற்றினாளினையசொல்வழங்கியின்றவ
னாற்றுநீரெனவிணைகண்ணினீரொல்கிச்
சாற்றினாடனைத்தருமன்னைதன்னுடன். (௫௪)

இருக்கறப்பசுவதிதனக்குச்சீர்மையா
லருக்கியமுதலியவளித்தப்பாலனை
வருக்கமுமளித்தியாம்வரமும்வேண்டுவம்
பொருக்கெனச்சேறுமின்றெனப்புகன்றனள் (௫௫)

மின்னனாளிவ்வுரைவிளம்பக்கேட்டெழுந்
தன்னைமாபகவதியமருங்கோயிலின்
மன்னிநாம்வேண்டுவம்வரமென்றேமக
டன்னைநீராடெனச்சாற்றினாளரோ. (௫௬)

துளித்தெழுமழையினைத்தூயகண்களா
ளளித்தனளெனவுமடந்தையாரழல்
கொளுத்தியவயமயங்கூடித்தேர்ந்தபோற்
குளித்தனடண்பனிநீர்கொடுத்ததே. (௫௭)

புனைந்தனளவிருறும்பொன்னின்சம்பட
மனந்தனில்மாதவன்வருமென்றுள்குவான்
றனந்தனிலணிந்தனற்றரளமாமணி
யினந்தழலெழுத்தொடையெரிந்ததெங்குமே. (௫௮)

மதம்பொழிகரிமருப்புதவுமாமணி
விதம்பெறுமுடர்யாகவில்லுறுஞ்
சதங்கைகடிகழ்வுறச்சரோருகங்களாம்
பதந்தனிற்பரிபுரம்பண்மிழற்றவே. (௫௯)

தோள்வளையெல்லிட்டதோடும்வில்லிட
வேள்சிலையிரண்டெனநுதல்விளங்கிட
நாளலர்க்கமலமானனத்தைநாணிட
வாளினைப்பழித்தமான்விழிவயங்கவே. (௬0)

செயிறறச்சூடுறுஞ்செம்பொன்ஞலிழை
வயிரவான்கடகமார்மலர்க்கைகாந்தள்போ
லியல்புறக்கலாபமேல்மின்னுமிட்டிடை
துயல்வருங்கலிங்கநன்மணிதுலங்கவே. (சுக)

மின்னெனத்திருவெனவிளங்கத்தோன்றிய
கன்னியைக்கண்களிற்களித்துநோக்கிய
வன்னையும்பகவதிதுற்கையாமவள்
மன்னியகோயிலிற்போதுவம்மெனு. (சுஉ)

இருந்தவளெழுந்தனளெழில்கொள்மாமணி
பொருந்தியசிவிகையிற்பொலியத்தோன்றினுள்
வரும்பருவரல்கெடவரத்தைநச்சினு
ளருந்தியனையதன்னன்னையோடுமே. (சுங)

ஐயன்வண்டுவராவாழமலனச்சுதன்
துய்யவன்வருகிலனென்றுசோர்வுறுஞ்
செய்யவடமணியச்சிவிகைமீதினிற்
பொய்யுயிர்க்குரம்பைகொண்டரிதிற்போயினுள். (சுச)

கவிகைகள்கவரிகள்கரத்தினேந்தியே
நவையகல்மணித்திரளணிந்தநங்கைமார்
தவர்க்ளுஞ்விழைவுறவிலங்கிச்சார்ந்தனர்
புவிமிசைவனிதையைப்போற்றிவாழ்த்தியே. (சுரு)

அனமெனமயிலெனவஞ்சுகங்கடம்
மினமெனக்குயிலெனவெழுந்தமாதரார்
தனமலேசிகரெனநுசுப்புந்தள்ளுற
மனமுறுகளிப்பொடுவந்துசூழ்ந்தனர். (சுசு)

காந்தளின்செங்கையார்கயலொண்கண்ணினுர்
சாந்தணிநகிலினுர்தாமவோதியார்
பாந்தளினல்குலார்பவளவாயினுர்
மாந்தளிர்மேனியார்வந்துசூழ்ந்தனர். (சுஎ)

கரிபரியிரதமுங்காளைவீரரும்
மரசருங்குமரருமந்தணாளரும்
விரிவுறுஞ்சலதிபோல்விளங்கிச்சூழ்ந்தனர்
திருமணிச்சிவிகையிற்சிறந்துதோன்றவே. (சுஅ)

பம்பைகள்சர்ச்சரிமுழவம்பாண்டிலு
மம்புதியலையெனவளையும்பேரியுந்
தும்பியவிடக்கைகடமுங்கத்துாயதாங்
கொம்புகளுடன்சின்னங்குறித்துக்காட்டவே. (சுகூ)

வீணையாழொலிகளும்விஞ்சக்கின்னரர்
நாணவேயிசைத்தனர்நலங்கொள்மன்மதன்
பாணமேயனையகண்ணினைகொள்பாவைமார்
சேணினூரம்பையரென்னச்சேர்த்தனர். (௭0)

தோழியர்சிலதியர்தூயதாயரா
மேழையர்களிப்பொடுங்கடிதினெய்தினர்
வாழிநின்கருத்துறுங்கருமம்வாய்த்திட
வாழியிலமருவானனுகவென்றனர். (௭௧)

அந்தணருமறைமுனிவராதியா
வந்தருளுருக்குமங்கினையகோமளச்
சிந்தையினினைவுவந்துறுகவென்றுசீர்
முந்தியநலனுரைமொழிந்துவாழ்த்தினர். (௭௨)

இதரவன்றேவதைதுற்கையென்பவட்
குதவிடும்வரன்முறைக்குரியயாவையு
மதுகரமலிமலர்த்திரள்கள்வாரியிற்
சுதைநிகர்கனிகளுஞ்சுமந்துசென்றனர். (௭௩)

கன்னலுங்கதலியின்கனியுங்காருறுஞ்
சென்னலிற்றண்டுலங்தெங்கின்காய்களுந்
துன்னுநற்றதிகள்பாறுப்புமாகிய
வின்னனவெவைகளுநிரப்பியெய்தினர். (௭௪)

துந்துமியிரட்டிடச்சுரர்கள்வான்மிசை
சிந்தியமலர்க்களுந்திரண்டுபார்விழக்
கொந்தளகத்தினர்குழாங்கள்சூழ்ந்திடச்
சுந்தரியணிகலன்றுலங்கவேகினள். (௭௫)

கருமுகில்காண்கினுங்கண்ணனுமெனை
வுருகுமேற்றிசையினையுற்றுநோக்கியே
வெருவுமாலெய்திடவெதும்பும்வெய்துறும்
திருவனுடமணியச்சிவிகைமேலரோ. (௭௬)

புரமதுகடந்தனர்புரிசைபிற்படச்
சுரர்கடம்முலகுறநிவந்துதோன்றிய
விரிவுறுத்தியாவனம்விளங்குமால்வரை
யருகுறப்பெருகுநன்னதியடைந்தனர். (௭௭)

இருகரைபுரண்டலையெழுந்தளப்பிலாக்
குருமணிமருமலர்கொழித்துவீசியே
வருபுனற்பகிரதிமல்லலொத்தெனப்
பெருகியநதியினின்பெருமைகண்டனர். (௭௮)

நன்னதிக்கரைமருங்கிலங்கரந்துமி
ழின்னலினித்திலமணியினீட்டங்க
ளென்னுபொற்கோயிலிற்றுலங்குந்துற்கையை
யன்னைமின்னெடும்பணிந்தமரும்வேலையில். (௭௯)

சேதிபன்வருஞ்செயல்செப்பிப்பங்கய
மாதுநன்னதிக்கரைவந்தவாறெலா
மோதினமுலகமேழுண்டவாயனும்
யாதவனடைகுவதியம்புவாமரோ. (௮௦)

சேதிபராசப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம்-௪௦௬௫.

---

## ௭௦-வது. நாச்சியார் தேரோறுபடலம்.

ஆயிரமருக்கருதையமாயினரொத்தாயிரமுடிகளும்பிறழ
வாயிரம்புயங்கலிலங்கிடவாழிசங்குவாள்கதைவில்லுமமர
வாயிரம்பணத்தினரவணைமிசையினலர்மகள்புவிமகளணுக
வாயிரம்பெயராய்நிறைந்தருள்சோதியச்சுதனடியிணைதொழுவாம். (௧)

அருவமாயுருவாயாணுமாய்ப்பெண்ணுடலியுமாயப்புறமாகுங்
கருவுமாயதினீர்கால்கனல்வெளியாய்க்கதிருடுச்சசியதாய்க்கலந்தே
திருவுமார்புறையக்கவுத்துவமிலகத்திகிரியோடழகியசெங்கை
மருவசற்கமலன்பசுபதிவலாரிவிபுதருமாகியமாயோன். (௨)

புவிமகள்மகிழத்திருமகள்மருவப்புணரிமேற்றுயின்றருள்புனித
னவனியிலிழிந்தேயதுகுலத்தரசனறிவினுலுயர்வசுதேவன்
தவமுறுபலத்தாற்றேவகியருளுந்தனையனென்றெழுந்துதான்மேவித்
திவசமும்பொதுவர்நகர்தனிலசோதைசுதனெனவளர்ந்தருடிருமால். (௩)

செயிருறுமலகையுயிரறமுலைப்பாலருந்தியேதனபதிசிறுவ
ருயரருச்சுனமாம்பருவரலிருத்தங்குரலினுப்புண்டுறிநிறையுந்
தயிரொடுநெய்பால்களவினிலருந்திப்பாறிடப்பிடித்திடுந்தாயார்
கயிறுகொண்டடிப்பக்கண்பிசைந்தழுவோன்கமலநன்னுபகிகாந்தன். (௪)

கன்றினுல்விளவையெறிந்தருளில்லாக்காலியாசுரனையுங்கடிந்து
பொன்றவெஞ்சகடுழைதைத்தரவினின்மேனடித்துயர்புள்ளின்வாய்பிளந்து
குன்றுமோர்குடையாக்கவித்திடைமாதர்துகிலொடுங்குருந்தின்மேலேறி
யன்றுவேயூதியானிரைமேய்க்குமச்சுதானந்தகோவிந்தன். (௫)

விஞ்சியவெயில்சூழ்மதுரையினுயர்ந்தவில்லினைமுறித்துமும்மதநீள்
குஞ்சரத்திலகக்குவலயாபீடம்படவதன்கோடுகொண்டறைந்தே
வஞ்சனைமல்லர்சிதைந்திடவதைத்துவலிமலிமாமனுய்சினக்குங்
கஞ்சனைக்களைந்துகடியனுங்காலயவன்படவுபாயமுங்கருதி. (௬)

வேதமும்விளங்கவியலுமார்கலிசூழ்வையமுமிலக்குவித்தகனும்
மாதவன்முகுந்தன்வாமனன்முராரிமாயனாரணன்பரமேட்டி
சீதரன்புருடவுத்தமனனந்தன்றிருவிருப்பன்றிறனேமி
யாதவனிருடீகேசன்மால்வாசுதேவனுமெனத்தகையெம்பெருமான். (௭)

ஓவியமுயிர்பெற்றுயர்தொருருக்குமணியெனுமுத்தமமின்னு
ளாவியனையாள்விழித்திடவத்தமறையறையந்தணன்மகிழக்
காவிநல்விழியாக்கமலநாயகிபாற்கதிகிளருன்வருவனென்றயனை
யேவினவின்னரினிதிருந்தனன்றம்பாதயர்குலத்துவாழீசன். (௮)

வாசமார்குழலாளவிர்தனிவிலங்குமலர்மகளாமெனமனத்தி
லாசைதான்மிகுந்தநாளைபங்கைக்கேயவளைநாமணைகுதுமென்னு
மீசனும்வாசுதேவனாரணன்மேலேழுமதிதென்றலுமெதிர்த்து
வீசவெள்மலரின்கணைவிடவயர்ந்தனனின்றனன்விபுதர்கள்பெருமான். (௯)

அயில்விழிபுருக்குமணிபயராமலின்றுபோயணுகுவாமெனவே
வியல்புடையலரியாமிரங்கரங்கொண்டெழுப்புவான்போற்கிரணத்தாற்
றுயில்கொளுமாதிவிழித்திடவிருண்டகத்துலைத்தறந்துதேருணன்
கையினுறுங்கோலிற்கடவியபரிகள்வயங்கிடக்கடலிடையெழுந்தான். (௧௦)

விண்ணவருவப்பவிருளெலாமொருவவேலைகுழெண்டிசைவிளங்க
மண்ணவர்துதிப்பமறைவலோர்குழுமிமகிழ்விறலருக்கியம்வழங்க
நண்ணுறுசுரும்புகுடைந்திடவலர்ந்தநளினமாமலரொளிபரவ
வண்ணல்வண்டெனையமலனுமனந்தீர்ந்திடவாதவனுதித்தான். (௧௧)

செங்கதிரவன்றனுதித்திடக்காயாமலரெனத்திகழ்வடிவுடையோன்
சங்குசக்கரத்தோன்றுயிறரந்தருளிச்சந்தனநிறைந்ததண்பனிநீர்
குங்குமங்கலந்தமஞ்சனமாடியம்பொனின்கூறையுமணிந்தே
யங்கையின்புனல்கொண்டருக்கனுக்கன்பாலருக்கியமளித்தனனமலன். (௧௨)

சீரியகமலத்திருப்பவன்முதலாமுனிவருந்தேவர்தம்மிறையு
மேரியல்பரமபதத்தினினுறவேவிழைவுறுநாமத்தையியல்பா
லாரியன்கரியமுகிலினில்வயங்குமழகியபிறையெனவணிந்து
போரியற்கோலம்புனைந்தனனளினப்பூமகளுறைநகர்பொலிவான். (௧௩)

வேறு

ஆவுடன்மருவியேயமுனையாற்றிரு
நாவுடைப்பஃறலைநவையினன்பொறி
வாவிடவரவின்மேனடித்தமாண்புறுஞ்
சேவடியணிமணிக்கழல்சிறக்கவே. (௧௪)

கரியவான்முகிலிடைக்கலந்தசெக்கர்வான்
றெரிவபோற்கடிதடங்கச்சைசேரவே
யிருளெலாம்வெருவவானென்றின்றோற்றம்போ
லரியுலாவாடையுமமர்ந்துதோன்றின. (௧௫)

நன்மணிதுலங்காகின்றவாரமுந்
துன்னிடாணியல்மருங்கிற்ருேன்றிய
பொன்வளைசூழ்ந்திடும்பதங்கன்போன்றெழில்
மின்னுடைவாளயிர்விளங்கிக்காட்டவே. (கசு)

ஆரமாமணிவயிரங்கொளாடகஞ்
சேருமாபரணமுஞ்சிறந்துசிந்துவி
ஷீரெலாமிளவெயினிறைந்தமாட்சிபோ
லேருலாவியதிருமார்பிலங்கவே. (கஎ)

அந்தரமுறுகருமுகிலடைந்துய
ரிந்திரன்வில்லெனயாதவர்க்கிறை
மந்தரமெனவளர்குவவுத்தோளமர்
சுந்தரிகணவன்கைச்சார்ங்கந்தோன்றவே. (கஅ)

போதகம்புரண்டிடவதைத்துப்போர்புரி
சாதனைமல்லரைத்தடிந்துதன்னுடன்
காதியகஞ்சனைக்களைந்தகண்ணனுஞ்
சீதரன்கரங்களிற்கோதைசேரவே. (ககூ)

கலைகொடுகுருந்தின்மேலேறுங்கார்வண
னலனுறப்புயலலர்களினவாசப்பூ
மலர்தொறுமறுபதமமர்ந்தமாட்சிபோற்
சிலைகணைதொடுவிரற்புட்டில்சேர்த்தியே. (உ0)

உம்பர்கள்வலாரியோடமரிலோடவே
பம்பியவவுணர்கள்படத்துறந்திடுந்
தும்பியமறையினின்சொல்லினுன்றெழு
மம்பருவாவமும்வெரிநிலாரவே. (உக)

அலங்கல்சாலலங்கல்மார்பலையவாடக
மிலங்கியகுண்டலங்காதிலெல்லிடப்
பொலன்கொளும்பிறையெனப்பொலிந்தநெற்றியிற்
றுலங்கியவீரப்பட்டிகையுந்தோன்றவே. (உஉ)

என்றவிர்நிகர்மணிவயிரம்வீறுற
வொன்றியதமனியமவுலியுற்றெழில்
மன்றலர்குஞ்சியில்வயங்கவேபுனை
வென்றியந்தும்பைமாமலர்விளங்கின. (உங)

ஆரியன்றுவளைவாழமலனச்சுதன்
சீரியவிதர்ப்பர்கோனகரிற்சேர்வுறும்
பூரியர்வலிகெடப்பூசல்செய்யுமா
வீரியவுருக்கொடுவிளங்கிநிற்கவே. (உச)

சுந்தரத்துயர்ந்தமாவிபுதராய்மலர்
சிந்தினர்தெரிவையர்தீபமேந்தியே
முந்தினர்மகிழ்ந்துசோபனமொழிந்தனர்
நந்தனுந்தனனெனவயங்குநாதனை. (௨௫)

உம்பர்கள்வாசவனுமையினாயக
னம்புயமீதயனாசிகூறின
ரிம்பரின்மாதவனிலங்கித்தோன்றவே
தும்புருநாரதர்சுருதிபாடினார். (௨௬)

கண்ணன்மால்கருமுகில்கமலம்பூத்தெனும்
வண்ணன்மாதவன்மலர்மாதுநாயகன்
புண்ணியன்றுலகேதனனைப்போற்றிசெய்
தண்ணலேகேளெனவருளினானரோ. (௨௭)

மன்னனும்விதர்ப்பர்கோன்மகள்வருந்துறு
முன்னம்யானெய்தியாகவத்தின்மூண்டெழு
மொன்னலர்யாவர்வந்துறினுமோடவே
சின்னபின்னங்களேசெய்வன்காண்டியால். (௨௮)

அராவிறப்புள்ளரசடர்த்தநீர்மைபோ
னராதிபர்மடிவுறநாகம்வாவுமாத்
தராதலத்துருளிரதங்கடார்மனர்
விராயவனெய்தின்வாவெனவிளம்பினான். (௨௯)

வேறு. அந்தவேலையிற்சுரர்முனியணுகினனையை
முந்தியேமணஞ்செய்குவான்சேதிபன்முனைந்தான்
கந்தமாமலர்த்திருவனாள்கடிந்துயரொருவ
வெந்தைநீகடிதேகெனவியம்பியேகினனால். (௩௰)

வேறு. நாரதனவ்வுரைநவின்றுசெல்வழி
யாரியன்கமலமாணிடாகற்றுவா
னேர்மலிரதனீகொணர்தியீண்டெனத்
தாருகன்றன்னொடுங்கடுகிச்சாற்றினான். (௩௧)

வினையுமுன்னெய்துவநிலத்தும்வானத்து
மனைவருமணுகினுமகன்றுகாட்டுவ
புனைமணிதுலங்குவபுரவிபூண்டுவ
கனைகடலொலியெனமுழங்கிக்காட்டுவ. (௩௨)

வாயுவின்விசைகெடவானின்முந்துவ
வேயெனுமுன்னுலகேழுமெய்துவ
தூயநற்ககபதித்துவசந்தோன்றுவ
வாயபொன்னிரதம்வந்தணுகிநிற்கவே. (௩௩)

வீரியபேரிகைதழங்கவேதியர்
கூறினராசிகள்குழுமிக்கொற்றவ
ருறியவார்வமோடுவந்துபோற்றவே
யேறினன்யாதவனிரதமீதரோ. (ருச)

வாரிதியெழுங்கதிரவன்றன்மாமணித்
தேரெனவிலங்கியதிசைகள்யாவையு
மாரியன்வயங்கவேயமரரார்த்தெழத்
தாருகன்முடுகிநீடாரையிலோட்டினன். (ருரு)

வேறு. தடவரைபிதிர்படவுருளவெழுஞ் சடசடவெனுமொலிதகரவெழும்
வெடிபடவிடமுடையரவுலகம் வெளிப்படலெனவிறுதியினுலகங்
கடலிடைநிறைபுனல்மொகுமொகெனக் கடவியபரிபதமிசையலைய
மிடலுறுகொடிககபதியொளிர விரையொடுவருவதுமினிரிரதம். (ருசா)

மரமொடுநிலவரைபொடிபடவின் மறைபடவெழுதூளிமகரமுறும்
விரிவுறுகடறிடர்படவடைய மிடலுறுகுரசதம்விசைகொளமுன்
னரவுமிழ்மணிதிகழ்தரளமுட னவிருறுமரகதவினமலைய
விரவியிரெளியினுமிலகியுய ரிமையவர்மகிழ்வுறவருமிரதம். (ருஎ)

ஓடுநல்லறிவிகள்பலநதிக ளுவரியினலையெனவொலியுறவே
மாடுறுகதலிகள்வளிகமுகு மாழைகடாழைகள்வகுளமுயர்
பாடலனணிகனிநிறைபனசம் பழனமொடொளிர்செநெல்பயிர்வளமா
நாடுகள்பலபல்பிறகிடமா நடைகொடுமுடுகினநலவிரதம். (ருஅ)

தடவரைமிசையுறுபுனலருவி சலசலவெனுமொலிதரவிழவே
யிடலுறுமரிபுலிமயிடமொடு விடைகரிகாடிகள்விரவியெழப்
படமுடைவிடவரவுமிழ்மணிகள் படிமிசைபரிந்தினவிர்களுற
விடமுறுகடறுகள்பலகழிய விடிகளும்வெருவுறவருமிரதம். (ருகூ)

விடமுடையரவுடல்சிதறவெழும் விரிவுகொள்சிறகறைககபதிநீள்
கொடியுடுவினமொடுமிடையமுகிற் குலகிரிதனிலிவர்குரகதமுங்
கடலிடைபிறழ்கதிரரம்வருங் கதியினுமுடுகியகடுவிசையாற்
படிமிசையுருள்வதுதுகடரவே பரமர்தம்மிருகழல்படியிரதம். (சாo)

நீலமோடவிர்மணிநலவயிரம் நிலவினுமொளியுறுகிணைதரளங்
கோலியவெழிலுறுகனகநெடுங் குடையொடுகவரிகளிடைமிடைய
வாலிடையமர்பவனவணிலக வலவனுமுடுகிடவடலயமான்
மேலமரர்கள்பதியெனவே விரைவொடுவருவதுமினிரிரதம். (சாக)

கொடியெனுமிடையினள்வடவரையின் குவடெனுமுலையினள்குயில்மொழிமி
வடவிலையகடெனவுயர்கமல மலர்மிசைவருமவள்வடிவுடையா [ன்
ளிடரறவடையலரிடையவவ ளெழின்மணமடைகுவமெனநினையு
மூடலிடையுயிர்தொறுமுறையொருவன் மனமுனமுடுகுவதருளிரதம். (சாஉ)

சுதைபெறுமொழியினடாளகைத் துடியிடைமனதுறுதுணியகல
வெதிர்பொருமரசர்கள்முரணழிய வெதுகுலம்வருமிறையுடனெழுமா
னுதிகள்கிழிபடவிகாகளுட னுறுமரமடபடவுயர்திசையின்
மதமுறுகரியினமறுகிடவான் மழைமுகில்விரிதரவருமிரதம். (௪௩)

அண்டர்கடருவமர்மலர்சொரிய வமரர்களிறைவனுமகமகிழ
முண்டகமலருறைமுதல்வனொடு முனிவர்கள்சதுமறையொலிபொலியக்
கண்டகர்மடிவுறமுனியுமிறை கனைகடல்மலைகொடுகடைநெடுமால்
கொண்டலினுலவியகொடியிடையுங் குண்டினபுரமதுகுறுகினனால். (௪௪)

அதிர்வுறவகிலமொடுகடலு மலையுறவட்டதிசையமர்வரையும்
பிதிர்வுறவிறுதியினறைவளியின் பெருமையின்முடிகிடவுடவினமு
முதிர்வுறவிபுதர்கள்மகிழ்வுறவே யொருநொடியிடுமுனமுருடருதே
ரெதிருறமதிதவழெயில்வளைகுண் டினபுரமணுகியதெழில்பெறவே. (௪௫)

வேறு. அண்டர்மேதுணர்வாளராமருந்தவரார்ப்ப
வெண்டிசாமுகத்தமர்ந்தவரினிதுவந்தேத்தப்
புண்டரீகனுந்துதித்திடத்துவரைவாழ்புனிதன்
குண்டினபுரமணித்தெனத்தேரினிற்குறுகி. (௪௬)

இந்தநன்னகரிருந்தனள்கமலமாளிறைவ
வந்தமின்றுயரகலவாவெனவழைத்தசலை
முந்துகைகளாநீட்டியமுறைமைபோன்முகிலை
யுந்துவெண்கொடியும்பரினுலாவுதல்கண்டான். (௪௭)

மின்னுமாமணியவிருறமேருவைப்பொருவும்
பொன்னினுனிவர்கோபுரம்புதுமணிமாட
மின்னும்வீதிகளெயில்களும்விளங்குவகண்டா
னன்னமாயயற்கருமறையுதவியவமலன். (௪௮)

மகரதோரணம்விளங்கிடவாயில்கடோறு
நிகரிலாமணிக்கும்பமுந்தீபமுநிறையச்
சிகரமால்வரையெனத்திகழ்மண்டபஞ்சிறப்ப
வகிருமாவடுவனையகண்ணியர்வரக்கண்டான். (௪௯)

சந்தனங்களுஞ்சுண்ணமுந்தண்பனிநீரு
முந்துநன்மணவசந்தமுமுகந்துபாரிறைத்தே
வந்தமங்கையர்பிறங்குகொந்தளமலரலையக்
கந்துகங்கள்கொண்டறைந்தெழுங்கவினையுங்கண்டான். (௫0)

வாசமாமலரலைந்திடமதிமுகம்வெயர்ப்பத்
தூசுமாடநற்சுரும்புகளுறுங்குழறொடரக்
காசுலாவியமுலையுநற்கலவையுங்கமழ
வூசலாடியவரிவையர்பொலிவுகண்டுவந்தான். (௫௧)

கீதவீணையாழ்கின்னரர்மயங்கிடக்கிளிபோ
லோதுமாதர்கண்டுவெந்திடவுருப்பசியெனவே
வீதிதன்னியவரங்கினில்விளங்கிடநடஞ்செய்
காதுசேர்விழிப்பாவையர்களிப்பினைக்கண்டான். (௫௨)

தந்தவக்கிரன்பவுண்டரன்மகதன்சாலுவனும்
வந்துமண்டபந்திகழ்வுறச்சேதிபமறவோன்
சிந்தையுங்களியெழமணக்கோலமுஞ்சிறப்பக்
கந்தநற்றொடையணிந்துறுங்கவினையுங்கண்டான். (௫௩)

தும்பிசூழ்ந்திடத்துரங்கமெண்ணிலாதனதுலங்க
விம்பரோங்கியவிரதமென்டிசையினுமலங்க
வெம்புவாட்கரருலப்பிலாவிறலினர்விளங்க
வும்பர்வாழ்பதியெனவுறுமோளிகண்டுவந்தான். (௫௪)

கண்டயாதவரிறைகருணாகரன்கழறு
மண்டர்வாழமராபதியளகைநன்றெனவே
யெண்டபோதனரியம்புவதிம்பரிலெழில்சேர்
குண்டிநபுரங்கண்டிலார்கண்டபின்கூறார். (௫௫)

எனமொழிந்துளமகிழ்ந்தருள்யாதவர்க்கிறைவ
னமயூரங்கோகிலங்கிளியடைந்தடர்பூங்கா
வனமுமைவரையிழிபுனலாடியமாதர்
புனையுமம்பரமருங்கினிற்பொலிவவுங்கண்டான். (௫௬)

மின்னுநுண்ணிடைக்கோகிலமெழின்மிகுநளினத்
தன்னமம்பிகைகோயிலினணுகினளெனவே
பொன்னினன்மணிப்பரிபுரம்புலம்பிடப்பொலிந்து
துன்னிமங்கையர்வருஞ்செயல்சுந்தரன்கண்டான். (௫௭)

நாறுநன்மலர்பாளிதமான்மதநான
மாறிலம்பிகைபூசனைக்குதவிடவருந்திப்
பாறுமங்கையர்கொந்தளச்சும்மையைப்பரிக்கு
மாறிலார்கரந்தாங்கியேவருமெழில்கண்டான். (௫௮)

துற்கையம்பிகைகோயிலிற்சுடர்தருமணியின்
வற்கமோடணிகவினுறவிதர்ப்பர்கோன்மகடான்
அற்கியங்களையுவகையோடளித்திடுமழகைக்
கற்கியென்னவும்வருமவன்கண்டனன்களித்தே. (௫௯)

ஓவியம்முயிர்பெற்றதாமுருவுடையவளாந்
தேவியைக்கமலத்தினில்வயங்குசெந்திருவை
யாவிகண்டெனக்களித்தவனொருநொடியதனின்
மேவுவேனெனமுடுகினனிரதமேல்விளங்கி. (௬௦)

இன்னவாறரிகேசவனெய்திநிம்வேலைச்
சொன்னகாலையும்வழுவிடச்சுந்தரன்வாரான்
என்னகாரணமோவெனவிடரினில்மயங்கு
மன்னுமன்னவளம்பிகைக்கர்ச்சனையளிப்பாள். (௬௧)

துலங்குசீலிதன்மேனிமேற்றூயநீர்சொரிந்தே
கலன்களெல்லிடக்கலவைகானங்கடிமலர்கள்
புலன்களாலுறநிறைத்தனள்பூசனைக்குரித்தா
யிலங்குதூபதீபங்களுமளித்தனளியல்பால். (௬௨)

ஆனெய்பாலனந்நதியறுசுவையுடனடிசி
லீனமில்லமாழையைநிகர்பனசமீன்கனிக
டேனளாவிடக்கதலிகுதப்பலந்திகழ
மானினீள்விழிவனிதையர்வரையெனக்குவித்தார் (௬௩)

இன்னதாகியசுதைநிகர்யாவையுமீந்த
பின்னர்வாலடைக்காயமிர்தளித்தனள்பெரிய
கன்னியாயவம்பிகையினைப்பணிந்தனள்கமல
மின்னனாளொடுமென்னையானவள்வரம்வேண்டி. (௬௪)

குயிலைநல்லனமாகியகோமளக்கொழுந்தை
மயிலையொள்ளியவீழியின்கனியின்வாயமிழ்தை
யயிலெனும்விழியணங்கையீனன்னையுமணைத்துத்
துயரொழிந்திடுந்துற்கையைப்பணியெனச்சொல்வாள். ()

மின்னினோடுவந்தம்பிகையடியினில்வீழ்ந்தங்
கன்னையானவளர்ந்தையோடறைகுவாளெனது
பொன்னையேதுவராபதிமன்னவன்பொருந்து
மின்னதாகியநல்வரமருளெனவிசைத்தாள். (௬௬)

தாயுநல்வரம்விழைவுறத்தளைகணீர்நிறையத்
தீயின்மேலுறுமெழுகெனவுருகிடுஞ்சிந்தை
யாயவாரிமின்னம்பிகையடியினிற்பணிந்தாண்
டோயவேயுடலுயிர்தடுமாறிடவுரைப்பாள். (௬௭)

தீயனாகியசேதியன்மணிமுடிசிதையப்
பேயனாகியவென்முனோனினைவுறப்பிறிய
வோயுநானுயிர்விடுமுனமுலகளந்தருளு
மாயனாரொடெனைமணம்புணர்வரமருளென்றே. (௬௮)

இடருழந்திருகண்ணினீரிருநிலம்புரள
வுடல்கனன்றுறவுலைக்கனல்மெழுகெனவுருகப்
படியினிற்பணிந்தாளெழுந்திராதுதான்பல்காற்
குடதிசைக்கணினோக்கிமெய்குழைவுறும்வேலை. (௬௯)

வஞ்சிநுண்ணிடைமலர்மகள்வரம்பெறவருந்தி
நெஞ்சினொந்தவணிற்புழிக்கண்டனனயத்திற்
குஞ்சரந்தனைவினைந்திடக்குறுகிமுன்னின்ற
வஞ்சனந்திகழ்மேனியனாயர்கள்பெருமான். (௭௦)

சாலமாலினாற்றளர்வுறுமின்னுயிர்தரிப்பப்
பாலின்வேலையிலனந்தன்மேற்பள்ளிகொள்பரமன்
கோலமாகியவிந்திரவில்லொடுகுறுகி
நீலமேகமுன்னிழிவபோனிலனுறவரவே. (௭௧)

மழைதடுத்தவனிரதமேல்வரமலர்க்கையாற்
குழலொதுக்கிவானோக்கினள்குவலயத்தரச
ரழலுறுத்திடுமெழுகெனவுருகிமின்னழகா
லுழலையுற்றிரதங்கள்மாகரிகள்விட்டுருண்டார். (௭௨)

சோமனாண்முகச்சுந்தரியருகுறச்சூழுந்
தீமையோர்திருவடிவினாற்றிசைதொறுந்தியங்கச்
சாமரூபநற்சக்கரத்தந்தையார்க்குதவிக்
காமராசனுங்கலக்கினன்கருப்புவிற்கணையால் (௭௩)

அன்னமானமின்வனப்பினிலவனியிலரசர்
தன்னையோர்கிலர்மயலினாற்றரணியில்விழுந்தார்
மின்னுநேமியனிரதம்விட்டிழிந்திடவிதர்ப்பன்
கன்னியானதேன்களிப்புறக்கண்களிற்கண்டாள். (௭௪)

அண்டர்நாயகனாகியவரியெழிலமையக்
கண்டமாதுமுன்கடலிடைவிளங்கியவமிர்தை
யுண்டதாமெனவுடறடித்துள்ளமுமகிழ்ந்தாள்
கொண்டனீரினால்வாடும்பைங்கூழ்குளிர்ந்தெனவே. (௭௫)

தண்பயோததியுற்றநற்பதிசராசரத்துக்
கன்பனாகியவச்சுதன்வருமுனமலைந்து
துன்பவாரியில்விழுந்தமிழ்ந்துழல்பவடுறைகண்
டின்பவாரியிலமிழ்ந்தனளிறைவனைநோக்கி. (௭௬)

குளிர்ந்தவம்பகங்கோகனகத்திருவதனந்
தெளிந்தநன்மதியங்குறச்சிறுநகைதெரிய
வளர்ந்தகுங்குமக்கொங்கைகள்மெய்ம்மயிர்பொடிப்பக்
கிளர்ந்தபொன்னொளிர்கற்பகங்கெழுமியபோல. (௭௭)

சேணுலாவியதேரினின்றிழிந்தசீதரனைக்
காணலாகியதவமுளதெனமகிழ்கருத்தாள்
பூணுலாவியமுலையிணைபுளகம்வந்தரும்ப
நாணுலாவிடச்சிலதியர்பண்ணையினடந்தாள். (௭௮)

பரிவொரீஇத்தெளிபரிவுமல்கிடப்பரன்றன்னை
யிருகண்ணோக்கினுங்களிப்புடனோக்கிடேனெனது
திருமகட்கொத்தசெயலுறுநாயகனிவனென்
றருள்மகிழ்ந்தனள்விதர்ப்பர்கோனன்புறுமனைவி. (எகூ)

அனையதாகியமகிழ்விறலருந்ததியனையா
ளினையவாசகமியம்புவாள்யாதவகுமரா
வுனையலாதுவேறென்மகளுள்ளத்திலொன்றும்
நினைவிலாளிவணாயகனீயெனநிகழ்த்தும். (அ௦)

பணமொராயிரப்பாந்தள்மேற்றுயில்கொளும்பரமற்
கிணையதாகியமனைவிசெந்திருவனையாணின்
குணமதாகியகோகனகக்குயிறனக்கு
மணவனாகியேயூழியும்வாழ்திநீயென்றாள். (அக)

சிறியனின்றனையல்லதுசீரிலாதொன்று
மறிகிலாளென்றனாருயிரனையவளுன்னைப்
பிறிகிலாதவள்குணவதிநின்பெருந்தேவி
வெறிகொள்பூந்துழாய்மார்பநீகாத்திடவேண்டும். (அஉ)

என்றுநல்லுரைபகர்ந்தவள்மகளெழில்மேனி
யொன்றமெய்தழீஇயொளிவளைக்கரம்பிடித்துவந்து
குன்றமன்றெடுத்தானிரைகாத்தருள்கோவே
யின்றுமென்றும்வாழ்தேவியோடெனக்கையிலீந்தாள். (அ௩)

அன்னையானவடன்னைமால்கரத்தினிலளிப்ப
மின்னுநேமியையங்கையிற்றரித்தருள்வீரன்
பொன்னின்மாமலர்ச்சேவடிபணிந்தனள்பூங்கொம்
பென்னநின்றிடுமேந்திழையிதையமுமகிழ (அச)

பணிந்தமாதவப்பங்கயத்தழுதினைப்பணைத்தோ
ளணிந்தகானமெய்யையுறச்சேறுறத்தழுவித்
தணிந்தமானிலச்சிந்தையன்றேவியுந்தானு
மிணைந்ததேரின்மேலேறினனிமையவரார்த்தார். (அரு)

ஏறினாரிரதத்தின்மேலிறைவியுந்தானுங்
கூறினார்பலசோபனங்கொடியிடைமடவார்
தேறினாடிருத்தேவியுஞ்சிந்தையுமகிழ்ந்தா
ளாறினாடுயர்விதர்ப்பர்கோன்மனைவியாமன்னம். (அசு)

சுந்தரன்றிருவோடுமந்தேரினிற்றுலங்க
முந்திவந்திரைத்தார்த்தனர்துந்துமிமுழங்கச்
சிந்தைவெஃகியவிபுதர்கள்மலர்மழைசிதற
விந்திரன்கமலாசனன்முனிவரேத்தினரால். (அஎ)

அரம்பைமேனகையுருப்பசிதிலோத்தமையனேக
வரம்பிலாமகிழ்வோடும்வந்தெய்தியமாதர்
நிரம்புபாடலோடாடினரந்தரம்நிறையச்
சுரும்பருமலர்த்தோகைமாதவனொடுந்துலங்க. (௮௮)

மாயன்மாதவன்வாமனன்மலர்மகள்மகிழ்நன்
வேயினூதியவித்தகன்வியாளமேனடித்தோன்
றூயமாமலர்ச்சுந்தரிதன்னொடுந்துலங்கிப்
பாயுமாவிரதத்தினில்வயங்கிடப்பயில்வார். (௮௯)

ஆதவன்கொலோவென்பர்களலைகடற்றுயிலுஞ்
சீதரன்கொலோவென்பர்கடேவியைக்கமல
மீதின்மின்கொலொவென்பர்கள்விண்ணவர்யாஞ்செய்
மாதவங்கொலோவிவர்நிலம்வந்தனரென்பார். (௯௦)

அன்னநல்லுருக்காண்பதற்காயிரநயன
மன்னவன்றுளனாகினன்றென்பர்கண்மாயோன்
மின்னுமஞ்சனமேனியைமெல்லியல்காண
வுன்னிலங்கிவட்கன்னகண்வேண்டுமென்றுரைப்பார். (௯௧)

இன்னவாறுரைவிளம்பியேமகிழ்வுருமிமையோர்
பொன்னின்மாமலர்பொழிந்தனர்புரந்தரனிலங்கு
மன்னலூர்தியோடனைவருமாசிகள்பகர்ந்தார்
பன்னுநான்மறைமொழிந்தனர்முனிவர்கள்பலரும். (௯௨)

பொன்னினன்குடையிலங்கிடச்சாமரைபுரள
வின்னலில்லுவணக்கொடியெழுந்துவானுலாவ
மின்னுமம்புயமடந்தையோடிரதமீதிருந்தான்.
மன்னவன்மதுசூதனன்றுவரைவாழ்மாயோன். (௯௩)

கன்னறேன்சுவைமொழியினள்கமலமாமங்கை
மின்னிலுஞ்சிலாரெயிலுடைத்துவரெயில்விளங்கு
மென்னையாளுடைநாயகனுடனிருந்ததனைச்
சொன்னநாமினியுருக்குமன்செயலினைத்தொடுப்பாம். (௯௪)

(நாச்சியார் தேரேறுபடலம். முற்றிற்று. ஆக திருவிருத்தம்-௪௧௮௮.)

---

## ௭௧-வது. சேனைசூழ்படலம்.

மறநெறிமுதிர்த்துமன்த்துறுமைம்பொறித்
திறனடர்த்துத்தெளிந்தெழுஞ்சிந்தையா
லுறியுருட்டித்ததியுண்ணுமுத்தம
விறையினைப்புகழ்வாரடியேத்துவாம். (௧)

இந்திராதிபரேத்திடயாதவன்
வந்துமாதினைப்பற்றிவன்றேரினை
யுந்தவேகிலனேநிதல்கண்டிதஞ்
சிந்தையோடியதூதவர்செப்புவார். (௨)

ஓடினார்களுருக்குமனெய்திடத்
தேடினார்கெடுத்தெருத்தோறுமே
வாடுறுமலர்மங்கையைக்கோவலன்
கூடினான்கொடுபோயினன்கூவென்றார். (௩)

வண்டுசோருங்கருங்குழல்மங்கையை
யண்டர்காணவடனெடுந்தேர்மிசைக்
கொண்டுபோயினன்யாதவன்கூவென
மிண்டியோடினர்வீதிதோறுமே. (௪)

மண்டபத்தின்மதிக்குடைமீதுறத்
திண்டிறற்சிசுபாலன்செருக்கிடக்
கண்டிருக்குமுருக்குமன்காலில்வீழ்ந்
துண்கிளைப்பதுகேளெனவுற்றனர். (௫)

என்னநீதியினெய்திடுவீரென
மன்னகேள்மின்னைவண்டுவளாக்கிறை
யுன்னுபோதினிற்கொண்டகன்றனன
னின்னநீணிலத்தேரினிலென்றனர். (௬)

என்றலோடுமெரியுறுகண்ணினான்
கன்றினான்வதனங்கதம்விஞ்சவாய்
மென்றுதீயின்விடமுமிழ்வானென
நின்றவீரனினையவிகழ்த்தினான். (௭)

மரபழித்தென்றன்றங்கையைவன்பிற்றன்
னிரதம்வைத்தரும்யாதவர்கோன்றனைப்
பொருதழித்துப்புடைத்தவன்றன்னிரு
கரமகப்படக்கட்டுவன்காண்டிரால். (௮)

தேவர்வந்துவிலக்கினுஞ்சீரிலா
மூவரெய்திமுடுக்கினுமுண்டம
ராவமுன்மலியாசுகமாரியே
தூவிவென்னையுண்சேனைவெல்வனால். (௯)

எண்டிசாமுகமெங்குங்கண்ணன்சிலை
துண்டமாசத்துணித்துத்துரத்திவா
னண்டர்காணவடர்ந்தின்றென்றங்கையைக்
கொண்டுமீள்குவன்கொற்றவர்காண்டிரால். (௰)

யாதவன்றனையிடழித்தெங்கையா
மாதினைக்கொடுவந்திலனுகில்யான்
கோதிலாமதிட்குண்டினமானகர்
சார்தலில்லையெனுமொழிசாற்றினுன். (கக)

கறங்கெனக்கடிதிற்சென்றுகார்வணன்
புறங்கொடுத்திலதாய்நகர்புக்கில்யா
னறங்கெடுத்தருள்கொன்றசடாகிய
மறங்கொளும்பொய்ச்சமாக்களுமாகயான். (கஉ)

வில்லினிற்பொருகண்ணனைவென்றியான்
வல்லியைத்கொணராதென்றனூர்வரி
லெல்லையிற்கெடவுற்றொருவன்னுடை
யில்லெடுப்பவன்வீழ்நரகெய்துவேன். (கங)

குன்றமேந்தியகோவலன்றன்னையே
வென்றுமாதினைமீட்டுடனேநக
ரொன்றிலேனெனிலுத்தமர்செய்திடு
நன்றிபொய்க்குநவையுளனுகயான். (கச)

விளவினிற்கண்ணன்வென்னிடவென்றிடு
முரனிலாப்புயத்தோடிந்தவூர்வரின்
விளைவிற்பொய்க்கரிகூறியமாக்கள்வீ
ழெரிகிகோதத்திலெய்திபுழல்வன்யான். (கரு)

கடுகியாகவம்வென்றுகல்செறி
வடிவினுளைக்கொடுவந்திலேனெனி
லிடையனுயவிழிகுலத்தியாதவற்
கடியனுகுவன்யானென்றறைந்தனன். (கசு)

என்றிவ்வெய்யவுரைகளியம்பியே
கன்றுசிந்தையுருக்குமன்காலன்போ
னின்றசெய்கையைநோக்கினநீதியிற்
குன்றமன்னசராசந்தன்கூறுவான். (கஎ)

எனக்குடைந்துவரையிலெரிந்திடு
மனற்கிடைந்தங்கலைகடலின்றிடர்
தனக்கிடம்மெனச்சாருந்தமியனு
மனைக்கடிந்திங்ஙன்வைப்பன்சிறையென்றான். (கஅ)

அந்தவெவ்வுரைகேட்டனலாமென
நந்தன்மைந்தனைநான்றனியாகியே
முந்திவெஞ்செருவெல்குவன்மூண்டெனத்
தந்தவக்கிரன்றானுரைத்தானரோ. (ககூ)

சேலினைப்பழித்தேயறத்திட்டிய
வேலையொத்தகண்ணாளொடுமேவுகோ
பாலனைப்பற்றிக்கட்டுவன்பாரெனச்
சாலுவன்னுரைத்தான்றழற்கண்ணினான். (உ0)

ஏசிலாமரபின்மினைக்கொண்டெய்தும்
வாசுதேவன்வலிதொலைப்பேனென
வீசனீயவரியுருவெய்திநீள்
காசினிக்குட்டிரிமன்கழறினான். (உக)

யாதவன்றனையான்விடுவாளியாற்
பூதலந்தனிற்றேரும்பொடியுறக்
காதிநின்முனிற்கட்டுவனென்றனன்
சேதிபன்செயிருற்றெழுஞ்சிந்தையான். (உஉ)

தந்தவக்கிரன்மாகதன்சாலுவன்
சிந்தைவெந்தபவுண்டரன்சேதிப
னிந்தவெம்மொழிகூறவெழுந்தனன்
வெந்திறற்படைவீரனுருக்குமன். (உ௩)

எழுந்துருக்குமன்சீறிடவெங்கணுந்
தொழும்படைத்தலைவீரர்கடுண்ணியே
யுழுந்துருட்பொழுதிற்கண்ணனுற்றபே
ரழிந்திடப்பொருவோமென்றடர்ந்தனர். (உச)

வீரரானவர்கூறிவெகுளலுஞ்
சீரிதானசொற்செப்பினராமெனச்
சூரனானவுருக்குமன்றூய்நெறி
யீரமாறுவன்கண்ணனியம்புவான், (உ௫)

இடையனேதுமதியிலனெங்கையைக்
கடியதேர்மிசைக்கொண்டுகழியுமுன்
படையெலாங்கொண்டுபோர்திசையெங்கணுந்
தடுமின்யானையைத்தந்திடுமினென்றான். (உ௬)

சொன்னவீரியனாணையிற்றுன்றெழு
தன்னதேமுயல்வோமெனவானைதேர்
துன்னுபாய்பரிவெள்ளமுஞ்சூழ்ந்திட
மின்னுவாளொடுமேவினர்வீரரோ. (உஎ)

படைக்கலங்கொடுவீரர்பரந்தெழ
வுடற்கனன்றவுருக்குமன்றன்னொடு
மடற்குடன்றெழுசேதிபனாதியர்
விடைக்குலங்களெனவெகுண்டாரரோ. (உஅ)

இரதமேறினர்வெஞ்சிலையேந்தினர்
விருதுமாதங்கமீதுவிளங்கினர்
துரிதமாய்வருயாதவன்சேரவே
சரதமாயமர்செய்குவராமெனு. (௨௯)

முரசறைந்துநற்பேரிமுழங்கலு
மரசெழுந்தமரெய்தினனுமெனு
வரிசையின்னுயர்மன்னர்வருதினி
யுளர்செய்முன்னமுடன்றுவந்தார்த்தனர். (௩௦)

உம்பரோங்குகதலிகையோடுதேர்
பம்புமானைதுரங்கம்பரந்திடச்
செம்பராகமுறத்திடராயின
விம்பர்வாரிமகரமிலங்கவே. (௩௧)

கரியினீட்டமுழங்கினகாரெனப்
பரியினீட்டம்பரந்தனவேலைபோ
லரியினீட்டமெனவெழுந்தார்த்தனர்
சுரிகையீட்டங்கொடுவருசூரரே. (௩௨)

தேர்மிடைந்தனமும்மதச்செம்முகக்
கார்மிடைந்தனகண்டையொலித்திடப்
பார்மிடைந்தனபல்பரிவானவ
ரூர்மிடைந்தவிலோதனமோங்கியே. (௩௩)

வாண்மிடைந்தனமாவயவீரர்க
டோண்மிடைந்தவலயந்துலங்கிடத்
தாண்மிடைந்திடத்தாங்கள்மடிந்திடு
நாண்மிடைந்திடவேநடந்தெய்தினர். (௩௪)

இறுதிகாலத்திரைந்தெழுவேலையு
முறுவதாமெனவோங்கியவானமு
மறையுமாகரிதேருடன்வந்தனர்
நிறையகாலக்குரோணிநெடும்படை (௩௫)

ஆனைமேலணிதேரின்மேலடர்
வானின்மீனையுதிர்த்தெழும்வாளினர்
சோனைமேகமெனச்சொரிவார்கணைச்
சேனைகாவலரேசினந்தாரரோ. (௩௬)

வேறு. படைத்தலைவர்மொய்ம்பொடுபெரப்பினிலெழுந்தே
கடிக்கமலமின்னைநிறைகன்றுகளொடரவு
மடக்குமிடையன்கொடுவழிப்படுவெமுன்னர்ச்
சட்கெனவளைத்திடுமினென்றுரைகடந்தார். (௩௭)

மகரிகைமருப்பிலகமும்மதமுமண்ட
நிகரில்பிறழ்பன்மணிகறங்கிவெழுநீலச்
சிகரகிரியானவிழிசெங்கனல்பரப்பப்
புகரியமனப்பில்கொடுபொங்கினர்கள்வீரர். (௩௮)

உம்புலிகிளர்ந்ததெனவேயனிகமெய்தக்
கும்பமதயானைகொடுவீரர்கள்குறிக்குங்
கம்பொலியொடேகடுவைபூமைகள்கறங்குஞ்
சம்பலைபரந்தனகடற்றிரைகள்மான. (௩௯)

ஆழியுறுதேர்நிரைகளாசைதொறும்விஞ்சச்
சூழிமதயானைகடுறந்திடமுகிற்போற்
பாழியமைதோளினர்படைத்தலைவர்பொங்கு
மாழிகள்கிளர்ந்ததெனவெங்கணுமடர்ந்தார். (௪௦)

எள்ளுதலினற்கவினிலங்குமிளுடேகுங்
கள்வனைவளைத்துநெறிகட்டுமெனவேதான்
றுள்ளுபுரவித்திரள்கடோலினிரைசூழத்
தெள்ளியபடைத்தலைவர்தேரின்மிசைசென்றார். (௪௧)

எண்டிசையுமோடினர்கணேடினர்கள்வேலை
மண்டியதுபோலிலன்வந்தெதிரும்வீரர்
அண்டர்குலநாயகனையன்னமொடுதேரிற்
கண்டனர்கள்காலனெனவேகதமுறத்தாம். (௪௨)

மதக்கரிகளைக்கொடுவளைத்தனர்கள்வேல்வாள்
விதித்தெழுகரத்தரிரதத்தின்வருவீர
ரொதுக்குலமுதித்தருளுமீசனையெதிர்த்தே
யதிர்த்தெழுமுரீஞெலிபாகுமெனவார்த்தார். (௪௩)

பல்லியமுழங்கினபகற்கதிர்மறைப்ப
வெல்லையில்விலோதனம்விணெங்கணுமுயர்ந்த
வல்லியமுனிந்துவருமானெனவெகுண்டு
மல்லுயர்புயத்தரசர்தேர்கொடுவளைத்தார். (௪௪)

மூரிமதவும்பல்கள்முழங்குமுகிலஞ்சப்
பாரதிரவெண்டிசைபரந்தனநடந்து
தேரணியுடன்றுரகதத்தணிசிறப்ப
வீரரயில்காலவரிவேல்மழுவெறிந்தார். (௪௫)

தளையுமதவெங்கரிகடாள்கடரையுற்றுப்
புதைவுறநடத்தியெதிர்பொங்குசினவீரர்
குதைசெவியுறக்குனிவில்கோலியரிதன்மே
லுதையும்வடிவாளிகள்பரந்தவுலகெல்லாம். (௪௬)

தோல்வலையவெங்குரகதத்தின்வருசூரர்
வேல்வலையும்விற்கொடுமிடைந்தனர்களெங்கும்
வால்வலைதழங்கிடவலைத்தனர்களூழிக்
கால்வலைவபோலிரதமீதுகடிதுற்றே. (௪௭)

விற்றொழிலர்நற்கரியின்மேலமரும்வீர
ருற்றனருருக்குமணிநாயகனையொன்றார்
சுற்றினர்தெழித்தனர்தொடர்ந்தகலுமுன்னம்
பற்றுமினியெற்றுமெனவெவ்வுரைபகர்ந்தே. (௪௮)

எறிந்தனர்கள்பல்படைகளெங்கள்குலமின்னொன்
றறிந்துமிரதத்தினொடுமேதுமறிவில்லாய்
கறந்துநிறைபால்கவருகள்வகழியேலென்
றறைந்துகடுவூறுகணைதூவினரடைந்தே. (௪௯)

எங்கள்குலமன்னவனுருக்குமனெதிர்க்குஞ்
சிங்கமெனவந்தடருசெம்மல்சிலைவல்லான்
றங்கைதனைவிட்டகறியென்னுமுரைதந்தே
பொங்கினர்படைத்தலைவர்கோளரிகள்போல்வார். (௫௦)

சூலமழுநேமிவலையஞ்சுரிகைதூய
வேல்குலிசமுற்கரமுசுண்டிகதைவிட்டு
நீலமுகில்மேனியனைவந்துறநெருக்கி
யாலமெனவுந்தினரதிர்ந்தவுலகெல்லாம். (௫௧)

இந்திரனெழிற்கமலனீசனிமையோரும்
வந்தனரரம்பைமுதல்மங்கையர்களோடு
மந்தரநிறைந்தனர்களாழிகைவிளங்கு
மெந்தைசிலைவல்லதொழில்காணுதுமெனத்தாம். (௫௨)

ஆலமெனவேலைகள்பரந்தெழுவதான
காலமெனமாகரிகடேர்நிரைகலந்தே
வேலின்விழிவாணுதல்வெருக்கொளமிடைந்தார்
மாலுநகைகூரவெதிர்நின்றனன்மகிழ்ந்தே. (௫௩)

கஞ்சமலர்விஞ்சவருகன்னிகடிகாவிற்
கொஞ்சிகிளிபஞ்சியடிகோகிலமடந்தாய்
அஞ்சலெனவெஞ்சிலைகொடேயலைகொளாழி
நஞ்சமெனும்வஞ்சர்படைநாணினையெறிந்தான். (௫௪)

கடங்கலுழ்கரித்திரள்கள்வாசிகதமூரு
மடங்கலெனவந்தெதிருமன்னர்வலியெல்லா
மடங்கியயர்வெய்தவுலகானவைகளெல்லா
நடுங்கினவயங்குசிலைநாணொலியினம்மா. (௫௫)

# சேனைசூழ்படலம்.

உலைந்தனர்கணைவிலுறுசீரறவுலைந்தே
யலைந்தனர்கள்வீரர்பரியானையணிதேர்கள்
குலைந்தனவயங்கியுயர்கோவலனென்னார்மேல்
மலைந்தெழவெறிந்தசிறுநாணொளியின்மாதோ. (௫௬)

வேறு. இலங்குதேர்கரிமாவினெழுந்தவர்
கலங்கியோடிடநீள்கனகக்கிரி
குலுங்கவேலைகள்யாவுங்கொதித்தெழ
வலங்கொள்மார்பன்வலம்புரிவாய்வைத்தான். (௫௭)

சங்கமூதினன்சார்ங்கம்வளைத்துவா
னெங்குமேகமெழுந்துபொழிந்தெனப்
பொங்குமாசுகம்வான்றிசைபோர்த்திடச்
சிங்கவேறெனுமாதவன்சிந்தினான். (௫௮)

தேரின்மேற்பெருங்கோடுடைச்செம்முகக்
காரின்மேற்பரிமேற்கழிவீரர்மேல்
மாரிபோலவும்வந்துபொழிந்தன
நேரிலாநெடுமால்விடுநீள்கணை. (௫௯)

ஐயன்வார்சிலையால்விடுமாசுக
மெய்யதாகியமொய்ம்புறுவீரர்க
ளொய்யும்வாளியெலாநெறியிற்றுகப்
பையராவெனப்பார்புகமாயுமால். (௬௦)

அதிர்ந்தபார்மதயானையின்கோடற
வுதிர்ந்தவாரத்தின்குப்பைகளோங்கல்போற்
பிதிர்ந்ததேர்பரியின்னங்களாகவே
யெதிர்ந்தவீரர்குடர்களுமிற்றவால். (௬௧)

கொடிகளற்றகுடையுமுறிந்தன
விடியெனக்குமுறுங்கரியாவையும்
பொடிபடப்படியெண்டிசைபோர்த்தன
வடவனற்சுடுமாறெனவாளியே. (௬௨)

கவசமற்றகடும்பரிதேரொடுந்
துவசமற்றனதோளுறும்வீரர்க
ளவசமுற்றனரந்தகன்றூதரத்
திவசமுற்றுடைந்துயிர்செற்றனர். (௬௩)

படிமிடைந்தனபல்பிணக்குப்பைகள்
கடல்மிடைந்தனகான்றுகுசெம்புனல்
சுடர்மிடைந்தெழுதாய்மகுடம்புனை
முடிமிடைந்தனவந்தரமுற்றுமே. (௬௪)

ஏதநாயகனேவியவாளியாற்
பாகர்பாறப்பரிநெடுந்தேர்பட
வாகைசூடியமன்னர்மடிந்திடச்
சாகமெய்தியவர்கண்களோந்தன. (௬௫)

கொடிகோடேரொருகோடிநல்வீரர்கள்
கொடியின்முன்னரின்மாளநுழைந்திடும்
படியின்மேலிரத்தப்புனல்பாறிநற்
கடலில்வீழ்க்கவந்தமுமாடின. (௬௬)

தாண்டுவெம்பரித்தேரினிற்சாரதி
மாண்டுநாணறவஞ்சிகொடண்டினைப்
பூண்டுசெம்புனலாற்றுடன்போகுவார்
தூண்டில்கொண்டெழுவாரெனத்தோன்றினர். (௬௭)

தடப்பொருப்பெனச்சாருங்கைமாவினிற்
குடற்புறப்படக்கொம்பிரண்டற்றுயர்
சுடர்ப்படிந்துறுதூயமுத்தைக்குவி
தொடப்பமொத்தளதும்பியின்வாலரோ. (௬௮)

உம்பர்தம்பரன்றன்சிலையுந்திய
வம்பினங்கடிதின்னறுத்தோடகின்
கொம்பிரண்டொடுகையுங்குறைந்தெழு
தும்பியின்னினஞ்சூகரம்போன்றன. (௬௯)

பழுதில்மாதவனேவியபல்லவக்
குழுவின்மாண்டவர்மெய்க்குருதிப்புனல்
முழுகியாடினகூளிகள்முந்தியே
கழுதுசூழக்கவந்தமுமாடின. (௭௦)

ஈறின்மாதவன்வெங்கணையேவிட
மாறில்வீரர்மடிந்தனர்செம்புன
லாறுபோலலைவீசிடவஞ்சினோர்
பாறவேயெதிர்ந்தார்படைநாயகர். (௭௧)

வேறு. வீடியபிணக்குவைவிலங்கலெனவேயுயரவெஞ்சிலைகொடே
கூடினர்படைத்தலைவரானவர்கள்சீறிவருகோளரியென
வாடல்மதமாவிவுளிதேரில்வருசூரர்களடர்க்கவரியை
மூடினர்களும்பர்திரளஞ்சிடமுழங்கியதுபேரிமுரசம். (௭௨)

சூலமழுதோமரலையஞ்சுரிகைதோமரமுலக்கைசுடர்வாள்
வேலெழுவயிற்குலிசம்விஞ்சுமுசலங்கைகொடுவீசியெதிர்வார்
கோலிவிழுதேர்கிரைதுரந்துசிலைநாண்வலிகொடோளிலுறவே
பசலமெனவெம்பகழிமாரிகள்பொழிந்தனரடர்த்தரிதனை. (௭௩)

தேர்கொடிபடைத்தலைவர்சிறிதெடுவாளிகடிரண்டுபொழிய
வாரியன்முனிந்துசிலைகோலியுயர்மாமழையிதாமெனவிட
வாரியையடர்க்கும்வடவாவனலெனக்கடியவாதமெனவே
சூர்தலைதேர்கரிகொடாளொருகைவால்செவிதுணித்தவிசிகம். (௭௪)

கடிந்துதவனாக்கிறைவன்விட்டகணைபட்டதிசையுங்கனலவே
மடிந்தமதவேழதிரைமன்னர்மகுடத்தலைகள்மண்ணின்விழவான்
கொடிந்தவிரதம்பரியுருண்டுவிழவோடியதுசெங்குருதிநீர்
படிந்ததுபிணக்குவைபரந்ததிசையுண்டபரவைக்குலமரோ. (௭௫)

மாறிலொளிசாரிரவிவாயுவருணன்கனல்வழங்குபடைவிட்
டேறிலுறுமீசனெனவேயுயர்படைத்தலைவரெங்குமடரக்
கூறுதுவனாக்குரிசில்கோரநெடுவாளிகள்விடுத்தவையெலா
நூறியனலம்புகள்பொழிந்தவர்கடேர்கிலைநுறுக்கினனரோ. (௭௬)

நாணியறவோடிமெய்நடுங்கினர்களுவலரவாளிநிறையுந்
தூணியறவோடினர்கடேபவிவுளித்திரளலக்குமிரதத்
தாணியறவோடினர்களானைபடவோடினரளப்பிலொழிற்
பூணியொடுகோனிடையேகியபுராதனர்பொழிந்தகணையால். (௭௭)

துற்றகணைதூணியுறுநாணியிவைவிட்டிரதசூரர்களுட
னுற்றவர்மடிந்திடவிமைப்பின்முனமோடவனையுட்புகுதலாற்
சுற்றமனைநாரியையகன்றுமெதிர்சூழ்வினைதொடைத்துயரவா
வற்றுமுழையுட்புகுமருந்தவனையொத்ததரியாசுகமரோ. (௭௮)

ஓரொருவர்பின்னெதிர்மருங்குமுளனுகியொருதேரின்மிசையே
சாரிகைதிரிந்துவலையூதியரிதூவியதழற்கணையினுற்
றேரினமெரிந்துகரிமாவினமடிந்துதிறல்மன்னருருளப்
பாரிலுறவோடியதுசெங்குருதிபாடினபரந்தலகையே. (௭௯)

வேறு. கொண்டல்வானவிர்வில்லொடுங்கூடியே
மொண்டுமாரிபொழிந்தெனமூவுல
குண்டவாயனெய்வாளியுலப்பில
மண்டலும்மண்டலீகர்மடிந்தனர். (௮0)

ஒல்லையில்லுடைவோர்களைநோக்கிநும்
மில்லிளையகியேந்திழைமென்முலை
புல்லுவீர்கொலென்றேநகைபோதமுன்
சொல்லுவார்களுந்தேரிழிந்தோடுவார். (௮௧)

நீளுமாயிருஞாலத்தினோர்மன்னர்
தாளுந்தோளுமறத்தலைகொண்டெழும்
வாளிமாமகுடத்தொடுவானக
மாளுமாறெனவண்டமுற்றேறுமோல். (௮௨)

கோட்டும்விற்றுவராபதிக்கொண்டலைத்
தீட்டும்வாளிகொண்டெய்யுமினென்றுதேர்
காட்டுவோர்விரலுஞ்சிதையுங்கணை
பூட்டுவோர்சரமுங்கொடுபோஞ்சரம். (௮௩)

தும்பிபோற்சுழல்தேர்கடுலங்கவே
தும்பிமன்னர்கள்சூழ்ந்திடவாவியிற்
றும்பிமாய்வொழித்தோன்சுடர்போர்விலுந்
தும்பிறைக்கணைமாரிகடுன்னின. (௮௪)

நாகமேலணைவான்கணைநாலுனைந்
நாகவீரர்மடியவடர்ந்துபொன்
னாகமீதுறுநாகரும்வான்மிசை
நாகமாமலர்தூவிநடித்தனர். (௮௫)

துவரைமன்னன்விடுங்கணையாற்றணிந்
துவரையென்னவீழ்மன்னரைப்பேய்கள்சூழ்ந்
துவரைவில்களியோடயன்றொல்லையாய்ந்
துவரைமண்டைகடோன்றத்துகைத்தன. (௮௬)

மடங்கல்போனிலனெய்திடமன்னர்கள்
மடங்கவேமகுடச்சிரம்வானிற்போய்
மடங்கிவீழ்ந்திடவேபெய்யுமாரிமும்
மடங்குவாளிகளெய்தனன்மாதவன். (௮௭)

கவந்தனைக்களைந்தோனொழியாமற்காக்
கவந்தமன்னர்களாருயிர்காலனார்க்
கவந்தப்பாசங்கணக்குறப்பாடலக்
கவந்தமோடக்கவந்தநடித்தன. (௮௮)

அயங்கொணெஞ்சுடைமன்னர்களானைதே
ரயங்கடம்மொடும்புலிகண்டுறு
மயங்கமென்னவிரிந்தஞ்சினார்கள்செம்
மயங்களந்தனிலாறெனவோடவே. (௮௯)

அரிவிற்றேய்வுறுமம்புகளாலத்தோ
லரிவிற்றேரறநூறிடவாடவர்
பரிவிற்றேடியபான்மைகண்டேசுரர்
பரிவிற்றாடினர்பன்மலர்தூவியே. (௯0)

நாரிதோளுறநந்தியமாலினு
நாரிகாதுறவாங்கநடுங்குமொன்
நாரிறுவொபோறிடநாகமின்
நாரிதார்வல்லவொன்றுநடித்தனர். (௯௧)

அனகன்வாளியறுத்திடவாடவர்
புனையுமாமகுடத்தலைபோயவர்
மனையின்வாய்விழமற்றவர்தேவியர்
துனையர்சூழத்தழீஇயுடல்சார்ந்தனர். (௯௨)

ஐயன்வாளிதுணித்திடவாடவர்
கையில்வாய்விழக்காதலிகண்டுதன்
றுய்யவேல்விழிநீர்தொடைக்கப்படு
மையைநோக்கினளோய்ந்துயிர்மாய்ந்தனள். (௯௩)

சீரைச்செற்றுச்செங்கோலறச்செல்லுறு
வாரைச்செற்றுமண்ணாள்வுறுமன்னருங்
கோரச்சொல்விகுலைகுலைந்தாலெனத்
தேரைச்செற்றுமுறியச்சிதைத்தனன். (௯௪)

நரகுதம்மிற்செய்தேசெய்தநன்றிகொன்
றுருகுதன்னிலில்லாள்கிளையோம்பார்
பெருகுதலின்றிமாள்பவன்பெற்றியோற்
கரிகிமண்மிசைவீழ்ந்தகரிகளே. (௯௫)

கரவிலார்துயர்கூரக்கயவர்க்காய்
வரைவில்வாதுக்கவையையுமாற்றிப்பொய்க்
கரிசொல்வான்றன்கடியகுலமெனப்
பரியெலாமுயிர்போய்ப்படிவீழ்ந்தன. (௯௬)

எல்லிமங்கிடச்செல்லென்றிவனென
வல்லியங்கமலக்கண்ணனம்பினா
லொல்லையில்லுரவோர்மடியக்கண்டார்
வல்லியங்கண்டமானெனவோடினார். (௯௭)

சங்கமாகித்தளைப்பெய்தவீரர்மா
வெங்கண்வல்விலங்கும்மடிந்தேவிழப்
பொங்கிவீழ்செம்புனலுகும்வாரிமேல்
வங்கம்போனின்றமாதவன்றேரரோ. (௯௮)

உணங்குவாய்க்குணவாந்தசைமென்றுறு
நிணங்களாடையதாகவிவந்தபேய்க்
கணங்கள்மூளைக்களபமுமெய்க்கணிந்
திணங்கியேதுணங்கையெறிந்தாடின. (௯௯)

நந்தன்மைந்தன்விடுங்கணைநாலுகைத்
தந்திதம்முடன்வீரர்கடந்தலை
சிந்தியெங்கணுந்தேங்கிடப்பேய்கடாந்
தொந்தொந்தொந்தொமென்றடித்துகைத்தன. (௪௦௦)

பவர்கொணீள்குடர்மாலையணிந்துபாய்
கவளமாச்செவியேகுடையாய்க்கவித்
திவுளிசாய்வுறவிற்றுயர்வாலெனுங்
கவரிவீசக்களிக்குமலகையே. (௧௦௧)

அற்றயானையின்காலுரலாகத்தாம்
பற்றிவீரர்கள்பற்பறித்துச்சொரிந்
திற்றகோடுகொண்டேயிசைபாடியே
குற்றுமாலலகைக்குலங்கூடியே. (௧௦௨)

சாயும்பல்பிணத்தின்றசையாவையு
மேயெனும்முனுண்டாடுமவ்வெல்லையில்
வாய்கொடேபறித்தும்வசைபேசியும்
பேய்களாகியுயிர்பிரிந்தாடுமால். (௧௦௩)

கூளிகூத்தியர்போற்குஞ்சரமணித்
தாளமார்த்திடச்சம்புகம்பாடவெங்
காளிகைகொட்டிக்கண்டுகளித்திட
ஞாளிசுற்றக்கவந்தமின்றாடின. (௧௦௪)

அருந்தவேழுலைப்பாலுயிரோடளித்
திருந்ததாய்நன்றியெண்ணினன்றன்கொலோ
பரிந்துபேய்த்திரளுக்குயர்பல்பிண
விருந்துமீய்ந்தனன்வேயிசைவாயினான். (௧௦௫)

கூடினார்படைவீரர்குழாங்கொடு
மூடினார்முகுந்தன்விடுவாளியால்
வீடினாரலைவேலையுடைந்தென
வோடினார்மற்றவருயிர்பேணியே. (௧௦௬)

இறுதிகாலத்தெழுந்துறுங்கூதிரால்
மறுகியேகிளர்ந்தோடியவாரிபோற்
குறைவிலாதவைகுந்தன்கொடுங்கணை
யறைதலும்முறிந்தோடினராடவர். (௧௦௭)

சேனைசூழ்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௪௨௯௬.)

---

## ௭௨-வது. பவுண்டரப்படலம்.

தத்துவங்களையுந்துணர்சாத்திகச்
சுத்தவித்தையராய்ச்சுடராழியேந்
தத்தனெட்டெழுத்துமறிவார்கடம்
பத்தர்மெய்யடியாரைப்பணிகுவாம். (௧)

உருக்குமன்படைநாயகரோடவே
செருக்களத்தினிற்சீறிப்பவுண்டரன்
பொருக்கெனக்கடுந்தேரிடைப்புக்கனன்
நெருக்குதார்ப்பரிநீள்கயஞ்சூழவே. (௨)

பேரிமாமுரசம்பம்பைகும்பிகை
வாரிபோலமுழங்கிடமாவய
வீரர்வாளினர்வில்லினர்தேர்வருஞ்
சூரர்மூன்றக்குரோணியர்சூழ்ந்தனர். (௩)

உருமினார்ப்புடன்மின்னுறுமொண்கனல்
சொரிவபோன்றுசுடர்தருங்கோடைக்
கரியின்வீரர்கள்கண்டைகலித்திட
வரியைமூடக்கணைசொரிந்தார்த்தனர். (௪)

வேறு. மதகரியின்மழைமுகில்வான் வருவனமுதிர்குரலினமா
வுததியினொலியெனவுருடே ருறனுறுதுரகதநிரையோ
டதிர்வுறமிடலுடைவிறலோ ரழலுறவிடுகணைவரைபார்
பிதிர்வுறவதிலெழுமரவோர் பிளவுறவுயர்வனபிறைபோல். (௫)

இமகிரியினமெனமதமா வெழுவனவடர்மதமுறவே
சமனிலையெனவருகனிமாச் சடசடவெனநடைதரவா
னமரர்கள்பதியெனவவிரோ டணிதொறுமிரதமுமுறவே
திமிதிமிதிமிதிமியெனநீ டிமிலையொடுருமிகதிரள. (௬)

கடதடவிகடதமதமார் கறையடிபுகர்மிகுகவிழு
நீடுமுடைமிடலுடல்செவிவா லிலகியவொருகரமிருகோ
டுடைவடவரைமுடுகுவபோ லுறனுறுமிபநிரையொடுதேர்
கொடிகுடைபிறழ்வுறமனநேர் துரகதநிரைகொடுமிடைவார். (௭)

பணபணியுமிழ்விடமெனவே படைஞர்களடிமிசைவருவார்
பிணைவுறுகரடிகைபடகோ டிமணிபிறழ்குறடுடனே
யிணையறவளைதுடிகையினோ டெழுகடலொலிநிகர்தரவே
கணகணகணகணவெனநீள் கனிறணிமணியிசையெழவே. (௮)

சிவனயனெனவருதிறலோர் திரள்கரிபரிரதமுடனே
யவனியுமதிர்வுறவருவோ ரமிழ்தெழுமனமொடுபெயர்வா
னிவனிவனிவனிவனெனவே யெறிபவர்முடிகிடவிறைநீள்
பவனனில்விசையுறுகணையேழ் பரவைகள்மறைவுறவிடவே. (௯)

உருமெனமிடைவடவனலா முருவெனவரவுமிழ்விடம்வான்
வருமெனவிரவினினுறுதேய் மதியமர்சடையினன்விழியார்
பருமழலிதுவெனமலரான் பதிவிடுசரமுறநிலனுள்
பெருமையினுருமனர்தலைதாள் பிறிவர்களுடல்புரள்வுறவே. (௧௦)

கோடுகெள்கயகிறையிறவான் சொடுமுடியெனவிழவுயர்வா
னோடடர்கொடியுடைரதமா வுருள்வனபடிபொடியுறவே
பீடுடையரசர்களுடல்பார் பெருவனமெனவிழவரிசேர்
காடுடையனலெனநெடுமால் கடவியகணைமுடுகிடவே. (௧௧)

வாலறவிருசெவியறநீள் வயிரமுகமறவிசையார்
காலறவொருகையுமறவே கடுகிமுன்விழுவனகதமா
வேலறவயிலறவுரவோர் விரலறவரிசிலையறவெங்
கோலறவெருவுவர்பொறிசேர் குரிசில்வில்விடுகணையுறவே. (௧௨)

உலகுணுமிறையவர்விடநீ ளுதரமியிலுயர்கதிரொனவா
னிலவியவிசிகமுமறவா லிபகிரிபரிமனரிறவே
சலசலசலவெனுமொலியே தரகிறைகுருதிகணிலவே
மூலையுறவெழவலகைகளோ வளவிலநுகர்வனதசையே. (௧௩)

மாறிலையெனுமனர்செவியோ மணிமுடிவிழிபுயமதமே
யேறினகரிகரமிருகோ டிவுளிகடுடையடியிவையே
யூறினவுயர்கொடியுடனே நொடிமுனர்கலைமகளுறவே
வீறியகவிஞர்சொன்மடைபோல் மேவியவரிசொரிசரமே. (௧௪)

வேறு. கடலிடையரவணைதுயிலுமால் கரியவன்விடுகணைநொடியின்முன்
வடவனலிதுவெனமுடுகிட மதகரியுறமனர்மடிவன
வடவிகள்வரைமொயொடுமெரிசெய லமர்வுறவலையுயர்குருதிகள்
கொடிகுடையிடைவனவிசைகொடு குடரொடுகிணமவைகுவைசெய. (௧௫)

ஒருதிசைகரிவிழவரிசிலை யொருதிசையுறவுரமொருதிசை
பரவிடவணிமணியொருதிசை பருதியினவிர்கொடிபடியவே
சிரமொருதிசைபடவொருதிசை செவிதுடையிருதிசைசிதறவான்
கருமுகிலனையவன்விடுகணை கடுகினவுயிர்கொடுகனமேல். (௧௬)

பின்னையயனைபவன்விடுகணை பிளிறிடுகளிறுறுபெருநில
மன்னராயிரதமொடெதிர்வரு வயவரைமணிமுடிகளைவுற
வென்னிடும்விருதர்களிவனொரு வில்லொடுவிரல்செய்வதேதுவென
வுன்னினுமவர்சிரமறுமெனி லொன்னலரினியெங்ஙனுய்வதை. (௧௭)

பழுதகல்புகழ்புனைபரமன்வெம் பகைஞர்களெறிவுறவிடுகணை
விழிதனுள்ளிலகியசெவிதனுள் ளிடறிறவுடலறமிடையவங்
கிழிதருகுருதியொடெழுதசை யினைதிணமுடையுறுகுடரொடுங்
கழுகுணுமுனமெழுமலகைகள் கடுகியபசியுடனுகருமால். (௧௮)

எழுமொலியுறுகடல்கடைபவ னிடிகளுமிவெருவுறவிடுகணை
முழுதுறவரசர்களுடலிடை முடுகியகறைநதிபெருகவே
கழுகுதம்மிருகையிலுறுதசை கடுகியவிசைகொடுகவரவங்
கழுதிடுமலகைகடொழுதன வவைதருமெனவுழுகசையிருல். (௧௯)

கரிபரியிரதமுநிலமிசை கடவியகடுவிடமனையவர்
வரிசையின்முடிகவியரசர்கள் மடிவுறவடவனாபதிர்வுற
வொருகணைமுடுகிடவுதவிய வுலகுணுமிறைவிறலறிபவ
ரரியரியரியரியரியென வமரர்களலர்மழைபொழியவே. (௨௦)

வானினர்சிலையினர்சுரிகையர் மாவினர்தேரினர்வயமுற
தோளினர்கரியினர்செறுனர்க ொடுகணையறவவருயிர்விடு
நாளுறவவர்சிரமறவுட னுலிருதிசையிறுகணுகிட
வேளினையருளினன்விடுகணை முடுகியகனமும்வெளியற. (௨௧)

சேடுடையரசர்கள்கறையடி தேரணிகுரகதநிரைகொடு
மூடினரரிகணைகடிதுற மூளைகள்விழமுடிசிதறவே
வீடினர்பலர்நிறைகுருதிகள் வேலையினயமோடுவிரவிட
வோடினர்சிலர்கரியனமுகி லூர்பவர்மலர்மழையுதவவே. (௨௨)

வேறு, ஆதியோனுகியவரிவிடுங்கணைகளோ
மோதகீடிரதமாகரியின்மேல்முனைகுவார்
பீதியேயுறுதலாலெதிர்நிலார்பெரியதோ
ரோதையாலுவரியேகழிவபோலுடையவே. (௨௩)

கண்டனன்கண்ணுதற்கடவுளாலரியுருக்
கொண்டெழும்பெருமையான்கொடியவெஞ்சிலையினுன்
விண்டலம்மறையவேவிசிகமாமழைபொழிந்
தண்டமும்விண்டதாமென்னவங்கார்த்தனன். (௨௪)

ஆர்த்துவந்தடர்பவுண்டரனெயுங்கணைகளைப்
பார்த்துவெண்டுவளைவாழ்பரமன்வெண்ணகைசெய்தக்
கார்த்திரட்கணைகளாற்கடிபுவன்னுறமிசைப்
போர்த்தவெங்கவசமுஞ்சிலையிநுண்பொடிசெய்தான். (௨௫)

சிலையும்வெங்கவசமும்பொடிபடச்சீறியே
தொலைவில்முற்கரமழுச்சூலம்வேலெறியவே
யலைகடற்றுயிலுவோனவையறுத்தம்பினு
லிலகுபொற்றேரழித்திடலுமேயோடினன் (௨௬)

(பவுண்டரப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம்-௪௯௨௨)

## ௭௯-வது சாளுவப்படலம்.

மாதவாகேசவாவாமனுவாசுதேவாமுகுந்தா.
சீதராநாரணுதேவகீநந்தனுதேவதேவா
யாதவாவேறுவேறீசனுன்முகனுமாயிறைவவென்றே
யோதுவாரடியர்தம்மடியரோயெம்மையாளுடையராவார். (௧)

வேறு. தேனுகாசுரனையேவதைசெய்மாதிறலினு
லீனமேநிறைபவுண்டரனிடைந்தோடவே
யானைதேர்பரிகொடேயடலுறுஞ்சாலுவான்
சேனைநாலக்குரோணியுமுறச்சென்றனன். (௨)

துந்துமித்திரள்கணப்பறைகளுந்துடிகைதேர்
வந்தெதிர்த்தசனியுமருளுமாவொலியெழக்
சிந்துரக்கரியினமிவுளிதேர்நிரையெலா
முந்துறப்பெருவிறலரசரோமுடுகினார். (௩)

சங்கமுங்கொம்புகாகளமுடன்றுரையு
மெங்குமேமிடையவார்கலியொலியென்னவே
மங்குநாள்மங்கைபங்காளனார்வருவபோற்
பொங்கினாரரசர்மாவாளியேபொழிகுவார். (௪)

பேரிமாமுரசுகும்பிகைகளும்பெரியதோ
ராரவாரஞ்செயவரசரோமுடுகினார்
தேரொலாங்கரியெலாம்பரியெலாந்திரளவே
காரொலாம்பொழிவபோற்கணைகளேசொரிகுவார். (௫)

ஒருதனித்தேரினன்சிலைகொடேயுலகெலாம்
வெருவுறக்கரிபரித்தேருளார்விறலெலா
மெரிவுறக்கணைவிடுத்தமர்செய்தானிவனையே
பொருதழித்திடுவம்வம்மெனுமுரைபுகலுவார். (௬)

கன்றினங்கொண்டுகானேகுகள்வன்மத
மொன்றும்வெங்கரிபரித்தேருளாருளவே
வென்றியுஞ்செய்திவன்மின்னோடேசெலுமெனில்
நன்றுநம்வீரமென்றுரைசெய்தேநகைசெய்வார். (௭)

குஞ்சரம்விஞ்சுநற்கொண்டல்போல்மிடையவே
வஞ்சகர்வெஞ்சிலையெய்யுமாமறிகடல்
நஞ்சமஞ்சுங்கணைத்திரள்களேநலனுறு
மஞ்சனக்கிரியனானிரதமேலடரவே. (௮)

மண்கிளைத்தெழுமனோரனைவரும்வளைவிற
லெண்களிற்பெரியமாகணைகளேயெய்தனர்
பெண்களிற்றிலதமாகியபெருந்திருவனாள்
கண்களிப்புறுநலக்கணவனுங்கடவுள்மேல். (௯)

நோய்மடுத்தனையவெஞ்சினமுடைநொய்யவர்
வாய்மடுத்திருகணுங்கனலவேவாளிகள்
தீமடுத்தெனவிலார்செலவிடுத்தார்கரி
யோய்மடுத்துறையில்வந்துதவுகாருருவன்மேல். (௧௦)

வேறு. ஆசைதோறுமானைதேர்களாடல்மாவுமாளுடன்
வாசுதேவகாவெனவளைந்துவாரிபோலவே
யீசனேமிவானமாழியியும்வெம்படைக்கலம்
வீசினார்கடேவர்கூசமீளிபோலும்வீரரே. (௧௧)

ஆலகாலமாகவந்தடர்ந்துகின்றவாடவர்
வேலும்வாளும்வலையநேமிவிஞ்சுமாமழுக்கழுச்
சூலமாமுசண்டிமுற்கரங்கள்சூழவீசியே
காலமாரிபோலவாளியெங்கணுங்கடாவினார். (௧௨)

எதிர்ந்தவேல்கள்வாளியெய்தடர்த்தவீரரெங்கணு
முறிந்துபீதியோடுமோடமூரியானைமாவெலாந்
தறிந்துபார்மறிந்துதேர்தகர்ந்தொடிந்துசாயவே
பறிந்தபோதுவாளியெங்குமெய்தனன்பராபரன். (௧௩)

சுற்றும்வந்தடர்ந்துநெஞ்சழன்றுசூழியானைகொண்
டெற்றுமெற்றுவீரர்தேர்களோடுசாருமிவுளிகள்
முற்றுமுற்றறுத்துவானின்முடுகுமாமுடித்தலை
பற்றியுற்றவாளியண்டம்விண்டுறப்பரந்ததே. (௧௪)

கரந்துணிந்தவாறுணிந்தகாறுணிந்தகுஞ்சரங்
குரந்துணிந்தவோடுமாவினங்கள்வீரர்கோலியே
சரந்துணிந்தமார்பினோடுதோடுணிந்தமாமுடிச்
சிரந்துணிந்தவாழிமீதிலுதிரவாரிசேரவே. (௧௫)

குஞ்சரங்கள்விஞ்சுதேர்கள்சூழவேகொதித்துநீள்
வெஞ்சரங்களெய்துவேலடர்த்தெதிர்ந்தவீரராம்
வஞ்சரங்கமேபிளந்துபோகவாளியெய்தனன்
கஞ்சரங்கமங்கமார்பிலேமிதித்தசாலினான். (௧௬)

சீறுநூறுகோடியானைதேர்கொடேகிவீரமு
மேறவேறுளேறுபோல்வேயெதிர்ந்தவீரர்வா
னேறவாறெனச்சிவந்தசோரிவேலையெய்திடப்
பாறினோடுகூளினாளியெங்கணும்பரந்தவே. (௧௭)

ஆடல்மாவுமோடுதேருமாடகக்கிரிக்குநே
ரோடையானைசூழவேயுருத்தெழுந்துமேவிய
கோடைமாரிபோலவாளிகோடிமேலுமெய்தவர்
வீடவெஞ்சரங்களெங்குமிடையமாயன்வீசினான். (௧௮)

ஆலநீளிலைக்கிடந்தவாதியேவும்வாளியாற்
றூலனேகமிவுளிபன்னுசூரரெங்குமிடையவே
காலனேர்செய்சாலுவன்னடர்ந்துநெஞ்சுகதமுற
வேலையேழுமறையவாசுகங்கள்வில்லின்வீசினான். (௧௯)

சாலவேமுனிந்துசாலுவன்விடுத்தசரமெலா
மாலுமாறுவாளியால்விலக்கிமற்றவன்றன்மே
னாலுகோலழுத்தலோடுநன்றுநன்றுநன்றெனச்
சூலமேதுரக்கமாயன்வாளியெய்துதுணிசெய்தான். (௨௦)

சீறிமேவுசாலுவன்செகத்துளோர்நடுங்கவே
யேறநேதரன்படைதொடுப்பவீசன்வாளியால்
நூறிநூறுவாளியால்வில்லிரதமூற்றுறுக்கினான்
மாறில்மாயன்வென்றிகண்டமறவன்மண்ணிலோடினான், (௨௧)

(சாலுவப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௩௯௩.)

## ௭௪-வது. தந்தவக்கிரப்படலம்.

எருவைவேந்தர்க்குயர்பதமீந்தவன் பொருதவீரப்புகழைச்செவியினூற்
பருகுவாரடியாரடிபற்றுவார் கருவிலேதிருவுற்றவர்காண்மினே. (௧)

நந்தனன்மகனாகியநாரணன் சிந்துவெங்கணையாற்கரிதேரிற
நொந்துசாலுவன்வென்னிடநோக்கிய தந்தவக்கிரன்வந்துதடுத்தனன். (௨)

ஒருவன்கைத்தமர்செய்திடவோடியே வெருவியிம்பரில்வீழ்ந்துதியங்கினீர்
செருவின்வன்றிறல்நன்றெனத்தேரின்மே லருளில்நெஞ்சினனேறியடர்ந்தன

எரிந்தகோட்டனெழில்வடநாகம்போற் றெரிந்தவாக்கையன்றேர்கரிசூழ்ந்திட
விரிந்தமன்னரைநோக்கிமிகழ்பவன் விரிந்தநீர்க்கடல்போலவெகுண்டுளான்,

ஆகுமாறறியாதிங்ஙனைசையா லோகையோடும்முருளொருதேரின்மேற்
பாகுலாமொழிப்பாவையைக்கொண்டுநீ யேகலாதுநீகில்லென்றியம்பினான்.

ஒல்லையிற்செல்கரியினைலோங்குதேர் சில்லுளைப்பரியின்றிரள்சென்றிடப்
பல்லியங்கரங்கப்படைமன்னர்கள் வல்லியங்கொதித்தாலென்னவந்தனர்.

பார்த்தபார்த்ததிசைதொறும்பாய்பரி சேர்த்ததேரொடுவீரர்கள்செல்லவெங்
கார்த்தவேசையினூர்கலினுன்சின தூர்த்ததூளிவிசும்பிணைச்சூழவே (௭)

கரிகளும்மொருகோடிகதித்ததேர் நிரைகளும்மொருகோடிநிறைந்தெழு
பரிகளும்மும்மடிவீரர்பதின்மடங் குலாசெயுந்தொகைமூன்றக்குரோணியே.(௮)

களிக்குமும்மதப்பூட்கைகள்காரின மொளிக்கவிஞ்சுங்கொடியுடைத்தேர்களு
வெளிக்கிடம்மிலதாயெங்குமேவவே வளைத்தனன்றந்தவக்கிரமன்னவன். ()

வேறு. கடவுதேர்பரிகள்கரிகள்வீரர்பலமிடைவகண்டுகருணாகரன்
இடிகளோடவுநுசிலையினொலியெழுப்பிவால்வளைமுழக்கிமா
முடிகளோடுமுடிமிடையவான்முடுகிமுகில்றேடளவிநிலன்விழ
விடவராவெனகிமிர்ந்தவெங்கணைகள்வேலையுஞ்சுவறவீசினான். (௧௦)

அற்றதேர்கள்படிபொடியதாயுதிரவாவிவீரணிமாவொடு
மிற்றுநீளுமலைபோல்விழுந்துருளவெண்டிசாமுகமுமெரியவே
பற்றலாரையுயிர்பருகிவானிடையொழிக்குமாவிசைகொள்பகழிசென்
றுற்றபூவலயமதிரவீழ்குருதியுவரிபோல்முடுகியோடவே. (௧௧)

எழுந்தமாகரிகளிரதமாதுரகம்யாவுமோர்நொடியின்முன்னரின்
விழுந்துபாரிடைபுரண்டுவீரர்சிலைவாளியோடுமறவீரமு
மழிந்துமாமுடியினங்கள்வானுறவடர்த்தனன்கரியவஞ்சனக்
கொழுந்துபோலொளிருமாயன்வெஞ்சிலைகொடேகொடுங்கணைபொழிந்தரோ.

குஞ்சரங்கள்பதினாயிரங்களுயர்கொண்டல்கீழ்விழுவகொள்கைபோல்
வெஞ்சரங்களின்மடிந்ததேர்களணியெண்ணிலாதகனல்மேவிடும்
பஞ்சமங்கியதெனப்பொரிந்ததுபசுந்தசைக்குருதிபாறிட
வஞ்சியெங்கணுமிடைந்துபாரினர்களரசர்கூளிகளுமாடவே. (௧௩)

கன்றிறல்விளவெறிந்தசோதிவிடுகணைகளாலிரதபரிகரி
பொன்றவீரர்கள்மடிந்தசெங்குருதிபுணரியிற்கடிதுபோய்விழ
வென்றவாதினிலைகண்டுகண்கனலவில்லின்வல்லவிறல்வீரன்மு
னன்றிதாமெனமொழிந்தனன்றந்தவக்கிரனவைகொணெஞ்சினன். (௧௪)

சீறினனிருகணுஞ்சிவப்புறவெதிர்த்துவெஞ்சிலைகுனித்துநா
னூறுமாயிரமுமாகமாதிரமும்வானமும்மறையநொடியினி
லேறதேறுமரனஞ்சவெய்தசரம்யாவும்வீழவொருவாளியால்
வேறுருவகையறுத்தனன்கடலின்மேவுமாதுவரைவீரனே. (௧௫)

அழலுநெஞ்சினனடர்ந்துவந்தெதிருமாலமென்னவனவின்படை
சுழலுமெண்டிசைதுலங்கவேலைபலைசுவறவில்லிடைதுரந்திடக [டோர்
குழல்கொடேமிறைவருணன்வெங்கணைகொடேயறுத்தவிர்கொள்கொடிகொ
கழலவெங்கவசமார்பினூடுருவவேகவாளிகள்கடாவினன். (௧௬)

விரியுமாலவரையினருவிவீழ்வதெனவெய்யவன்கனகமார்பினிற்
சொரியவெங்குருதிவிடவராவெனமுனிந்துதோமரமுலக்கைவா
ளெரியையேநொனவெறிந்திடக்கருணையானுயர்ந்திணையிலாதவா
ளரியும்வாளியொருநூறுகொண்டவையறுத்தனன்கொடியனஞ்சவே. (௧௭)

அல்லிணைப்பொருவுநெஞ்சன்வெஞ்சரமனேகமெய்திடலுமற்றவன்
வில்லினைக்கணையிரண்டுகொண்டுபலகண்டமாகிவிழவேயறுத்
தொல்லையிற்பரிகளும்மடிந்தொளிகொடேரழித்திடலுமுன்பகர்
சொல்லிறக்கடிதுதரணிமேல்வெருவியோடினனமரர்துள்ளவே. (௧௮)

தந்தவக்கிரனுடைந்துவாய்குருதிவீழநீடாயிலோடவே
யுந்துமுக்கிரநெடுங்கணைப்படவுருண்டமாகரிகளுலவுதேர்
வெந்திறற்பரிகளும்படக்கரியவேலைபோல்விரியும்வீரர்தா
முந்திமைக்கிரிகள்போலவெண்டிசைபரந்துபாறினர்களமுடுகியே. (௧௯)

(தந்தவக்கிரப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௪௯௯௨.)

# ௭௫-வது. மகதராசப்படலம்.

நாராயணனென்முகனைத்தருவோன்
பாரோரடியுள்ளுறநீள்பரமன்
பேராயிரமெய்தியபீடுடையோன்
ஆராவமுதன்னடியேதொழுவாம். (௧)

கரிதேர்பரிவீரர்கள்காணிலுறு
மரிநேர்படுகுஞ்சரமாவெனவே
யிரிவோர்களையஞ்சன்மினஞ்சன்மினென்
றுரையாவுறுமேறெனவந்துறுவான். (௨)

அதிரும்முரிடேரினடர்ந்தெழுவான்
கதிரின்சுடரானகலன்களுற
வெதிருங்கரிபோலெழுவானுடவு
முதிரும்மெனவாய்விடுமோசையினால். (௩)

அலையேறுகருங்கடலாமெனநீள்
மலையேநிகரானைகளும்வளையச்
சிலையேறுகையானவைசேரவுறும்
புலையேநிலையாகியபுந்தியினான். (௪)

கராநொந்திடவேகரியுய்ந்திடமுன்
விராதன்படவென்றருள்வீரியனை
யராவின்சினமென்னவடர்ந்தனனாற்
சராசந்தனெனும்பெயர்தானுடையான். (௫)

முரசம்முகிலென்னமுழங்கியிடச்
சுரர்தம்பதிவெண்கொடிதுன்னியுற
விரையுங்கடல்போல்வளையோசையெழ
வரசன்மகதன்கடிதின்னடைவான். (௬)

மன்னன்மகதன்வரமாகரியுந்
துன்னும்பரிதேர்நிரைசூழவர
மின்னும்படைவீரர்களித்தெழநற்
சின்னம்பலவோசைசிறந்தனவால். (௭)

கரிகோடிகலித்திடுதேரினிரை
யிருகோடியவற்றினிரட்டியமா
வுரைநேர்தொகையொன்பதக்குரோணியுடன்
செருநேர்மகதன்னெதிர்சென்றனனால். (௮)

நில்லெங்கினியேகுதிநீயிடையா
மல்லின்றிரடோளன்விதர்ப்பன்மக
ளல்லென்குழலாடனைவிட்டகலென்
வில்லின்கணைநின்னுடல்மேவுமுனே. (௯)

இடைந்தேவளையுட்புகயானிடுதீப்
படர்ந்தேயெரியுற்றிடநீபரவை
யடைந்தேயுயிருய்ப்பந்திமோண்மையிலாய்
கடந்தேகலேதில்லெனவேகழறி. (௧௦)

சிலைநாணொலியேழுலகுஞ்செலவே
கொலைவாளிகள்கொண்டுறுகோளரிபோ
லலைசூழ்புவியஞ்சிடவந்தனனால்
மலைபோலெழுமாகதமன்னவனே. (௧௧)

படைவீரர்கடேர்சரிபாய்பரிமா
கடலாமெனவேவளையக்கடிய
வடல்மாகதன்வந்ததுகண்டனனூர்
குடமாடியுவந்தருள்கோவலனே. (௧௨)

சிலைகால்வளையச்சிறுநாணொலிதா
னுலகேழினுமெய்திடவோதியர்தம்
கலைவாரியகைகொடுகார்முகில்போற்
கொலைவாளிகளெண்ணிருகோடியெய்தான். (௧௩)

விடமாமெனவேவருவெங்கணையாற்
கடமாகரிபாய்பரிகால்களற
வுடல்சோரவுருண்டுவிழுந்தனரா
லடர்வீரர்கடேர்சிலையற்றிடவே. (௧௪)

கரியற்றனதேர்நிறையற்றகடும்
பரியற்றனபல்படைவீரர்கடம்
சிரமற்றனமுந்தியசெம்புனலுந்
தரையுற்றதரங்கமெழுந்துறவே. (௧௫)

காலற்றனவீரர்கரங்களற
வேலற்றனவில்லினமற்றனநீள்
வாலற்றனமாகரியற்றனவா
லாலிற்றுயில்வான்விடுமம்பதனால். (௧௬)

நூறாயிரமாகரிதேர்நொடியி
னீறாயிடவேகிமிர்வெங்கணையாற்
சேறாயுறுசெம்பிசிதக்குருதி
யாறாயலைவேலையடைந்தனவால். (௧௭)

எரிந்தோடினவாளியிகற்பரியை
யரிந்தோடினவாடவரஞ்சநிலத்
திரிந்தோடினவெங்கரிகோடிறவே
விரிந்தோடினதூய்மைகொள்வெண்டரளம். (௧௮)

ஒருதேரினனுமெனவேயுளமுங்
கருகாவெதிரிற்பொருகாவலர்தா
மருளாரரவிந்தவிலோசனன்விற்
சரமாரியினுலுருள்வார்தரைமேல். (க௯)

ஐயன் கணையொன்றினிலானைகளாம்
பெய்யுஞ்சிலைவீரர்களெண்ணிலர்தங்
கையும்முடலுங்கொடிறுங்கழல்வ
ருய்யுந்திறமெங்ஙனமொன்னலரோ. (உ0)

வடவைக்கனலாமெனும்வாளிகள்மே
லடையப்பரிதேர்கரியாடவருங்
கடையப்படுவாரிகலங்கியபோ
லடையச்சனல்மாகதனுற்றனனே. (உக)

வேறு. வென்றிகண்டுசிலைவல்லவீரமதுநன்றுநன்றெனவிளம்பியே
குன்றுநின்றெனவுயர்ந்தகோளரியெழுந்துமேல்வருவகொள்கைபோற்
கன்றுநெஞ்சனிருநயனமுங்கனல்கொளுந்திடக்ககனமறுகுற
வென்றின்மேல்வருமராவெனக்கடிதெதிர்ந்தனன்மகதனென்பவன். (உஉ)

எதிர்ந்துவெஞ்சிலைகொடெய்யும்வாழியெழுநூறுமாயிரமுமேவிவா
னதிர்ந்தபெய்யுமுகிலாமெனக்குவலையங்களாசையொடுமறையவே
முதிர்ந்தெழுந்தவடவன்னிமூவுலகுமூடுமாறெனமுடுக்கியே
யுதிர்ந்துவிண்ணுடுவும்வீழுமென்னவொளிர்சங்கமுந்திகழவூதினன். (உஙு)

சங்கமூதியடர்மாகதன்விடுசரங்களானவைதுணிந்திட
வெங்கணுனையிருகோடிறுத்தருளும்வீரியக்குரிசில்தேவகி
சிங்கம்வாளிமழையேவவேயெரிபரந்தவானிலெடுதிசையெலாம்
பொங்குவேலையலைநீர்வறந்துதிடரானபல்லிவுளிபுரளவே. (உச)

கூற்றினுருயிருண்வாளிபோலெரிபரந்துதேர்குரகதங்களுந்
தூற்றுதூளியெனவேமடிந்தசெயல்கண்டுமாமகதனுந்தொடர்
காற்றினீள்படைதொடுத்தனன்வடிவினுலுயர்ந்தகருணைகரன்
மாற்றினனவையிமைப்பின்வானினுறவாயுவின்படைவழங்கியே. (உரு)

சூரியன்படைதொடுத்தனன்மகதராசனென்றுமமர்சோர்விலா
வாரியன்சிலைகுனித்துவன்னியுறமம்பினலவையறுத்தன
னீரமில்லவனும்வெஞ்சினத்தினெடுதண்டுகொண்டுகையெறிந்தனன்
வீரனக்கதையுதிர்ந்துபோகவொருவாளியேகொடுவிலக்கினன் (உசா)

ஆலமாமெனவழன்றுமாமகதராசனூர்கலிகலங்கிடச்
சூலமேல்விடுதலோடுமங்கதுசுழன்றுமூவுலகுமதிரவெங்
காலனுகிவரு தன்மைகண்டுகதிரோலவெந்துமொருகணையினுற்
பாலனுகிமுனமாலின்மேலமருமாயனுண்பொடிபடுத்தினன். (உஎ)

நெஞ்சழன்றுமுனிவோடுநின்றநெறியில்லவன்விழிநெருப்பெழ
நஞ்சமென்னவெழுவாளிமாமழைதுரந்தனன்கதிர்நடுங்கவே
விஞ்சமுன்னம்வருபகழிமாரியறவெய்யசாயகம்விடுத்தரி
வஞ்சன்வெஞ்சிலையறுத்துமார்பினிடையாறுபல்லமுமடுத்தனன். (௨௮)

மார்பினேவுகணைகவசமூடுருவிவானினெய்தமழையேயவே
பாரினோடவுமுகுருதிவாயுமிழுமகதனேறியபதாகைசேர்
தேரினொடுருளையறவுயர்ந்தகொடிகடலில்வீழவுயர்திசைகளி
னூருமாவலவன்மடிவுறக்கணைகளேவினானுலகுநேமியான். (௨௯)

தேரிழந்துசிலைதானிழந்துதிரவாரிவாயுமிழுதியவன்
பாரிழிந்தவிர்கொள்கேடகங்கடுபற்றிமின்னெறிகொள்பங்கய
னூரழிந்ததெனவாயிஞைசையுறவுற்றெதிர்ந்தரிபைவாளியாற்
போரழிந்திருகைபடைகளுந்துணியவோடினான்மகதபூபனே. (௩0)

ஓடினான்மகதராஜன்மாவினணியோடுதேரினுறுவீரர்தாம்
வீடவீழ்குருதியோடிநீடுகொடிமிடைபவேலைமிடைவடையவே
சாடினானரனுமுருளவேதவமுமாதிவில்லுமிழ்சரங்களா
லாடினார்கள்மறைமொழியும்வானவர்களந்தரத்தின்மலர்தூவியே. (௩௧)

(மகதராசப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். ௪௯௧௩.)

---

## ௭௯-வது. சிசுபாலப்படலம்.

ஸ்ரீதரன்புருடவுத்தமன்றிகிரிகோடுகொண்டுதிகழ்செங்கையான்
மாதவன்னிருடிகேசன்மாயவன்முராரிபற்குணன்மகிழ்ந்திடக்
கீதையன்றுரைசெய்ஞுதன்மாமறைதொடுக்கவேகிரிகொள்கேசவன்
யாதவன்புகழுறைந்துவாழுமடியார்களெங்கணிறைகாணுமே. (௧)

தெண்டிரைக்கடலுடைந்ததாகுமெனவேயுயர்ந்தகரிதேர்பரி
யெண்டிசைக்கணிடையோடவீரர்களிறந்துசொந்தலறியேகுவ
கண்டனற்கொளுவுகண்ணன்வன்றிறல்பிறங்குகம்பமதயானைமேல்
மண்டலத்திலுறுமன்னர்சூழமணிமன்னுமாவிரதமேறினான். (௨)

சூலமுற்கரமுசண்டிநேமிபரிகங்கடோமரமுலக்கைவாள்
வேலெழுக்கணையமங்குசங்குலிசமிக்கபாசம்வலையங்கள்மூட்
கோலடற்கதைமழுக்கள்குந்தமொளிர்பிண்டிபாலமயில்கொண்டெழுந்
தாலமென்னவருவீரரெண்ணிலர்களாசைதோறுநிலனடையவே. (௩)

முரசபேரியொலிதிமிலைசச்சரிமுழங்குதக்கைகணெருங்கிட
வரிசையாலுயருமணிகொடேர்களொருகோடிமண்மிசைவயங்கிடப்
புரசையானையிருகோடிமற்றதனிரட்டியொல்லைவருபுரவிகள்
கரைசெயாதகடல்மணலின்மும்மடிகணக்கில்வீரர்கள்கலித்தெழ. (௪)

இன்னதாயிரதசதுரங்கபாலக்குரோணிதொகையெட்டுடன்
மின்னும்வாளினர்கள்சூழவாழியெழும்வெய்யவன்னெனவிளங்கியே
மன்னர்கோனதிரதர்க்குள்மூர்த்தியுறுசேதிராசனெனும்வலியினு
னுன்னுபோதின்முனுடைந்தசேனைகளையஞ்சலஞ்சலெனவுற்றனன். (௫)

விடையினன்னிவருபுனிதனுகவுயர்விண்ணவர்க்கிறைவனுருக
வடல்முனைத்தொழில்கொள்சிலையினுந்திவிடுமம்பின்மாரியெதிருற்றபே
ருடைவதல்லதொருநொடியுநிற்கிலர்களும்பர்தாமஃதுணர்ந்துளா
ரிடையனென்னெதிரினிற்கைகன்றெனநகைத்தனன்னெரிபிறக்கவே. (௬)

வில்லுநன்மழுவுநேமியும்மிடைபவிஞ்சுதேரின்மிசைவீரர்கள்
செல்லும்வெங்கரிகள்கொண்டுமன்னர்சடிரண்டுமண்ணின்மிசைசிதறியே
மல்லடும்புயனைவந்துசுற்றிடமடித்தவாயனல்பிறந்திட
வில்லுநில்லெனவடர்ந்தனன்கொடியநீசனனசிசுபாலனே. (௭)

வேறு. சேதிராசன்கடகரிபரித்தேருடன்வீரர்சேநப்
போதன்வாளுளியேறிசன்வானவர்களும்பொருமுநெஞ்ச
ரீதெனுவெனுமுனம்பாதவன்சிலையுறும்வாளியெய்தே
மோதினனிரதமீதரசருந்துரகமும்முடியவேதான். (௮)

ஆளின்மேலிரதமேலானைமேல்மாவின்மேலரசர்மேலொண்
வாளின்மேல்வேலின்மேல்தேரின்மேல்வயவர்தம்மார்பின்மேலுந்
தோளின்மேல்வதனமேல்விரலின்மேலிலகியதுடையின்மேலுந்
தாளின்மேல்முடியின்மேலளவிலாதானசாயகம்விடுத்தான். (௯)

கொடியறக்கரியினங்கோடிறத்தேரறக்குரகதத்தின்
அடியறப்பாகர்தந்தலையறச்சுடர்விடுமணியினம்பொன்
முடியறத்தோளறக்குருதியும்மூளையுந்தசையுமென்பும்
படியுறக்காகமுங்கூளியுங்குமலியும்பரவுமாதோ. (௧௦)

குண்டலக்காதொடுமறுமுடித்தலைகளுமெண்ணில்கோடி
மண்டலக்கதிரவன்வானிறைந்தென்னமாவிசையினோடும்
விண்டலத்தெழுவகிழ்விழுவமாவிசயமான்விசிகமாய
முண்டகக்கைகளிட்டாடுமம்மானைபோல்முடுகுமம்மா. (௧௧)

மூளும்வெங்கரிகளும்பரிகளும்மரசரும்முடியகீளுங்
கூளியுஞாளியுமிகலனுமெருமையுங்குடர்பிடுங்கி
மூளையுந்தசைகளும்நுகரவீழ்குருதியால்முடுகியோடக்
காளியுங்கையெடுத்தாடினள்கண்ணனார்புகழ்கள்பாடி. (௧௨)

கையறுங்கோடறுங்காலறுஞ்சிரமறுங்கரிகள்வீரர்
மெய்யறும்மார்பறும்வில்லறுங்கரமறுமிளிர்வகண்ணின்
மையறுங்காதறும்வயிறறுங்குருதியுமண்டுமண்மேற்
பொய்யறும்புனிதனூர்பல்லவமெங்கணும்பொழியுமாதோ. (௧௩)

நாகநாருயிரங்கரிபரித்தேர்களுங்கொடியின்முன்னர்
ஏகனாருயவிழுமீமொலாழியோன்றேகமண்ணின்
மாறுமாறுமெனப்பரவையின்வீழும்வெங்குருதிவெள்ள
மீறுறுதிரைவனர்சரமுனேரடையலார்வீழ்ந்தமன்னர். (௧௪)

துணியுமோர்கையினுங்கொம்பினுங்குருதியுந்தூயபத்திர
மணியுமேபரவநீள்கரியவைமதிகிறக்கும்பியாரத்
தணியுமாதுகிர்களும்புனிதமார்மணிகளுஞ்சாரகீக்கும்
வணிகர்போலொத்தமால்வாளியாலரியுணுமதகயங்கள். (௧௫)

முடிஞர்தேர்களுங்கரிகளும்பரிகளுமுடுகிமன்னர்
விடுனர்வேலைதுண்மணலினும்பலரதைக்காணும்வீரர்
ஓடினர்வாடிவாவலரவீழ்குருதியைப்பருகியூர்போய்த்
தேடினர்தாமிருந்துறையுமாமனையினைத்தெரிகிலாதார். (௧௬)

திக்கெலாமோடுவார்சிதறியூர்தேடுவார்மனைபுகுந்து
மக்களோடுறைகுவார்கண்ணுறாசுகம்வந்ததென்றே
கக்குவாருதிரநீர்மனைவியுமலறவெங்காலனாரும்
பக்கமாய்வந்துயிர்பருகிடத்தனுவுமப்படியின்வீழ்வார். (௧௭)

வேலைபெருங்கிழிந்தோடுமாறெனவருதினிமெலிந்தே
பாலமேவிடுமாளமரர்போலாகுலித்தலறியோட
மாலினார்சிலையிலவ்வூழியினீர்த்தறைபெய்யவானம்
போலவேழ்கடல்வளைப்புவிதிசையெங்கணும்பொழியும்வாளி. (௧௮)

கண்டுகண்கனலெழச்சேதிபன்கடுமையிற்கடவுதேரி
னண்டரும்வெருவுறச்சிலையினுநெலியுறவலைகொள்வேலை
மொண்டுமைம்முகில்சொரிந்தாலெனப்பகழிமேல்மூடிகியேவி
விண்டலம்விண்டதாமென்னவாயூதினன்சங்கம்வீரன். (௧௯)

மாதிரமனைத்துமதிடச்சேதிபன்வருதல்கண்டான்
சீதரன்சிகைபெழுஞ்சுடர்சிலீமுகவிலிற்சிதறியெங்கும்
பாதகன்விடுசுடர்க்கணைகளற்றுவரிபிற்படியவெய்தே
யூதினன்சங்கமெவ்வுலகினுந்திசையினுமொலிமடிப்ப. (௨௦)

என்றுநீள்வில்லின்வல்லாண்மையென்றவனுமெண்ணையுமெய்த
வென்றிசெய்குவனிவைகாணெனவெஞ்சினம்பெருகமேவுங்
கன்றுமேடவிசேர்கள்வகாவென்றுரைகழறியம்பொற்
குன்றுமண்குலைவுறக்கொடுமைசேர்நாகபாணங்கொடெய்தான். (௨௧)

அருளிலான்விடுமணிப்பஃறலைத்துத்திவாளரவம்வாயிற்
றிரளுமாவிடமுறச்செகதலங்குலைவுறச்சேர்தல்கண்டான்
மருளெலாமகலவாழ்த்தினர்மனத்துறையுமால்வயினதேவன்
பொருளிலாவும்படைச்செல்விடப்பணியெலாம்பொடியதான. (௨௨)

விடவராமடிவுறச்சேதிராசன்சினம்விளையவில்லா
விடபமூரிறைவனற்படையெடுத்துரனுறவெய்தலோடுங்
கடலெலாமலையவெண்டிசையெலாங்குலையவெங்கனலெழுந்து
மிடையமாபூதமுஞ்சூலமுமாவமும்வேலுமாகி. (உ௩)

இறுதியிற்சங்கரித்திடுமரன்படைவரப்பொதுவரில்வி
னுறிதனிற்றயிரெடுத்துண்டவன்கண்டுமோபதியினம்பு
முறைமையிற்கடவிடப்பரிதியின்சுடர்கெடக்கடிதின்முந்தி
யறனிலக்கொடுமையன்விடுபடைக்கலமறுத்தவணிபுக்க. (உ௪)

கண்டனன்பிஞ்ஞகன்கணையறச்சேதிபன்கனலுநெஞ்ச
னண்டமெண்வளாகடலகிலமோடுண்டருளாதிதன்மேற்
றண்டுகொண்டெறிதலுங்கைசெய்தேசக்கரபாணிநீறு
மூண்டகத்தெழுமுகைப்பல்லவமுடுகவக்கதைமுறிந்த. (உ௫)

கதையறக்கதமுறுஞ்சேதிபன்கனலவன்படையைவாங்கி
யிதுதடுத்திடுதியென்றெய்யமாலென்றின்மந்திரமியம்பிக்
கதிருறக்கடவுவெம்படைவருஞ்சாமறக்கயவன்மார்பிற்
புதைவுரக்கவசமும்பொடிபடக்கடவிடைப்புக்கதம்மா. (உ௬)

மார்பினிற்கவசம்நீறுகிடக்குருதிமால்வரையின்மீது
நீரெனப்பெருகவும்நேரிலானெய்திடவிறையும்வாளி
யோரிமைப்பதன்முனேழுலகெலாமுடமூன்கணலையுண்ட
வாரியக்குரிசிலோர்பகழியாலம்பொடுஞ்சிலையறுத்தான். (உ௭)

வில்லறக்கொடியவன்மழுவெழுத்தண்டுவாள்முசலம்வேலோ
டெல்லுறச்செல்லும்விட்டேருருந்தங்கைகொண்டெறிதலோடு
மல்விறக்கதிர்வருஞ்செயலெனக்கணைதொடுத்தவையறுத்தே
யொல்லையிற்கடியவன்மணியுறுமவுலிமூன்றுதிரவெய்தான். (உ௮)

மகுடமூன்பொடிபடக்கதமுறுஞ்சேதிபன்மணியுடைத்தேர்
சகடொடும்பரியறக்கொடியறப்பாகன்வன்றலைவிண்மீதின்
முகடொடுமளவிலாமுகிலுடன்கெழுமிமண்முழுகிவீழப்
பகடொடுங்கஞ்சனைக்கொன்றமால்பகழிமாமாரியெய்தான். (உ௯)

மூறும்வெஞ்செருவினிலிரதமாவறவெய்யமுனிவிறேடும்
வாளிலங்கிடவருஞ்சேதிபன்வெருவமால்வரிவில்வாங்கித்
தோளினுமார்பினுங்கையினுமெய்யினுந்துடையின்மீதுந்
தாளினுமளவில்வெங்கணையெய்தானவனிலந்தன்னில்வீழ்ந்தான். (௩0)

ஆறுபாய்வனவெனக்குருதிவாயொழுகுசேதிபனயர்ந்து
தேறினும்மனதினிற்பீதியுற்றிடவெதிர்சிறிதுமில்லாப்
பாதிறன்கண்டகுண்டினபுரிப்பாவையன்மொழியுடைத்தே
ஒருபூங்குழலிணைவினமாலுவகையானகைசெய்தாளால். (௩௧

அடலுறுஞ்சேதிபனுடலெலாஞ்செம்புநீருவிழ
மிடலழிந்தோடலுங்கரிகள்மாதேருடன்வீரரெல்லாங்
குடரணித்தசையெலாங்குவைசெய்தேயோடிசெங்குருதியான
கடல்கடந்தோடினார்சிலரதின்மூழ்கினாராவிகாணார். (௬௨)

(சிசுபாலப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௪௯௨௫)

## ௭௭ - வது. உருக்குமன் அபசெயப்படலம்.

இரணியனுரம்வகிர்ந்துமற்றவனெழிற்சுதற்காசளித்துமா
முரணிலங்கைமன்னுவிகொண்டெழில்கொள்வீடணற்குமுடிசூட்டியே
யரவுயர்த்ததுரியோதனனனுசர்கிளைஞருமரின்வீயவே
தருமனுக்குநிலமருளுமாயனிருசரணமென்னவினைதகருமே. (க)

சந்தவக்கிரமன்மகதன்வெங்கொடியசாலுவனுயர்பவுண்டரன்
சிந்திவெண்டிசையுமோடவோடிவருசேதிபன்செயல்கள்கண்டனன்
அந்தகற்கும்வலிமிக்கவாண்மைபன்விதற்பராசன்மகளானதேன்
சுந்தரிக்குமுனம்வந்தமன்னவனுருக்குமன்னமர்தொடர்ந்துளான். (உ)

வீரரானவர்களமரினும்விசைநன்றுநன்றெனவிளம்பியோர்
தேரினேறியெழில்கவசமார்பினிடைசேரநீடுசிலைவளைவுறக்
காரும்வானமுமடுங்கவேழ்கடல்கலங்கிடக்கனகசிகரமும்
பாரினோடலையநாணெறிந்தொலிபரந்திடப்பணிலமூதினான். (௩)

பேரிமாமுரசபம்பைகும்பிகைகடிமிலைபீலிடையவுறுமியுந்
தாரைகாகளமிலங்குசின்னமலிசங்குகொம்பினுடனெறிமணி
வாரியாகுமெனவெண்டிசைக்கணுமுழங்கமாழையுறுவையமேற்
காரினூடுலவிமணிகள்மின்னவொளிர்கனகநீடுகொடியிலகவே. (௪)

வீசசாமரைகளுயரவெண்மதிநிகர்த்தவெண்குடைவிளங்கிட
மாசிலாதமணிவயிரமாரமுறவெழில்கொள்மாமகுடமொளிரவே
பூசரேசருயராசிகூறவிருபுடையுமன்னர்கள்பொலிந்திட
வாசையோடுலகுமஞ்சவிஞ்சியவனீகமாக்கடலடர்ந்தெழ. (௫)

சீறுமாகரிகளாறுகோடிவிடுதேர்களுமதனிரட்டியே
மாறில்மாவுமதின்மும்மடங்குவயவீரரென்னிலர்வயங்கிட
ஆறும்வாரிதியெனப்பரந்தபடையொன்பதாயவக்குரோணிகொண்
டேறதேறுமரனஞ்சவஞ்சகனெரிந்தகண்ணினனெதிர்ந்தனன். (௬)

கரிகள்காரெனநிறைந்தெழுந்தவுயர்கனகமன்னுமணியொளிகொடோர்
விரியும்வானமிசைதிகழ்விமானநிரையேயமர்நிலம்விளங்கிடப்
பரிகள்மேவுதிரையாறுபோலவருபடைஞரும்பரவையேலவே
தரணிமீதிலுறவெய்துவார்களரிதன்னைமின்னிநெறிசென்டனர். (௭)

வேறு. அரிதனெனுமுழங்கியடலின்முனைபவர்க
ளிரதகசதுரகமிலகவெறிகடல்கள்
வருதகைமையெனவுமரசர்வரிவில்கொடு
துரிதமனதினர்கள்கணைகள்சொரிபவரே. (௮)

புகையினகையினர்கள்பொறிகளுகும்விழியர்
ககனமதிரவொலிகரியின்மிசையிலகு
மிகலர்சுரிகைகளொடெழுவுமெறிமவர்
திகிரிதிகழ்கரனைமுடுகுதிறலினரே. (௯)

துடிகளுறுமிபறைமுரசுதொகையிலக
விடிகள்வெருவவடிபடுவதுவனியுறு
மிடையும்விறலினர்கள்வெடுவெடெனுமொழியர்
கொடியரிரதமிசைகுலவுகொடியினரே. (௧0)

சூலம்வலையமழுவாள்கள்கதைசுரிகை
வேல்கள்குலிசமெழுநீடுகணையும்விடு
கோல்களுடனெறிவர்கோவுளமர்பவனை
யாலமெனவடர்வர்தேரினதிரதரே. (௧௧)

வெய்யவயவர்சிலைகுனியவிசிகமழை
பெய்வருலகயனேடுதவுபெரியவனை
வைவர்சினமலியவனசமலரினுறை
தையறனைவிடுதியென்றுதகைபவரே. (௧௨)

கொடிகளிடையுடையகமலம்வருகுயிலை
விடுதிவிடுதியெனவுரைசெய்விறலினர்கள்
கடியகடுவைநுகர்கயிலையிறைபடைகொ
டிடையனிடையவெதிர்மலைவமெனுமவரே. (௧௩)

ஏகுநெறியடைமினேதமறவிலகு
தோகைமலரிவைதூயவழகினுறு
மோகனிவனிரதநூறியெதிர்முடுகி
வாகைபுனைதுமெனவோதுமறவர்களே. (௧௪)

ஒருவனிவனிரதமழியினுழுவதிலை
பொருவசிலையுமிதுநிகரில்புரவலர்கள்
வெருவல்வெருவலெனவுரைசெய்விறலினர்க
ளுருளுமுலையவருகரியினுயர்பவரே. (௧௫)

பரியின்வருவர்சிலர்படைகள்பலவெறிவர்
கரியின்வருவர்சிலர்கணைகள்சொரியுமவ
ரரிகளெனவருவரரசர்வளையிறொலி
திரளவகிலமொடுதிசைகள்செவிடுபட. (௧௬)

எதிருமதிரதர்களுடுவிளைமுயினி
யுதிருமுதிருமெனவொளிகொள்சிலையிறையே
முதிரவிடுகணைகள்வடவைமெனமுடுக
வதிருமவனியுருமரவுமனலுமிழ. (கஎ)

வேறு. நெஞ்சழன்றுபடைவீரரானவர்கணீதியானநெறியொன்றிலார்
குஞ்சரங்கள்பரிதேர்களானவைகள்கொண்டுசொண்டலைவளைந்தபோல்
விஞ்சவெஞ்சிலையின்வாளியோடுகதைவேல்மழுக்கணையும்வீசிரு
ரஞ்சிவிண்ணவர்கள்போய்மறைந்தனர்களகிலமெங்கணுமதிர்ந்ததே. (கஅ)

அனைதேர்கள்பரியெண்ணிலாதவைகளடரவந்தெதிருமாடவர்
சோனைமாரியெனவாளிதூவியுயர்தோமரந்தொகையில்வேல்மழு
வானுமாதிரமுமளாயவீசமலர்மீதுமாதுளம்வருந்திடத்
தேனுகாசுரனைமுனியுமாதவவில்வளையவெங்கணைதெரிந்தனன். (க௯)

அன்னமானனடையாளையஞ்சலெனவோதியாழியுமாழியான்
மின்னுமாமுகில்விளங்கிநின்றதெனமேவிவாளிமழைவீசவே
மன்னரானவர்களிரதமோடுதனமறியவெம்பரிகள்மதகரி
யுன்னுபோதின்முனுருண்டசெங்குருதியுவரியாகுமெனவோடவே. (உ0)

சிலையிறுணிறெலியுலகமேழுமுறவேகவாளிகள்செலுத்துமா
மலைகள்போலவருகரிகடேர்கள்பரிவளையவந்தெதிருமறவர்தந்
தலைகள்வானமிசைநிறையநீடுமுடறாணிவீழவனைதானென
விலைகொள்வேலையிடையுதிரவாரிவிழவலகையுங்கழுகுமாடின. (உக)

சுற்றுமேவுபரிகொண்டுசூழுமவர்தூயவெங்கள்குலமானினைப்
பற்றிபெருமறிவற்றவாயர்குலம்வந்தவன்பயமுறக்கடி
தெற்றுவீர்களெனவந்தெதிர்த்தவர்களென்றடர்த்தவனெய்வாளியா
லற்றசென்னிமாமகுடமின்னவுயரண்டமுற்றவையனந்தமால். (உஉ)

வேறு. சிலையினுறுநுணிநாணைசெயெயொளிர்செகமுழுதும்வீடுகாலமாமெனு
மொலிகளெழநாடிபோடுசாயகமுருளிரதமேவிநேருமாடவர்
தலைகளறஞாலமீதின்மாவொடுசரியினலவேழம்வீழமாசற
விலகுநிறைவாரிதோறுமேகினவிடையர்குலதீபவீசனேவவே. (உ௩)

அதிரதர்கள்மாளநீளுமாகரியடையவுடலோடுகோடுதாளற
வுதிரரதமூருமாவலோனுமெய்பொடியநிரைவாசிநாசமேயுற
வெதிரிலழல்வாளிவாளின்மாமுகில்விரியவுயராசைதோறுமேகின
சதுரன்வசுதேவன்வாழவேவருதனையன்விலின்மாரிபோலவீசவே. (உச)

முரன்முரியமோதுமாலினர்கணைமுடுகவுயர்போகுமாவோடானைகள்
வரைவிழுவபோல்மீதின்வீழ்வுறமணிமுடிகள்சூடிவாழும்வீரர்கள்
சிரநெரியவாளமூளையேபடிதிரளவிழிவீழநாவும்வீழ்வுற
வுரநெரியநாசிவாயிநேவுறவொடிவருடலோடுதோள்கடாள்களே. (உரு)

கொடிகுடைகள்வீழவாசிமாகரிகுடர்புரளவீரர்தோள்கடாளற
முடிகளறமார்புமாரமோடறமுசலமறவேல்கள்வாள்கடாறுதிர்
பொடிகளுறவிழ்வதேர்கள்பாரிடைப்பொறிகளுறவாசைதோறும்வாணமு
மிடியுடையவூடியோமெமாசுகமெறிகடலுள்வாழுமீசனேவவே. (௨௬)

அடியறுவதேரிணிதானறவடியடுவபேரிகாளமோடிறு
துடியறுவஆறுவாசிநாசிகடுடையறுவவானின்மேகமேலமர்
கொடியறுவமோடுசீடியேயொளிர்குடையறுவகோலமானமாமணி
முடியறுவவீரர்தோள்கடாளறமுடுகுகணைமாயனுபனேவவே. (௨௭)

சுதைதருவமாதுநாதனேவியதொலைவில்பலவாளிசோனையாமென
வுததிகனலாசமூனுமாகரியுருளிரதம்வாசிமாளவோடுவ
மதிதவழும்வேணியானென்னூர்புரமடியவெரியாகனூறும்வாரென
வதிதிமிலகோல்காலமானதவரசர்திரளாசைதோறுமோடவே. (௨௮)

தலையறுவர்மாவினேறுசூரர்கள்சரியிலுயர்தேரினேறுமாடவர்
சிலையறுவர்பாழிவாசிகாலொடுசிரமறுவமாறிலாதமாகரி
சுலமறுவவீரரானபேரினர்குலைகுலைவர்பீதியோடுமோடுவ
ரலையுறுநல்வாரிமீதிருகணையமருமருளாளன்வாளியேவவே. (௨௯)

அவனிதனில்மேவுதேர்கொடானைகோடதிரவருசூரர்சூழவேயறை
பவனனிலும்வேகமானமாவோடுபடைஞர்திரள்கூடிமூடினார்தலை
குவைகள்முகிலோடுசேரமீதுறுகுருதிநதியாறுபோலவோடின
துவரைநகராளும்வீரனுமிறைதொலைவிலெயும்வாளிமாரிதூவவே. (௩௰)

வேறு. ஆரியன்றனுவுந்துறமண்டினவாசையம்புவியண்டமுமிண்டிய
வாரியெங்குமலிந்தனவெங்கரிமாவினின்றுடர்வஞ்சர்மடிந்தனர்
பாரினெங்கும்நிறைந்தெழுசெம்புனல்பாரவங்கதுகண்டனர்விஞ்சிய
தேரர்வந்துநெருங்கியடர்ந்தவர்சீறிவெங்கணைசிந்தினர்முந்தியே. (௩௧)

சூரர்விஞ்சிநெருங்கினர்வெங்கணைதூவிவந்துதொடர்ந்திடமுந்திய
பேரிபம்பைகறங்கிடமங்குல்கள்பீதிகொண்டுபெயர்ந்தனசங்கொடு
தாரைபெங்குமுழங்கினவண்டர்கடாமுமஞ்சினர்கண்டிமுதுண்டன
வீரனம்புபொழிந்தனன்வஞ்சகர்வீறழிந்துயர்விண்டலமண்டவே. (௩௨)

தாளுடன்றலையுந்தலைதும்பிகள்சாயவங்கம்நெரிந்தனவெம்பரி
தோள்சிரங்கரமுந்துடையுந்துணிசூரவன்பினரென்பினுடன்றசை
மூளையுந்தியெரிந்தெழுசெம்புனல்மூரியம்பரமஞ்சமுழங்கின
வேளையன்பொடுதந்தவனின்றெதிர்வீசுவெஞ்சரம்நஞ்செனவிஞ்சவே. (௩௩)

வீறியெங்குமடர்ந்துமிடைந்தொளிர்வேல்முசண்டிகைகொண்டுயர்குண்டையி
னேரியஞ்சவெறிந்தவர்வன்றலையேகவம்பரமம்புவிசெம்புன
லூறிவந்தலைமுந்துகருங்கடலோடமண்டிடுகெண்டைகளுண்டிட
றேறவிஞ்சமில்கஞ்சமின்விஞ்சியதேரினின்றரிசிந்தினன்வெங்கணை. (௩௪)

வாரணங்களின்விஞ்சியெழுந்தவர்வாசியுந்திரதங்களின்வந்தவர்
பாரணங்குமெலிந்திடவெம்பரியாயமுந்திநெருங்கினர்வென்றிகொ
டாரணங்கியகுஞ்சியர்வன்றிறல்சாரவந்தவர்தந்தலைபித்திர
ளூரிணங்கிடவெங்கணும்வெங்கணையோடவுந்தினனும்பர்கடம்பரன். (௩௫)

வேறு. விண்டாரகையண்டிப்படிவீழுந்தலைமிடைய
வுண்டாகியகரிதேர்பரியுடன்வீரர்களுருளப்
பண்டாலிலையமர்வோன்விடுபகழித்திரள்பரவக்
கண்டானுயர்விதற்பன்றிருமகனாகியகடியோன். (௩௬)

ஒருதேரினிலிவன்வெஞ்சிலையொன்றேகொடுபொழிவான்
பரிமாகரிபடைவீரர்கள்மடியக்கணைபரப்பிப்
பொருமாறதுகல்லுமெனப்புகலாதகைபுகையா
வெரியாவுறவிரதத்தினைமுடுகின்றனனெதிரே. (௩௭)

மலைபோலுயர்கதிராமெனமகுடத்தொடும்வருமா
லலைவேலையின்விடமாமெனவிழியாலனல்சொரிவான்
சிலைஞாறுமொலியாலுலகுலையச்சிகியினைநேர்
கொலைவாளிகள்பலவுங்கொடுகொதியாவெதிர்வருவான். (௩௮)

படிவானகம்வெருவக்கடலிடையேபணியுமிழும்
விடமாமெனவிறுகாலையின்விடைமேல்வருமரனார்
வடிவாமெனரதமேல்வருமலைநேருருக்குமனுங்
கொடியான்ககபதியானுயர்கொடியானுடன்கூறும். (௩௯)

வெண்ணெய்க்கழுதடியுண்டுநெய்திருடித்திரிவிரகா
கண்ணிக்கயிறுடனேகழிகோலுங்கொடுகானி
னன்னித்தலையுழல்வாயெமதுயிராகியநலமாம்
பெண்ணைக்கொடுகளவிற்பெயரிடையாபிழைசெய்தாய். (௪௦)

விட்டேகுதிமடவாடனையல்லேயெனில்விடமாய்ச்
சுட்டேகுவகணையாற்சிலைதுணித்துன்னிருகரத்தைக்
கட்டேயென்னினின்றுதொழுமடியார்கழலிணையிற்
பட்டேயுறுதுகளாகுவனெனவேசிலபகர்ந்தான். (௪௧)

எரியாயெழவிருகண்ணினுமிமையோர்களும்வெருவத்
தெரிவாளிகள்கொடுவெந்துயர்சிலையான்சிலசபத
முனையாவதிருறுமேறெனவுருடேர்மிசையுயர்ந்தான்
னருளார்வசுதேவன்சுதனகையோடிவையறைவான். (௪௨)

வீரற்குறுநல்வாசகம்விரித்தாயதிவிலியுன்
றேரற்றுயர்கொடியற்றெழிற்சிலையற்றிடச்செல்லுங்
காருற்றெழுசுடர்வாளிகள்கலவாமுனமினினீ
பாரிற்குதிகடிதோடெனப்பரமனுரைபகர்ந்தான். (௪௩)

அரியாகியமுதலோனிவையறையுமுனரழல்கண்
ணெரியாயுறமுனிவானுயர்சிலைஞாணொலியெழவே
விரிவாகியகடல்மாதிரம்நிறையப்படிமிசையின்
சொரிமாரியினதிகத்துறுசுடராசுகஞ்சொரிந்தான். (௪௪)

வேறு. அத்திக்கொம்பைக்கொண்டதமோதிபறல்சால்பா
லத்திக்குளமின்றுக்கடல்செய்யச்சுதனிற்கு
மத்திக்குச்செல்வீரவிதற்பன்மகனுத்
தத்திப்பூணாறும்மிறையேலவழல்கின்றான். (௪௫)

குஞ்சரம்விஞ்சக்குண்டினமாபுரியாளுங்கோன்
வெஞ்சினநெஞ்சன்வில்கொலைவேலையிடையெய்தும்
நஞ்செனவெஞ்சிலைவெங்கணையெங்கும்விடநந்தன்
மஞ்சனுமஞ்சவாளிதொடெய்தானவைமாற. (௪௬)

அஞ்சமுகத்தானுமெனவெய்தியகல்வாளி
னஞ்சமுகத்தானொடுடனுகக்கணையெய்தா
னஞ்சமுகத்தான்ககபதிபடைகொண்டவைநூற
வஞ்சமுகத்தானுபின்வானத்தவராட. (௪௭)

புண்டரிகம்போல்வெம்பியபஞ்சானனமேபோற்
புண்டரிகம்போல்வந்தவிதற்பன்புதல்வன்சீர்ப்
புண்டரிகமின்னுபகன்வில்லார்ப்பொலியாற்றுன்
புண்டரிசத்துக்கொத்தசரந்தோள்புகநொந்தான். (௪௮)

கொடியானெஞ்சன்வஞ்சங்கொண்டான்கூற்றென்ன
வடியாலேபார்வாணுமடங்கவளவேகொண்
ணெடியோன்மார்பிற்புண்படவெங்கும்நிறைவாளி
நொடியோர்போதினெய்தனன்விண்ணோர்மனம்நோவ. (௪௯)

வேறு. காற்றெறுப்பனவிடமொப்பனகனலொப்பனகடியுங்
கூற்றெறுப்பனவிடியொப்பனகொடியாமுனைகொழுநன்
சீற்றத்தினுமடர்வெங்கணைவிதற்பன்சுதன்சிதற
நீற்றுக்குவைபடவாழியினழுத்தானெறிவளர்த்தான். (௫௦)

பார்த்தான்விடுபடையாவையுமுறியக்கடும்பகழி
ஆர்த்தானுயருலகியாவையுமிமையோர்களுந்துலங்க
வார்த்தானெளிர்வளைபூநினதுமெய்த்துழவிடையா
கீர்த்தாயெனிலரசாகுதியெனவேகனற்கன்றான். (௫௧)

தீயோன்விடுங்கணையாவையுமறவேசிலைபகழி
மாயோன்விடுவதுகண்டெரிமறவன்சிலைபதறாற்
றூயோன்மிசைநூறாயிரவரிவாளிகடுரந்தான்
பேயாகியதாயாருயிர்நுகர்ந்தானவைபிழைத்தான். (௫௨)

கொதித்தானுங்கொடியோனவனதுறுவெங்கணைகொடுதா
னெதிர்த்தேசிலைவிடுத்தானவைதுவராபதியிறையோன்
சிதைத்தேயவனகல்மார்பிடையுறவாளிகள்செலுத்தப்
பதைத்தானுடல்விதர்ப்பன்றிருமகனுகியபதகன். (௫௩)

உருமேறெனமுனிவானுருக்குமன்பாருலகெவையுஞ்
சருகாயிடத்துரந்தான்கதிரவன்வெம்படைதனையே
கருமாமுகிலனையானுமப்படைகொண்டொருகணைத்தி
னெறியாவுறவிடுத்தானவையறவார்த்தனரிமையோர். (௫௪)

துரந்தான்சிலசுடர்வெங்கணைதூயோனவைதுணிக்க
வெறிந்தான்மனமியமன்படையெடுத்தானுலகெவையு
மரிந்தேயுறுமிதற்காற்றலையெனவிட்டனனரிகார்
திருந்தேறியவினையோனதுகுறைத்தான்கொடும்படையால் (௫௫)

விடமாமெனக்கதமல்கிடுவிதர்ப்பன்றிருமகனுங்
கொடியானயனழிக்கும்படைசிலைநாணுறக்குனித்தே
யிடையாவிதுதவிர்ப்பாயெனவிடுத்தானுலகெறியக்
கடல்மீதினிலடைவானுமப்படைகொண்டவைக்கரந்தான். (௫௬)

கனைத்தானிவன்மலரோன்படையெனவங்கதமுறுநெஞ்
சினைத்தானுயருலகியாவையுமிருகாலையினொடுங்க
வளர்ந்தாரழல்விழியாவெரிமடுப்போன்படைவாங்கித்
தெளிந்தான்வரிசிலைநாணுறத்தொடுத்தான்செலவிடுத்தான். (௫௭)

காற்றுங்கொடுங்கனலுஞ்சுடர்க்கணையுங்கடுவிடமுங்
கூற்றும்பிறையெயிற்றேடெழுகூளிப்படைபலவுஞ்
சிற்றமுறுங்கரும்பூதமுமாவுஞ்சிதையாத
ஆற்றமுறவொளிர்சூலமெவ்வுலகெங்கணுநிறைய. (௫௮)

கடல்வற்றிடவரைமுற்றவுநெரியக்ககனம்பா
ரிடருற்றிடவுயிருட்கிடவருநாற்றிசைமதமா
மிடலற்றிடவெயில்மட்கிடவிபுதக்குலம்வெருவ
வுடுவுட்கிடநிலனுற்றிடுமுரகக்குலமுலைய. (௫௯)

விடையுற்றவர்படையெங்கணும்விரிவெங்கனல்பரவத்
துடியொத்தமெல்லிடைமாமடவனமுமனந்துலங்கக்
கடலுற்றமரிதேவியைக்கலங்காதுமின்னென்றே
சுடருற்றெழுமரனற்படைவிடவங்கவைதணித்த. (௬0)

ஆர்த்தாருயரெழில்வானவரவர்மாமலரவனி
தூர்த்தார்கடற்றுயினீங்கியமுகுந்தாவெனத்துதித்தார்
பார்த்தானுருக்குமன்வெஞ்சினம்பெருகப்பலபகழி
சேர்த்தேசெலவிடுத்தான்றிருமாருள்சிவப்புறவே. (௬௧)

விடும்பல்லவம்புயமீதுறவிதற்பன்றிருமகன்றன்
கொடுவெங்கணையமர்தூணிவில்லிரதங்குறைகதமு.
மடியும்படிகவசத்தொடுமணிமார்பமுமுருவச்
சுடர்வெங்கடும்பகழித்திரள்மதுசூதனன்சொரிந்தான். (௬௨)

திருமாலிறையரிகேசவன்சிலையால்விடுபகழி
வருமாமலையெனத்தன்னுடல்நுழைந்தோடிடமாரன்
விரிவாயெழுங்குருதிப்புனல்நிலன்வீழ்ந்திடமெலிவோ
டிருளாரழிந்திடுதேர்மிசையயர்ந்தானுருக்குமன். (௬௩)

அயர்வோடழிதேர்மேல்விழுமரசாமுருக்குமனுக்
குயிர்போகிலதுய்வானிவனுயர்மாமலர்த்திருவே
துடர்சீயினியொழிவாயெனமொழிந்தான்சுரர்துதிப்ப
வெயிலோனெனவொளிருமணியிரதத்தினைவிடுத்தான். (௬௪)

கடலிற்கடுங்காலிற்கழியும்மாமரக்கலம்போற்
படியிற்றிகழ்வுறுதாருகன்பரிகோல்கொடுகொளுவு
முடுகக்கொடியுயரத்தனிமுதலோனவர்முன்பால்
வடிவத்தொளிர்பலபத்திரவராமனும்வந்தான். (௬௫)

பரியேறெனவரவேயுயர்பகடெங்கணும்நிறையத்
திரளாயுருளிரதஞ்செகதலமீதினிற்றிகழ
வரியாமெனவருபூல்வணனலைவேலையினமருங்
கருணாகரன்கமலாசினியுடன்போனதுகண்டான். (௬௬)

மின்னேறுயர்தேர்மீதினில்விடையோனிடர்கடியும்
பின்னோன்வருமெழில்கண்டனனுவகைக்கடல்பெருகு
முன்னோன்றிகழ்பலபத்திரராமன்முகிணைகையான்
றன்னுவலினிரதத்திடையடைந்தானுயர்தவத்தோன். (௬௭)

பலபத்திரராமனெனுமுன்னோன்வரப்பரம
னலர்மத்தியகமலத்திணையடிவீழ்ந்திடவவனு
மலையொத்துயர்புயவீரனையணைத்தான்மலர்மகளாஞ்
சிலையொத்தமர்நுதலாளொடுமகிழ்ந்தான்றிருவுளத்தே. (௬௮)

தேருங்கரிநிரையுந்திரள்பரியுஞ்சிலைவீரர்
பாரும்வெளியிலதாயவர்ப்படைமன்னர்கடொழவே
காருந்தியகலுழக்கொடியெழுமாழையின்கலசத்
தேர்கொண்பணைமுலையாளொடுமினிதேகிடுமெல்லை. (௬௯)

வேறு. ஆறுபோல்வளைத்துறுசெங்கணை
யூறுமார்பனுருக்குமனோர்கொடி
மாறுபோதிற்றெழுந்துமடங்கல்போற்
சீறினான்கண்ணன்சென்றனன்றுமென. (௭௦)

சுற்றும்பார்த்துச்சுசியுறுகண்ணினன்
பெற்றமெய்த்தவன்பெய்வளைதன்னொடு
மற்றம்பார்த்தகன்றானவன்றன்னையா
னெற்றுவேனெனப்பின்றொடர்ந்தேகினான். (எக)

இரிந்தசேனையையஞ்சல்கொன்றுரைத்
தெரிந்தநேத்திரன்றேரினினேறினான்
றெரிந்தவார்சிலையேந்தினன்றிக்கெலாம்
விரிந்தமாக்கடல்போலவெகுண்டுளான். (எஉ)

மின்னினேறுமெரியாதவன்விஞ்சுதேர்
தன்னிலேகுவமுன்னந்தடுப்பனென்
றன்னுபோதின்முன்னுற்றனவெம்படைச்
சின்னமூதிடச்சேனைகளார்க்கவே. (எங)

பிடித்தவெஞ்சிலையன்பிறழ்வன்னியன்
கடித்தபல்லினன்காய்கனற்கண்ணினன்
வெடித்தசொல்லினன்யாதவமீளெனத்
தடுத்தனன்கமலத்தடங்கண்ணவன். (எச)

இகல்புரிந்தங்குருக்குமனேகனு
மிகமுனிந்துயர்விற்கரத்தேந்தியே
மகதனுந்தந்தவக்கிரமன்னனுந்
தகுதியிற்சிசுபாலனுந்தாக்கினார். (எரு)

தோலினம்பரிதேர்கிளைசூழ்ந்திடச்
சாலுவனடர்த்தானழற்கண்ணுடைக்
காலனஞ்சிடவேகதமிக்கிடுஞ்
சீலமில்லப்பவுண்டரன்சென்றனன். (எசு)

உருக்குமன்னமர்மீளவுடன்றன
னெருக்குதாற்பரிநீள்கயத்தேரிற
முருக்குவனெனமூவுலகங்களும்
வெருக்கொளும்படிமேயினன்பால்வண்ணன். (என)

அலாயுதத்தனடர்ந்தெழும்வேலையி
னிலாவுதிக்கும்நெடுங்கடலாமெனப்
புலாலளைத்தனையிற்பொடியாகவே
மெலாருமென்றுரற்றேர்கொடெதிர்த்தனர். (எஅ)

கோதில்யாதவர்கோனனிகம்நிறைந்
தோதவேலையொலியெனவார்த்தனர்
தீதினல்முயல்மன்னவன்சேனையு
மோதுமாபரித்தேருடன்மூண்டனன். (எகூ)

அதிர்ந்தபாரமிர்தாசனரஞ்சிட
வுதிர்ந்துவீழுமுடிக்களுமேற்றிடப்
பிதிர்ந்துமால்வரைவீழப்பெருங்கட
லெதிர்ந்தபோலனிகமெழுந்தார்த்தன, (அo)

கரிகளோடுகரிகளுங்காதின
பரிகளோடுபரிகளும்பாய்ந்தன
வுருளுந்தேரொடுதேரினமுற்றன
வரிகொள்வீரரும்வீரருமார்த்தனர். (அக)

எதிருமாரதரொண்ணிலரெங்கணுங்
கதிர்கொள்வேல்மழுக்கன்னகங்காலவே
லதிரவீசிமுடித்தலையற்றன
ருதிரமாரிதரையினிறைடவே. (அஉ)

கதையினாலடர்வாருறுகாலன்போ
லெதிருவாரொளிர்வாளினரெங்கணுங்
குதிகொள்வார்கரிகொன்றிடக்குன்றுபோற்
சிதைருவாருயிர்சாதகர்சேற்கவே. (அஙு)

சிலையறக்கொடிதானறத்தேரற
மலையெனக்கதிர்வாளொடுமாகரி
தலையறத்துணிசெய்தெதிர்தாக்குவா
ரலையுறப்பொருமார்கலியென்னவே. (அச)

எரிவிளித்துருடேரினெதிர்ந்துளார்
பரிபடச்சிலைநாணறப்பாகர்தன்
சிரமறக்கணைமாரிகள்சிந்துவா
ரரியெனத்தரைமீதிழிந்தாற்பரால். (அரு)

இருளுமாகரிவீரர்களெங்கணும்
வருவராலிடமும்வலமுமுறப்
பொருவர்வாளிபொழிந்துபுவியின்மே
லுருளுவார்படியின்னுதிர்முகம். (அசு)

ஆடகங்கொள்வரையெனவார்த்தெதிர்
கேடகங்கதிர்வாள்கிட்டவெட்டியே
வீடகங்கணமின்னவரம்பையர்
கூடகங்கடலங்கவலைத்தனர். (அஎ)

கற்றகற்றபடைகொடுகையினா
லெற்றியுற்றிருவோருமிறந்துற
வெற்றிமுற்றினரென்றுவிண்மாதரார்
பற்றிகற்றியணைத்துப்பரிந்தனர். (அஅ)

உருண்டதேர்கள்பரியுமுருண்டன
வுருண்டமாகரிகோட்டுதிர்முத்தின
முருண்டவீரர்முடிகளுவரியி
னுருண்டுவீழ்ந்தனவோடினசெம்புனல். (௯)

தவந்தனுவுயர்வாளினர்தாக்கிமெய்
சிவந்தசோரிவிளவுயிர்சேரவிண்
ணுவந்தநாரியருற்றணைத்தார்படி
கவந்தமாடினகூளிகளிக்கவே. (௧௦)

மூவராகிமுளைத்தெழுமூர்த்தியோ
னேவலேவருவீரர்களியாவரும்
பாவகாரிவருதிணிபாரிடத்
தேவர்தானவர்போரெனச்செய்தனர். (௧௧)

எறிந்துமெய்துமெழுமழுத்தண்டுகொண்
டறைந்துமெண்ணிலராடவரார்த்திடத்
தறிந்துவெங்கரிமாவுடன்சாய்த்திட
முறிந்துருக்குமன்முன்னருமோடினர். (௧௨)

குஞ்சரங்கள்மறிந்திடவெருவலைக்
தஞ்சிமன்னர்களோடியலைவுற
வஞ்சநெஞ்சனுருக்குமனுமனம்
வெஞ்சரங்கொடுவெந்துவிலக்கினான். (௧௩)

பேரிமாமுரசம்விண்பிளந்திடு
மாரவாரமடைந்துரவார்கலி
நீரெலாந்துகளாகவிலநெய்துந்
தேரின்மேல்வருஞ்சியமும்போலுவான். (௧௪)

பூணிறைந்துபொலிந்திடுமார்பினான்
சேணிறைந்துயர்தேவர்திடுக்கிட
ஊணிறைந்தவுயிர்களுமுட்கிட
நாணெறிந்துலகெங்கும்நடுக்கினான். (௧௫)

யாதவப்பெருஞ்சேனைகளெங்கணும்
பீதியுற்றுநிலைத்திற்பெயர்ந்திட
வேதனுமனமுட்கிடவெண்சங்க
மூதினானுலகங்கடுலங்கவே. (௧௬)

தெரிந்தனன்சிலையிற்கணைதிக்கெலாஞ்
சொரிந்தனனிமையோர்கடுணுக்குற
வெரிந்திறந்தனயானைகடேர்பரி
முரிந்துமன்னர்களோடினர்முந்தியே. (௧௭)

துமிந்ததேர்கரிவீரர்கள்சேரவே
நிமிர்ந்தவாளியுதிர்த்தனிகத்துள
மமிழ்ந்து கூளிகடள்ளிதம்மார்பினிற்
றிமிர்ந்தழைகளெங்குஞ்சிதறவே. (௯௮)

ஆனைபட்டனதேர்நிரையற்றன
வினமிற்பரிவீரர்களியாவரு
மூனுமற்றெனரோடியசெம்புனல்
மீனுடைக்கடல்வீழ்ந்தலைவீசிய. (௯௯)

உருக்குமன்சிரமொன்றனலாமென
நெருக்கிவெம்பரித்தேர்நிரைநீள்கயம்
வருக்கமுமறவந்தெதிர்வீரர்கள்
செருக்கறச்சிரந்தானறத்தியக்குமால். (௧௦௦)

ஆலமாமெனவாரழலாமெனக்
காலனுமெனக்காந்துமுருக்குமன்
சூலிமார்புரஞ்சுட்டனசெய்கைபோற்
கோலயாதவன்சேனையைக்கொன்றனன். (௧௦௧)

குண்டினபுரிக்கோன்செய்தவீரியங்
கண்டுசேதிபன்றன்னுடன்மாகதன்
மண்டலீகரெண்சாலுவமன்னவன்
கொண்டல்போற்கொலைவாளிகுனித்தனர். (௧௦௨)

வீரனுனவிதந்பன்றிருமகன்
கோரமானகொடுங்கணையேவவே
சூரரானவர்அஞ்சினர்மற்றுளோர்
பாரினோடினர்பால்வண்ணன்காணவே. (௧௦௩)

உவப்பின்மொய்ம்படையாருயிரும்பரின்
றலைப்படைக்கணைசார்வுறக்கண்டன
னலைப்படுந்திருப்பாற்கடலாம்வண்ணன்
கலப்பைகொண்டெழுந்தான்கதிரஞ்சவே. (௧௦௪)

விதற்பராசன்படைத்தலைவீரர்கள்
பதைப்பநீடுபகடிறத்தேவர்க
டுதிப்பவாரிதுப்பாகச்செஞ்சோரிவீழ்ந்
ததைப்பனீலத்தின்னடித்தானரோ. (௧௦௫)

வேறு. பிளந்தனதகர்ந்தனபெருங்கைமதவேழம்
உலைந்தவிவுளித்திரள்களென்புமொடியுற்றே
யலைந்தனர்கள்மன்னர்துடைகாலரைகளற்று
வளர்ந்தனபிணக்குவைகள்மால்வரைகள்மான. (௧௦௬)

முறிந்தனதகர்ந்தனமுரண்டருமணித்தேர்
மறிந்தனபுரண்டனமதக்கரிகள்கைகா
லறிந்தனருண்டனர்சகத்தலைவர்கீர்த்தி
யறிந்தவனலங்கையினெடுத்தறையவம்மா. (௧0எ)

வில்லினர்கள்வாளினர்கள்வேலினர்கள்வீர
மொல்லையிவர்தாள்கள்காமென்புகவொடிந்தார்
பல்லொடியவாசிகள்பதைத்தபகடிற்ற
மல்லினுயர்தோளினன்வலங்கொடலமோத. (௧0அ)

பரித்திரள்படைத்தலைவர்தேர்கள்பழுதற்ற
கரித்திரள்பதைத்திடவலங்கொடிகணைத்தொ
டொரித்தனனுடற்குருதிநீர்கள்வரவேய்கொண்
டளைத்தனனிலத்திடையுருக்குமனுமஞ்ச. (௧0௯)

கோடொடியுமாகரிகள்வாசிகள்குலைந்தே
விடவடிவேலினர்மடிந்திடவெகுண்டு
சாடினனலாயுதமெடுத்தவையவன்பா
ரோடியதுமானதியெனக்குருதியுற்றே. (௧௧0)

பிடித்துநிலனெற்றுவமெனச்சிலைபிதற்றி
யடர்த்தவர்வெருக்கொளவலங்கொடெழுற்ற
புடைத்தனனெரித்தனனுடற்குருதிபொங்கப்
படுத்தனனெருக்கியபடைத்தலைவர்பம்ம. (௧௧௧)

பக்கமெதிர்மண்டியபடைத்தலைவர்பாரி
னுக்கிடவலாயுதனடித்தனனுருத்தே
மிக்கவர்களோடினர்கள்வாய்க்குருதிவீழக்
கக்குவர்கள்பாருழகலப்பைபெறிகாணின். (௧௧௨)

மண்டனில்மடிந்துமதமாவினர்கள்வீழக்
கண்டுமகதன்கொடியகாலனும்நடுங்கக்
கொண்டல்கள்முழங்குவதெனக்குரல்வெடிப்பத்
தண்டுகொடடர்ப்பவெதிர்தாக்கினனலத்தான் (௧௧௩)

வாரிபயமற்றிடவிளித்துமலைபோலே
பாரதிரவெண்டிசைசுமந்துபடரஞ்சச்
சாரிகைதிரிந்தனர்துடித்தனரடித்தா
ராரிவரையொக்குமவரென்றமரராட (௧௧௪)

உரனுடையபால்வனனுருக்குமகதன்றண்
டிருபிளவதாகவலமேகொடெதிர்மோதி
வளாயினிடிவீழ்வதெனமார்பிடையடிப்பத்
தரையுறவிழுந்துபினரோடிமெய்தளர்ந்தான். (௧௧௫)

சேதிபனடர்ந்துவைகிலீமுகம்விடுத்தே
மாதிரமறைப்பமதிமன்னனுமலத்தா
லேதலர்நடுங்கவிருந்துகளதாக
மோதுசனுமோடினன்முராரிகணைபெய்த. (௧௧௬)

விக்கிரமமிக்கவிடையோனெனவடர்ப்ப
வக்கிரன்மணிக்கதைதொடேற்றவமர்சாஞ்சிற்
கைக்கயிலையொத்தகடவுட்கடுகெடுப்ப
வுக்கிரபலப்பெயரோளிந்தவனிடைந்தான். (௧௧௭)

காலனெனவான்மறையவெங்கணைசொரிந்தே
சாலுவனடர்க்கவொளிர்சங்குநிறவண்ணன்
சிலையில்தெரிகணையலங்கொடுசிதைப்ப
ஞாலமிசையோடினனகைத்தனர்கள்வானோர். (௧௧௮)

காலன்விழுமார்பினுதைகாவலர்வரத்தால்
மாலுருவமாகியபவுண்டரன்மணித்தன்
டாலமர்துடங்கலுமலாயுதனடிப்பக்
கோலமுடிபாரின்விழவோடிமெய்குலைத்தான். (௧௧௯)

அடர்த்தமகதன்முதலினோர்கள்மிகவஞ்சித்
தடர்ந்தெழுமலாயுதனடிக்கமெய்சுருண்டு
மடைந்தகடல்மீனெனவுழன்றனர்கலங்கி
யுடைந்தவர்களோடிடவுருக்குமனுருத்தான். (௧௨௦)

வெஞ்சிலையினாணொலிவிசும்பினுறவின்னோ
ரஞ்சவெதிர்முந்தியருமாலவிடமென்ன
விஞ்சுநெடுவாளிமழையெங்குநும்விடுத்தே
வஞ்சகனுமூதினன்வலம்புரியைமாதோ. (௧௨௧)

குண்டினபுரத்திறைவன்விட்டகொடுவாளி
யெண்டிசையுறக்கனல்மடுத்தெதிரவார்த்தான்
கண்டபர்கலப்பைகைசுழற்றிவருகாளை
யண்டர்களித்திடமுறித்தவைகளெல்லாம். (௧௨௨)

விட்டகணையற்றிடவெகுண்டுடுவிசற்ப
னெட்டதிசைமுற்றுலகியாவையுமடங்கச்
சுட்டனெனவக்கனலவன்படைதொடுத்தான்
சிட்டனுமலப்படையெடுத்ததைசிதைத்தான். (௧௨௩)

வெம்பினன்விதர்ப்பனருள்வீரனும்வெகுண்டே
யம்பரமறைத்திடவையாசுகம்விடுத்தா
னம்பவிடனைக்கழியுநாரணன்முன்னோனு
மும்பர்கள்மதித்திடுகலப்பைகொடுதீர்த்தான். (௧௨௪)

எழுந்தமுகில்போற்சரமிராமன்மெய்யழுந்தப்
பொழிந்தனனுருக்குமன்விழிக்கனல்கள்பொங்க
வழுந்தருளுமுன்னிரதமாவினொடுபாக
னழிந்திடவலங்கொடெடுத்துறவடித்தான். (௧௨௫)

அதிர்த்தெழுமலாயுதனடிக்கவழிதேரோன்
குதித்தனனிலத்திலிடைதுண்டினபரிக்கோன்
பதைத்தெழுமனத்துடனின்பால்வனார்தம்மேலே
யெதிர்த்தனனமணிக்கதைபெயர்த்தெரியுநெஞ்சன். (௧௨௬)

முட்டினன்விதற்பனருள்மைந்தன்முனிவெய்திக்
கிட்டினனலத்தொடுகிளர்த்திவனிராம
னட்டமொடுசெற்றினரடித்தனர்களார்த்தே
கட்டினரிடிப்படமுழங்கினர்கலங்கார். (௧௨௭)

உருக்குமனவடித்திவரொடுமேவர்விண்ணோர்
வெருவுறவதிர்த்தவனிமீதுபலசாரி
திரிவருலகுட்கிடவிழித்திவர்செத்திப்
பெருகிடவடர்ப்பருயர்பின்னுசனுமஞ்ச. (௧௨௮)

ஆர்த்தனர்கலப்பையுயர்தண்டுகொடறைந்தே
சார்த்தனருருக்கினர்கள்கண்களெரிகாலப்
பார்த்தனர்கைத்தனர்படிக்குளவரெல்லாம்
வேர்த்தனர்திசைக்கணுறுவேழமுமழிந்த. (௧௨௯)

அதிர்ந்துசெகமுற்றவுமலைந்திடவடர்த்தங்
கெதிர்ந்துழுவலாக்கிறையலங்கொடுறவெற்றச்
சதைந்தொருகொடிக்குமுனமேதரணிதானுற்
றுதிர்ந்தனவுருக்குமனடற்கதைபொடிந்து. (௧௩௰)

திருக்கறுபனைக்கொடியர்சீரியுயர்தண்டை
முருக்கலுமுருத்தெதிர்முனைத்துகனெரிந்த
வுருக்குமனையுற்றிருகைபற்றியுயிரோய
நெருக்கினனுடற்குருதிவாயினினிறைப்ப. (௧௩௧)

பிடித்திருகைபக்கொடுபெருத்தகல்மார்பி
னடித்தனனழற்பொறிகள்சிந்திடவலத்தோன்
படித்தலமெதிர்த்தொளிகள்பாதமுறவம்பொன்
முடித்தலைதனைத்திருகமேமுபனும்வேலை. (௧௩௨)

கண்டனனுருக்குமணிகண்கள்புனல்சோர
மண்டனிலுருக்குமன்மடிந்திடுமெனத்தான்
னண்டர்கடுதிக்குமுயரச்சுதனடிக்கீழ்க்
குண்டினபுரிக்கொடிபணிந்துசிலகூறும். (௧௩௩)

மன்னன்வசுதேவனருள்மைந்தவருளென்றன்
முன்னவன்மடிந்திடுதல்முன்னர்முடிக்கப்போய்
மின்னியவலங்கொடியர்வீரனைவிலக்கென்
றன்னமிதுதுன்பமொடலைத்திவையறைந்தாள். (௧௬௪)

சஞ்சமலரிற்றிருவினுள்கயல்கொள்கண்ணி
கிஞ்சுகவிதழ்க்கிளரும்வாயின்மொழிகேளா
வஞ்சனிறத்தரியலாயுதமெடுத்து
விஞ்சியவனைப்புயனைமேவியிவைசொல்வான். (௧௬௫)

மாலவனும்நான்முகனுவாசவனும்வேலை
ஆலறுகர்வானெனினுநின்னொடமராற்றார்
சீலமெயிலாதவனையோமுனிதிதேவர்
தாலமுறுகேதனவெனவுலாநடாத்தான். (௧௬௬)

சிங்கமிகலன்றனெருசிறிபிடலாமோ
யங்கமுறநின்னடிபடிந்துபழிசெய்து
மிங்கிவனையுய்யவருளென்றனொடுமாயோன்
சங்குசிறவண்ணனடிதாழ்ந்திவையுரைத்தான். (௧௬௭)

வேலைதனில்மேவியமர்வித்தகன்விளம்பத்
தாலமுறுகேதனன்விடுத்தரணிமீதின்
சீலமறியாதுமுபறிபவனுமோடச்
சாலநகையாவிபுதர்தண்மலர்சொரிந்தார். (௧௬௮)

வேறு. படியிலேபலபத்திரராமன்கை
யடியிலேவிழுந்தோடவண்ணமயில்
கொடியன்மானமுறச்சினங்கொண்டன
னுடியினீள்கொடித்தேர்தனிலுற்றனன். (௧௬௯)

ஏகலாதுவில்லென்றிரதத்தின்மேற்
பாகன்மேவிலங்கும்பரிதன்னின்மேல்
வேகவாளிநிறைந்திடவீசினு
னுகமேலமர்வானுமகைத்தனன். (௧௭௦)

எய்தவக்கணைபாவுமெரித்திடக்
கொய்துருக்குமன்றன்கொடித்தேர்விழக்
கையினிற்சிலையுங்கண்டமாயுக
மையுறுமெய்யரிகணையேவினான். (௧௭௧)

புட்கொடித்திறலோன்கணைபொர்கமண்
ணுட்கிடப்பரித்தேர்வில்லுதிர்வுற
வெட்கமில்லருக்குமன்மீளவுங்
கட்கமுற்றகரத்தொடுசென்றனன். (௧௭௨)

தேரிழந்துசிலையுமிழந்தவன்
பாரிழந்தொளிர்நாந்தகம்பற்றிவா
னூரழிந்ததெனுமொலியுற்றிட
நீர்முழுந்தநெருப்பெனநின்றனன். (௧௪௩)

அதிரமான்றலைவேலையினலம்போ
லெதிரும்வீரவுருக்குமனைகொண்டெழுங்
கதிர்கொள்வாள்கரமீதினிற்கண்டமுற்
றதிரநீள்சுணையேவினனுத்தமன். (௧௪௪)

ஒல்லையிற்கதிர்வாளறவூற்றமு
மெல்லையிறகொடியோனிமைப்போதினின்
மல்லுறப்பொருவேனெனமாதவன்
செல்லுறற்கொடித்தேரினிற்பாய்ந்தனன். (௧௪௫)

தேரினின்றெளிர்சீதரன்மேனியை
யாரவாங்கிருகையினமூழ்ந்திட
வீரமில்மன்றழுவலுமியாதவ
வீரனன்றுகொலென்றுவிளம்பினன். (௧௪௬)

முட்டியாலமர்செய்துமுனிந்துதேர்த்
தட்டினேறிமெய்தன்னைத்தழுவிய
துட்டனனவுருக்குமன்சோர்வுறக்
கட்டினனிருகையினைக்கார்வணன். (௧௪௭)

தேரின்காலுறக்கையிரண்டிஞ்சிறு
வாரினல்விசித்தேவிதர்ப்பனமகன்
சோரவீரமழித்துத்தலைவனித்
தாரினனைகைத்தான்றையல்நாணவே. (௧௪௮)

இலகுவாள்வலையாழிகொண்டேந்துவா
னலதுவாளிகொடேசிகைபைந்துற
வுலகுளோர்நகைசெய்யவுருக்குமன்
றலைபயோர்நொடியிறசிறைப்பித்தனன். (௧௪௯)

வில்லின்மல்லினின்வீசியவல்லனென்
றெல்லையில்மொழிகூறியென்னைவென்று
மெல்லியாடனைமீட்குவனென்றமுன்
சொல்லிநின்றசொல்நின்றலைசூழ்ந்தயால். (௧௫௦)

இன்னவாசகமோதியயாதவன்
மின்னுவாள்விழிபாய்விதர்ப்பனரு
ளன்னமேயுன்றன்முன்னவனுண்மையை
யுன்னுவாயென்றுரைத்துநகைத்தனன். (௧௫௧)

பங்கம்விஞ்சவுருக்குமன்பார்மிசை
தங்கைகாணத்தலைசிகையைக்குறச்
சங்கமார்வணன்கண்டுதன்றம்பியாஞ்
செங்கண்மாலினைச்சேர்ந்திவைசெப்புவான். (௧௫௨)

பணங்கொள்மாசுணப்பாயலுளான்றனை
பணங்கிறேயராகவறநெறி
பிணங்கலாதநவையினைத்தாவெனப்
பிணங்கினலணங்கைக்கொள்பெருமையான் (௧௫௩)

கயிறுகொண்டுகைகட்டியதன்றிக்கம்
மயிரெலாமறப்பல்சிகைவைத்தவின்
னுயிரநாள்முனுகித்தவனுமெனுஞ்
செயலெனுப்பிழைசெய்தனைநீயென்றான். (௧௫௪)

துட்டனாகினுந்துன்மதியாகினுங்
கட்டனாகினுங்கற்புடைத்தேவியாம்
வட்டமாமதிபானனமங்கைக்காய்
விட்டுமானகர்மேவுதல்நன்றென்றார் (௧௫௫)

பாசந்தானறுத்தான்பலதேவனு
மீசத்தியையெண்ணியசிந்தையான்
வாசமாமலர்மங்கைமுன்றோன்றனை
யர்சுனான்மதியென்றமகறறென்றான். (௧௫௬)

தோகைசுந்தரிமுன்வருந்தோன்றலை
நாகமீதமர்வானகையோடிகழ்
வாசவேசிகையுஞ்சிகையுந்தொழித்
தேசமாஞ்சிகையாக்கியியம்புவான். (௧௫௭)

சந்துசக்கரன்தானுடையான்செய்த
பங்கமென்னலைபங்கயமங்கைநின்
றங்கைகொண்கன்றன்னென்றுந்தவிர்ந்திடா
துங்கமானகர்போயுறுவாயென்றான் (௧௫௮)

நாணமேநிறைநெஞ்சினனல்விறற்
கோணவேதுண்டினுபுரிசென்றிலன்
காணலான்பரிதேர்கரியாவையும்
பூணலான்கலன்பொன்முடிதாமென. (௧௫௯)

சக்கராதிபனென்றிடுந்தோறுந்தான்
சக்குவானுதிரத்தனைக்கண்டவர்
நக்குவாரொனநாணியக்கானிடை
புக்குளானுயர்போசகடன்னகர். (௧௬௰)

காணகந்தனிப்போசகடன்னக
ரானவில்லினில்வீரமுமஃகியே
தானிகழ்ந்திங்கறையுஞ்சபதத்தி
னூனிழந்தவுருக்குமனுற்றனன். (கசுக)

உருக்குமனுடைந்தோடியவாறெலாம்
பெருக்கவிங்குரைசெய்தனம்பேயுயிர்
நெருக்கிவெம்முலைநீரோடயிலுவான்
றிருக்கொளும்புயன்செய்கையைச்செப்புவாம். (கசுஉ)

(உருக்குமனபசெயப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம் சடுஅஎ.)

## எஅ-வது. துவாரகாவதிப்படலம்.

தீவினையகலவைம்புலன்கள்செற்றுமெய்
நாவினிலரிகோநாரணாவென்றே
யாவுமவ்வனையெடுத்தானுக்காட்செய்வார்
சேவடியிணையிணைச்சென்னிசேர்த்துவாம். (க)

வேறு. உருக்குமனுடைந்தோடலுமும்பரோடயனும்
நெருக்கிவந்துயர்விசும்பிடைநிறைமலர்பொழிய
வரக்கர்தன்னவன்றிலங்கையாளறனிலான்
வரத்தின்செருக்கவிந்திடச்சிறிதோன்றிருவொடுஞ்சென்றான். (உ)

நிறைந்தபேரிகைமுரசுகளமலையார்கலிபோ
னிறைந்தமாபரித்தேர்களுங்கரிகளுநெருங்கி
யுறைந்தபாரினுண்டுகளெழவொலிகடறிடராய்
மறைந்தமாதிரமாயவன்றேர்மிசைவந்தான். (ங)

வரைகள்சேர்ந்திடுசவரர்தம்மகளிரைமருவு
மிரலைகிடங்கண்டீரவம்வல்லியமெண்கு
வருடையாவிதமயிடம்வெஞ்சினமுறும்பாளி
திரியுங்கானிடைச்சேர்ந்துமாதிருவுடன்மொழிவான். (ச)

வேறு. விழுமியபணிகளீன்றுதவவேதிலன்
கெழுமணியினங்களிழைஞிகிளர்ந்திடத
தழலெனவெருவிமண்டாடியேகுதித்
துழையினமோடுவகாண்டியொண்கொடி. (ரு)

குஞ்சுகளுடனுணாதுகோதியே
யஞ்சுகமுக்கழலடைந்ததாமெனக்
கிஞ்சுகமலரனலென்றுகிட்டிலா
தஞ்சியபறவைகள்காண்டியன்னமே. (சு)

விதமுறுகூட்டினுள்மேவித்தானிடு
மிதமுறமுட்டைகீழ்வீழ்ந்ததென்னநீள்
வெதிரினம்வெடித்திடவிளங்குமுத்தினைக்
கதுமெனக்கவ்வுபுள்ளினங்கள்காண்டியால். (எ)

பொடிச்சுடுசெட்டத்தினிற்பொருந்திவள்ளியி
னடிச்சுவடிரக்கதமாப்பில்கலவியங்
கெடுத்துயர்வரைமுழையிருலேக்கியே
கொடிச்சியர்பிரசம்வாய்கொளுவகாண்டிமின். (அ)

ஆழியினெழுந்தயருணன்சோல்கொள
வாழியொன்றுடையதோருக்கணஞ்சிட
கேழுமன்றரித்தருள்விமலன்மேனிபோல்
வேழமொன்றெரித்திடுபிங்கலைக்காண்டிமின். (கூ)

சினமுறுபணிபணிகிழலிற்சென்றிட
வினமுறுகருப்பைகளிரகூயீட்டங்கள்
முனிவறவல்லியகிழலில்முற்றிடக்
கனலாசாளும்வெம்பாலைக்காண்டியால் (க0)

வேறு. அருணமெய்யிடையமர்ந்தவெண்புள்ளிகணிலந்து
மருணமகவரையிசையினிற்றுள்ளியதகன்றே
ரருணன்முந்தேபவிடும்பரியுடனடரமுகை
யருணவர்வந்தெழும்விழியுடையணங்குங்காண்டி. (கக)

வேலைபினயமுகந்துயர்விசும்பிடையெழுந்தே
குலுலறந்துநீர்சொரிந்திடத்திசைதொறுந்தோன்றிப்
பாலைவெம்மைபாற்பயமுறப்பபோதாம்வெருத்துச்
சீலமில்லவன்கொடையெனத்தேய்ந்தனபாராய். (கஉ)

ஈனமல்கியவுலோபியர்விபவத்தைதயெண்ணி
மாநிலந்தனில்வறிஞர்போய்ப்பெறுதலவனபோற்
கானறண்புனலென்றுசேர்விலங்குநீர்காணு
ஊனுலர்ந்திடவுழல்வனவொண்கொடிபாராய். (கங)

இன்னவாறெலாந்திருவிறுக்கியம்பியேயிறைவன்
றன்னிவேபினமிடைந்திடக்கின்வயிற்றென்றும்
வன்னிவாருறக்கொழுந்துவிட்டெரியுமாவனத்தை
மின்னுநேமியனிரதமேல்விரைவினிற்கடந்தான். (கச)

கன்னருலைழயாசினித்தந்தாரகீல்கதலி
செந்நெல்சேர்வயற்சிறந்திடுநாடுதல்சேர்ந்தே
மின்னுநேமியன்மகிழ்வுடன்விதர்ப்பர்கோன்மகளாம்
அன்னமேயிவைகாண்குவாயெனமொழியறைவான். (கரு)

ஆனிறைந்தெழச்சொரிந்தநற்பாலுடனளாவித்
தேனிறைந்தபோற்றித்திக்குமதரமெய்த்திருவே
பூனிறைந்துவான்புயல்களுந்தவழுறப்பொருந்துங்
கானிறைந்துநீள்கருங்கடல்பொருவினகாணாய். (கசு)

அன்னமென்னடையடியினையரவிந்தமுகில்சேர்
மின்னெனுமிடைகவினுறவிளங்கியதிருவின்
முன்னவனமர்தொலைந்துதன்முடியிறக்கியபோற்
சென்னெறுன்னியகதிரினம்வளைந்திருஞ்செயல்பார். (கஎ)

வேணுயிர்ந்தபூவாழுமார்கலியெழுவிடமுஞ்
சேணுநாணுநீலோற்பலஞ்சேர்விலோசனையே
கோலமாகியதாலங்கள்சனத்தையுட்கொண்ட
போலவேயுயர்வளையொளிர்பூவினம்பாராய். (கஅ)

மும்மதத்தெழுங்கரியினன்கோடெனமுளைத்து
விம்முகற்பயோதரங்கவினுறமிளிர்திருவே
வெம்மையுற்றவர்கருமம்போல்மதுகரம்விரியுஞ்
செம்மலற்சுவையருந்தியோவினசெயல்பாராய். (க௯)

கொங்கைபங்கயமுகையெனக்குவிந்தொளிகொள்ளுந்
திங்கள்வேழ்கிடுந்திருமுகமுடையசெந்திருவே
தங்கமாகியதமனியத்தகடிழைமணிபோ
லெங்குமாதளைக்கனிவிரிந்தெழுவனபாராய். (௨௦)

நத்திரங்கணிரையதாய்நற்பவளத்தின்
வைத்ததாமெனுந்தசனங்களிலங்கியமடந்தாய்
சுத்தசாத்திகசுருதிகளாவனபொருவ
மெத்தமாங்கனிகீர்கிளிவிரும்புதல்பாராய். (௨௧)

அலைகொள்வேலையினமருவானரக்கர்மேல்வளைக்குஞ்
சிலையிதாமெனப்பொலிந்தெழும்புருவநற்றிருவே
விலைகொள்மாதரார்செயலெனவிளங்கிமலர்கள்
பலவின்மீமதுநுகர்ந்துபோமறுபதம்பாராய். (௨௨)

சேகிலாதசாகரந்தனின்முகந்துசேணிறையு
மேகமாமெனவளர்ந்தவைம்பாலொளிர்மின்னே
மாகமாறுவானயனம்போற்றோகைகள்வயங்க
நாகமீதினின்மயூரங்கள்நடிப்பனபாராய். (௨௩)

சந்தநந்துமந்தாரமுந்தானமுந்தள்ளிக்
கந்தநன்மலரொதிந்துமந்தாகினிகடுப்ப
வந்துமுந்தியநதியினிநெழுசுழிமானுன்
னுந்திகண்டுவெல்லாதொளிந்தோடுவபாராய். (௨௪)

தேய்விலாமதியெனத்திகழானனத்திருவின்
றூயதாகியகழுத்தினிற்றோற்றமெனவே
யோய்விலாதுமித்திலமுதிர்த்தோடியேபயத்தின்
மேயுநீள்வலம்புரியினம்வெருத்தனபாராய். (உரு)

வள்ளையாந்திருக்காதினிற்றொடலைமானே
யொள்ளிதானநின்விழியெழிலொக்குமென்றுயர்ந்து
துள்ளியேசரிதூங்கலமென்றுதான்வெழ்கித்
தெள்ளிதானசெலயந்தனில்மூழ்கிடுஞ்செயல்பார். (உ௬)

வாருலாவியேசுதைநிறைமணிக்கலசம்போ
லாரமல்கியபயோதரமழகியதிருநல்
லூருவாமெழிலொக்கிலமென்றுகாட்த்துயர்ந்த
காருலாவியகதலிகள்கவிழ்வனகாணாய். (உ௭)

வல்லநாவலர்மொழிந்திடமதியொன்றுமில்லாப்
புல்லியோர்வரமுன்புகலாதுபோற்பொலிவால்
அல்லிமாமலரிருந்துறையனமதுநின்வாய்ச்
சொல்லிணுணியக்கருங்குயிறுங்குவகாணாய். (உ௮)

அந்தமாகியகேகயமெங்கணுமாடக்
கந்தநாண்மலர்க்கேசரங்காளங்கள்பாடச்
சந்துமாமதுக்கோடரமொருவிப்பதாவு
மந்திமாங்கனிசிதறுவமடக்கொடிபாராய். (உ௯)

இன்னதாயவற்புதங்களைப்பாதவர்பெருமான்
மின்னிருடனக்கன்பினுல்விளம்பியேவிளங்குங்
கன்னலோங்கியசாலிகள்பற்பலகடந்து
மன்னிநன்குடதிசையலைமலியும்வாரியினை. (௩0)

சங்கநாணியகழுத்தினடாமரைமலர்மேல்
மங்கையாமவடன்றெருமெண்மிசையிழிந்து
செங்குணுபகல்சேர்ந்தனனெனவின்பத்திரண்டு
பொங்கியேயுயர்ந்தாலெனவெதிர்ந்ததுபுணரி. (௩௧)

ஊழிகாலங்களெனத்திடையுரகன்மேற்றுயின்று
வாழுமாதவனிலயிசையிழிந்துமாமலரி
னேழையோடும்வந்தானெனவிருகரமெடுத்தே
யாழிதான்றொழுதாலெனவிசிரமசைந்த. (௩உ)

முளையதாகியேமூவுலகினுக்குமெய்ம்மூர்த்தி
விளையவாயர்தம்மனைதொறுங்கடைதயிர்வெண்ணெ
யளையுமாயனூர்தேவியோடடைந்தனனகண்டு
வளைகளவீசியேவணங்குவபோல்வரும்வாரி. (௩௩)

இன்னதாகியகருங்கடற்கோடமர்ந்திலங்கும்
புன்னைகண்டலினிழலிடைநுளைச்சியர்பொருநர்
தன்னைநாடிமுன்னவர்தருங்கலவிதன்மனத்தி
லுன்னினார்முலையணிகலனுருகிநீராக. (௬௪)

கரந்தைகைதபுன்னாகந்தன்னிழலிடையிருந்து
வருந்தியெங்கணுநுளைச்சியர்கடலலைவளைத்தே
யரற்றையெய்தினீள்கடலினைநம்பியிற்கொழுநர்
பிரிந்திருந்தனமெண்ணிபற்கழுதுபெய்துற்றார். (௬௫)

கடலைப்பார்த்துயர்கணவனைக்காண்கிலர்காம
னடராக்கத்திடுவலைகசிறிதறிகிலாதயர்வார்
படியைப்பார்த்திழைகடலைப்பார்த்துபாவையர்க
ளிடையைப்பார்த்தவர்கொழுனரெய்திடவெதிர்ந்தணைத்தார்.

இன்னதாகியநுளைச்சியரிலங்குறிஞ்சிவினை
யன்னமேபிவைகாணெனக்காட்டினனதனுட்
பொன்னின்றுஞ்சிலார்மதிலுயர்துவரையின்பொலிவை
மின்னின்றுமொளிக்கண்டனன்விபுதர்கள்பெருமான். (௬௭)

உருவையொன்றுறுந்தேரினன்சகியனொன்றுங்கும்
பிரிவையந்தனினமுவுயர்பெருவரைசிவணத்
திரளயங்கொளாதியற்றுவராபதிசிறப்பத்
தராதன்மணிக்கோபுரமெழுந்தவான்றடவி. (௬௮)

அனந்தனூர்தியாம்பிரமனோடமரர்கள்பணியும்
மனத்தன்மாதவனரவிந்தமலர்மகளொடுமே
யனந்தநீர்த்துயர்த்தமர்ந்திடவாழியின்விளங்கும்
மனத்தனீர்மணிமகுடமொத்தமர்ந்தகோபுரமே. (௬௯)

தழைத்தெழுந்துயரிந்துவைத்தன்முகவெழிலாற்
பழித்தமிந்நூடன்பரமனார்வரப்பசும்பொன்னு
விழைத்தநன்மணித்தரளமோடிலங்குகோபுரங்கள்
விழித்துவெண்ணகைசெய்வனபோலவில்வீச. (௭௦)

தருணமுண்டகமலரின்மேனிறைக்கெழுந்தையல்
கருணையங்கடலெனவளரரியுடன்கலந்தே
யருணனூர்திதேரெனவருமிரதத்தினமர
வருணர்கையெடுத்தாடியதொத்தவான்கொடிகள். (௭௧)

மின்னனுனரிதன்னுடன்மேவினளெனவே
பன்னகாதிபனுடலினைவளைந்துதன்படம்வான்
மினவோங்கியேவீரைபின்விளங்கியவேலும்
பொன்னின்மாமதிட்கோபுரம்புகலுமாறெவிதோ. (௭௨)

விண்டலங்கலந்தெயினுறமின்னுகோபுரங்கள்
மண்டபங்கள்சாமீகரம்வயங்குமாளிகைகள்
கொண்டல்மண்டியபொழில்நிறைக்கொற்றமானநகரை
யண்டருந்துதிசெய்துதாம்விரும்பியேயடைவார். (௪௩)

முனிவர்வாசவன்முண்டகமலருறைமுதல்வ
னினியனுபரியிருந்தருள்பதியிதாமென்று
நினைவரோதியேசித்தமுமடைகுவரொன்றுற்
றுனியிலாநலத்துவரையினெழில்சொலற்கரிதே. (௪௪)

இன்னதாகியவேம்பலிற்றிலங்கியநகரைக்
கன்னருமெனுமொழியுடைக்கமலனாயகியா
மின்னனுப்துவராபதியிதுவெனவிளம்பி
மன்னினான்றிருவீதியின்மாதவர்பெருமான். (௪௫)

ஏசிலாதுயர்விதர்ப்பர்கோனருளுயிர்த்திரையாங்
காசலாவியமுகிலினுடன்கருமுகிலாம்
வாசுதேவன்மாலிரதமேல்வந்தனன்காணு
மாசையாலெழுந்தனுகினரணிநகருள்ளோர். (௪௬)

அந்தணாளர்களருந்தவமுனிவர்களரசர்
மைந்தர்வள்ளியோர்மதகரிதேர்கொடுவிளைய
கந்தமாமலரளகவாணுதலியர்கடிதின்
வந்துமாதிருவெழிலினைக்கண்டனர்மகிழ்ந்தார். (௪௭)

ஆடினார்கள்மாமுனிவர்சனாதிகள்பகர்ந்தே
பாடினாருழையுழுமியாழ்த்தெரிவையர்பலரு
மூடினார்மறையறைபவர்முடிகியசகட்டைச்
சாடினாயுயர்தேரின்மேற்றிருவொடுஞ்சார. (௪௮)

விடவராவணைத்துயில்கொள்வான்விதர்ப்பர்கோன்மகளோ
டடையவாசுகியமுந்துறப்பிணித்தமந்தரத்தாற்
கடையவாரியினமிழ்தெனக்கண்டவானவர்போ
லுடலெலாங்களித்தேயெழுந்தாடினருவப்பால். (௪௯)

நீலமாமணிவித்துருமத்துடனிறைந்த
கோலமாமெனவிதர்ப்பர்கோன்குமரியோடிலங்கி
மாலினாரிரதத்தின்மேலருங்கவின்வகுக்க
நூலெலாந்தரும்பிரமனுற்கரிதெனநுவல்வார். (௫௦)

சித்தசன்விளையுறும்வடிவுடையசீதரனுக்
கொத்தசுந்தரியுருப்பிணியுவமைவேறில்லா
ளித்தலந்தனிலெய்திடயாமுனமிழைத்த
மெய்த்தவங்கடானேதெனமகிழ்ந்துளாவிரித்தார். (௫௧)

உருவினுயர்கமலமீதமர்ந்தவொண்கொடியாந்
திருவினாள்மகளாகவுந்தேவகிகுமரன்
மருகனாகவுஞ்சிறந்திடுமன்னர்கோன்விதர்ப்பன்
பெருகுமாதவமளவிலாதென்றனர்பெரியோர். (௫௨)

தவத்தரோர்விழைவுறமழைதடுத்துமால்வரையைக்
கவித்தகையர்பாற்றூதினைவிடுத்தறன்கடந்த
வலித்தசேதிபனமரிடையழிந்திடமகிழுஞ்
சிவத்தவாயினள்சமத்தியென்றுரைத்தனர்செகத்தோர். (௫௩)

கனகமாமதிலிலங்கையான்கோன்சிரங்களைந்தே
சனகமாமகளுடன்றிருவயோத்தியிற்சாரும்
தினகரன்குலத்துதித்தவன்றிறலெனத்திருவோ
டனகனேய்ந்தனன்றுவரைமாநகரிலென்றுரைப்பார். (௫௪)

வேழமாகியகுவலயாபீடத்தைவீழ்த்துச்
சூழுமாரதர்விழக்கஞ்சனுடலினைத்துகைத்த
வாழியாயிழ்தெய்தியவணங்கினோடமர்ந்தே
வாழிவாழியென்றுரைத்தெழுந்தாடினர்மறையோர். (௫௫)

ஆயுமாமலர்பொழிந்தமுதாசனராடப்
பாயுமாவிரதத்தனிலிழிந்துபார்நண்ணித்
தூயமாதவர்சுருதிகள்மொழிந்திடத்துலங்குங்
கோயில்மேவினன்குடமெடுத்தாடியகோமான். (௫௬)

எழுந்தமைம்முகிலாமெனவெய்திபேதருவின்
கொழுந்துபோன்றமின்னுடன்வசுதேவனைக்குறுகித்
தழைந்தவன்பினால்வணங்கலுந்தலையினைத்தழுவி
வழிந்தகண்ணினீர்மஞ்சனமாட்டினன்மகிழ்வால். (௫௭)

தந்தைதன்றிருவடியினிலிறைஞ்சிச்சக்கரத்தோன்
விந்தைதன்னுடன்றேவகியடிமிசைவீழச்
சிந்தையிற்களிப்பெய்திடச்செம்மலைத்திருவை
வந்துமாமலர்க்கையினால்மார்புறவணைத்தாள். (௫௮)

அணைத்துமோந்தனளச்சுதனுச்சியையமிழ்தி
னினைத்தபாவையைமகிழ்வினால்ருகனால்நோக்கிப்
பணைத்தவார்வமோடிறவணைத்தான்படிவிசும்பின்
குணத்தினுயர்மருகியாமென்றுளங்குளிர்ந்தே. (௫௯)

கொற்றமிஞ்சியபுலிதனிக்கிளையுடன்கூடிச்
சுற்றமின்புறரோகணியடிமிசைத்தொழலும்
பற்றிமைந்தனைத்தழீயினன்பங்கயமலரி
னுற்றமின்னினையணைத்தனள்பெருங்களிப்புறவே. (௬௰)

இன்னதாகியமகிழ்வுறநங்கையோடிலக்கும்
மன்னைமார்களுநுழையுறுமரவிந்தமலரின்
மின்னோடேகிமால்மண்டபமதனில்வீற்றிருந்தான்
மன்னர்மாதவர்மறையவர்மகிழ்ந்தினிதிருப்பார். (௯௧)

அரசனுக்கிரசேனனக்குரூரன்மெய்யதனால்
வரிசைமிக்குயருத்தவன்மந்திரத்தலைவர்
இவாகொள்சித்துவிற்றிகழுமாண்டரியுடன்றிருவைக்
கனாசெயற்கரியதாயதோர்களியுறக்கண்டார். (௯௨)

ஏசில்மாதரார்கருப்புரத்தீபங்களேந்த
வீசினார்மலரெங்கணும்விண்ணவர்மகிழ்வோ
டாசிகூறினாரந்தணரந்தவேலையின்வாய்
வாசுதேவனைதரும்வசுதேவனுமறைவான். (௯௩)

மாதவத்துயர்விதர்ப்பர்கோனருடிருமகளும்
யாதவக்குலக்குமரனுமெழில்மணமிசையத்
தீதகற்றிநீமுகூர்த்தம்விரைவினிற்செப்பென்
றோதிடக்கற்கவுயர்தவமுனிவனங்குரைப்பான். (௯௪)

காலையாகியகருமுகிலனையகண்ணற்கு
வாழிநீள்விழிவனசமாமலர்தனின்வனிதை
கோளெலாஞ்சுபமாகவேகூடிவருநன்றன்
னாளையாமெனவுரைத்தனனவையறுதவத்தோன். (௯௫)

சத்தமொன்மறைகற்கமாமுனியிவைசொல்லச்
சித்தமார்வமுற்றிலங்கியதேவகிசனவ
னத்திருப்புரத்தருமற்றுமவன்கிளையோர்க்கு
மெத்துமாமணவோலைகொடுத்தனாவிடுத்தான். (௯௬)

மைந்தனுஞ்சித்தரனுக்கும்விதர்ப்பர்கோன்மகட்கும்
மந்தமாமணக்கோலமுநாளையேயதனால்
முந்தியேகுமினென்றுதான்மொழிந்துதூதுவரை
நந்தகோபற்குமசோதைக்குநலமுறவிடுத்தான். (௯௭)

மற்றுமேபலவளாகத்துமன்னவர்தமக்குஞ்
சுற்றமாகியகிளைஞர்க்குந்தூயவேதியர்க்குங்
கொற்றமாதவன்கோகனகத்தவள்கரத்தைப்
பற்றுநாளையென்றோலைகள்விடுத்தனன்பரிவால். (௯௮)

சீதமாமெனுமொழியொளிர்கென்னடையங்கண்ணித்
தீதிலாதசெம்மலர்த்திருச்சித்திரன்றனக்கு
நீதியாமணங்கூடிடவரவென்றே
வேதமோதியவியாசர்காள்விடுத்திடும்வேலை. (௯௯)

வேறு. அரிவிற்றாமுறையினைப்பிரிந்தவனியினிணையில்
திருபநாகியேயிகரிலாவுருப்பிணிதன்னை
மருவினனெனுமொழியினைவயங்கும்பாற்கடலிற்
திருவினுக்குறைசெய்வபோற்றினகரன் மறைத்தான். (எ௦)

அருக்கநற்குடவார்கலியமுந்திடவரசர்
நெருக்கலமக்கணின்மடந்தையர்மருங்கெலாம்நிறையச்
செருக்குமுக்கிரசேனனுஞ்சேனையுஞ்சூழப்
பொருக்கெனக்கரிவேரினின்மேற்பொன்மனைபுகுந்தான். (எக)

அந்தியாதனுமுனிவர்களரசர்வேதியர்கள்
சந்தியாவையுமுடித்துநீஇத்தமைத்தெழுமியாமம்
வந்துமூந்திபெவளோந்தநுவானமீன்மல்க
விந்துவாரியினிலவொளிபரந்திடவெழுந்தான். (எஉ)

திங்கள்சங்குலிற்சிறந்திடத்திமிரமோவிடமால்
பொங்கும்வெங்கணைச்சம்பரசூதனன்பொழிய
வங்கதச்சுடர்மணியொளிரங்கதப்புயமா
றங்கநற்றிருவிவரலால்மற்றவர்துயின்றார். (எங)

குண்டினபுரிமன்னருள்கோமளவல்லி
யண்டர்நாயகனுடன்றுவராபதியடைந்தும்
புண்டரீகனன்முகையெனும்பூண்முலையழுந்த
மண்டியேயணையாதமல்வளரவேயுரைப்பான். (எச)

வேறு. மதனேகொடியாய்மலர்வாளியினு
லிதனேசுடுதீயெனவேபொழிவாய்
சுதைபோலெழுமாமதிதன்சுடரோ
விதமாயழல்வாய்வினையேனுடல்மேல். (எரு)

இருளோதவிசாயகலோவெதிரா
மருளோவொளியாமனமேமறவா
பொருளார்மறையேபுகல்வாயமிழ்த
மருளார்துவராபதியேயடைவார். (எசு)

விழியோதுயிலாவிடியாதிரவு
மொழியாகடலாரொலியொண்மதனார்
பழியேமுயல்வார்கணையேபரவு
மழையோமுகில்போல்வருவார்மருவார். (எஎ)

உசமாயிரகோடியின்மேலுறவே
பகைபோலிருளேவளையாய்பகராய்
செகம்வானுகர்வார்திருமாலுருவின்
னகம்மேபுகல்நீயகல்கின்றிலையோ. (எஅ)




மணநீள்மயலாரழலாய்வளையத்
தனியேயுழல்வேனுயிர்தானளையா
யெனனாயகனூர்வரவேயினினீ
கனைவாருதிமேலெழுவாய்கதிரே. (௭௯)
வினையாமிருளேவெடியாயெனவே
யனமானடையாளமிழ்தேயனையா
னினையாவுருகாநெடியோனெனவே
மனமோமயலாலயர்வேலையின்வாய். (௮௦)
உருவாயருவாயொளியாயெழுமா
னரிநாரணனாரமுதேயனையா
டரிவோடனையாள்மயல்சேர்செயலால்
மருவார்மலர்மேல்லணைமேல்மருவார். (௮௧)
மலர்வாளியினல்மதனேபொழிவா
னலையோகடலோவமராதொலியுங்
கலையோமதியோகனலேதருமால்
சிலைநேர்நுதலாளணைசேர்கிலளால். (௮௨)
படிவானிறையப்படர்வாய்திமிரக்
கொடியாய்விடிவாய்கொடியாகியவேல்
விடைமேகலையேல்விடவெண்டரள
வடமேபுனைமாமுலையாள்வரவே. (௮௩)
புயலோகுழலாள்பொலிவாணுதலாள்
குயிலோமொழியாள்கொடியாமிடையா
ளயிலோவிழியாடனையானணுகக்
கயலார்கடல்மேல்வருவாய்கதிரோ. (௮௪)
குவிமாமுலையாய்மொழிகோகிலமே
துவர்வாயனமேதுடியாமிடையாய்
புவிநேரமிழ்தேபுணராயெனவே
யிவையேமொழிவானயறுனைழவே. (௮௫)
கடலேழுடனீள்கனகக்கிரிசேர்
படிவான்முதலாயபராபரனுக்
குடிநேரிடையாகியதாய்மொழியு
மிடராமயலெய்திமெல்லையின்வாய். (௮௬)
வேறு. மலையிணையேந்தியவாசுதேவனார்
சிலையுறுநுதலியைச்சேர்வதின்றென
அலையுறுகடலெனப்பேரியார்த்திடப்
நலனுறவெழுந்தனர்நகருள்ளாரரோ. (௮௭)
(வாரகாவதிப்படலமுற்றிற்று. ஆ படலம் ௭௮-க்கு திருவிருத்தம் ௩௬௬௪.)

முதற்புத்தகம் முடிந்தது.